ஸ்ரீ

# ஸ்ரீராமாயணம்

## அயோத்யாகாண்டம்.

இரண்டாம பாகம்

தமிழ் வசனம்

இஃது

ஸ்ரீ வால்மீகி ராமாயணத்திற கிணஙக

அ. வீ நரஸிம்ஹாசாரியரால்

மொழிபெயர்க்கப் பெற்றது.

ன்றும் பதிப்பு.

சென்னை

ஆர். வெங்கடேஸ்வர அண்டு கம்பெனியாரவர்களால்

ஆனந்த அச்சுக்கூடத்தில் அச்சிட்டு

வெளியிடப்பட்டது

1928.



Rs. 2/-

# விஷயங்கள்.

ஸர்க்கம். பேஜ்.

ஸாககம். பேஜ்.

ஸர்க்கம். பேஜ்.

ஸர்க்கம். பேஜ்.

# படங்களின் விவரம்.

மஹாபாஹுவும் மஹாவீரனுமாகிய அந்த ராமன், காளையெருது பசுக்களுடன்கூடி வருவதுபோல், ஸீதையை முன்னிட்டு ரதத்தின்மேல் ஏறிக்கொண்டு இவ்வயோத்யாபுரத்திற்குள் எப்பொழுது நுழைவானோ? பகைவரை அடக்கவல்ல பராக்ரமம் பொருந்திய மஹாவீரர்களாகிய அக்குமாரர்கள் இந்நகரப்ரவேசஞ் செய்யும்பொழுது ராஜமார்க்கத்தில் அவர்கள்மேல், ஆயிரமாயிரமாக ஜனங்கள் கும்பற்கூடி எப்பொழுது பொரிகளை இறைக்கப்போகிறார்களோ? அவர்கள் மேலான குண்டலங்கள் பளபளவென்று செவியில் விளங்கப்பெற்று வில்லையும் கத்தியையும் தரித்து, சிகரங்கள் பொருந்திய பர்வதங்கள்போல் ப்ரகாசித்துக்கொண்டு அயோத்யையில் வந்து ப்ரவேசிக்கையில் நான் எப்பொழுது பார்ப்பேனோ? [1] ராமன் வந்தானென்னும் மங்கல வார்த்தையைக் கேட்டு ஸந்தோஷமடைந்த ப்ராஹ்மண கன்னிகைகள் புஷ்பங்களையும் பழங்களையும் கொடுத்துக்கொண்டு எப்பொழுது இந்நகரத்தை ப்ரதக்ஷிணஞ் செய்யப்போகிறார்களோ? ராமன் ஜ்ஞானத்தில் முதிர்ந்தவன்; வயதில் தேவதைகளைப்போல் இருபத்தைந்து வயதுள்ள பாலகுமாரனைப்போலவே விளங்குந்தன்மையன்.

---

1. இதற்கு மூலம்—'கதா ஸுமநஸ꞉ கந்யா த்விஜாதீநாம் ஃபலாநி ச। ப்ரதிஶந்த்ய꞉ புரீம் ஹ்ருஷ்டா꞉ கரிஷ்யந்தி ப்ரதக்ஷிணம்,' இங்கு இது உத்தரதேசமங்கலாசாரமென்று கோவிந்தராஜா கூறுகிறார். மஹேஶ்வரதீர்த்தர் 'ப்ரதிஶந்த꞉' என்று பாடங்கொண்டு, 'கந்யா த்விஜாதீநாம்' என்பதை ஒரே பதமாக்கி—(நன்மனமுடைய அந்த ராம லக்ஷ்மண ஸீதைகள் மூவரும் மங்கலவதிகளாகிய பெண்டிர்களுக்கும் ப்ராஹ்மணர்களுக்கும் புஷ்பங்களையும் பழங்களையும் கொடுத்துக்கொண்டு மனக்களிப்புடன் இந்தப் பட்டணத்தை எப்பொழுது ப்ரதக்ஷிணஞ் செய்யப்போகிறார்களோ)—என்று பொருள் சொல்லுகின்றனர்.

அப்படிப்பட்ட காமிகனாகிய ராமனை மூன்றுவயதுள்ள பாலனைப்போல் கொஞ்சி, என்மனத்திற்கு ஸந்தோஷத்தை விளைத்துக்கொண்டு என்னிடத்திற்கு எப்பொழுது வருவானோ? மஹாவீரனே! நான் பூர்வஜன்மத்தில் பெரும்பாபிஷ்டையாயிருந்து, குழந்தைகள் பாலுண்ண விரும்புகிற ஸமயத்தில் தாய்மார்களின் ஸ்தனங்களை அறுத்துப்போகட்டிருப்பேன் இதில் ஸந்தேஹம் இல்லை புருஷஸிம்ஹனே! இளங்கன்றையுடைய பசு அக்கன்றின்மேல் மிகவும் ப்ரீதியோடிருப்பதுபோல், நான் என்பிள்ளையிடத்தில் மிகுந்த ப்ரேமமுள்ளவளாயிருக்கையில், ஸிம்ஹம் கன்றைக் கொன்று பசுவைக் கன்றற்றதாகச் செய்வதுபோல், கைகேயி பலாத்காரஞ் செய்து ராமனைக் காட்டுக்குத் துரத்தி என்னைப் பிள்ளையில்லாதவளாகச் செய்துவிட்டனள் நான் வெகுகாலம் வ்ரதோபவாஸங்களிருந்து ஒருபிள்ளையைப் பெற்றேன். அவன், உலகத்தில் எவ்வளவு கல்யாணகுணங்கள் உண்டோ அவைகளெல்லாம் அமையப்பெற்றவன், மேலும், ஸமஸ்த சாஸ்த்ரங்களையும் ஓதியுணர்ந்து பண்டிதனாயிருப்பவன் அப்படிப்பட்ட ஒரு புதல்வனைக் கைவிட்டு நான் பிழைத்திருக்கப்பெறேன் நீண்ட புஜதண்டங்களையுடையவனும் மிகுந்த பலமுள்ளவனுமாகிய அப்படிப்பட்ட என்னுடைய குமாரனைக் கண்களாரக் காணாதிருப்பேனாயின், தெய்வங்கூட எனக்கு இங்கு ஜீவித்திருப்பதற்குக் கொஞ்சமாயினும் ஸாமர்த்யத்தை விளைவிக்க வல்லதன்று வெயிற்காலத்தில் க்ரூரமாகப் ப்ரகாசிக்கின்ற மஹானுபாவனாகிய ஸூர்யன் தனது கிரணங்களால் பூமியைத் தபிக்கச் செய்வது போல், புத்ரசோகத்தினால் உண்டாகிய இப்பரிதாபாக்னி மேன்மேலும் வளர்ந்து என்னை எரிக்கின்றதே' என்று இவ்வாறு புலம்பினள். நாற்பத்து மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று

---

அங்ஙனம் புலம்பிக்கொண்டிருக்கின்ற மடந்தையர் மணியாகிய கௌஸல்யையைப் பார்த்து [1] ஸுமித்ரை தார்மிஷ்டையாகையால் தர்மம் பொருந்தியிருக்குமாறு கூறினாள்.— 'மேன்மைப் படுத்துகைக்குரிய மஹானுபாவையே! உன் புதல்வன் மேலானவன் ஆகையால் அவனைப் பற்றி இங்ஙனம் புலம்புவதால் பயன் யாது? இப்படி தீனமாகக் கதறின போதிலும் பிரயோஜனம் என்ன? பூஜிக்கத் தகுந்தவளே! மஹாபலனாகிய உன்

1 இதற்கு ச்லோகம்—'இமாந் யாமேய ஸமித்ரா யாமயம் ஸுமித்ரா வாக்யமப்ரவீத்' என்று தாரையைப்போலவும் மண்டோதரியைப்போலவும் ஸுமித்ரையும் பரதத்வஜ்ஞானமுடையவளென்ற ஸம்ப்ரதாயமாகையால் இவ்விரு ஸுமித்ரை மூலமாக ராமனது பரத்வத்தை வெளிப்படுத்துகிறார்—(தர்மேஸ்திதா) தர்மத்தில் நிலைநின்றிருப்பவள். இங்கு தர்மமென்றால்—ஸித்த தர்ம ரூபனாகிய ராமனைச் சொல்லுகிறதாகையால் ராமனிடத்தில் பற்றிய மனமுடையவள், அல்லது—(யாமே) ஜன்மாந்தர ஸுக்ருதத்தில் நிலைநின்றிருப்பவள் அப்படிப்பட்ட ஸுக்ருதபரிபாக வசத்தினாலென்றபடி (யாமயம்) விசிஷ்ட தர்மத்தினின்று நழுவாததாகிய, ராமனது பரத்வத்தைப் பற்றிய (வாக்யம்) வாக்யத்தை, (அப்ரவீத்) சொன்னாள் 'தவார்யே ஸத்குணோபேதோ யுக்த: புத்ரஸ்ஸ புருஷோத்தம:'—(தவ புத்ர:) உன் பிள்ளை (ஸ:) அப்படி ப்ரஸித்தனாகிய, வேதாந்தங்களில் ப்ரஸித்தி பெற்றிருக்கிற, (புருஷோத்தம:) நாராயணன் எப்படியென்றால்—(ஸத்குணோபேதோ யுக்த:) அநிதரஸாதாரணங்களும் (பிறர்க்குப் பொருந்தாதவைகளும்) அநவதிகாதிசயங்களும், (எல்லையில்லாத மேன்மையுடையவைகளும்) அஸங்க்யேயங்களுமாகி (கணக்கற்றவைகளுமாகி) விளங்குகின்ற கல்யாணகுணங்களையுடையவன் ஆகையால் இவனே ஸ்ரீமந்நாராயணனென்றபடி. இந்த (புருஷோத்தம:) என்கிற விதுக்குப் புத்ரனென்ற புத்தியால் புருஷர்களில் தலைவனென்னும் பொருள் ஸித்திக்குமென்று நினைத்து அப்படியன்றென்பதற்காக (ஸ:) என்கிற விசேஷணம் சேர்க்கப்பட்டது (ஸ:) வேதாந்த ங்

குமாரன ராமன சிஷடாகள எபபொழுதும ஸாதததை யோடு ஆசரிதது வரததககதும பரலோகததில பெரும பயனைக கொடுககத தககதுமாகிய தாமததைச செயய முயனறு மஹானுபாவனாகிய தநதையை ஸதயஸநதனா கச செயயவேணடுமெனறு ராஜயததைத துறநது ஆரணயஞ சென்றானனறி மறறொனறும இலலை ராமன

---

ளில பரதிபாதிககபபடுகிற புருஷோததமனேயனறிக கேவலமான புருஷோததமனனறுகையால, புதரனெனனும புததியால அவனைக குறிததுச சொலலககவேணடியதிலலையெனறபடி. வேதாநதஙகளில ஓதபபடும புருஷோததமனாவானாயின, காமபரதநதரனாயிருபபதேனோ எனனில சொலலுகிறாள—'ஸிஷடைர ஆசரிதே ஸமயக ஸம்ஸ்வதபரேத யலோகயே। ராமோ யாமே ஸயிதஸ ஸ்ரேஷடோ நஸ மோசய கஜாநா' (ஸிஷடைஃ) சிஷடாகளால (ஸமயக) நனகு (ஆசரிதே) ஆசரிககபபடடதும, (பரேதயலோகயே) பாரலௌகிக பலததிறகுக காரணமாயிருபபதுமாகிய, (யாமே) தாமததில, (ஸயிதஃ) நிலைநினறிருபபவன (ஸிஷடைராசரிதே) எனறவிதனால—சிஷடாகள ஆசரிபபவைதலலாம லோகானுகரஹததினபொருடடாகையால, புருஷோததமனாயிருநதும, லோகானுகரஹததிறகாகச சிஷடாகள ஆசரிககுங காமஙகளில மனஆககமுறறிருககிறானெனறு ஸிததம. (பரேதயலோகயே) எனறவிதனால—தசரதனுககுப பரலோகததில ஹிதம உணடாவதறகாக இஙஙனம முயனறானெனபதும ஸிததம. இஙஙனஞ செயவதெலலாம லோகானுகரஹததின பொருடடே யெனபதைத தெரிவிககிறாள—(ஸ்ரேஷடஃ) 'யதயதாசரதி ஸ்ரேஷடஸ ததததேவேதரோஜநஃ' எனனும கீதாவசனததினபடி ஸ்ரேஷடாகள ஆசரிபபனவெலலாம மறறயாகளை அனுகரஹிபபதறகாகவே. தனது ஆசாரததைப பாரததுப பிறரும அஙஙனம செயது உஜஜீவிககவேணடுமெனனும புததியுடன காமஙகளைச செயய முயனறானெனறு கருதது. மேலும, 'காமவருததஸதவயம லோகஃ கருதஸநஸ ஸமநுவாததே। யதவருததாஸஸநதி ராஜாநஸ ததவருததாஸ ஸநதி ஹி பரஜாஃ' (இவவுலகம முழுவதும தனனையே போனபடி [illegible]ததிககினறது (நடககினறது) அரசாகள எபபடி நடபபாாகளோ, அபபடியே பரஜைகளும நடககும) எனறு மேலும சொலலு

அப்படிப்பட்ட தாமத்தில் நிலைநின்று அவ்விதமான ஸத் கார்யத்தைச் செய்ய அரண்யம் போயிருக்கையில், அப்படிப்பட்டவனைக்குறித்து மனவருத்தப்படலாகாது. ராமனைக் குறித்து மாத்ரமே அன்று, லக்ஷ்மணனைப்பற்றியும் விசாரப்படவேண்டிய அவஸ்யம் இல்லை பாபத்தினின்று விலகிச்சென்றவனும் ஸகல ப்ராணிகளிடத்திலும் தயையுடையவனுமாகிய லக்ஷ்மணன் அந்த ராமனுக்கு மிகவும் சுச்ரூஷை நடத்திக்கொண்டிருப்பவன் இது மஹாத்மாவாகிய லக்ஷ்மணனுக்குப் பெருத்த லாபமாகையால் அவனைப்பற்றியும் மனவருத்தப் படவேண்

---

கிறபடியே, ராஜாவாய் அவதரித்து, ப்ரஜைகளும் தன்னைப் பார்த்து ஆசாரங்களை அறிந்துகொள்வதற்காக ஆசாரங்களை அனுஷ்டிக்கிறானென்று கருதி தன் சேஷத்வ ஸ்வரூபத்திற்கு அனுகுணமாகிய கைங்கர்யத்தைக் கெட்டியாகக் கைப்பற்றி லக்ஷ்மணன் கூடவே சென்றான் ஆகையால் அவனைப்பற்றியும் துக்கிக்கவேண்டியதில்லை. யென்கிறாள் —' வர்த்ததே சோத்தமாம் வ்ருத்திம் லக்ஷ்மணோஸ்மிந்ஸதாநக: | தயாவாந் ஸர்வபூதேஷு லாபஸ் தஸ்ய மஹாத்மந:' (அநக:) பாபமில்லாதிருப்பவன்; பரமாத்மபற்றிருப்பவன், (ஸர்வபூதேஷு தயாவாந்) ஸமஸ்த ப்ராணிகளிடத்திலும் தயையுடையவன் ஸகலாத்மாக்களும் ஜ்ஞானைகாகாரர்களென்று [ஜ்ஞானமென்னும் ஆகாரம் ஒத்திருக்கப் பெற்றவர்களென்று] தெரியுமாகையால் எல்லாவற்றிலும் ஸமபுத்தியுடையவனாகையால் ஸ்நேஹமுடையவன் இப்படிப்பட்ட லக்ஷ்மணன், (உத்தமாம்) அதிசயபுருஷார்த்தமாகையால் (புருஷார்த்தங்களெல்லாவற்றிலும் சிறந்திருப்பதாகையால்) உத்தமமாகிய, (வ்ருத்திம்) கைங்கர்யவ்ருத்தியை, கைங்கர்யகாஷ்டையை. (கைங்கர்யம்-அடிமைசெய்தல்) (ஸதா வர்த்ததே) எப்பொழுதும் அனுஷ்டித்துக்கொண்டிருக்கின்றான் (தஸ்ய மஹாத்மந:) அந்த மஹானுபாவனுக்கு, (லாப:) கைங்கர்யமே புருஷார்த்தம் இந்த ஶ்லோகத்தில் (வர்த்ததே) என்னும் சபதத்திலுள்ள (வ) என்னும் அக்ஷரம் காயத்ரியில் ஐந்தாவது அக்ஷர

டிய அவஶ்யம இலலை [1] ஸீதையும ஸுகததை அனுபவிபபதறகுத தகுநதவள. அவளுககு ஆரணயவாஸததிலுளள துககஙகள தெரியுமாயினும, பதிவரதையாகையால ஸதரீகளுககுப பதியே தெயவமெனறு நினைதது, அவனுககு ஆரணயவாஸததில துயரங்களைப போகக முயனறு தாாமிகனுகிய உன குமாரனைப பினறொடாநது ஆரணயததிறகுப போகினறனள. ஆகையால தாமததினபடி நடநத ஸீதையைப பறறியும மனவருததபபட வேணடியதிலலை உன புதலவனுகிய ராமன [2] கீாததியெனனும தவஜததை உலகததில எஙகும பரவச சுழறறிககொணடு திரிகினறனன அவன ஸகலலோகங களுககும பரபு ஆகையால ரக்ஷயகோடிகளைபபாாதது ரக்ஷிபபதறகாகச செலலுகினறனன ஒருவன தனது ஸொதது வீணாய அழிநதுகிடகக வெறுமனே பொறுததுககொணடிருபபானே? ராமனுககு உலகம முழுவதும குழைசசரககு. ஆகையால அவன அளவு வருநததப படடுககொணடிருககப பொறுததிருககலாகுமோ? மேலும, இதனால அவனது கீாததி உலகததிலெஙகும பரவுகினறது. ஆகையால அவனது புகழ எஙகும பரவி அவனுககு மேனமையைக கொடுககவறகுகிய இநத

மாகையால கரநதஸஙகயை நாலாயிரம முடிநது ஐநதாவது கரநத ஸஹஸரம ஆரமபிககப படடதெனறு தெரியவருகிறது

1 இதில—அவனுககு ஸஹதாமசாரிணியாயிருககும ஸீதையைபபறறியும துககிகக வேணடியதிலலை யெனகிறுள அவனேடு கூட தாமஙகளை ஆசரிததுககொணடு போவதுபறறி அவளைக குறித்து மனவருததபபட வேணடாமெனறு கருதது

2 இதில—வேதாநத பரதிபாதயமான அவனது லக்ஷணஙகளைச சொலல முயனறு ‘தஸய நாம மஹதயஶ:’ எனனும ஶ்ருதியின அாத்தத்தை பரதிபாதிததாள

வனவாஸததைப பறறி நாம துககிபபது கூடாது பின னும அவன ஜிதேநதரியன, ஆஸரிதாகளைக கைவிட லாகாதெனனும ஸதயவரததததையே தனமாகக கொண டவன இபபடிபபடட பரபுவாகிய உன புதலவனுககு எநத மேனமைதான உணடாகாது? ஸமஸத நனமை களும அவனுககு ஸமபவிககுமாகையால அவனைப பறறி வருநதலாகாது [1] ராமனுடைய தரிகரணசுததியையும, ஒபபினறிய மஹிமையையும ஸபஷடமாக அறிநது ஸூா யன அவனது திருமேனியைத தன உஷண கிரணங களால எளளளவும தபிககச செயயமாடடான. [2] காற றும ஸமஸத காலஙகளிலும அநதநத காலததிறகுத தகுநதபடி சீதோஷணஙகளைச செயதுகொணடு வேக மினறி மெதுவாயிருககையால மஙகலகரமாகி அரணயங களிலுளள பூஞசெடிகளிலும குளிரநத ஜலபரவாஹங

---

1 இதுமுதலாக—தேவதைகள அனைவரும அவனது ஆஜஞை யினபடி நடபபவாகளே யாகையால, அவனுககு அனுகூலாகளா யிருபபாகளெனறு தெரிவிககிறுள (ராமனுடைய தரிகரணசுததி யையும) எனறு தொடஙகி இதனால 'ஸ்ரீவேஷாபேக்ஷி ஸூாய' (என னும ச்ருதபாதம கூறபபடடது. இதறகு மூலம—'யயகதம ராமஸய விஜஞாய ஸௌசம மாஹாதமயமுததமம | நாதாபமஹ ஸூரியஸ ஸநதாபயிதுமாஹதி' (மாஹாதமய முததமம) மே லான மஹிமை—தனககு ஸமானமாவது மேறபடடதாவது இலலா திருககுமபடியான மாஹாதமயம

2 இதறகு மூலம—'ஸிவஸ ஸாவேஷு காலேஷு கானநேஹ்யோ விநிஸஸருத: | ராகவம யுகதஸீதோஷணஸ ஸேவிஷயதி ஸாமோ அநில:' இதனால 'ஸீஷாஸமாத் வாத: பவதே' எனனும ச்ருதயாாததம கூறபபடடது (ஸிவ:) எனறதனால வேகமிலலாமல மநதமாயிருககுமெனபதும (கானநேஹ்ய: விநிஸஸருத:) என கையால அஙகுளள புஷபஙகளின பரிமளஙகளைக கொணடு ஸௌகநதயமும, சைதயமும காறறுககுச சொலலபபடடன தனிஸ லோகி

களிலும் காட்டுத் தீக்களிலும் பட்டு வருவதனால் உஷ்ண காலங்களில் பரிமளமும் குளிர்ச்சியும் பொருந்தியும் மழைக்காலங்களில் பரிமளமும் உஷ்ணமும் பொருந்தியும் ஸுகமாயிருக்கும்படி ராமன்மேல் வீசுமேயன்றி அவனுக்குக் கொஞ்சமும் உபத்ரவஞ்செய்யாது [1] சந்த்ரனும் பாபஹரனாகிய அந்த ராமனை ராத்ரிகளில் தந்தை ஆலிங்கனஞ் செய்துகொள்வதுபோல், குளிர்ந்த கிரணங்களால் பரிசித்து அவனுக்கு இன்பத்தைக் கொடுப்பான் முன்பு ராமன் சம்பராஸுரனுடைய பிள்ளையாகிய தானவேந்த்ரனை ஸம்ஹரிக்கையில், அது கண்டு ப்ராஹ்மதேயன் மிகுந்த ஸந்தோஷமடைந்து அவனுக்கு திவ்யாஸ்த்ரங்களைக் கொடுத்தானல்லவா? ஆகையால் அந்த ராமன் மிகுந்த சூரன்; புருஷர்களிற் சிறந்தவன் அவனுக்குத் தன் ரக்ஷணத்திற்காக ஒருவனை ஆஶ்ரயிக்க வேண்டிய அவஶ்யம் இல்லை அவனது பாஹுபலமே அவனுக்குப் போதுமானது அதுவே அவனுக்குப் பெரிய அவலம்பம் அப்படிப்பட்ட ராமன் அரண்யஞ்சென்றிருந்தபோதிலும் பயப்படாமல் வீட்டிலிருப்பதுபோலவே ஸுகமாயிருப்பான் ராமனுக்கு அரண்யத்தில் க்ஷேமம் உண்டாகுமாக 'இங்குப் பரதன் வேறொன்றைப் பெறுவானாயின், ராமனுக்கு ராஜ்யம் கிடைக்குமா?" என்பாயோ அதற்கும் சொல்லுகிறேன், கேள் ராமனது பாணங்களுக்குக் குறிப்படுவாராயின், எப்படிப்பட்ட சத்ருக்களாயினும் நசித்துப்போ

1 இதற்கு மூலம்—'ஶயாநமநகம் ராத்ரௌ பிதேவாபிபரிஷ்வஜந் | ரஶ்மிபிஸ் ஸம்ஸ்ப்ருஶந் ஶீதைஶ் சந்த்ரமா ஹ்லாதயிஷ்யதி' இதில் (ஏதஸ்ய வா அக்ஷரஸ்ய ப்ரஶாஸநே கார்கி ஸூர்யாசந்த்ரமஸௌ வித்ருதௌ திஷ்டத:) என்கிற ஶ்ருதியின் பொருளை உட்கொண்டு இங்ஙனம் கூறப்பட்டது

வாரகள அபபடிபபடட மஹாவீரனுகிய ராமனது ஆஜ்ஞையில பூமி கிறகாமல எபபடி தவறிபபோகும்? அவஶ்யம இநதபபூமி அவனுககே உடபட டிருககும ஸமஸத லக்ஷணஙகளும பொருநதிய ராமனது சரீரகாநதியையும, சூரததனததையும, பராசஸதமான பலததையும கண்டால, அவன அரணயவாஸததைத தீரததுககொணடு சீகரமாகவே ராஜ்யம் பெறுவாரனெனறு எனககுத தோறறுகிறது, தேவி! ராமன [1] ஸூரயனுககும ஸூர

---

1 இதறகு மூலம—'ஸூரயஸயாபி ஹவேத ஸூரயோ ஹயக்நேரக்நி: ப்ரபோ:ப்ரபு:। ஶ்ரிய: ஶ்ரீஶ்சபவேதக்ர்யா கீர்த்யா: கீர்திஃ க்ஷமாக்ஷமா' இஙகு 'தமேவ ஶாநதமநுஶாதி ஸாவம' எனனும ஶ்ருத்யாத்தம் சொலலபபடடது (ஸூரயஸய) ஸகலலோகஙகளுககும பரகாசததைத கொடுபபவனுகிய ஸூரயனுககுங்கூட (ஸூரய:) பரகாசங கொடுபபவன ஸூரயமணடலததி னிடையில இருநதுகொணடு கணணுடியின உளளேயிருககும தீபம போல அவனை பரகாசிககச செயபவனெனறபடி (அக்நேரக்நி:) அகனிககும அகனியாயிருபபவன எலலா வஸ்துககளையும பசனஞ செயவது ஹவிபபது முதலிய அகனிகாரயஙகளை அவனது ஸஙகலபததிறகுடபடடவையெனறபடி 'அஹம வைஶ்வாநரோ பூதவா' எனகிற கீதாவசனததைக கணடு கொளக (ப்ரபோ: ப்ரபு:) பரபுககும பரபு பரஹமருதராதிகளுககு ஸருஷ்டிமுதலியவறறைச செயயும ஸாமாதயததைக கொடுதது நிரவஹிபபவனும தானேயெனறபடி (ஶ்ரிய: ஶ்ரீ:) ஶ்ரீககும ஶ்ரீயாயிருபபவன பரஹமாதிகளுககுளள ஐஶ்வாயம எவளுடைய கடாக்ஷலேசததிறகு அதீனமாயிருககினறதோ நாராயணனுடைய பரபரஹமதவமும எவளுடைய கடைககணபாரவையின மகுதியினறியில ஸிததிககாதோ அபபடிபபடட ஶ்ரீதேவிககும அவனை ஆஶ்ரயிததது பறறியே ஶ்ரீயெனனும இபபோ ஸித்திககினறது. அவளுடைய ஐஶ்வரதவம பூரணமாக நிறைவேறுவதறகுக காரணமாகிய ஶ்ரீமஹாலக்ஷமியின ஸவரூபமும அவனுலேயே நிரவஹிககபபடுகிறதெனறபடி (கீர்த்யா: கீர்த்தி:) கீரததிககும கீர்த்தியை விளைபபவன 'தஸய நாம

யன்; அக்னிக்கும் அக்னி; தேவர்களுக்கும் தேவன்? பூதங்களுக்கும் முதலாகிய பூதம்: அப்படிப்பட்ட மஹா பாபுவும் யாவராலும் மேன்மை பெற்றவனுமாகிய ராமனுக்கு தேசத்திலாயினும் பட்டணத்திலாயினும் பாதிபந்தகங்கள் எவைதான் உண்டாகக்கூடும்? இப் பட்டணத்தைத் துறந்து எவன் வனத்திற்குப் போகக் கண்டு இந்தப்பட்டணத்திலுள்ள ஜனங்கள் துக்கத்தின் மிகுதியால் தடுமாறி அவனைப் பிரிந்திருக்கப் பொறுமை யால் கண்ணீர்களைப் பெருக்குகின்றார்களோ, அப்படிப்

---

மஹத் யஶ:' என்று கீர்த்திக்குச் சொன்ன மஹிமை பகவத்ஸம்பந்தத்தைப் பற்றியன்றோ? அவனுடைய கீர்த்தியன்றோ அஸாதாரணமாயிருப்பது (பிறர்க்குப் பொதுவாயிராதிருப்பது) மற்றவர்களின் கீர்த்தி அளவிடக்கூடியதல்லவா? ஆகையால் அவன் தன் ஸம்பந்தத்தினால் கீர்த்திக்கும் 'அளவற்ற, மஹிமையுள்ள, பிறர்க்குப் பொதுவன்றியிருப்ப' என்னும்படியான கீர்த்தியைக் கொடுப்பவனென்றபடி (க்ஷமாக்ஷமா) ஸர்வத்திற்கும் ஆதாரமாகிய பூமிக்கும் ஆதாரமாயிருப்பவன் இதற்கு 'யஸ்மிந் த்யௌ: ப்ருதிவீ சாந்தரிக்ஷம் என்கிற ஶ்ருதி பரமாணம் (தைவதாநாஞ்ச தைவதம்) தேவர்க்கும் தேவனாயிருப்பவன். இதற்கு 'தம் தைவதாநாம் பரமஞ்ச தைவதம்' என்று ஶ்ருதி (ஸத்ராநாம ஸத்ஸத்தம:) பூதமாவது ஸத்தையுள்ளது ஸத்தையுள்ள பதார்த்தங்களுக்கெல்லாம் அவைகளின் ஸத்தையை நிர்வஹித்துக்கொண்டு போருமவனென்றபடி இங்ஙனம் கல்யாணகுணங்களுக்கு இவனே விளைநிலமென்று சொல்லி இனி ஹேயகுண விரோதியாயிருக்குந் தன்மையை ஸூசிப்பிக்கிறார்—'தஸ்ய கேஹ்யஞ்ஞ தேவீ ராஷ்ட்ரேவாப்யய வாபுரே' என்று (தஸ்ய கேஹி அஞ்ஞ:) அவனுக்கு ஹேயகுணங்கள் ஒன்றும் இல்லையென்க அதாவது—உபயவிபூதியிலும் அவன் தன் தன்மை மாறாதிருப்பவன் அதாவது—தன் ஸ்வரூபத்தை விடாதிருப்பவனென்றபடி (ஹி) என்றவிது ப்ரஸித்தியைச் சொல்லுகிறது அவனுடைய தோஷவிரோதித்வம் 'அபஹதபாப்மா' என்ற இது முதலிய ஶ்ருதிகளில் ப்ரஸித்தமென்றபடி

பட்டபுருஷ சிகாமணியாகிய ராமன் சீக்ரமாகவே ஸீதையோடும் பூதேவியோடும் ராஜ்யலக்ஷ்மியோடுங்கூடிப் பட்டாபிஷேகம் பெறப்போகின்றனன். ராமனுக்குப் பராஜயமென்பதே தெரியாது. அப்படிப்பட்ட அவ்வீரன் தாபபாஸனத்தையும் மரவுரிகளையும் தரித்து அரண்யத்திற்குப் போய்க்கொண்டிருக்கையில், ஸீதையைப்போல், ராஜ்யலக்ஷ்மியும் அவனைப் பின்றொடர்ந்து சென்றது. அப்படிப்பட்ட ராமனுக்குத் துர்லபமாயிருப்பதும் ஒன்றுண்டோ? மேலான வில்லாளியாகிய லக்ஷ்மணன் பாணங்களையும் கத்திகளையும் மற்றை ஆயுதங்களையும் தரித்து ராமனைப் பின்றொடர்ந்து தானே போகின்றனன். அப்படிப்பட்ட ராமனுக்கு எது தான் துர்லபம்? தேவீ! ராமன் இப்படி வனவாஸத்தைத் தீர்த்துத் திரும்பிவருகையில் நீ பார்க்கப்போகின்றனை. இவ்வஜ்ஞானமும் துக்கமும் வேண்டாம். உனக்கு நான் ஸத்யத்தையே சொல்லுகின்றனன்றி வேறில்லை. மங்கல ஸ்வபாவமுடையவளே! உனது அவயவங்களில் ஒவ்வொன்றும் லக்ஷணங்கள் பொருந்தி அழகாயிருக்கின்றன; ஒன்றாவது லக்ஷணத்தவறி நிற்கக்கிடமாயில்லை. குணங்களாலும் நீ அனைவரும் புகழப் பெற்றிருப்பவளேயன்றி, உன்னை ஒருவரும் நிந்திக்கப் பெறார். இப்படி ஸமஸ்தலக்ஷணங்களும் பொருந்தி ஸகல குணங்களும் அமைந்து விளங்குகின்ற உனக்கு இவ்வருத்தம் நீடித்து நிற்காது. ராமன் வனத்தினின்றும் திரும்பி வந்து ஸர்வலக்ஷணங்களும் பொருந்திய உன் பாதங்களில் தலை சாய்த்து வந்தனஞ்செய்து அப்பொழுதே உதித்த சந்திரன்போல் மிகவும் இனியனாகப் புலப்படக் கண்டு களிக்கப்போகின்றனை. திருமப! இந்தப் பட்டணத்திற்கு வந்து பட்டாபிஷேகங் கொண்டு மிகுந்த காந்தியுடன் விளங்குகின்ற ராமனைப் பார்த்து

நீ சீகரமாகவே ஆநநதபாஷபஙகளை பெருககபபெறுவாய.
தேவி! ராமனுககு அசுபம எதாயினும உணடாகு
மென்று எனககுத தோறறவிலலை ஆகையால இஙங
னம புலமபுவதும, மனததில வருநதுவதும செயயலா
காது. ராமன ஸீதையோடும லக்ஷமணனோடும கூடி
வருகையில சீகரததிலேயே நீ பாரககபபோகினறனை
நீ பாபமெனபது சிறிதும இலலாதிருபபவளனறோ?
உனககும இவவருததம கூடுமோ? நீ உனனை ஸமாதா
னபபடுததிககொளளவேயனறி, மறறவாகளையும கூட
ஸமாதானபபடுததவேணடும காலம அனறோ இது?
இபபடிபபடட ஸமயததில நீயே இபபடி மனஙகலஙகப
பெறுவாயாயின, இனி மறறவாகள எபபடி ஸமாதானம
அடைவாரகள நிமிததமினறியே நீ இஙஙனம மனங
கலஙகபபெறுவதேனோ? தேவி! மஹானுபாவனாகிய
ராமனைப புதலவனாகப பெறுமபடியான பாகயம செயத
வளுககு மனவருததம கூடுமோ? உலகததில ராமனைக
காடடிலும ஸனமாாககவாததிகளில சிறநதவன ஒருவ
னும இலலையனறோ? ராமன தனது நணபாகளுடன
கூடி வநது உனககு வநதனஞ செயகையில, அது கணடு
நீ வாஷாகாலததில மேககூடடம ஜலததைப பெய
வதுபோல, தவரையிலேயே ஆநநதபாஷபஙகளைப
பெருககபபோகினறனை. விருபபினை விருபபஙகளையெல
லாம ஈடேறற வலலவனாகிய உன குமாரன ராமன திருமபி
அயோதயைககு வநது மேனமை மிகுநது மஹாபலிஷ
டஙகளாகி விளஙகும தனது ஹஸதஙகளால உன பாதங
களைப பிடிததுககொணடு நமஸகரிககபபோகினறனன.
சூரனாகிய ராமன தனது ஸநேஹிதாகளோடுகூடி உன
னிடம வநது தன பராககரமததைச சொலலி உனககு நமஸ
காரஞ செயகையில, மேகஙகளின வரிசை பாவததைத

வர்ஷங்களால் நனைப்பதுபோல், ஆனந்தபாஷ்பங்களால் நனைக்கப் போகின்றனே' என்றனள். தோஷங்களொன்றுமின்றி விளங்கும் ஸுமித்ராதேவி வார்த்தைகளைச் சொல்லி மனவருத்தத்தைப் போக்குவதில் ஸமர்த்தையாகையால், அந்த ராமன் தாயாகிய கௌஸல்யையைப் பலவித வசனங்களால் ஸமாதானப்படுத்தி வாயை மூடிக்கொண்டிருந்தனள். இங்ஙனம் லக்ஷ்மணனது மாதாவாகிய ஸுமித்ரை சொல்லிய வார்த்தைகளைக் கேட்டவுடனே, சரத்காலத்தில் அற்பஜலமுள்ள மேகம் வேகமாக நசித்துப்போவதுபோல், ராமனுக்குத் தாயும் தசரதமஹாராஜனது மஹிஷியுமாகிய கௌஸல்யையின் சரீரத்தி லெங்கும் வியாபித்திருந்த சோகம் முழுவதும் நசித்துப்போய்விட்டது. நாற்பத்து நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

(ராமன் தன்னைப் பின்தொடர்ந்துவந்த ப்ரஜைகளுக்கு நல்வார்த்தை சொல்லுதல்.)

ராமன் உண்மையான பராக்ரமமுடையவன்; மேலும் மஹானுபாவன் ஆகையால் ஜனங்களெல்லோரும் அவனிடத்தில் மிகுந்த அனுராகமுடையவர்கள் ஆகையால், வனவாஸத்திற்காகப் போகின்ற ராமனை அவர்கள் பின்றொடர்ந்து போயினர். ராமனது ஸ்னேஹிதர்களும் ராஜாவின் அந்தப்புரஸ்த்ரீகளும் ராஜாவும் ராமனது நிர்ப்பந்தத்துக்குட்பட்டுத் திரும்பினார்களேயன்றி, ராமனது ரதத்தைப்பின் சென்ற ப்ரஜைகள்மாத்ரம் எவ்வளவு சொல்லினும் திரும்பாமலே பின்தொடர்ந்தனர். அந்த ராமன் மிகுந்த கீர்த்தியுடையவனும் நற்குணங்கள் அமையப்பெற்றவனு மாகையால், அயோத்தியில் வாஸஞ்

செய்யும் புருஷர்கள் அனைவர்களும் பூர்ணசந்த்ரன்போல் ப்ரியனாயிருந்தனன். ராமனது ப்ரஜைகள் அவனை அரண்யத்திற்குப் போகவேண்டாமென்று எவ்வளவு வேண்டிக்கொண்டபோதிலும், அவன் தந்தையை ஸத்யஸந்தனாக்கச் செய்ய முயன்று அவர்களது வார்த்தையைச் செவியிற்படுத்தாமல் அரண்யத்திற்கே போயினன். ராமன் மிகுந்த ஸ்னேஹம் துலங்கும்படி கண்களால் பானஞ்செய்பவன்போல் அந்த ப்ரஜைகளைத் தன் புதல்வர்களோடொக்கப்பார்த்து ஸ்னேஹத்தினால் 'அயோத்யாபுரத்தில் வாஸஞ்செய்யும் ப்ரஜைகளே! உங்களுக்கு என்னிடத்தில் எவ்வளவு ப்ரீதியும் கௌரவபுத்தியும் உளவோ, இவையெல்லாவற்றையும், எனக்கு ப்ரியஞ்செய்ய வேண்டுவீர்களாயின், பரதனிடத்தில் விசேஷித்து நடத்தவேண்டும். கைகேயியின் கண்களைக் களிக்கச் செய்பவனாகிய அந்தப் பரதன் நல்ல நடவடிக்கைகளையுடையவன், ஆகையால் ப்ரியங்களையும் ஹிதங்களையும் செய்ய வேண்டிய வழிப்படி உங்களுக்குச் செய்வான். அவன் வயதில் சிறியவனாயினும் ஜ்ஞானத்தில் முதிர்ந்தவன், ம்ருதுஸ்வபாவனாயினும் பராக்ரமத்தில் புலியைப்போல் வீர்யகுணம் பொருந்தியவன். ஆகையால் உங்கள் பயங்களைப் போக்கி உங்களைத் தகுந்தபடி காப்பாற்றிக்கொண்டு வருவான். மேலும் அவன் அரசர்களுக்குரிய குணங்கள் பொருந்தி விளங்குந்தன்மையன். ஆனது பற்றியே அரசனால் அவன் யுவராஜனாக ஏற்படுத்தப்பட்டனன். மேலும், உங்களுக்கும் எனக்கும் மற்றை லக்ஷ்மண சத்ருக்னர்களுக்கும் ராஜாஜ்ஞையின்படி நடக்க வேண்டியது அவச்யமாகையால், நாமெல்லோரும் பரதனை அரசனாக அங்கீகரிக்கவேண்டும். நான் வனத்தில் வஸித்துக்கொண்டிருக்கையில், நீங்கள் எல்லோரும்

எனக்கு ப்ரியஞ்செய்ய விரும்பி, என்னை நினைத்து அம் மஹாராஜா மனவருத்தப்படாதிருக்கும்படி பார்த்துக் கொண்டிருக்கவேண்டும்' என்றனன் ராமன் இவ்வாறு மேன்மேலும் பித்ருவசன பரிபாலனமென்னுந் தர்மத்தி லேயே நின்றிருக்கக் கண்டு, அந்தப்ரஜைகளும் 'உன்னையே அரசன் முதலில் எங்களுக்கு யுவராஜனாகச் செய்தனன். ஆகையால் அந்த ராஜாஜ்ஞையை நீயும் நாங்களுமாக நிறைவேற்றவேண்டும்' என்று மொழிந்து கொண்டு ராமனே ராஜாவாகவேண்டுமென்று மேன்மேலும் விருப்பங்கொண்டனர். ராமன் தர்மந் தவறலாகாதென்று எவ்வளவு பிடிவாதங் கொண்டிருந்தானோ, அவ்வளவும் அவனை ராஜாவாகவேண்டுமென்று ப்ரஜைகளும் பிடிவாதங் கொண்டனர் பட்டணத்து ஜனங்கள் முகத்தில் முழுவதுங் கண்ணீர் நிரம்பப் பெற்று தீனர்களாகி, ராமலக்ஷ்மணர்கள் எவ்வளவு நல்வார்த்தை சொல்லினும் கேட்காமல் பின்றொடர்ந்து போகும்பொழுது, அவ்விருவரும் தமது குணங்களென்னும் பாசங்களால் அவர்களைக் கட்டி இழுத்துக் கொண்டு போவதுபோல் புலப்பட்டது ஜ்ஞானத்திலும் வயதிலும் ப்ரஹ்மவர்ச்சஸத்திலும் (தபோபலத்திலும்) இப்படி மூன்று விதங்களிலும் வ்ருத்தர்களாகிய அங்குள்ள ப்ராஹ்மணர்கள் கிழத்தனத்தினால் தலை வணங்கப்பெற்று ராமனுக்கு தூரத்தில் நின்றுகொண்டு 'மிகுந்த வேகத்துடன்கூடி உயர்ந்த ஜாதியிற் பிறந்து ராமனை வஹித்துக்கொண்டு போகின்ற ஓ அச்வங்களே! திரும்புங்கள், போகவேண்டாம் உங்கள் ப்ரபுவாகிய ராமனுக்கு ஹிதஞ்செய்வீர்களாக ஜந்துக்களில் குதிரைகளுக்குக் காதுகள் விசேஷித்துச் சிறந்தவை அவைகள் எவ்வளவு தூரத்தில் உண்டான சப்தங்களையும் கேட்கவல்லவை. நாமும் எங்கள் ப்ரார்த்தனையைத்

தெரிவித்தோமாகையால், உங்களுக்கு அது நன்றாகச் செவியில் பட்டிருக்கும். ஆகையால், நீங்கள் 'எங்களுக்குக் காது கேட்கவில்லை' யென்று சொல்லாமல் உடனே திரும்பவேண்டும். உங்கள் ப்ரபுவாகிய ராமன் தார்மிகனாகையால் பரிசுத்தமான மனமுடையவன், வீர்யம் அமைந்தவன், சுபங்களாகிய வ்ரதங்களைத் திடமாகப் பற்றி நடத்தும் தன்மையன் ஆகையால் அவன் பட்டணத்திற்குத் திரும்பிக்கொண்டுவரத் தகுந்தவனே யன்றிப் பட்டணத்தினின்றும் அரண்யத்திற்குக் கொண்டு போகத் தகுந்தவனன்று' என்றனர் இங்ஙனம் துக்க வார்த்தைகளைச் சொல்லிப் புலம்புகின்ற அந்த வருத்தப்ராஹ்மணர்களைக் கண்டு ராமன் சீக்ரமாக ரதத்தினின்றும் கீழே இழிந்தனன் ப்ராஹ்மணர்களது வாக்யத்தைக் கேட்டும் ரதத்தில் போவது தோஷமென்றும், அவர்களை ஸமாதானப் படுத்துவதற்காகத் திரும்பினாலும் வ்ரதபங்கமாகுமேயென்றும் நினைத்து ராமன் ஸீதையோடும் லக்ஷ்மணனோடும் கால் நடையாகவே நடந்துகொண்டு அந்த வருத்தப்ராஹ்மணர்கள் தன்னை ஸமீபத்தில் வந்து பிடிக்கும்படி மெல்ல மெல்ல அடிகளை இட்டுக்கொண்டு சென்றனன்.

ராமன் தயாரஸம் வழிந்து வரப்பெற்ற கண்களையுடையவன், மேலும், ஸதாசாரத்தில் ப்ரீதியுடையவன் ஆகையால் கால் நடையாகவே நடந்து வருகின்ற அந்த ப்ராஹ்மணர்களைத் தான் ரதத்திலிருந்தே ஸமாதானப் படுத்துவதற்கும் அவன் மனம் பொறுக்கவில்லை அந்த ப்ராஹ்மணர்கள், ராமன் நிற்காமல் போய்க்கொண்டேயிருப்பதைக் கண்டு மனம் பரபரக்கத் துக்கத்தினால் மிகவும் பரிதபித்து அவனைப் பார்த்து 'நீ ப்ராஹ்மணர்களிடத்தில் மிகுந்த ப்ரீதியுடையவன், ஆகையால் இந்த ப்ராஹ்மணர்கள் அனைவரும் உன்னைப் பின்றொடர்ந்து

வருகின்றனர் அரணிகளில் ஏற்றிப்பட்டிருக்கிற இவ்வக்னிகளும் இந்த ப்ராஹ்மணர்களது தோள்களில் ஏறிக்கொண்டு உன்னைப் பின்தொடர்ந்து வருகின்றன; வாஜபேயயாகத்தில் சேர்ந்தவைகளும் சரத்காலத்திலுள்ள மேகங்கள்போல் வெளுத்தவைகளுமாகிய எமது சத்ரங்களும் (குடைகளும்) இதோ உன்பின்னே புறப்பட்டு வந்து கொண்டிருக்கின்றன. உனக்குக் குடையில்லையாகையால் வெயில் வலிவு பெற்று உன்னைத் தபிக்கச் செய்யும்பொழுது நாங்கள் வாஜபேயயாகத்தில் ஸம்பாதித்த எங்கள் குடைகளைக் கொண்டு உனக்கு வெயிலைப் போக்கி நிழல் படச் செய்வோம். குழந்தாய்! இதுவரையில் நிச்சிந்தையாக எப்பொழுதும் வேதமந்த்ரங்களில் சென்றிருந்த எங்கள் புத்தி இப்பொழுது உன்னைப் பற்றி வனவாஸத்தைப் பின்சென்றிருக்கின்றது. 'உங்கள் தனமாகிய வேதங்களையும், கூடவே தொடர்ந்து தர்மங்களை அனுஷ்டிக்கின்ற பார்யைகளையும் துறந்து வரக்கூடுமா?' என்பாயோ? அது வேண்டாம் எங்களுக்குப் பெருந்தனமாகிய வேதங்கள் எமது ஹ்ருதயங்களிலேயே இருக்கின்றன எங்கள் பார்யைகளையும் அவர்களது பாதிவ்ரத்யமே ரக்ஷிக்கின்றது. நாங்கள் ரக்ஷிக்கவேண்டிய அவஸ்யம் இல்லை. ஆகையால் அவர்கள் க்ருஹங்களிலேயே இருப்பார்கள் 'என் வேண்டுகோளுக்காக நீங்கள் திரும்பவேண்டும்' என்பாயோ? அதில்லை உன்னைத் திருப்பி அழைத்துக் கொண்டு போகவேண்டுமென்று நாங்கள் மனத்தில் திடமாக நிச்சயஞ் செய்துகொண்டிருக்கின்றனம். நீ வனத்திற்கே போவேனென்று மீளவும் பிடிவாதஞ் செய்வது யுக்தம் அன்று நீ தந்தையின் வார்த்தையைப் பரிபாலனஞ் செய்வதென்றாற் தர்மத்தையே நிறைவேற்ற

விரும்புவாயாயின், இனி நாங்கள் தபத்தை அனுஷ்டிப்பதற்கு நிமித்தம் யாதிருக்கின்றது? உன்னைப்போன்ற தார்மிகன் ஆரண்யத்திற்குப் போவானாகில், நாங்கள் தபத்தையே துறக்கவேண்டுமேயன்றி வேறில்லை. நாங்கள் காமத்தை அனுஷ்டிக்கலாமென்று பார்த்தாலும் நீ ஆரண்யஞ் சென்றபின்பு, எங்கள் காமானுஷ்டானத்திற்குப் பிடிப்பு யாதிருக்கின்றது? தர்மபராயணனாகிய நீயே பிராஹ்மணர்களின் பரிரக்ஷணையைச் செய்யவேண்டுமென்னும் தர்மத்தை உபேக்ஷித்துக் கானகஞ் செல்வாயாயின், இனி எந்த பிராணிதான் தர்மத்தை அனுஷ்டிக்க வல்லது? தர்மானுஷ்டானத்தில் நிலைநின்றிருப்பவனே! அப்படிப்பட்ட உன்னை, நரைத்திருக்கையால் ஹம்ஸங்கள் போல் வெளுத்த மயிர்கள் அமைந்த எமது சிரங்களைப் புழுதி படியும்படி நிலத்தில் படுத்தி நமஸ்காரஞ் செய்து வேண்டுகின்றனம், அதைப் பார்த்தாயினும் திரும்புவாயாக குழந்தாய்! உன்னைப் பின்றொடர்ந்து இவ்விடம் வந்திருக்கிற பிராஹ்மணர்கள் பெரும் யாகங்களைச் செய்வதற்காக வேண்டிய ஸம்பாரங்களைச் சேர்த்து வைத்து விட்டு வந்திருக்கின்றனர். நீ திரும்பினால்தான் அந்த யாகங்கள் நிறைவேறும். திரும்பாவிடின் அந்த யாகங்களுக்கு விக்னஞ் செய்தவனாவாய். ராமா! நாங்கள் மாத்திரமே அன்று ஜங்கமங்களாகிய திர்யக்கு ஜந்துக்களும் ஸ்தாவரங்களாகிய வ்ருக்ஷாதிகளும் உன்னிடத்தில் பக்தி உண்டாகப்பெற்றிருக்கையால் உன்வரவை வேண்டுகின்றன. அங்ஙனம் வேண்டுகின்ற பக்தியுள்ள அவைகளிடத்தில் ஸ்னேஹத்தைக் காட்டி அவைகளின் பக்தியை ஸபலப்படுத்துவாயாக. வ்ருக்ஷங்கள் நீ வனத்திற்குப் போவது கண்டு தாமும்

ராமன் தமஸாதீரத்தில் ராத்ரி இளைப்பாறி யிருந்து, அன்றிரவே பின்வந்த பௌர ஜனங்களை யேமாற்றிவிட்டுப் போதல்

பின்பு ராமன் அழகாயிருக்கின்ற அந்தத் தமஸா நதியின்கரையில் சேர்ந்து [1] ஸீதையைப் பார்த்துக்கொண்டே லக்ஷ்மணனை நோக்கி இவ்வசனத்தைச் சொல்லினன்—'லக்ஷ்மணா! நமது வனவாஸ காலத்தில் முதல் இரவு இதுவே ஆரண்யத்தில் நேர்ந்திருக்கின்றது. இதற்காக நீ கருஹும் முதலியவற்றை நினைத்துக்கொண்டாவது, 'ஸீதை ஸுகுமாரமாயிருக்கப்பட்டவள், இதை எப்படி ஸஹிப்பாள்' என்றாவது மனத்தில் வருத்தப்படாதிருக்கவேண்டும். லக்ஷ்மணா! இதோ ஆரண்யங்களைக் காண்பாயாக. ராத்ரி வரவே இங்குள்ள ம்ருகங்களும் பக்ஷிகளும் நாற்புறத்தினின்றும் வந்து தமது இருப்பிடங்களில் சேர்ந்து முழுவதும் நிறைந்திருக்கின்றன. இங்ஙனம் ம்ருகங்களும் பக்ஷிகளும் தந்தமது இருப்பிடங்களில் சென்று மறைந்திருப்பதனால், இவ்வரண்யங்கள் சூன்யங்களாகி ப்ரகாசமுமின்றி அந்த ம்ருகபக்ஷிகளின் சப்தங்களால் அழுவனபோலிருக்கின்றன, காண்பாயாக. இப்பொழுது [2] என் தந்தையின் ராஜதானியாகிய அயோத்யாநகரத்திலுள்ள ஸ்த்ரீகளும் புருஷர்களும் ஆகிய அனைவரும் தம்மை விட்டுப் போன நம்மைக் குறித்து மனவருத்தப் பட்டுக்கொண்டிருப்பார்கள். இதற்கு ஸந்தேஹமில்லை. புருஷஸிம்ஹனே! ப்ரஜைகளெல்லோரும் பல குணங்களைப் பற்றி ராஜாவினிடத்திலும், உன்னிடத்

1 (ஸீதையைப் பார்த்துக்கொண்டே லக்ஷ்மணனை நோக்கிச் சொல்லினன்) என்றதனால் லக்ஷ்மணனைப்போல ஸீதையும் மனஞ் சலங்காதிருக்கவேண்டுமென்று தெரியப்படுத்துவதற்காக வென்றுணர்க.

2 அழுவனபோன்ற அவ்வரண்யத்தின் ஸ்திதியைக் காணவே ராமனுக்கு அயோத்யை நினைவுக்கு வந்ததென்று தெரிகின்றது.

திலும, எனனிடததிலும, பாததசததருககனாகளிடததிலும மிகுநத அனுராகம உண்டாகபபெறறிருககினறனா, ஆகையால அவாகள வருநதுவாாகளெனபதைபபறறிச சொலலவேணடுமோ? எனககு என தநதையையும மிகுநத புகழ அமைநதவளாகிய என தாயாரையும நினைககும பொழுது மனவருததம உணடாகினறது. அவாகள ஓயாமல கணணீா பெருககிக கொண்டே யிருநது கணகள பாழாகபபெறறுக குருடாராயவிடுவாா களோ! எனனவோ! ஆனால ஒரு ஆஸ்வாஸம உணடு பரதன தாமஸவபாவனலலவா? ஆகையால அவன தாமராதத காமஙகள பொருநதிய வாகயங்களைச சொலலி என தநதை தாயகளை ஸமாதானபபடுதது வான லக்ஷமணா! பரதன கரூரஸவபாவனலலனெனறு அடிககடி நினைககும பொழுதெலலாம எனககுத தநதை யைபபறறியும தாயைபபறறியும மனவருததம உணடா கிறதிலலை புருஷஸிமஹனே! நீ எனனைப பினசெனறு வருவதுபறறி நலல காரயம செயதனை நீ வாராத பக்ஷததில ஸீதையை ரக்ஷிபபதறகாக ஸஹாயந தேட வேணடியதாயிருககு மலலவா? நீ இருபபதனால அநதக கஷடம இலலாமறபோயிறறு லக்ஷமணா! இனறைய தினநதான வனவாஸம ஆரமபிதத நா ளாகலும, இது புணயக்ஷேததிரமாகிய தமஸாநதியின கரை. ஆகையால உபவாஸம இருககததககும ஆனதுபறறி இனறிரவு ஜலம மாதரமே உடகொணடிருககினற னன பலவகை[1] வனயாஹாரஙகள இருநதபோதிலும, எனனிடததில பரீதியுளளவாகளின துககஙகளை நினைத துககொணடால அவையெலலாம எனககு ருசிககவே யிலலை. எனககு இபபொழுது ஜலம மாதரமே இஷட மாயிருககிறது' எனறனன ராமன இஙஙனம லக்ஷ மணனைப பாாததுச சொலலிமுடிததுப பினபு ஸுமந

1. காட்டிலுள்ள காயகிழஙகு முதலிய ஆஹாரஙகள

தரனை நோக்கி 'அழகிய ஸ்வபாவமுடையவனே! குதிரைகளின்மேல் மனவூக்கம் தவிர்த்திருப்பாயாக' என்றனன். அந்த ஸுமந்த்ரன், ஸூர்யன் அஸ்தமித்த உடனே குதிரைகளைக் கட்டி அவைகளுக்கு எதிரே புற்களை நிரம்பப் போகட்டு மேற்செய்யவேண்டிய காரியங்களை அறிந்தவனாகையால் ராமனது பார்ஶ்வத்தில் வந்து நின்றான். ஸுமந்த்ரன் மங்களகரமாகிய ஸாயங்காலஸந்த்யை உபாஸித்து ராத்ரி வரக்கண்டு லக்ஷ்மணனுடன் கூடி ராமனுக்குப் படுக்கை ஏற்படுத்தினான். ராமன் தமஸாநதிக்கரையில் செடியின் இலைகளால் ஏற்படுத்தப்பட்ட அந்தப் படுக்கையைக் கண்டு, லக்ஷ்மணன் பாதுகாக்கப் பெற்று ஸீதையுடன் படுத்துக்கொண்டனன். இப்படி. பர்த்தாவாகிய அந்த ராமனும் அவனது பத்னியும் நன்கு நித்திரைபோகக் கண்டு, லக்ஷ்மணன் ஸுமந்த்ரனைப் பார்த்து ராமனுக்குள்ள பல குணங்களை வர்ணித்துச் சொல்லினான். லக்ஷ்மணன் ஸுமந்த்ரனுக்குத் தமஸாநதிக் கரையில் ராமனது குணங்களைச்சொல்லிவிழித்துக்கொண்டேயிருக்கையில் ஸூர்யன் உதயமாயினன். ராமனும் தன்னைப் பின்றொடர்ந்து வந்த பட்டணத்து ஜனங்களோடு கூட, பசுக்கள் குவியல் குவியல்களாக நிரம்பப் பெற்றிருக்கிற அந்த தமஸாநதிக்கரையின் அருகில் அன்றிரவெல்லாம் இருந்தனன். மஹாதேஜஸ்வியாகிய ராமன் படுக்கையை விட்டெழுந்து அந்தப்ரஜைகளைப் பார்த்துப் புண்ய லக்ஷணங்கள் பொருந்திய லக்ஷ்மணனைக்குறித்து மொழிந்தனன்.— 'லக்ஷ்மணா! நம்மிடத்திலுள்ள மிகுந்த ப்ரீதியால் தந்தமது க்ருஹங்களிலும் சிறிதும் அபேக்ஷையில்லாமல் நம்மைத் தொடர்ந்து வந்து இந்தச் செடிகளின் கீழ் இப்பொழுது படுத்து நித்திரைசெய்து கொண்டிருக்கின்ற ஜனங்களைக் காண்பாயாக இந்தப்

பட்டணத்து ஜனங்கள் நம்மைத் திருப்பி அழைத்துக் கொண்டு போவதற்காகக் கொண்டிருக்கும் பிடிவாதத்தைக் கண்டால், ப்ராணன்களையாயினும் விடுவார்களே யன்றித் தமது பிடிவாதத்தைமாத்ரம் விடமாட்டார்க ளென்றே தோற்றுகின்றது. இவர்கள் நித்ரை போய்க் கொண்டிருக்கும் பொழுதே நாம் சுருக்கென்று ரதத்தின் மேல் ஏறிக்கொண்டு பயமில்லாத வழியில் போவோம். அப்படிச் செய்வோமாயின், இவ்வயோத்யாபுரவாஸிகள் என்மேலுள்ள ப்ரீதியால் இப்பொழுதைப்போல் இனி மேலாவது செடிகளின்கீழ்ப்படுத்து நித்ரைபோகாதிருப் பார்கள். ராஜகுமாரர்களாயிருப்பவர் தம்மால் பட்ட ணத்து ஜனங்களுக்கு மனவருத்தம் உண்டாகும்பொ ழுது, அதைத் தாம் போக்க வேண்டுமேயன்றித் தமது துக்கங்களைப் பட்டணத்து ஜனங்களுக்கும் விளைவிக்க லாகாதல்லவா?' என்றனன். லக்ஷ்மணனும் ஸாக்ஷாத் தர்மஸ்வரூபனாகிய ராமனைப் பார்த்து 'நீ எல்லாந்தெரிந் தவன். நீ சொல்வது எனக்கு ஸம்மதமாயிருக்கின்றது. சீக்ரத்தில் தேரின்மேல் ஏறுவாயாக' என்றனன். பிறகு ஸ்ரீமானாகிய ராமன் ஸுமந்த்ரனைப் பார்த்து 'நீ ஸா மர்த்யமுள்ளவன், ஆகையால் ஒருவர்க்குந்தெரியாதபடி ரதத்தை ஸித்தப்படுத்துவாயாக. நான் அதில் ஏறிக் கொண்டு அரண்யத்திற்குப் போகவேண்டும். சீக்ரம் போய் ரதத்தைக் கொண்டு வருவாயாக' என்றனன். பின்பு அந்த ஸூதன் சீக்கிரமாக அநந்தரத்தில் உத்த மங்களாகிய அச்வங்களைப் பூட்டிக் கொண்டுவந்து கை களைக் கூப்பிக்கொண்டு ராமனைநோக்கி 'ரதிகர்களிற் றலைவனே! நீண்டழகிய புஜதண்டங்களையுடையவனே! இதோ குதிரைகளைப் பூட்டி ரதத்தை ஸித்தப்படுத்திக் கொண்டு வந்திருக்கிறேன். நீ ஸீதையோடும் லக்ஷ்மண னோடுங் கூடி ஏறுவாயாக. உனக்கு மங்களம் உண்டாக

வேண்டும்' என்றான். ராமன் தனுஸ்ஸு கவசம் முதலிய பரிகரங்களுடன் அந்த ரதத்தின்மேல் ஏறிக்கொண்டு வேகத்துடன் பெருகி வருகின்றதும் பல நீர்ச்சுழிகள் நிரம்பப் பெற்றதுமாகிய தமஸாநதியைத் தாண்டிச் சென்றான். பித்ருவசனபரிபாலனம் செய்ய நேரப்பெற்றமையால் மிகுந்த ஒளியுடன் விளங்குகின்ற மஹாபாஹுவாகிய ராமன் அந்நதியைத் தாண்டி ரதத்தின்மேல் இருந்துகொண்டே அக்கரையைச் சேர்ந்து ரதம் கரையோரத்தில் ஜலத்தில் இருக்கும்பொழுதே அதினின்றும் இறங்கிப் பாதசாரியாகவே, முள்களில்லாமல் பயங்காட்டுந் தன்மையுள்ள செந்நாய் முதலிய துஷ்டஜந்துக்களின் பயமுமின்றி மங்கலகரமாகிய பெரியவழியைப் பிடித்துச் சென்றான். ராமன் தன்னைப் பின்தொடர்ந்து வந்த பட்டணத்து ஜனங்களை [1] மோசஞ் செய்ய நினைத்து ஸுமந்த்ரனைப் பார்த்து 'ஸாரதியே! நீ ஒருவனாய் [illegible] ரதத்தின்மேல் ஏறிக்கொண்டு வடதிசைப்புறம் பற்றிச் செல்வாயாக. அப்பொழுது பட்டணத்து ஜனங்கள், நான் அயோத்யைக்கே போனேன்

---

1 ராமன் தயாநிதியாயிருந்தும் தன்னைப் பிரியப்பொறாமல் தன்னிடத்தில் மிகுந்த ப்ரீதியுடையவர்களை இங்ஙனம் வஞ்சித்துப் போவது அனுசிதமன்றோ? என்னில்—இவ்வஞ்சனை அன்று பட்டணத்து ஜனங்களுக்குத் தன்னுடன் ஸாயங்காலமும் ஸஹவாஸம் நேருவதால் ஆநந்தம் தலைக்கு மேலிட்டு வருமாகையால் அவர்கள் ஸத்தையே இல்லாமற் போய்விடும். ஆகையால் அவர்களை ஸாத்மிக்கப் பண்ணிப் பிறகு அனுபவத்தை நெருக்கக் கொடுக்கும் பொருட்டு வ்ரணசிகித்ஸை செய்பவன்போல வனவாஸத்திலும் விஶ்லேஷத்தை ஸங்கல்பித்தனன் [illegible]. அவர்களுக்கு ஹிதமான வ்யாபாரமேயன்றி வஞ்சனமாகாது. ராமனுக்கு அப்படிப்பட்ட ஸங்கல்பம் இல்லையாயின் ஜனங்கள் எல்லோரும் [illegible] நேராது. ஸுமந்த்ரனைப் போலவும் லக்ஷ்மணனைப் போலவும் இவர்களில் ஒருவனாவது விழுந்து [illegible], அப்படி யில்லாமையால் ராமனுடைய ஸங்கல்பமேயன்று தெரிய

ன்று நினைத்துக்கொள்வார்கள். ஒரு முஹூர்த்த காலம் அங்ஙனம் வேகமாகச் சென்று மீளவும் ரதத்தைத் திருப்பிக்கொண்டு வேறுவழியாகத் திரும்பி வருவாயாக. நான் ஆரண்யம் போவது பட்டணத்து ஜனங்களுக்குத் தெரியாதிருக்கும்படி நீ இதை மனவூக்கம் மிகப்பெற்று நடத்தவேண்டும்' என்றனன். ஸுமந்திரனும் ராமனது வார்த்தையின்படி செய்து வேறு வழியாகத் திரும்பி வந்து 'நீ சொன்னபடி ரதத்தைத் திருப்பிக்கொண்டு வந்தேன்' என்று ராமனுக்குத் தெரிவித்தனன். அனந்தரம் ரகுகுலத்திற்கு வருத்தியைச் செய்கின்ற அந்த ராமலக்ஷ்மணர்கள் ஸீதையுடன், ஸுமந்திரன் தாங்கள் சொன்னபடி நன்றாகத் திருப்பிக்கொண்டுவந்த ரதத்தின்மேல் ஏறிக்கொண்டனர். பின்பு அந்த ஸாரதியும் தபோவனத்திற்குப் போகும் வழியைப் பிடித்துக் குதிரைகளை அதட்டி ஓட்டினன். அனந்தரம் மஹாராஜனுடைய அந்தத் தசரதகுமாரன் ஸாரதியோடுகூட ரதத்தின்மேல் ஏறிக்கொண்டு ஆரண்யத்திற்குச் சென்றனர். பின்பு அந்த ஸாரதி பிரயாண காலத்தில் மங்களத்திற்காக ரதத்தை வடதிசையாகக் கொஞ்சம் போகும்படி ஓட்டினன். நாற்பத்தாறாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ராமனைப் பின்தொடர்ந்து வந்த பட்டணத்து ஜனங்கள், அவன் தம்மை ஏமாற்றிப் போனது கண்டு சிந்தித்து அயோத்யைக்குத் திரும்பிப்போதல்

இரவு கழிந்து பொழுது விடிகையில் அந்தப் பட்டணத்து ஜனங்கள் அங்கு ராமனைக் காணாமல் சோகத்தினால் பரிதபித்துச் சேஷ்டைகளின்றி இன்னது செய்ய வேண்டுமென்று தோன்றாமல் மனம் மயங்கப் பெற

றிருந்தனர். அவர்கள் சோகத்தினால் கண்களில் நீர் ததும்பப்பெற்று மிகவும் வருந்தி நாற்புறமும் கண்களை விட்டுப் பார்த்துக்கொண்டே ஆங்காங்கு ராமனது வழியைக் காட்டவல்ல ரதரேணுவையுங் கூடப் பார்க்க நேராமல் மேன்மேலும் மனவருத்தம் மேலிடப் பெற்றிருந்தனர். புத்திமானாகிய அந்த ராமன் தம்மைத் துறந்து விட்டுப் போனதுபற்றி, அவர்கள் ராமனிடத்தில் மிகுந்த மனப்ரீதியுடையவர்களாகையால் மிகவும் வருந்தி முகம்வாடி விலவிலைத்துத் தீனர்களாகிக் கேட்போர்களுக்குக் கருணை உண்டாகும்படியான வார்த்தைகளை ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டனர் — 'ஓ! பாழான நித்திரை! அந்நித்திரையை எவ்வளவு பழித்தாலும் போதாது. அதனாலன்றோ நாம் மனம் மயங்கப் பெற்று ஏமாறி அகன்ற மார்பையுடையவனும் நீண்டழகிய புஜதண்டங்களையுடையவனுமாகிய ராமனைப் பார்க்க நேராதிருக்கின்றனம். அம்மஹாபாஹு தன்னை அனுஸரிப்பவர்களை வீண் செய்பவன் அல்லன், அப்படிப்பட்டவன் இப்பொழுது பக்தர்களாகிய நம்மைப் பரித்யாகஞ் செய்து அரண்யத்திற்கு எப்படிப் போயினன்? தந்தை தனது ஔரஸபுத்ரர்களைக் காப்பாற்றுவது போல நம்மை எப்பொழுதுங் காப்பாற்றுந் தன்மையனும் ரகுகுல திலகனுமாகிய ராமன், இப்பொழுது நம்மைத் துறக்க மனம் வந்து அரண்யத்திற்கு எப்படிப் போயினன்? நாம் இங்கேயே ப்ராயோபவேசஞ் செய்து ப்ராணன்களை விட்டு விடுவோம்; அல்லது மஹாப்ரஸ்தானஞ் செய்வோம் (மரணதீக்ஷையைக் கைப்பற்றி வடதிசைவழியாகப் போவோம்) இப்படிச் செய்யலாமன்றி ராமனைப் பிரிந்து இனி நமக்குப் பிழைப்பு எதுக்காக? இங்கு உலர்ந்த காஷ்டங்கள் மிகப் பெரியனவாகப் பலவும் இதோ இருக்கின்றன. அவைகளைக் கொண்டு சிதை ஏற்படுத்தி அதில் அக்னியை வளர்த்தி நாம் எல்லோ

ரும அககினிபரவேசத்தையாயினும செயவோம. இனி அயோததையககுப போவோமாயின, அஙகுக கேடபவாகளுககு எனனவெனறு பதிலுரைபபோம? பெருததழுகிய புஜஙகள அமையபபெறறுப பொருமையெனபது சிறிதும இலலாமல இனிய உரைகளை உரைககும தனமையனும ரகுகுலாலஙகாரனுமாகிய அநத ராமனைக காடடிறகுக கொணடுபோய விடடு வநதோமெனறனறோ பதிலுரைககவேணடும! இது எபபடி பொருநதும? முனனமே ராமனைப பிரிநததறகு வருததமுறறிருககிற ஸகரீ பால வருததாககளோடு கூடிய அவவயோததயா நகரம முழுவதும 'போனவாகள ராமனைத திருபபிக கொணடு வருவாாகளோ' எனறு எதிர பாாததுக கொணடிருநது ராமனை விடடு நாம மாததிரம வருவதை கணடு மனக களிபபினறி வருநதுவது ஸதயமே ராமன எபபொழுதும மனததை அடககிக கொணடிருபபவன. மஹாவீரன அபபடிபபடட மஹனீயனேடு கூடவே அயோததியினினறும புறபபடடோம, இபபொழுது அபபடிபபடடவனை விடடு நாம எபபடி திருமபி அநதப படடணததைப பாாககலாம?' எனறு சொலலிக கொணடு கனறுகளை விடடுப பிரிநத பசுககளைபபோல கைகளை உயர எழுபபிககொணடு துககததினால பரிதபிததது இஙஙனம பலவித வாாததைகளைச சொலலிப புலமபினா. பிறகு அவாகள தோ போனவழியைக கணடுபிடிகக முயனறு திருமபிக கொஞசதூரம சென்று, அனநதரம வழி புலபபடாமையால அளவிலலாத துககஸாகரததில முழுகிக கிடநதனா. நலல மனமுடைய அநநகரததுஜனஙகள ரதமபோனவழி தெரியப பெருமல இது எனன! இனி எனசெயவோம?' தெயவம நமமைப பாழாககி விடடதே' எனறு புலமபிக கொணடே திருமபினா. பினபு அவாகளெலலோரும மனததில சிறிதும உதஸாஹமினறித தாம வநதவழியே பிடிததது அயோததயாபுரததிறகுப போயினா. அபபொழுது அநநகரததிலுளள ஸதபுருஷாகளெலலோரும

ராமவியோக துக்கத்தினால் பீடிக்கப்பட்டிருந்தார். திரும்பி வந்த ஜனங்களெல்லோரும் அந்தப் பட்டணம் ஜலந் தெளித்து விளக்கிப் புஷ்பங்கள் தூவுதல் முதலிய ஸம்ஸ்காரங்கள் ஒன்றுமில்லாமல் பாழாயிருக்கக் கண்டு மிக்க மனவருத்தம் உற்றவர்களாகி 'ஒரு நஞ்சைச் சார்ந்த ஓடையில் ஸர்ப்பம் ஒன்று வசித்துக்கொண்டிருக்க, அந்த ஸர்ப்பத்தைக் கருடன் கொண்டுபோகையில் அந்நதி சூன்யமாகி விளங்காதிருப்பதுபோல, இப்பட்டணம் ராமன் இல்லாமையால் சூன்யமாகி மிகவும் மனக்களிப் பற்றிருக்கிறதே' என்று புலம்பிக்கொண்டு சோகத்தினால் வருந்திய கண்களினின்றும் நீர்களைப் பெருக்கினார். ராமன் இல்லாமற் போனது பற்றி ஆநந்தமென்பது சிறிதுமில்லாமல் பாழாயிருக்கின்ற அந்தப் பட்டணம், துக்கத்தினால் மனம் பரிதபிக்கப்பெற்றிருக்கிற அப்பௌர ஜனங்களுக்கு, ராத்திரியில் சந்திரனில்லாத ஆகாசம் போலவும், ஜலமில்லாத ஸமுத்ரம் போலவும், புலப்பட்டுக்கொண்டிருந்தது. அவர்கள் துக்கத்தினால் வருந்தி உத்ஸாஹமென்பது சிறிதும் இல்லாமல் மிகவுந் தளர்ந்து வருந்தியுள்ள தத்தம் க்ருஹங்களுக்கு எவ்வாறேனும் மனவருத்தத்துடன் சென்று மனக்களிப் பென்பது முழுவதும் அழிந்து சோகத்தில் ஆழ்ந்திருப்பதனால், தம்மெதிரில் இருப்பவர்களைக் கண்டும், அவர்கள் ஸ்வஜனங்களா இதர ஜனங்களா வென்று சிறிதும் அறியப் பெறாதிருந்தனர். நாற்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

### பட்டணத்து ஜனங்களின் மனவருத்தம்

அப்பட்டணத்து ஜனங்கள் இங்ஙனம் ராமனைப் பின்சென்று நடுவழியில் அவனைத் துறந்து காணாமல் அவன் போனவழியும் தெரியப்பெறாமல் திரும்பினவர்களாகி, அவனைக் காணாத மனவருத்தத்தினால் மிகவும்

பீடிக்கப்பட்டுக் கண்களிரண்டிலும் நீர் ததும்பப்பெற்று மனம் நொந்து வருந்திச் சிந்தாயினும் ஸங்கப்பட்டவர் மேலெண்ணும் மரணத்தை ஆசைப்பட்டுத் திடந்தப்பிப் பிராணனைகள் தொலைந்து போனாற்போல் மூச்சிந்திருந்தனர். பின்னும், அவர்கள் முகத்தில் கண்ணீர் நிரம்பப் பெற்றுத் தந்தம் கருமங்களுக்குச் சென்று புத்ராகளோடும் பத்னிகளோடும் கூடி எல்லோருமாக மேன்மேலும் கண்ணீர் பெருக்கினர். அவர்கள் ஸந்தோஷித்தாருக்காமென்றுங்களைக் கண்டும் மனக்களிப்பின்றி யிருந்தனர். பூஜை எப்பொழுதும் தாம் பெற்றனுபவியாத சிறந்த பதார்த்தங்களைப் பெற்றும் ஸந்தோஷியாமலே இருந்தனர். வர்த்தகர்கள் கடைகளில் சரக்குகளைப் பரப்பவில்லை. பெருந்தனஞ்செய்து புண்யபலனைப்பெற்ற பிள்ளை பெண்டிர் முதலியவைகளும் விளக்கமுறுதிருந்தன. க்ருஹஸ்தர்கள் தத்தம் க்ருஹங்களில் சமையலுங் கூடச் செய்யவில்லை. கெட்டுப்போய் வெகுகாலம் அகப்படாத ரத்னங்களை திரும்பி அகப்படினும், நிதிமுதலியவற்றை ஏராளமாகப் பணங்களைப்பெறினும் அவர்கள் மனக்களிப்பின்றியிருந்தனர். தாய் வெகுநாள் வ்ரதோபவாஸங்களைச் செய்து முதலில் பெற்ற பிள்ளையைக் கண்டும் களிப்பில்லாதிருந்தனள். வீடுகள்தோறும் மடந்தையர் துக்கத்தினால் பீடிக்கப்பட்டுப் புலம்பிக்கொண்டிருந்து வீட்டிற்கு வந்த கணவர்களை, யானைப்பாகர் மாவெட்டிகளால் யானைகளைக் குத்தித் துன்புறச் செய்வதுபோல க்ரூரங்களான சொற்களைச் சொல்லி வருந்தச் செய்தனர். அந்த ஸ்த்ரீகள் அவர்களைக்கண்டு 'எவர்கள் ராமனைக் காணப் பெறுதிருக்கிறார்களோ, அவர்களுக்கு வீடுகள் எதுக்காக? அப்படிப்பட்டவர்களுக்குத் தனங்களாலாவது, பிள்ளைகளாலாவது ப்ரயோஜனம் என்? அவர்களுக்கு ஸுகங்கள்தானும் எதுக்கு? அரண்யத்தில் ஸீதையுடன்கூடிய ககுத்ஸ்தகுலாலங்காரனாகிய ராமனுக்குப் பரிசர்யை செய்யும்பொருட்டுப் பின்றொடர்ந்து நடந்த லக்ஷ்மணன் ஒருவனே உலகம் அனைத்திலும்

ஸத்புருஷர்களால் கூறத்தகுந்தவன். ராமன் அரணியத்தில் எந்த நதிகளிலும் எந்தத் தாமரையோடைகளிலும் எந்தத் தாமரைக்குளங்களிலும் இறங்கித் தெளிந்த ஜலங்களில் ஸ்நானஞ்செய்யப்போகிறானோ, அங்கெல்லாம் சிறந்த புண்யஞ்செய்தவரை அறிய வ்ருக்ஷங்களின் கிளைகள் நிரம்பப்பெற்ற அரணியங்களும் அகன்றழகிய ஜலங்களைக் கரைகளையுடைய நதிகளும், ப்ரதான தாழ்வரைகளையுடைய பர்வதங்களும் ராமனுக்கு மனக்களிப்பை விளைக்கப்போகின்றன. ராமன் அரணியத்திற்காக வந்து மலைக்குவந்து எவ்விடம் போயினும், அவனை ப்ரிய அதிதியைப்போல் தம்மிடம் வந்த ஸ்வாமியைப் பூஜிக்காதிருக்க மாட்டாது. [1] வ்ருக்ஷங்கள் தங்கள் சிகரங்களில் சிரோபூஷணம்போல் விசித்ரமாய் விளங்குகிற புஷ்பங்களோடு கூடிக் கிளைகளோடேயும் பூங்கொத்துக்களை நிரம்பப்பெற்று இனிய ஒலியுடன் கூடிய வண்டுகள் சூழ ப்ரகாசித்துக்கொண்டிருந்து ராமனைப் பூஜிக்கப் புறப்படப் போகின்றன. பர்வதங்களும் ராமன் வருகையைக் கண்டு தன்னிடத்திலுள்ள ஆச்சர்யத்தினால் அகாலத்திலும் மேலான பூக்களையும் பழங்களையும் அப்பொழுது உண்டாக்கச்செய்து புஷ்பித்து ஸந்தோஷத்தை விளைக்கப்போகின்றன. பர்வதங்கள் வேண்டியபொழுதெல்லாம் ராமனுக்குத் தம்மிடத்திலுள்ள அற்புதமாகிய பலவித மலையருவிகளைப் பலவாறாகப் புலப்படுத்தித் தெளிந்து அழகாயிருக்கின்ற ஜலங்களைக் கொடுக்கப் போகின்றன. பர்வத சிகரங்களிலுள்ள வ்ருக்ஷங்களும் ராமனுக்கு

1 வ்ருக்ஷங்கள் ராமனைப் பரமாத்மாவாக நினைத்துத் தமக்கிருக்கிற வண்டுகளின் ஜங்காரங்களாகிற மந்த்ரங்களைச் சொல்லிக்கொண்டு தம் கிளைகளாகிற கைகளில் பூங்கொத்துக்களாகிற புஷ்பாஞ்ஜலிகளைக் கொண்டு ராமனை அர்ச்சிக்கப் போகின்றனவென்று கருத்து. இப்படிக்கு மஹேஸ்வர தீர்த்தர்.

மனக்களிப்பை விளைக்கப் போகின்றான் ராமன் மஹாசூ
ரன், மேலும், நீண்டுழகிய பாஹுதண்டங்களையுடைய
வன், சூரர்களில் தலைவனாகிய தசரதனது குமாரனல்ல
வா? அப்படிப்பட்ட ராமன் இருக்குமிடத்தில் நமக்குப் பய
மென்பது சிறிதும் நேரிடாது, அவமானமும் எள்ளளவும்
உண்டாகாது. நாம் தாமதப்படுத்தினோமாயின், ரா
மன் பின்மேலும் வெகுதூரம் நடந்து போய்விடு
வான். ஆகையால் இப்பொழுதே புறப்பட்டு ராமனிருக்கு
மிடந் தேடிச் செல்வோம். அப்படிப்பட்ட மஹானு
பாவனாகிய பிரபுவின் பாதஸேவையே நமக்கு ஸந்தோஷத்
தைக் கொடுக்கவல்லது. அவனே நமக்கு நாதன்.
அவனே கதி. அவனே நமக்குப் பரம ஆதாரமும்.
நாங்கள் ஸீதைக்குப் பரிசாரம் செய்கின்றோம். நீங்கள்
ராமனுக்குப் பரிசாரம் செய்யலாம்' என்றனர். இங்ங
னம் அப்பட்டணத்து மடந்தையர் துக்காதிசயத்தினால்
வருந்திப் பாதகர்களைப் பார்த்து அந்தந்தச் சொற்களைச்
சொல்லி, மீளவும் அவர்களை நோக்கி மொழிந்தனர் —
'ராமன் உமது யோகக்ஷேமங்களை நிறைவேற்றவல்லவன்.
ஸீதையும் இந்த ஸ்திரீஜனங்களுக்கு வேண்டிய யோக
க்ஷேமங்களை நடத்துவாள். ராமனில்லாமையால் ஸஜ்
ஜனங்கள் யாவரும் செய்யத் தக்கதும் ஆனதுபற்றியே
மேன்மைகுன்றப்பெற்றதும் ராமனை நினைத்து மனவருத்
தமுற்றுப் பரிதபிக்கின்ற ஜனங்களுடன் கூடியதும் மனக்
களிப்பைத் தொலைத்துப் புத்தியைக் கெடுக்கவல்லதுமா
கிய இவ்வயோத்யாபுரவாஸத்தினால் எவன் தான் மனக்
களிப்புறுவான்? இந்த ராஜ்யம் கைகேயியைச் சேருமா
யின், தாமத்தினின்றும் நழுவி நாதனையும் துறந்து
பாழாய்விடும். இதற்கு ஸந்தேஹமும் உண்டோ? அப்பொ
ழுது நமக்குப் பிழைத்திருப்பதனால் பயனில்லை. பிழைத்த

திருபபதனும பயனிலலையாயின, அனநதரம பிளளைக ளாலாவது பணஙகளாலாவது பரயோஜனம யாது? எவள ஐஸவாயததிறகாகப புதலவனையும பாததாவையும பரிதயாகஞ செயதாளோ, குலததைக கெடுபபவளான அபபடிபபடட கைகேயி மறறெறவனைத தான பரிதயா கஞ செயயமாடடாள? கைகேயியின ராஜயததில அவள பிழைததிருககையில, நாம பராணனாகள இருக கும வரையிலும பருதயாகளைபபோல ஒருநாளும வஸிததிருககலாகாது இவவிதமாக எஙகள புதலவா மேலும ஆணையிடடுச சொலலுகினறனம நமது ராஜ சிரோமணியாகிய தசரதனுடைய குமாரனை ராமனைத தயையினறி அரணயததிறகு அனுபபினளே! அப படிபபடட அதாமிஷடையாகிய அநதத துராசாரையி னிடஞ சேரநது எவனதான ஸுகமாகப பிழைத திருபபான? இநத ராஜயம முழுவதும ஆதாரமினறி நாயகனுமிலலாமல உபதரவப படடுககொணடிருககின றது ஒரு கைகேயியைபபறறி இதெலலாம நாசம அடையபபோகினறது. ராமன அரணயததிறகுபபோன பினபும தசரதமனனவன பிழைததிருககபபோகிறானோ? பிழைததிருககமாடடானலலவா? தசரதன காலஞசென று போகையில, பிறகு எலலாவறறிறகும நாசம உண டாயவிடுமெனபது யாவாககும வெளிசசமேயலலவா? எமககுப புணயம குறைநது போயவிடடது மேலும, பெரிய ஏழைகளாய விடடனம. இவவிஷயததை நனகு ஆலோசிதது விஷததையாவது பருகுவீாகளாக; இல லையாயின, ராமனையாவது பினதொடாநது நடபபீா களாக. அதுவும இலலையாயின, உஙகள பேரும கூடசசெயலில படககூடாத தூர தேசததிறகாவது போகவேணடும. 'பிதருவசன பரிபாலனததிறகாகவும

கைகேயிக்கு ப்ரியஞ் செய்வதற்காகவும் ராமன் அரண்யத்திற்குச் சென்றானாயின், அதற்கு நாமென்ன செய்யக் கூடும்' என்கிறீர்களோ? அப்படி இல்லை அரசன் கபடம் வைத்துக்கொண்டு ஸீதையோடும் லக்ஷ்மணனோடும் ராமனை அரண்யம் போகத் துரத்தி விட்டனன். பசுக்களைக் கொலையாளியிடம் ஒப்புவிப்பது போல், நம்மையும் பரதனிடம் ஒப்புவித்தனன் மன்னவன் இத்தகைகாரியத்தைச் செய்து விட்டனன். ஆயினும் நாம் ராமனைப் பின்தொடர்ந்து செல்வோமாயின் ஸுகித்திருக்கலாம். லக்ஷ்மணனுக்குத் தமையனாகிய ராமன் பூர்ணசந்த்ரன் போன்ற முகமுடையவன், குளிர்ந்த கருநிறமுடையவன், மேலும், நல்ல ஸ்வபாவமுடையவன், தோளெலும்புகள் மறைந்தழகாயிருப்பவன்; பின்னும், பகைவரைப் பறந்தோடச் செய்யவல்லவன், முழந்தாளவரையிலும் நீண்டழகிய பாஹுதண்டங்களையுடையவன்; தாமரையிதழ்போன்ற கண்களுடையவன் அவன் எவனோடாயினும் தானே முன்னிட்டுப் பேசுந்தன்மையுடையவன், யாவர்க்கும் இனியனாயிருப்பவன், ஸத்யத்தையே மொழியும் ஸ்வபாவமுடையவன், மிகுந்த பலம் அமைந்தவன் அவன் ஸமஸ்தலோகங்களுக்கும் சந்த்ரன்போல் அழகிய காட்சியுடையவன், மத்தகஜம்போல் நடையிடுக்குடையவன், அம்மஹாரதிகர், அப்புருஷஸிம்ஹன், தன் ஸஞ்சாரத்தினால் அரண்யங்களை விளங்கச் செய்யப் போகின்றனன் இது நிஜம்' என்றனர் அந்தப் பட்டணத்து மடந்தையர் நாகரிகர்களாகையால் எதற்கும் கலங்காத மனமுடையவராயினும் ராமவிரஹத்தைப் பொறுக்கமுடியாமல் இங்ஙனம் புலம்பிப் பரிதபித்து மரணம் நேர்ந்தாற்போல் கூக்குரலிட்டழுதனர் இவ்விதமாக அந்த ஸ்த்ரீகள் க்ருஹங்களில் ராமனைக் குறித்துப் புலம்பிக்கொண்டிருக்கும்பொழுதே ஸூர்யன்

அஸ்தமித்தனன். ராத்ரியும் வந்துவிட்டது. அப்பொழுது ஹோமம் முதலியவற்றிற்காக வளர்த்தப்பட்ட அக்னிகள் ப்ரகாசிக்காமலே யிருந்தன. வேதாத்யயனங்களாவது புராணபடனங்களாவது நடக்கவில்லை அந்தப்பட்டணம் முழுவதும் இருள்மூடப் பெற்றது போல் இருந்தது மேலும், அப்பட்டணத்தில் வர்த்தகர்களும் கடைகளைப் பரப்பவில்லை ஸந்தோஷம் என்கிற வார்த்தையே அங்கெங்கும் புலப்படவில்லை திக்கே இல்லாதிருந்தது ஆகையால் அவ்வயோத்யாநகரம் நக்ஷத்ரமில்லாத ஆகாயம்போல் புலப்பட்டது ஸ்த்ரீகள் தமது புதல்வர்களாவது, தமதுடன் பிறந்தவர்களாவது அரண்யத்திற்குத் துரத்தப்படுவார்களாயின் எப்படி மனவருத்த முறுவார்களோ, அப்படியே ராமனைக் குறித்து மிகுந்த மனவருத்தமுற்றுத் தீனர்களாகி மனத்திடந் தவறிப் பன்னிப்பன்னிப் புலம்பியழுதனர் என்னில், அந்த ராமன் அவர்களுக்குப் புதல்வர்களைக் காட்டிலும் உடன் பிறந்தவர்களைக் காட்டிலும் மேலாகவே இருந்தனன் அப்பொழுது அவ்வயோத்யாநகரத்தில் ஆட்டங்களும் பாட்டுக்களும் உத்ஸவங்களும் வாத்யகோஷங்களும் நின்றுபோயின ஸந்தோஷம் அவ்விடம் விட்டு வெகுதூரம் நடந்து சென்றது கடைகளும் ஸம்ருத்திகளொன்றுமில்லாமல் மூடப்பட்டிருந்தன ஆகையால் அந்தப் பட்டணம் ஜலம்வற்றிய மஹாஸமுத்ரம் போல் பாழாயிருந்தது நாற்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று

ராமன் அரண்யத்திற்குப் போய்க்கொண்டே வேதஶ்ருதி கோமதி யென்னும் நதிகளைத் தாண்டுதலும் ஸுமந்த்ரனோடு கலந்து ஸம்பாஷணஞ் செய்தலும்.

புருஷஸிம்ஹனாகிய ராமன் தந்தையின் ஆஜ்ஞையை ஸ்மரித்துக்கொண்டே பட்டணத்து ஜனங்களை நடுவழியில் துறந்த அந்த [1] ராத்ரிசேஷத்திலேயே வெகு தூரம் போயினன். அவன் அங்ஙனம் போய்க்கொண்டிருக்கும் பொழுதே ராத்ரியும் ஸுகமாகக் கடந்து சென்றது. ராமன் மங்கலகரமாகிய விடியற்காலஸந்தியை உபாஸித்து உத்தரகோஸல தேசத்தினுடைய தக்ஷிணபாகத்தின் எல்லையைச் சேர்ந்தனன். வழியிலுள்ள க்ராமங்களெல்லாவற்றிலும் விதை விதைக்கும் பொருட்டு அவைகளைச் சுற்றி எல்லைக் கடைசி வரையிலுமுள்ள நிலங்கள் நன்கு உழப்பெற்றிருந்தன. வனங்கள் முழுமையும் புஷ்பித்திருந்தன. ராமன் அவைகளையெல்லாம் பார்த்துக்கொண்டு பெரிய ஊர்களிலும் சிறிய ஊர்களிலும் வஸிக்கும் ஜனங்கள் மொழியும் வார்த்தைகளைச் செவியிற் படுத்திக்கொண்டே, குதிரைகள் வேகமாக நடந்து சென்றபோதிலும் அவைகளின் [2] கதிலாகவத்தினாலும் ஆங்காங்குள்ள விசேஷங்களில் மனஞ்செலுத்திச் செல்வதினாலும் மெதுவாகப் போவது போலவே வெகுதூரங் கடந்து சென்றனன். பெரிய ஊர்களிலும் சிறுசேரிகளிலும் வாஸஞ்செய்பவர் அந்த ராமனைக் கண்டு 'சீ! தசரதமஹாராஜன் எவ்வளவு மனுஷ்யன்! கேவல காமத்திற்கு உட்பட்டு இங்ஙனஞ் செய்தனன். ஐயோ! கைகேயி, இப்பொழுது கொடுந்தன்மையளாயினளே, இதென்ன வருத்தம்! எவ்வளவு பாபிஷ்டையோ! இடைவிடாமல் மேன்மேலும் பாபங்

---

1. ராத்ரிசேஷம்—ராத்ரியின் மிச்சம், இன்னம் பொழுது விடிவதற்கு எவ்வளவு அவகாசம் இருந்ததோ அவ்வளவிலேயே

2 கதிலாகவமாவது நடையில் உள்ள வேகம்.

களையே செய்யுந் தன்மையளாயினள். இல்லாமலென்? ராமன் தர்மஸ்வபாவன், எல்லாவற்றிலும் மிகுந்த அறிவுடையவன்; அவனே தயைக்குப் பிறப்பிடம்; இந்திரியங்களையெல்லாம் தன்வழி செல்லாதபடி அடக்கிக்கொண்டிருப்பவன், அப்படிப்பட்ட புதல்வனை வனவாஸஞ்செய்யும்படி ஊரைவிட்டுத் துரத்தினளே! அவள் க்ரூரஸ்வபாவமுடையவள் அல்லளோ? அவள் ஸ்த்ரீகளின் மர்யாதையை அதிக்ரமித்தவள்; க்ரூர கார்யத்தில் இழிந்திருக்கின்றனள் மஹாபாக்யமுடையவளும் எப்பொழுதும் ஸுகத்திலேயே முழுகிக்கிடப்பவளும் ஜனகராஜன் திருமகளுமாகிய ஸீதை துக்கத்தை எப்படி அனுபவிப்பாள்? ஐயோ! தசரதமஹாராஜர் ஸ்னேஹமே அறியாதவன் ஆனதுபற்றியே ப்ரஜைகளுக்கெல்லாம் ப்ரியனாகி எந்தப் பாபத்தையும் அறியாத தன் குமாரனாகிய ராமனை இப்பொழுது கைவிடலாயினன்' என்று ஒருவர்க்கொருவர் சொல்லிக்கொண்டனர். மிகுந்த வீர்யமுடையவனும் கோஸலேஶ்வரனுமாகிய ராமன் க்ராமங்களிலும் சேரிகளிலும் வஸிக்கின்ற அவர்கள் சொல்லும் வார்த்தையைச் செவியிற் படுத்திக்கொண்டே கோஸலதேசங்களைத் தாண்டிச் சென்றனன். அனந்தரம் அவன் அழகிய ஜலப்ரவாஹம் பொருந்திய வேதஶ்ருதியென்னும் நதியைத் தாண்டி அகஸ்த்ய மஹர்ஷியின் வாஸஸ்தானமாகிய தென்றிசை முகமாகச் சென்றனன் ராமன் வெகுநேரம் ப்ரயாணமாய்ச் சென்று பிறகு கோமதியென்னும் நதியைத் தாண்டினன் அந்நதி குளிர்ந்தழகிய ஜலமுள்ளது அதன் ஜலக்கரைகளில் பசுக்கள் மந்தை மந்தையாக மேய்ந்து கொண்டிருக்கும் அந்நதி ஸமுத்ரத்தில் போய் விழுந்தன்மையுள்ளது ராமன் குதிரைகள் வேகமாகப் போவதுபற்றிக்

கோமதியையுந் தாண்டி மயில்களும் ஹம்ஸங்களும் நாற்புறங்களிலும் கூவப்பெற்று அழகியதாகிய ஸ்யந்திகையென்னும் நதியையுங் கடந்து சென்றனர். முன்பு மனு இக்ஷ்வாகுவுக்குக் கொடுத்ததும் மிகுந்த பரப்புள்ளதும் அவாந்தரதேசங்களோடு கூடியதுமாகிய [1] கோஸல தேசங்களை ராமன் ஸீதைக்குக் காண்பித்துக்கொண்டே போயினன். புருஷர்களிற் சிறந்தவனும் மிகுந்த சேனை பொருந்தியவனுமாகிய அந்த ராகவன் மதித்த ஹம்ஸத்தின் கண்டஸ்வரம் போன்ற கண்டஸ்வரத்துடன் 'ஸூத!' என்று ஸாரதியை அழைத்து, 'இனி எப்பொழுது நான் திரும்பிவந்து என் தாயோடும் தந்தையோடுங் கூடிப் புஷ்பித்திருக்கின்ற ஸரயூநதிக்கரையிலுள்ள வனங்களில் வேட்டையாடி விளையாடப் போகிறேன்? 'வேட்டை சிஷ்டாசாரம் அன்று' என்பாயோ? வனத்தில் வேட்டையாடுதல் பரலோகஸௌக்யத்தை விளைவிக்காதாயினும், ராஜரிஷிகளுக்கும் (ரிஷிகளைப்போல் தாமதத்தில் நிலைநின்ற அரசர்களுக்கும்) இவ்வுலகத்தில் மனக்களிப்பின் பொருட்டு ஏற்படுத்தப்பட்டிருக்கிறதன்றோ? மேலும், ஸதாசாரபரர்களாகிய மனிதர்கள் புராதநாதிகாலங்களில் மாம்ஸத்திற்காக வேட்டையை அபேக்ஷிக்கிறார்களல்லவா? வில்லாளிகளும் சலிக்கின்ற லக்ஷ்யங்களைக் குறி தவறாமல் அடிக்கத் தெரிந்துகொள்ளும் பொருட்டு இதை ஆசைப்படுகின்றனர். ஆயினும், நான் இதை அதிகமாக விரும்பவில்லை. ஸரயூவனத்தில் கொஞ்ச

---

1 'இக்ஷ்வாகூணாமியம் பூமிஸ் ஸஸைலவநகாநநா' என்று பூமி முழுவதும் இக்ஷ்வாகுவம்சத்தரசர்களுடையதாகவே இருக்கக் கோஸலதேசத்தை இக்ஷ்வாகுவினுடையதாகச் சொல்லுகை எப்படி? என்னில்—இது அவனுடைய ஜன்மபூமியாகச் சொல்லப்பட்டது. மற்றைத் தேசங்களிலுள்ளவர்கள் யாவரும் அவனுக்குக் கப்பங்கட்டுகிறவர்களென்னத் தெரியவருகின்றது. ஆகையால் 'இக்ஷ்வாகூணாமியம் பூமி:' என்கிறதற்கு விரோதமில்லையென்று கண்டுகொள்வது.

பர்வதத்தில் நீ வாஸஞ் செய்யலாகும். மனுஷ்யன் எப்பொழுது சித்ரகூடபர்வதசிகரங்களைப் பார்ப்பானோ, அப்பொழுதே அவனுக்குப் பாபத்தில் மனம் செல்லாது; மங்களகார்யங்களிலேயே புத்தி சென்று கொண்டிருக்கும். [1] அந்த சித்ரகூடபர்வதத்தில் பலரிஷிகளும் பல நூறு ஸம்வத்ஸரங்கள் விளையாடுவதுபோல ஸுகமாகத் தவஞ் செலுத்தி, அந்தத் தவத்தின் மஹிமையாலும் இடைவிடாமல் கபாலஸ்நானஞ் செய்வதனாலும் தலை மயிர்களும் சரீரத்தில் தோல்களும் விடப்பெற்றுக் கபால மாத்ரம் மிகுந்திருக்கப் பெற்று அந்தச் சரீரத்துடனே ஸ்வர்க்கலோகம் போய்ச் சேர்ந்தனர். ராமா! அது மிகவும் ஏகாந்தமாயிருக்கும் நீ அங்கு ஸுகமாக

---

ந்த மஹர்ஷி 'கோலாங்கூலானுசரிதோ வானரர்க்ஷநிஷேவித:' என்று கொண்டை முயல்களும் குரங்குகளும் கரடிகளும் ஆகிய மூன்றையுஞ் சொன்னதனால் அவ்விதமானவர்களே ராமனுக்கு ஸஹாயமாவார்களென்று ஸூசிப்பித்தாரென்று தெரிகின்றது

1. இதற்கு மூலம்—'ருஷயஸ் தத்ர பஹவோ விஹ்ருத்ய சரதாம் சதம் | தபஸா திவமாரூடா: கபாலசிரஸா ஸஹ'. இங்கு 'கபாலசிரஸா' என்னும் இந்தப் பதத்திற்குப் பலவிதமாகப் பொருள் கூறுகின்றனர் அதில் ஒரு விதம் மூலத்தில் சொல்லப்பட்டது. மற்றை விதங்களாவன—(கபாலசிரஸா) என்பது-சரீரம் முழுவதையுங் காட்டுகிறது. சரீரத்தோடு கூடவே ஸ்வர்க்கஞ் சென்றார்களென்றபடி. அல்லது—(கபாலசிரஸா) கபாலசிரஸ்ஸென்னும் ஒரு ருஷி உள்ளார், அவருடன் கூட மற்றவரும் ஸ்வர்க்கஞ் சென்றார்களென்று பொருள். அல்லது (சரீரேண) என்னும் பதத்தைக் கூட்டிக்கொண்டு (கபாலசிரஸா சரீரேண) கபாலசிரஸ்ஸுடன் கூடிய சரீரத்தோடு கூடவேயென்று பொருள் கபாலசிரஸ்ஸாவது கபாலந் திடமாயிருக்கப் பெற்ற சிரஸ்ஸு கபாலம்—மண்டையோடு. அல்லது—(கபாலசிரஸா) என்று (தபஸா) என்பதற்கு விசேஷணமாக்கி, சிரக்கபாலம் மிகுந்திருக்கும்படி சரீரத்தை உலர்த்திக் கடுமையாக நடத்தின தவத்தின் மஹிமையால் ஸ்வர்க்க லோகஞ் சென்றார்களென்றபொருள்.

வாஸஞ் செய்யலாமென்று தோற்றுகின்றது. இப்படி இல்லையாயின், இங்காவது என்னோடுகூட வஸித்திருந்து உனது வனவாஸநியமத்தைத் தீர்த்துக்கொள்வாயாக' என்றனர். அந்தப் பரத்வாஜமஹர்ஷி தாமங்களை அறிந்தவராகையால், ராமனுக்கும் ஸீதைக்கும் லக்ஷ்மணனுக்கும் அதிதிகளுக்குச் செய்யவேண்டிய ஸத்காரங்களை நடத்தி உபசரித்தனர். இங்ஙனம், ப்ரயாக க்ஷேத்ரத்தில் வாஸஞ் செய்கின்ற அந்தப் பரத்வாஜ மஹர்ஷியிடஞ் சென்று பணிந்து அவர் செய்த ஸத்காரங்களையும் பெற்று அம்மஹர்ஷியின் அருகில் உட்கார்ந்து அற்புதங்களாகிய கதைகளைச் சொல்லிக்கொண்டிருக்கையில், பரிசுத்தமாகிய ராத்ரி வந்தது. ஸுகானுபவத்திற்கே உரியவர்களாகிய ஸீதாராமலக்ஷ்மணர்கள் மூவரும் ச்ரமந்தீரப் படுத்துக்கொண்டு அன்றிரவெல்லாம் அழகியதாகிய அந்தப் பரத்வாஜமஹர்ஷியின் ஆச்ரமத்திலேயே ஸுகமாக வஸித்திருந்தனர். உதயமானவுடன் புருஷசிகாமணியாகிய ராமன், ப்ராஹ்ம தேஜஸ்ஸுடன் ப்ரகாசித்துக்கொண்டிருக்கின்ற பரத்வாஜமுனிவரிடம் வந்து அம்முனியைப் பார்த்து 'ஸத்ய சீலரே! மஹானுபாவர்! நாங்கள் இன்றிரவெல்லாம் இவ்வாச்ரமத்தில் வஸித்திருந்தோமன்றோ? இனி நீர் அருளிச் செய்த வாஸஸ்தானத்திற்குப் போகின்றனம். அனுஜ்ஞை கொடுப்பீராக' என்றனன். அந்தப் பரத்வாஜரும் உதயமானது கண்டு ராமனைப் பார்த்து 'தேனும் காய் கிழங்குகளும் சித்ரகூடபர்வதத்தில் வெகுவாயிருக்கின்றன. ஆகையால் நீ அவ்விடம் போவாயாக. மிகுந்த பலமுடையவனே! அது உனக்கு யுக்தமான வாஸஸ்தானமென்று நினைக்கின்றேன். அதில் நானாவித வ்ருக்ஷங்கள் நிறைந்திருக்கின்றன. கின்னரர்களும் உர

கர்களும அவவிடத்திறகு வருவார்கள். மயில்களின கேகாசபதஙகள அங்கு நாற்புறததிலும செவிபபட்டுக கொணடிருககும. மேலான யானைகளும அஙகு அழகாயப புலபபட்டுககொணடிருககும. அஙஙனம பரிசுததியுள்ளதும ரமணீயமாயிருபபதும பழஙகளும கிழஙகுகளும காயகளும ஏராளமாயிருககபபெறறதுமாகி எஙகும புகழ்பெறறு விளஙகுகினற அநதச சிதரகூட பாவததிறகுப போகலாம. ராமா! அபபாவததின வனமதயபரதேசததில யானைகளும மானகளும குவியல குவியலாக ஸஞசரிததுககொணடிருககும. நீ அவைகளைப பாரதது ஸுகமாகப பொழுது போககலாம. அஙகு ஆறுகளையும மலையருவிகளையும மலைச்சாரலகளையும கறகள ஒனறோடொனறு சேரநது நெருககமான அழகிய சநதுகளையும குகைகளையும கறகள வெடிதது விசாலமான பரதேசஙகளையும ஸீதையுடன பாரததுக கொணடே ஸஞசரிபபாயாயின, உனமனம களிபபுறும. அஙகுச சிறு குருவிகளும குயிலகளும களிததுக கலகல வெனறு குலாவிககொணடிருககும பறபல மானகளும யானைகளும மதிதது அழகாய உலாவிககொண்டிருககும. இஙஙனம மஙகலமாகி மிகவும அழகாயிருககினற அநதச சித்ரகூடபாவததிறகுச சென்று அங்கு ஆராமம ஏறபடுததிககொண்டு ஸுகமாயிருபபாயாக' என்றனர். ஐமபதது நானகாவது ஸாககம முறறிறறு.

சித்ரகூடத்திற்கு ப்ரயாணமாதலும், ஓடமேறி யமுனாநதியைத் தாண்டி அன்று ஸாயங்காலம் யமுனா வனத்தில் வஸித்திருந்ததலும்

பகைவரை அடக்கும் பராக்ரமசாலிகளாகிய அந்த ராஜகுமாரர்கள் அன்றிரவு அம்முனிவரின் ஆச்ரமத்தில் இருந்து உதயமானவுடன் அம்மஹர்ஷிக்கு நமஸ்காரஞ் செய்து அச்சித்ரகூடபர்வதத்தைக் குறித்துப் போயினர். அம்மஹர்ஷியும் அவர்களுக்கு மங்களாசீர்வசனங்களை நடத்தினார். அங்ஙனம் அவர்கள் ப்ரயாணமாய்ப் போவதைக் கண்டு, தந்தை பிள்ளைகளைப் பின்தொடர்வதுபோல், தானும் அவர்களைப் பின்தொடர்ந்து சென்றனர். பிறகு மஹாதேஜஸ்வியாகிய அம்முனிமன்னவர் உண்மையான பராக்ரமம் பொருந்திய ராமலக்ஷ்மணர்களைப் பார்த்து 'புருஷ ச்ரேஷ்டர்களே! நீங்கள் கங்கா யமுனைகள் கலக்குமிடமாகிய ப்ரயாகக்ஷேத்ரத்திற்குச் சென்று அங்கு கங்காஜலம் மோதுவதனால் திரும்பிக் கொண்டு மேற்குமுகமாகப் பாய்கின்ற யமுனையை அநுஸரித்துப் போவீர்களாக. ரகுவம்சத்திற் பிறந்த மஹானுபாவர்களே! யமுனாநதி வேகமாகப் பாய்ந்துகொண்டிருக்கிற இடத்திற்குச் சென்று, அங்கு அனுதியாக ஜனங்கள் எப்பொழுதும் தாண்டிப்போகும் துறைக்குப் போய்த் தெப்பங் கட்டிக்கொண்டு அந்நதியைத் தாண்டவேண்டும். பிறகு அந்நதியின் அக்கரையில் பச்சைவர்ணம் பொருந்திய இலைகளுடையதும், தன்னைச் சுற்றிப் பல வ்ருக்ஷங்களோடு வளர்ந்து வருவதும், ஸித்தர்கள் வந்திருக்கப் பெற்றதுமாகிய ச்யாமமென்னும் பெயருடைய ஒரு பெரிய ஆலமரம் இருக்கின்றது, ஸீதை அந்த ஆலமரத்திற்குக் கைகுவித்துத் தன் விருப்பங்களெல்லாம் ஈடேறும்படி ப்ரார்த்திக்கவேண்டும். அந்த மரத்தினருகே சென்று, ஸீதை அதுத்

திருப்பாளாயின், அங்கேயே கொஞ்சநேரம் இளைப்பாறி யிருக்கலாம் இல்லையாயின மேல நடநது செல்லலாம. அஙகிருநது ஒரு கூப்பிடுதூரம போவீர்களாயின, அஙகுக கறுப்பாகப புலப்படுகின்ற ஓா ஆரண்யம தெரி யும. அதில பல வருக்ஷங்களும இலநதை மரஙகளும யமுனாதீரததிலுண்டான மூங்கிற புதாகளும மிகவும அழகாயிருககும அது சிதரகூடததிறகுப போகும வழி நான பலதடவைகளில் அவவழியாகச சித்ர கூடததிறகுப போயிருக்கினறேன அது அழகான மாாககம. நடநது போவதறகு மெதுவாயிருககும. அஙகுக காட்டுததீககளும உண்டாகா ஆகையால அவவழியில ஓா அபாயமும கஷ்டமும ஸமபவிககாது' எனறனா அமமஹரிஷி இஙஙனம ராமலக்ஷமணா களுககுச சிதரகூடமபோகும வழியைத தெரிவிக்கை யில, ராமனும அம்மஹாிஷிககு நமஸகாரஞ செயது 'அபபடியே ஆகட்டும. நீா திறகலாம' என்று அவரைத திருபபி அனுபபினன அவரும ராமனால அனுமதி கொடுக்கபபெறறுத தனது ஆஸரமததிறகுத திருமபிச் சென்றனா. அஙஙனம அமமுனிவா திருமபிச சென்ற பினபு ராமன லக்ஷ்மணனைப பாாதது 'லக்ஷ்மணா! முனிவா நமமிடததில கருணை கூாநதிருககினறனா. ஆகையால நாம புண்யாதமாககளெனறு தோறறுகின றது' எனறு மொழிநதனன. இங்ஙனம தீராகளாகிய அநதப புருஷசிகாமணிகள இருவரும ஆலோசிததுக கொணடு ஸீதையைததானே முனனிட்டு நடநது யமுனா நதிககுப போயினா. அனநதரம யமுனா நதியின ஸமீ பததிறகுப போய அநநதீ ஜலத்தைத தாண்ட விரும்பி அநநதி வேகமாகப போகின்றதாகையால், 'இதை எபபடி தாண்டுவோம' எனறு அவர்களெல்லோரும் சிநதையுற்றனர். பினபு ராமலக்ஷ்மணர்கள்

பற்பல காஷ்டங்களைக் கொண்டு வந்து அவைகளோடு உலர்ந்த மூங்கில்களைப் பரப்பிக் கயிறுகளுக்குப் பதிலாக வெட்டிவேர்களைக்கொண்டு கட்டி அழகாயிருக்கும்படி பெரியதொருதெப்பஞ் செய்தனர். பிறகு வல்லவனாகிய லக்ஷ்மணன் வஞ்சிக்கிளைகளையும் நாவற்கிளைகளையும் வெட்டி அவைகளைத் தெப்பத்தின்மேல் பரப்பி ஸீதை ஸுகமாக உட்காரும்படிக்கு ஓராஸனங் கற்பித்தனன். தசரத குமாரனாகிய ராமன் அங்கு லக்ஷ்மீதேவிபோல் இப்படிப்பட்டவளென்று நெஞ்சிலும் நினைக்கமுடியாமல் மிகுந்த ஸௌந்தர்யத்துடன் ப்ரகாசிக்கின்றவளும் தன் கையைப் பிடிப்பதற்குச் சிறிது வெட்கித்திருப்பவளும் தன் ப்ரீதிக்கிருப்பிடமுமாகிய ஸீதாதேவியைத் தெப்பத்தின்மேல் ஏற்றினன். ராமன் அந்தத் தெப்பத்தில் ஸீதையின் பக்கத்தில் அவளது வஸ்த்ரங்களையும் பூஷணங்களையும் மணவெட்டியையும் ஆட்டுத்தோலால் செய்த புட்டிற்கூடையையும் தமது ஆயுதங்களையும் வைத்தனன். பிறகு வீரர்களாகிய தசரதகுமாரர்கள் இருவரும் முதலில் தெப்பத்தைப் பிடித்துக்கொண்டு ஸீதையை ஏற்றிவிட்டுப் பிறகு தாம் ஏறிக்கொண்டு ப்ரயத்னப்பட்டு அதை நடத்தி அந்நதியைத் தாண்டினர். ஸீதை அந்நதியின் மத்தியில் வரும்பொழுது அதை நோக்கி 'யமுனாதேவியே! நான் உன்னை இப்பொழுது ஸுகமாகத் தாண்டுகின்றேன். என்பர்த்தா வனவாஸவ்ரதத்தைத்தீர்த்துக்கொண்டு இக்ஷ்வாகுவம்சத்தரசர்கள் பரிபாலித்து வருகிற அயோத்யாபுரத்திற்கு க்ஷேமத்துடன் திரும்பி வந்தவுடனே உனக்கு ஆயிரம் பசுக்களைத் தானஞ் செய்து நூறுகுடங்கள் நிரம்ப மத்யத்தையும் நிவேதனஞ் செய்து பூஜிக்கின்றேன்' என்று வேண்டிக்கொண்டு வந்தனஞ் செய்தனள். உத்தமஸ்த்ரீயாகிய அந்த ஸீதை இவ்வண்ணம் கைகூப்பி யமுனாநதியை

ப்ரார்த்தித்துக்கொண்டே அந்நதியின் தென்கரையைச் சேர்ந்தனள். பிறகு வேகமாக ப்ரவஹித்துச் செல்வதும் அலைகள் வரிசைவரிசையாக மேலெழப்பெற்று விளங்குவதும் கரையில் பல வ்ருக்ஷங்கள் நிறைந்திருப்பதும் ஸூர்யன்புதல்வியுமாகிய அந்த யமுனாநதியை அவர்கள் தெப்பங்கொண்டு தாண்டினர். அவர்கள் நதியைத் தாண்டித் தெப்பத்தை விட்டு யமுனைக்கரையிலுள்ள வனத்தினின்றும் புறப்பட்டுப் போய் குளிர்ந்து பசசென்று விளங்குகின்ற இலைகளுடன்கூடி ச்யாமமென்னும் பேர்பெற்ற ஆலமரத்தின் அருகிற் சென்றனர். ஸீதை அந்த ஆலமரத்தின் அருகில் வந்து 'மஹாவ்ருக்ஷமே! உனக்கு நமஸ்காரம் என்பர்த்தா வனவாஸவ்ரதத்தை நடத்தி நிறைவேற்றுவாராக. நான் திரும்பி வந்து கௌஸல்யையையும் மிகுந்த புகழ்பொருந்திய ஸுமித்ராதேவியையும் காண்பேனாக' என்று ப்ரார்த்தித்துக் கைகளைக் கூப்பிக்கொண்டு அந்த வ்ருக்ஷத்திற்கு ப்ரதக்ஷிணஞ் செய்தனள். பிறகு நிந்தைக்கிடமாகாதவளும் தனக்குட்பட்டு நடந்துகொள்பவளும் தன்மனத்திற்கு மிகவும் ஸந்தோஷத்தைக் கொடுப்பவளுமாகிய ஸீதாதேவி இங்ஙனம் தன் மனோரதத்தை வேண்டிக்கொண்டிருக்கையில், ராமன் கண்டு அவள் இளைப்புற்றிருக்கிறாளா இல்லையாவென்று பரிசீலித்து லக்ஷ்மணனைப் பார்த்து 'புருஷச்ரேஷ்டனே! ஸீதையைப் பின்னே அழைத்துக்கொண்டு நீ முன்னே நடப்பாயாக. நான் ஆயுதந்தரித்து உங்களிருவர்க்கும் பின்னே வருகின்றேன். ஸீதை, பழத்தையாவது புஷ்பத்தையாவது எதை விரும்புகின்றாளோ, எது அவள் மனத்திற்கு இனிப்பைக் கொடுக்குமோ, அவையெல்லாவற்றையுங் கொண்டுவந்து அவளுக்குக் கொடுப்பாயாக, என்றனன். ராமலக்ஷ்மணர்களிருவருமிங்ஙனம் போய்க்

கொண்டிருக்கையில், அவர்களுக்கு இடையில், ஜனகராஜன் புதல்வியாகிய ஸீதை இரண்டு ஆண்யானைகளின் மத்தியில் ஒரு பெண்யானைபோல் அழகாயிருந்தனள். ஸீதை முன்பு எப்பொழுதும் பாராத வ்ருக்ஷங்களையாவது செடிகளையாவது புதரையாவது நிறையப் புஷ்பித்திருக்கிற கொடியையாவது பார்க்கும்போது 'அது வென்? அதுவென்?' என்று ராமனை வினவிக்கொண்டிருந்தனள். ஸீதை வினவும்பொழுதே லக்ஷ்மணன் தவரையுடன் சென்று புஷ்பங்கள் நிரம்பி அழகாயிருக்கின்ற பற்பல கிளைகளை ஒடித்துக்கொண்டு வந்து ஸீதைக்குக் கொடுத்துக்கொண்டிருந்தனன். அவர்கள் வெகுதூரம் யமுநைக்கரைவழியாகவே போய்க்கொண்டிருந்தார்களாகையால் ஸீதை, அப்பொழுது விசித்ரமான மணற்குன்றுகள் விசித்ரமான ஜலப்ரவாஹம் இவை விளங்கவும், ஹம்ஸங்கள் ஸாரஸப்பறவைகள் இவை கலகலவென்று கூவிக்கொண்டிருக்கவும் பெற்று அழகாய்ப் புலப்படுகின்ற யமுநையைக்கண்டு ஸந்தோஷித்திருந்தனள். அனந்தரம் அண்ணன் தம்பிகளாகிய அந்த ராமலக்ஷ்மணர்களிருவரும் யமுநைக்கரையிலுள்ள வனத்தின் வழியாகவே ஒரு க்ரோசதூரஞ் சென்று சாப்பிடத் தகுந்த சுத்தங்களாகிய ம்ருகங்கள் பலவற்றையுங் கொன்றுபக்ஷித்தனர். அவர்கள் அங்ஙனங் கஷ்டப்பட்டபோதிலும் வருத்தமுற்றவர்கள்போல் சிறிதும் புலப்படாமல் முகத்தில் ஸந்தோஷம் நிரம்பப்பெற்று மயில்கள் கூவியல் கூவியலாகக் கூவுதலால் ஒலி உண்டாகப்பெற்றுக் குரங்குகளும் யானைகளும் எங்குந் திரிந்துகொண்டிருக்கிற மேலான அந்நதிக்கரையிலுள்ள அரண்யத்தில் ஸந்தோஷத்துடன் க்ரீடித்து அவ்வாற்றின் கரையில் மேடு பள்ளமில்லாமல் ஸமமாயிருக்கிற ப்ரதேசத்திற்குச

சென்று ஸீதைக்கு ஸம்மதமான ஒரு வாஸஸ்தானத்தை அடைந்தனர். ஐம்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

சித்ரகூடபர்வதத்திற்கருகிலிருக்கிற வால்மீகியின் ஆஸ்ரமத்திற்குப் போதலும், வால்மீகியைப் பார்த்தலும், அங்குப் பர்ணசாலை கட்டிக்கொண்டு வெகுகாலம் வாஸஞ் செய்தலும்.

பிறகு ராத்ரி கடந்தவுடன் ராமன், தான் தூங்கி யெழுந்திருந்த பின்பு கொஞ்சம் நித்ரை போகின்ற லக்ஷ்மணனை மெதுவாக எழுப்பி 'லக்ஷ்மணா! புஜங்களைப் பறந்தோட்டச் செய்பவனே! அரண்யத்திலுள்ள கிளிகளும் குயில்களும் சாரிகை முதலிய மற்றைப் பறவைகளும் செவிக்கினிதாகக் கூவுகின்றன, கேட்பாயாக. ப்ரயாணத்திற்குக் காலம் ஆயிற்று. நாம் புறப்பட்டுப் போவோம்' என்றனன். நித்ரை போய்க்கொண்டிருந்த லக்ஷ்மணன், தமையனாகிய ராமன் தகுந்த காலம் பார்த்து எழுப்புகையில், அது முதலாக நித்ரையையும் சோம்பலையும் வழி நடந்த ஸ்ரமத்தையும் துறந்துவிட்டனன். பிறகு அவர்கள் எல்லோரும் எழுந்திருந்து பரிசுத்தமாகிய அந்நதீஜலத்தில் விடியற்காலத்திற் செய்யவேண்டிய ஸ்நானம் முதலிய வ்யாபாரங்களை நிறைவேற்றிக்கொண்டு சித்ரகூடத்திற்குப் பரத்வாஜமுனிவர் சொன்னமார்க்கத்தைப் பிடித்து நடந்து சென்றனர். பிறகு ராமன் தகுந்த காலத்தில் ப்ரயாணமாயப் புறப்பட்டு, லக்ஷ்மணனையும் தாமரையிதழ்போன்ற கண்களையுடைய ஸீதையையும் பார்த்து 'ஸீதே! வஸந்த ருதுவில் பலாச வ்ருக்ஷங்கள் நாற்புறத்திலும் நிரம்பப் புஷ்பித்து

நெருப்பு பற்றி எரிகின்றவைபோல புலப்படுகின்றன, பார். மேலும், புஷ்பங்கள் நிறைந்திருப்பதனால் தாமே புஷ்பமாலைகளைத் தரித்திருப்பனபோலும் விளங்குகின்றன பல்லாதக (சேரா) மரங்கள் நன்றாகப் பூத்திருக்கின்றன, பார். இவை புதர்போல அடர்ந்திருக்கையால், மனிதர்களால் கிட்டி நாடமுடியாதவைகளாயிருக்கின்றன. மேலும், இவை இலைகளும் காய்களும் இடைவிடாமல் நிறைந்திருப்பதால் அந்தப்பாரம் தாங்கமுடியாமல் வளைந்திருக்கின்றன இவ்வரண்யம் இப்படி அழகாயிருப்பதனால் இங்கு நான் ஸுகமாக ஜீவித்திருப்பேன். இதற்கு ஸந்தேஹம் இல்லை. லக்ஷ்மணா! இதோ தேனீக்கள் கட்டின [illegible] தேன்கூடுகள் படிக்களவு தேன்கள் நிரம்பி ஒவ்வொரு மரத்திலும் தொங்குகின்றன, பார். மரங்கள் தெரியாமல் பாய்படுத்தாற்போல புஷ்பங்கள் நிறைந்திருக்கிற இவ்வரண்யப்ரதேசத்தில், இதோ! நச்சுக்குருவி கூப்பிடுகின்றது, இதைக் கேட்டு, மயில் இதற்கு ப்ரதியாகக் கூவுகின்றது, பார். இதோ சித்ரகூடம் புலப்படுகின்றது, பார். இங்கு யானைக்கூட்டங்கள் நாற்புறமும் திரிந்துகொண்டிருக்கின்றன பக்ஷி ஸமூஹங்களும் கலகலவென்று கூவுகின்றன, கேள். இப்பர்வதத்தின் சிகரங்கள் மிகவும் உயர்ந்திருக்கின்றன. அப்பா! சித்ரகூடபர்வதத்தின் வனப்ரதேசத்தில் பூமி மேடுபள்ளமில்லாமல் ஸமமாயிருக்கின்றதாகையால் அது அழகாயிருக்கின்றது. மேலும், அதில் பல வ்ருக்ஷங்கள் நிறைந்திருக்கின்றன. மற்றும், அது பரிசுத்தமுமாயிருக்குமாகையால் நாம் அதில் க்ரீடித்துக்கொண்டிருக்கலாம்' என்றனன். அனந்தரம் அந்த ராமலக்ஷ்மணர்கள் ஸீதையோடுகூடக் கால்நடையாகவே சென்று கண்கொண்டு பார்க்கில் மிகவும் இனியதும் மனத்திற்கு மிக்க

ஸந்தோஷத்தைக் கொடுப்பதுமாகிய சித்ரகூடபர்வதத்திற்குப் போய்ச் சேர்ந்தனர் அந்தப் பர்வதம் நானாவித பக்ஷிஸமூஹம் நிறைந்து மிருகங்கள் பலவர்க்கங்களும் நிரம்ப அழகாகி ஸமஸ்த வஸ்துக்களும் ஸம்ருத்தமாயிருக்கப் பெற்றிருக்கும் அங்கு நல்ல ருசியுள்ள ஜலங்களும் விளங்கிக்கொண்டிருக்கும். ராமலக்ஷ்மணர்களும் ஸீதையும் இப்படிப்பட்ட அம்மலைக்குச் சென்று 'இனிய ஸ்வபாவமுடையவனே! இந்தப் பர்வதம் மனோஹரமாயிருக்கின்றது. இதில் பலவித வ்ருக்ஷங்களும் கொடிகளும் இருக்கின்றன காய் கிழங்குகளும் இங்கு ஏராளமாயிருக்கின்றன. இங்ஙனம் எல்லா ஸம்ருத்தியும் பொருந்தி அழகாயிருப்பதனால் இதிலேயே ஸுகமாக ஜீவித்திருக்கலாமென்று எனக்குத் தோற்றுகின்றது மேலும், இப்பர்வதத்தில் மஹானுபாவர்களாகிய முனிவர்களும் வாஸஞ் செய்கின்றனர் ஆகையால் இது நமக்கும்[1] யஸதியாகக் கூடும் நல்லியற்கையுடையவனே! இதில் நாம் க்ரீடித்துக்கொண்டிருப்போம்' என்று ஒருவர்க்கொருவர் சொல்லிக்கொண்டு நிச்சயித்து மூவரும் [2]வால்மீகி முனிவரின் ஆச்ரமத்திற்குப் போய் கைகளைக் குவித்து அம்முனிவர்க்கு நமஸ்காரஞ் செய்தனர் தர்மஜ்ஞராகிய அம்மஹர்ஷியும் அவர்கள் வரக்கண்டு மிகவும் ஸந்தோஷித்து, அவர்களைப் பூஜித்து, ஸ்வாகதம் விசாரித்து, உட்காருங்களென்று மொழிந்தனர் பிறகு நீண்டழகிய

---

1 இருப்பிடமாக.

2- ராமன் சித்ரகூடத்திற்குப் போகும் காலத்தில் வால்மீகி மஹர்ஷி சித்ரகூடத்தில் வஸித்திருந்தனர். பரதன் அந்தச் சித்ரகூடத்திற்கு வந்தபின்பு ரிஷி அதை விட்டுப் போனதென்கையால் அதுமுதலாகத் தமஸாநதீதீரத்தில் வஸித்திருந்தாரென்று தெரிகின்றது.

பாஹு—தண்டங்களையுடையவனும் மிகுந்த ஸாமர்த்ய முடையவனுமாகிய ராமன் தன்வ்ருத்தாந்தங்களை யெல்லாம் க்ரமப்படி அம்முனிவர்க்குச் சொல்லி, பிறகு லக்ஷ்மணனைப் பார்த்து 'லக்ஷ்மணா! அழகிய ஸ்வபாவமுடையவனே! உரத்துச் சிறந்த கட்டைகளைக் கொண்டுவருவாயாக. இங்கு ஒரு வாஸஸ்தானம் ஏற்படுத்திக் கொண்டு வஸிக்கவேண்டுமென்று என்மனம் ஆசைப்படுகின்றது. ஆகையால் அதற்குரிய கட்டைகளைக் கொண்டுவந்து நாம் இருக்கும்படி ஓர் இடம் ஏற்படுத்துவாயாக' என்றனன். பகைவரை அடக்குந் திறமுடையோனாகிய அந்த லக்ஷ்மணனும், ராமன் சொன்னதைக் கேட்டுப் பலவித காஷ்டங்களை வெட்டிக்கொண்டு வந்து பாணசாலை ஏற்படுத்தினன். ராமன், காற்றும்மழை முதலியவைகளாலும் அசைக்கக்கூடாதபடி நிலைநின்றிருப்பதும் மேற்கூரையுள்ளதும் பார்க்க அழகாயிருப்பதுமாகிய அந்தப் பாணசாலையைக் கண்டு, தனக்குப் பரிசர்யை செய்துகொண்டு, 'இன்னும், என்ன ஆஜ்ஞையிடுவாரோ' என்றும் மனவூக்கத்துடன் இருக்கிற லக்ஷ்மணனை நோக்கி 'லக்ஷ்மணா! கறுத்த மானமாம்ஸத்தைக் கொண்டு வந்து, இந்தப் பாணசாலையில் அந்தந்த திசைகளில் அதிஷ்டானம் பெற்றிருக்கிற தேவதைகளைப் பூஜிப்போம். முதலில், வெகுகாலம் பிழைத்து க்ஷேமமாயிருக்க வேண்டுமென்று விரும்புகிறவர்கள் க்ருஹப்ரவேசத்திற்குச் செய்கிற வாஸ்துசாந்தியை நடத்தவேண்டும். அழகிய கண்களையுடையவனே! நீ சீக்ரமாகக் கறுத்த மானை அடித்துக்கொண்டுவருவாயாக. பசுவதஞ் செய்வது தோஷமாமேயென்று சங்கிக்கவேண்டாம். சாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்ட கார்யத்தைச் செய்தே தீர வேண்டும். அது தர்மமென்றே நினைப்பாயாக [1] அவ்விதிக்கு அனுகூலமாகிய தர்ம சாஸ்த்ரத்தையும் அவ

1, அவ்விதிக்கு—அக்கார்யத்திற்கு.

தாணிததுப பாரப்பாயாக' என்றனன. 1 வைரிகளை அழிக்
கவல்லனை லக்ஷமணன இபபடி தமையன சொனன
வாாததைதயைக்கேட்டு அவவாறே கறுபபுமானை அடித்
துககொண்டு வநதனன. ராமன மீளவும் அவனைப
பாாதது 'இநதக கருபபுமான மாமஸததைப பசனஞ
செயவாயாக. இதனல க்ருஹாதிஷ்டான தேவதைக
களை நாம பூஜிபபோம. இநதஸமயம ஸதிரமான சுப
முஹூாததமாயிருககினறது இநததினமும மிக ஸதி
ரமானது' என்று மொழிநதனன பரதாபசாலியா
கிய அநத ஸுமித்ராபுத்ரனும பக்ஷயமருககவாககங
களிற சோநதமையால பரிசுத்தமான ஒரு கறுபபுமா
னைககொனறு அதன மாமஸத்தை எரிகிற அகனியில
வைததுப பசனஞசெயதனன. லக்ஷமணன, அமமாம்ஸம்
நனருகக காயநது ரகதமெலலாம சுண்டிபபோய பகவ
மானது கண்டு புருஷஶ்ரேஷ்டனுகிய ராமனை நோககி
'தேவாகளை ஙிகாத்தவனே! இநதக கறுபபு மருகமாம
ஸத்தை எலலா அவயவஙகளோடும பகவஞசெயதனன.
எலலா அவயவஙகளோடுஙகூடிப பாகததினல கறுத்
திருபபது பறறி இது கறுபபு மருகம போலவே புலபபடு
கினறது நீ இனி வாஸதுதேவதைகளை இமமாமஸத
தைககொணடு பூஜிககலாம. அதறகு நீயே ஸாமாதய
முடையவன' என்றனன. குணஙகள பொருநதிய ஸ்ரீராம
பிரானும ஜபிககவேணடியமநதரங்கள எலலாவறறிலும
பணடிதனுகையால, அவன ஸனனஞசெயது நியமத்துட
னிருநது வாஸதுசாநதிககு வேண்டியகாமம நிறைவேறு
மளவும உளள மநதரஙகளையெலலாம சுருககமாக ஜபித
துககொணடே வாஸதுகாமஙகளை நடததினன. அங்ங
னம ராமன வாஸ்துதேவதாஸமூஹததையெலலாம்
பூஜிததுப பரிசுத்தனுகி கருஹததில பரவேசிததனன

1 வைரி—சத்ரு.

அளவில்லாத ஒளியுடன் ப்ரகாசிக்கின்ற ஸ்ரீராமபிரானுக்கு அதனால் மனத்தில் மிகுந்த ஆனந்தம் உண்டாயிற்று. ராமன் வைஸ்வதேவபலியையும் ருத்ரபலியையும் விஷ்ணுபலியையும் நடத்தி வாஸ்துசாந்தியின்பொருட்டு க்ருஹத்திலுள்ள பீடைகளெல்லாம் ஒழியும்படிக்கும் மிகுந்த மங்களங்கள் உண்டாகும்படிக்கும் அதற்குரிய புண்யாஹவாசனசாந்திஜபாதிகளைச் செய்து க்ரமந்தவறாமல் அந்தந்த மந்த்ரங்களையும் ஜபித்து, விதியின்படி மீளவும் நதியில் ஸ்நானஞ்செய்து ஸமஸ்த பாபங்களும் சாந்தமாகும்படி ஸமஸ்த பூதங்களையும் உத்தேசித்து மறுபடியும் உத்தமமான பலியை நடத்தினன். அனந்தரம் ராமன், பலியிடுவதற்காக வேண்டிய மேடைகளையும் கந்தர்வர் முதலியவருடைய வாஸஸ்தானங்களையும் விஷ்ணு முதலியவர்களுடைய வாஸஸ்தானங்களையும் அக்னிஹோத்ர க்ருஹங்களையும் ஆஸ்ரமத்திற்குத் தகுந்தபடி சிறியனவாக நிருமித்துக்கொண்டனன். சுபலக்ஷணங்கள் பொருந்திய ராமலக்ஷ்மணர்கள் இருவரும் வனத்திலுள்ள புஷ்பமாலைகளாலும் பழங்களாலும் கிழங்குகளாலும் பக்வஞ்செய்த மாம்ஸங்களாலும் ஜலதர்ப்பணங்களாலும் வேதங்களிற் சொல்லிய மந்த்ரஜபங்களாலும் ஸமித்துக்களாலும் நாணற்புல்லுகளாலும் தர்ப்பங்களாலும் விதி தவறாமல் பூதங்களுக்குத் த்ருப்தி செய்வித்து ஸீதையுடன்கூட மிகவும் அழகாயிருக்கின்ற அந்தப் பர்ணசாலையில் ப்ரவேசித்தனர். செடிகளின் இலைகளால் செய்யப்பட்ட மேற்கூரையுடையதும் அழகாயிருப்பதும் சாஸ்த்ரங்களிற் சொல்லப்பட்ட அந்தந்த இடங்களில் மடைப்பள்ளி முதலியவை நன்றாக ஏற்படுத்தப்பெற்றதும் அதிகமாகக் காற்று வீசப்பெறுவதுமாகிய அந்தப் பர்ணசாலையில் ராமன் முதலிய மூவரும், தேவ

தைகள் ஸுதர்மஸபையில் ப்ரவேசிப்பதுபோல் தாம் வாஸஞ்செய்வதற்காக ப்ரவேசித்தனர். அப்பொழுது ஜிதேந்த்ரியர்களாகிய அம்மூவரும் பலவகைப்பட்ட பல் மிருகங்களும் பக்ஷிகளும் திரம்பி, விசித்ரங்களாகிய பூங்கொத்துகள் விளங்கப்பெற்ற செடிகளுடன் கூடி, யானைகளின் கீங்காரங்களாலும் மற்றை மிருகங்களின் கண்டத்வனிகளாலும் கலகலவென்றொலித்துக்கொண்டிருக்கிற அந்தச் சித்ரகூட பர்வதத்தின் வனப்ரதேசத்தில் ஸுகமாக விளையாடிக்கொண்டிருந்தனர். ராமன் இவ்வாறு மிகவும் அழகாயிருக்கிற அச்சித்ரகூடபர்வதத்தையும், மிருகங்களும் பக்ஷிகளும் ஸஞ்சரிக்கப்பெற்று அழகான துறையமைந்து மால்யவதி யென்னும் பேருடைய அப்பர்வதத்திலுள்ள நதியையும் சேர்ந்தவுடனே ஸந்தோஷத்தினால் சரீரம் முழுவதும் பளபளவென்று விளங்கப்பெற்றுப் பட்டணத்தை விட்டு வந்ததனாலுண்டான மனவருத்தஞ் சிறிதுந் தோன்றாமலிருந்தனன். ஐம்பத்தாறாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸுமந்த்ரன் ராமனை விட்டு அயோத்யைக்குப் போதலும், பட்டணத்து ஜனங்கள் மனவருத்தமுறுதலும், தசரதன் சோகப்படுதலும்.

இங்ஙனம் ராமன் புறப்பட்டுக் கங்கையின் தென் கரைக்குச் சேர்ந்தவுடனே குஹன் மிக்க மனவருத்த முற்று அந்த ரகுகுலசிகாமணி கண்பார்வையைக் கடந்து செல்லும் வரையிலும் அங்கேயே இருந்து ஸுமந்த்ரனுடன் கூட ராமனது குணங்களைப் பேசிக்கொண்டிருந்து அவனை அழைத்துக்கொண்டு தன் வீட்டிற்குப் போயினன். அந்த ச்ருங்கிபேரபுரத்திலுள்ள சாரர்கள் ராமாதிகள் பரத்வாஜமுனிவரிடம் போவது, ப்ரயாக

க்ஷேத்ரத்தில் அம்முனிவருடன் கூடியிருப்பது முதலாகச் சித்ரகூட பர்வதத்திற்குப் போகும் வரையிலும் நடந்த வ்ருத்தாந்தங்களெல்லாவற்றையும் ஸுமந்த்ரனுக்குத் தெரிவித்தனர். பிறகு ஸுமந்த்ரன் குஹனிடத்தில் அனுமதி பெற்றுக்கொண்டு மேலான குதிரைகளைத் தேரில் பூட்டிக்கொண்டு மிக்க மனவருத்தத்துடன் அயோத்யாபுரத்திற்குப் போயினன். அவன் மார்கத்தில் புஷ்பங்கள் நிறைந்து குமுகுமுவென்று மணங்கமழ்ந்துகொண்டிருக்கிற வனப்ரதேசங்களையும் நதிகளையும், ஸரஸ்ஸுக்களையும், க்ராமங்களையும், பட்டணங்களையும் பார்த்துக்கொண்டே தாண்டிச் சென்றனன். [1] அனந்தரம் ஸுமந்த்ரன் ஸ்ருங்கிபேரபுரத்தினின்றும் புறப்பட்ட மூன்றாவது நாள் ஸாயங்காலத்தில் அயோத்யைக்குப் போய்ச் சேர்ந்து, அந்நகரம் ஆநந்தமற்றிருக்கக் கண்டனன். ஸுமந்த்ரன் ராமனை விட்டுப் பிரிந்ததற்கு முதலே மனத்தில் பரிதபித்துக்கொண்டிருந்தனன். மேலும், பாழடைந்தாற்போலாகி நிசப்பதமாயிருக்கின்ற அந்நகரத்தைக் கண்டவுடனே மனவருத்தங் கரைபுரண்டு மேலெழப்பெற்றுத் தனக்குள் 'இப்பட்டணமும் இதிலுள்ள யானைகளும் குதிரைகளும் ஜனங்களும் ஜநாதிபதியும் ராமனுக்கு நேர்ந்த மனஸதாபத்தினால் மனவருத்தம் உண்டாகப் பெற்று அந்தச் சோகாக்னியில் ஆழ்ந்து அவ்வக்னியால் தஹிக்கப்படாதிருப்பார்களா?' என்று சிந்தித்தனன். ஸுமந்த்ரன் இங்

1 முதல்நாள் கங்கையைத் தாண்டி ஒரு வ்ருக்ஷத்தினடியில் வாஸஞ் செய்தல், இரண்டாவது நாள் பரத்வாஜாஸ்ரமத்தில் வஸித்தல், மூன்றாவது நாள் யமுனைக்கரையில் இருத்தல், நான்காவது நாள் சித்ரகூடத்திற்குப் போதல், ஐந்தாவது நாள் சாரர்கள் திரும்பி வந்து வ்ருத்தாந்தத்தைத் தெரிவித்தல்—என்று தெரிகின்றது.

னஞ் சிந்தித்துக்கொண்டே, 'பட்டணம் நிஶ்ஶப்தமா
யிருக்கின்றது. மன்னவனது கதி யாதாயிருக்கின்றதோ'
என்று வேகமாகப் போகுந்தன்மையுள்ள குதிரைகளை
ஓட்டிக்கொண்டு பட்டணத்துத்வாரஞ் சேர்ந்து த்வரை
யுடன் ப்ரவேசித்தனன் ஸுமந்த்ரன் வந்துகொண்டிருக்
கையில், பட்டணத்து ஜனங்கள் கண்டு நூறு நூறாகவும்
ஆயிரமாயிரமாகவும் கும்பல்கூடி 'எங்கே ராமன்' என்று
வினவிக்கொண்டு அந்த ஸாரதியை எதிர்கொண்டு ஓடி
வந்தனர். ஸுமந்த்ரனும் அவர்களுக்கு 'நான் கங்காநதிக்
கரையில் ராமனை விட்டு விடைபெற்றுக்கொண்டு மஹா
நுபாவனாகிய அந்தத்தார்மிகனது கட்டளைப்படிக்குத்
திரும்பி வந்தேன்' என்றனன். ஜனங்கள், ராமாதிகள்
கங்கையைத் தாண்டிச்சென்றார்களென்று தெரிந்து முக
த்தில் கண்ணீர் ததும்பப்பெற்று, 'ஐயோ! ராமனை இழந்
தோமே! சீ! என்ன பிழைப்பு' என்று பெருமூச்
செறிந்து 'ஹா! ராமா!' என்று கூப்பிட்டுக்கதறினர்.
அந்த ஜனங்கள் கும்பல்கும்பலாக நின்றுகொண்டு 'இந்த
ரதத்தில் ராமனைப்பார்க்க நேரப்பெறாதிருக்கின்றோமே.
அவனைப் பார்க்கப்பெறாமல் பாழாய் விட்டோமே. [1]நாம்
தானஞ் செய்யும்பொழுதும் யாகம் நடத்தும்பொழுதும்
விவாஹம் முதலிய மங்கலகார்யங்களிலும் பெரிய ஸபை
கள் சேரும்பொழுதும் அந்தந்த கார்யங்களை நன்கு
நடத்தும்பொருட்டு நமக்கு நடுவில் வந்திருந்து நிறைவேற்
றுந் தார்மிகனாகிய ராமனை இனி நாம் ஒருகாலும் அங்

1 ஒருவன் தானஞ் செய்யும்பொழுது தேசகாலங்களைத் தெரி
வித்து ஸத்பாத்ரமாயிருப்பவனுக்குக் கொடுப்பிக்கிறதற்காகவும்,
யஜ்ஞங்கள் செய்யும்பொழுது ந்யாயத்தின்படி ஸம்பாதித்த த்ரவ்ய
ங்களைக் கொண்டு அந்த யஜ்ஞங்களைச் செய்வித்துக் கர்மங்களில்
வரும் ஸந்தேஹங்களைத் தீர்த்து மறந்தவைகளை ஜ்ஞாபனஞ் செய்

ஜனமே ஜனக்கூட்டத்து நடுவில் வந்திருக்கப் பார்க்கப் போகிறதில்லை. ராமன் 'ஜனங்களுக்கு எது ஹிதம்? எது ப்ரியம்? எதனால் ஸுகம் உண்டாகும்?' என்று நன்கு ஆலோசித்துப் பார்த்து, தந்தை தன் பிள்ளைகளைப் பாதுகாப்பதுபோல் இப்பட்டணம் முழுமையும் பாதுகாத்து வந்தானே' என்று ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்டிருக்கையில், ஸுமந்த்ரன் செவியுற்றனன். ஸுமந்த்ரன் கடைத்தெருவில் போகும்பொழுது இருபுறத்திலும் ஸ்த்ரீகள் ராமதுக்கத்தினால் பரிதபித்துச் சாளரங்களினின்று தன்னைப் பார்த்துச் செய்யுங் கதறல்களைக் கேட்டுக்கொண்டே சென்றனன். அந்த ஸுமந்த்ரன் பரமதுக்கத்தினால் பீடிக்கப்பட்டு மனமயங்கின ஜனங்களைப் பார்க்கப் பொறாமல் முட்டாக்கிட்டு முகத்தை மூடிக்கொண்டு ராஜமார்க்கத்தின் மத்தியில் சென்று, தசரத மஹாராஜன் வாஸஞ் செய்யும் க்ருஹத்திற்குப் போய்ச் சேர்ந்தனன். அவன் சீக்ரமாக ரதத்தினின்றும் கீழே இழிந்து ராஜக்ருஹத்தில் ப்ரவேசித்து, அரசன் வெளிக்கிளம்பி வாராதிருப்பதுபற்றி வெகு ஜனங்கள் நிறைந்திருக்கிற ஏழு கட்டுக்களைத் தாண்டிச் சென்றனன். அப்பொழுது அங்குள்ள ஸ்த்ரீகள் மேடைகள் மேலிருந்தும் ஏழு நிலையுள்ள விமானங்களினின்றும் உபரிகைகளினின்றும் ஸுமந்த்ரன் வந்ததைக் கண்டு ராமனைக் காணாமையால் துக்கத்தில் ஆழ்ந்து பரிதபித்து ஹாஹாகாரஞ் செய்தனர். அந்த ஸ்த்ரீகள் மேன்மேலும் துக்கத்தினால் வருந்தி 'நீண்டு நிர்மலங்க

---

கைக்காகவும், விவாஹத்தில் உபயவர்க்கத்திலுள்ளவர்களுக்கும் பொதுவாக நின்று ஸம்மதிக்காதவர்களுக்கும் வேண்டிய த்ரவ்யங்களைக் கொடுத்துக் கார்யங்களைத் தவறாமல் நடப்பிக்கிறதற்காகவும் ராமன் அருகில் வந்திருப்பானென்று கருத்து.

னாகிய கண்களில் வேகமாக நீர் ததும்பப பெற்றுக கலக்க முற்றிருக்கையில ஒருவரையொருவர ஸ்பஷ்டமாகப பார்க்க நேராமலே பார்த்துக்கொண்டிருந்தனர். அனந்தரம அங்கங்கு உபரிகைகளிலிருந்து தசரதனுடைய பெண்டுகள ராமன காட்டுக்குப போன மன வருத்தத்தினால பரிதபித்து மெதுவாகத தமக்குள 'ஸுமந்தரன இங்கிருந்து ராமனோடுகூடப போயினன். இவவிடத்திற்கு ராமனிலலாமல வந்தனனே! துக்கித்துக்கொண்டிருக்கிற கௌஸலயைக்கு என்ன சொல்லப போகின்றனன்? ராமனிலலாமல எனக்குப பிழைத்திருப்பது கஷ்டமாயிருக்கின்றது. அப்படியே பிள்ளை புறப்பட்டுப்போகையில கௌஸல்யை பலாத்காரமாக பிராணனைப்பிடித்து வைத்துக்கொண்டிருப்பாளென்பது நிஜமாக ஸாதயமன்றென்றே எனக்குத்தோற்றுகின்றது' என்று சொல்லிக்கொண்டனர் அந்த ஸுமந்தரன இங்ஙனம அப்பெண்டுகள சொல்லுகிற ஸதயமானபேச்சுக்களைச் செவியுற்றுக்கொண்டே, அவரது சோகாக்னியால எரிவதுபோல புலப்படுகின்ற ராஜகருஹத்திற்குள் வேகமாக பரவேசித்தனன அவன எட்டாவது கட்டில் நுழைந்து அங்கு வெளுத்துப புலப்படுகின்ற மந்திரத்தில புத்ரசோகத்தினால வருந்தி மனமயங்கி முகம் வாடி உட்கார்ந்திருக்கிற மன்னவனைக் கண்டனன். ஸுமந்த்ரன் அங்கு உட்கார்ந்திருக்கிற அம மன்னவனிடஞ் சென்று நமஸகாரஞ் செய்து, ராமன சொன்னவற்றில் சிறிதும் தப்பாமல சொல்லிவிட்டனன். அரசனும் மனங்கலங்கப் பெற்றிருப்பதனால அவவுரைகளைக் கேட்டுப பதிலொன்றுஞ் சொல்ல முடியாமல ராமன காட்டுக்குச் சென்ற மனவருத்தத்தினால பரிதபித்து மூர்ச்சித்துப் பூமியில்

வீழ்ந்தனன். இப்படி மன்னவன் மூர்ச்சித்தவுடனே அந்தபுரமடந்தையர்கள் எல்லோரும் சோகத்தில் ஆழ்ந்து வருந்தி, அவன் தரையில் விழும் பொழுதே கைகளை உயர்த்து தூக்கிக்கொண்டு 'ஹா' என்று கதறினர். அப்பொழுது கௌஸல்யை, ஸுமித்திரையுந் தானுமாகத் தரையில் விழுந்த பர்த்தாவை எழுப்பி எடுத்து 'மஹாபாக்யமுடையவனே! எவர்க்கும் செய்யமுடியாத கார்யத்தைச் செய்யுந் திறமையுள்ளவனும் உமது புதல்வனுமாகிய ராமனால் அனுப்பப்பட்டு, அவன் வாஸஞ் செய்கிற வனத்திலிருந்து வந்திருக்கின்ற தூதனாகிய இந்த ஸுமந்த்ரனைப் பார்த்து ஏன் பேசாதிருக்கின்றீர்? ரகுகுலதிலகனே! ராமனைக் காட்டுக்கு அனுப்பி நீதியினின்றுந் தவறினீர். இப்பொழுது அதற்கு லஜ்ஜைப்படுகின்றீர். அது யுக்தமன்று எழுந்திரும். உமக்கு, சொல்லித் தவறாதிருக்கும் வரத்தைப்பற்றின புண்யம் உண்டாகுமாக சோகிப்பதனால் ப்ரயோஜனம் இல்லை. தேவா! எவளிடத்தில் பயப்பட்டு ஸுமந்த்ரனைப் பார்த்து ராம வருத்தாந்தம் வினவாதிருக்கின்றீரோ, அந்தக் கைகேயி இவ்விடம் இல்லை ஆகையால் பயமின்றி மனக்கவலையறப் பேசலாம்' என்றனள் இங்ஙனம் அந்தக் கௌஸல்யை சோகத்தினால் வருந்திக் கண்ணீர் தளும்பப்பெற்றுத் தழுதழுத்த கண்டத்துடன் மஹாராஜனைப் பார்த்து மொழிந்து உடனே சோகாதிசயத்தினால் தானும் கீழே விழுந்தனள். இவ்விதம் புலம்பித் தரையில் விழுந்த கௌஸல்யையையும் மூர்ச்சித்துக் கீழே விழுந்திருக்கிற பர்த்தாவையும் பார்த்து ராஜபத்னிகளெல்

[illegible]ம அழுகிய குரலுடன் அழுதனர் அனந்தரம் [illegible] வந்தப்புரத்தில் இங்ஙனம் அழுகுரல் உண்டாவதைக் கேட்டுப் பட்டணத்திலுள்ள வயது சென்றவர்களும்

பருவம நிரமபினவர்களுமான புருஷர்களும் ஸத்ரீகளும் ஆகிய அனைவரும நாறபுறத்திலும ரோதனஞ் செய்தனா. அங்ஙனம அநதப பட்டணம முழுவதும ராமன வனததிறகுப போன ஸமயததிறபோல மீளவும் பெருங் கலககம உண்டாகப பெறறிருநதது ஐமபததேழாவது ஸாககம் முறறிறறு.

1 { ஸுமநதரன தசரதனிடததில ராமன சொலலியனுபபின ஸமாசாரஙகளைக கூறுதலும, ஸீதையின துககததைத தெரிவிததலும. }

பிறகு மன்னவன சீதோபசாரஙகள் செயயபபெறறு மூர்சசை தெளிநது ராமனது வருததாநதங்களை விசாரிககுமபொருட்டு அவனிடததினினறு வநதிருககிற அநத ஸுமநதரனை அருகில அழைததனன அமமனனவன ராமனைப பறறியே சோகிததுககொணடிருநதமையால துககசோகஙகள நிரமபபபெறறு வயது முதிரநதமையால அவறறை அடககமுடியாமல மிகவும பரிதபிததுக கொண்டிருநதனன அவன ஒருகாலும துக்கததை அனுபவிககாதவனுகையால புதிதாயப பிடியுண்டயானை போல ஒனறும தோறறுமல பெருமூசசெறிநது கொணடு தயானஞசெயவதுபோல பேசாதிருநதனன. அஙஙனம வியாதியால பீடிககபபட்ட யானைபோல சிநதையுறறிருககினற வருததனுகிய அமமஹாராஜனிடம வநது ஸுமநதரன கைகளைக கூபபிககொண்டு நினறிருநதனன அரசனும, தனனருகில புழுதிபடிநது அழகு குலைநத அவயவங்களோடு முகததில மிகுநத கண்ணீர பெருக ஒளி மழுங்கி நிறகிற ஸுமநதரனைப பாரதது மிகவும பரிதாபம அடைநது மேல வருமாறு கூறினன. —'ஸூதனே ! மேலான ஸுகஙகளை அனுபவிதத தர்மஸ்வபாவனுகிய

அந்த ராமன் எந்த வ்ருக்ஷத்தின் கீழ் வஸித்திருக்கின்ற னன்? எதைச் சாப்பிடுகின்றனன்? ஸுமந்த்ர! அவன் துக்கத்தை அனுபவிப்பதற்கு உரியவனன்றே! மேலான படுக்கையில் படுத்துக்கொள்ள வேண்டியவனாயிற்றே! அப்படிப்பட்ட ராஜகுமாரன் கஷ்டப்பட்டு வெறுந்தரை யில் அநாதன்போல் எப்படி படுத்துக்கொள்கின்றனன்? எவன் போகும்பொழுது காலாட்களும் தேர்களும் யானைகளும் பின்றொடர்ந்து செல்லுமோ, அப்படிப் பட்ட ராமன் இப்பொழுது ஜனஸஞ்சாரமில்லாத அரண் யத்தில் எப்படி இருக்கின்றனன்? க்ரூரங்களாகிய ஸிம் ஹாதி ம்ருகங்களும் மலைப்பாம்புகளும் க்ருஷ்ணஸர்ப் பங்களும் நிறையத் திரிந்துகொண்டிருக்கிற வனத்திற்கு என் குமாரர்களாகிய ராமலக்ஷ்மணர்களும் ஸீதையும் எப்படி போயிருக்கின்றனர்? ஸுமந்த்ரனே! ஸீதை மிகவும் ஸுகுமாரியாயிருக்கத்தகுந்தவள் அவள் கதியைக் கண்டால் எவர்க்குத்தான் மனவருத்தம் உண்டாகாது? அப்படிப்பட்ட ஸீதையை அழைத்துக்கொண்டு அந்த ராஜகுமாரர்கள் இருவரும் ரதத்தினின்றும் கீழே இழி ந்து எப்படி கால்நடையாய்ப் போயினர்? ஸூதனே! அஶ்வினீதேவதைகள் மந்தரபர்வதத்தில் ப்ரவேசிப்பது போல வனாந்தரத்தில் ப்ரவேசிக்கின்ற என் புதல்வர்களைக் கண்டாயாகையால், நீ ப்ரயோஜனங்களெல்லாம் நிறை வேறப் பெற்றனை. அரண்யத்திற்குப் போனபின்பு ராமன் யாது மொழிந்தனன்? லக்ஷ்மணன் யாது கூறினன்? ஸீதையும் என்ன சொல்லினள்? ராமன் எங்கெங்கு உட் கார்ந்திருந்தானோ, எங்கெங்குப் படுத்திருந்தானோ, அவையெல்லாவற்றையும் எனக்கு விஸ்தாரமாக வர்ணித் துச் சொல்லவேண்டும் யயாதி ஸ்வர்க்கத்தினின்றும் கீழே விழும்பொழுது, தனக்கு ஸஜ்ஜனஸஹவாஸம்

நேரிடும்படி இந்த்ரனை வேண்டிக்கொண்டு அதனால ஸ்வாகத்தினின்று நழுவிக் கீழேவிழுநத துககம சிறிதும் நெஞசில தோறறப பெறறிருநதனன. அபபடியே நானும ராமனை விட்டுபபிரிநத மஹாதுககததில ஆழ்நதிருப்பினும, அவனது சரிதரத்தைக கேட்பதனாலாவது அநத வருததந தீரபபெறறுப பிழைததிருபபேன' என்றனன. மன்னவன இங்ஙனம விளுவுகையில ஸுமநதரன கணடததில கணணீர வநதடைககப பெறறு அதனால தழுதழுத்த வாரததையுடன அமமஹாராஜனைப பாரதது மொழிநதனன — 'மன்னவர தலைவனே! ராமன தாமததையே பரிபாலிகக முயனறு உனனை நினைத்துக் கைகளைக குவிததுத தலைவணஙகி நமஸகாரஞசெயது என்னைப பாரதது, 'ஸாரதி! எனதநதை ஆதமஸவரூபமுணாநதவா; தலைவணஙகி நமஸகாரஞ செயயத்தகுநதவா ஆகையால, நான அவரை நமஸ்கரித்தேனென்று மொழிநது எனககுப பதிலாக அமமஹானுபாவரது பாதங்களிரண்டிலும தலைவணஙகி நமஸகாரஞ செயய வேண்டும. ஸுமநதனே! அநதபபுரததில 'இவா அவா' என்றுபாராமல எலலோாககுமநான சொனனேனென்று சொலலி எனது ஆரோககியததை அறிவிதது அவரவா பருவததுககுத தகுநதபடி எனது நமஸகாரததையுந தெரிவிககவேணடும். என தாயாகிய கௌஸலயைககும் நீ என க்ஷேமததையும எனது நமஸகாரததையும சொல்லவேண்டும. அவளுககு, தாமததிலாவது பாததாவிடததிலாவது ஏமாறாமல மனவூக்கமுறறிருககும்படி நான சொனனதாகச சொலலவேண்டும. மேலும், இவவார்த்தையையுங கூட அவளிடம கூறுவாயாக. 'தேவீ! நீ எபபொழுதும தாமத்தைக் கைவிடாமல் அநதநத காலங்களில தவறாமல் அக்னிஹோத்ர க்ருஹ

தநிற்கு வேண்டிய உபசாரங்களைச் செய்துகொண்டிருப்பாயாக. அரசரது பாதங்களில் தெய்வத்திற்குப்போல் பரிசரியை நடத்திக்கொண்டிருப்பாயாக. உனக்குச் சக்களத்திகளாகிய கைகேயி முதலிய என் தாய்மார்களெல்லோரிடத்திலும் 'நான் மேற்பட்டவள்' என்கிற காவமாவது, 'நான் ஜ்யேஷ்ட பத்னியாகையால் ஒருவர்க்குக் கீழ்ப்படிந்திருக்கலாகாது' என்கிற மனப்பெருமையாவது உண்டாகப் பெறுமல் அவையிரண்டையும் தூரத்தில் துறந்திருப்பாயாக. அம்மா! அரசனையும், அரசனைப்போல் கௌரவிக்கத்தக்கவளாகிய கைகேயியையும் பேதமின்றி அனுஸரித்திருப்பாயாக. அரசர்கள் தனத்தினால் பெரியோர்களேயன்றி வயஸ்ஸைப் பற்றி அன்று. தனத்தினால் பெரியோராயிருப்பவர்களே ராஜாக்களாவார்கள். ஆகையால் பரதன் சிறியவனுயினும் அவன் ராஜாவாகையால் அவனைப் பெரியவனென்றே பாவிக்கவேண்டும் ராஜதர்மத்தை மனத்தில் படுத்திக்கொள்வாயாக இது உனக்கே தெரிந்திருக்கும்' என்றனர். பரதனிடஞ் சொல்லும்படிக்கும் என்னைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தனன் —'ஸூதா! நீ பரதனுக்கு என் க்ஷேமத்தைச் சொல்லவேண்டும். மேலும், தாய்மார்கள் அனைவரிடத்திலும் பேதமின்றி நியாயத்தின்படி நடக்கவேண்டுமென்று நான் சொன்னதாக அவனுக்குச் சொல்லவேண்டும் இக்ஷ்வாகுவம்சத்தை மனக்களிப்புறச் செய்யும் மஹாபுஜனுகிய அந்தப் பரதனைக் குறித்து 'நீயுவராஜனுயிருந்து, ராஜ்யத்தில் பரதானமாகத் தகப்பனரையே வைத்து அவரது ஆஜ்ஞையின்படி பரிபாலித்து வரவேண்டுமேயன்றி அவரை உல்லங்கனஞ் செய்யலாகாது. ஏனெனில், அவர் மிகவும் வயது சென்றவர். ஆகையால் அவர்

சொன்ன வார்த்தைக்குத் தடைசெய்யலாகாது. யௌவ
ராஜ்யத்தைக் கைப்பற்றி அவரது ஆஜ்ஞையை
நடத்தி இஷ்டங்களான போகங்களை அனுபவித்து
ஜீவித்திருப்பாயாக' என்றும் சொல்லுவாயாக' என்ற
னன். ராமன் மீளவும் என்னைப் பார்த்துக் கண்ணீர்
மிகவும் ததும்பப் பெற்றுப் பரதனுக்குச் சொல்லும்படி
மீளவும் மொழிந்தனன் 'பரத! என் தாய் பிள்ளைக
ளிடத்தில் மிகுந்த ப்ரேம முடையவள் அதற்குத்
தகுந்தபடி நான் அவளருகில் இல்லாமற்போயினும் நீ
எனக்குப் பதிலாக இருந்து உன் தாயைப்போலவே என்
தாயாரையும் பார்த்துக்கொள்ளவேண்டும்' என்று
என்னுடன் சொல்லிக்கொண்டே மனவருத்தத்தினால்
கண்களிரண்டும் செந்தாமரைமலர்போல் விளங்கப் பெற்
று மிகவும் கண்ணீர் பெருக்கினன். லக்ஷ்மணன்மாத்
ரம் மிகுந்த கோபாவேசத்துடன் பெருமூச்சுவிட்டுக்
கொண்டு 'இந்த ராஜகுமாரனாகிய ராமன் என்ன அப
ராதஞ்செய்தானென்று நகரத்தினின்றும் துறத்தப்பட்
டான் ராமனை அரண்யத்திற்கு அனுப்பினதைப்பற்றி
நாங்களெல்லோரும் மிகுந்த மனவருத்தம் அடைகின்
றனம். இங்ஙனம் எங்களுக்கு இந்த மனவருத்தம்
கொடுப்பதனால் அம்மன்னவன் செய்தது மிகவும் அகார்
யமேயென்பதில் ஸந்தேஹமேயில்லை. அவ்வரசன் துச்
சமாகிய கைகேயியின் ஆஜ்ஞைக்கு உட்பட்டு இப்படிப்
பட்ட துஷ்டகார்யத்தைக் கார்யம்போல நினைத்துச்
செய்தனன். 'அரசன் தான் செய்த ப்ரதிஜ்ஞையை
நிறைவேற்றினனாயின், அது எப்படி அகார்யமாகும்?'
என்பாயோ? கைகேயீ ராஜ்யலோபத்தினால் ராஜாவி
னிடத்தில் ராமனைக் காட்டுக்கு அனுப்பும்படி சொல்
லிச் செய்வித்ததேயன்றி வேறில்லை ஆகையால் இது

தோஷமெனபதைப பறறிச் சொலல வேண்டிய அவஶ்யமேயில்லை. அன்றியே கைகேயிககு வரங் கொடுததிருந்தானாகையால் அதைபபறறி இங்ஙனஞ் செயய நேரிட்டதெனறாலும, எவவிதததிலும துஷகாரயஞ செய்ததேயாகுமனறி அழகாகவே செயதானெனறு சொலலமுடியாது அவவரஙகளுககு ராமனை அரணயம போகத துரததுவதும பரதனுககு ராஜயததில படடாபிஷேகஞ செயவதுமே பலனகளாகவேணடு மெனறு நிரபநதமிலலை யனறோ? ஆகையால இது எபபடி பாரததபோதிலும துஷகாரயமே யெனபதறகு ஸநதேஹமே யிலலை. இபபடி எங்களைப பீடிபபது, தெயவம தனமனம போனபடி மனனவனைத தூணடி விட அதறகு வசபபடடு மனனவன செயதானனறி ஸவபுததியைக கொணடு செயயவிலலையெனினும், தெயவம பரேரிதத பொழுதிலும எதாவதொரு தோஷததை முனனிடடுககொணடே பரிதயாகஞ செயயவேணடும். ராமனைப பரிதயாகஞ செயவதறகு அபபடிபபடட காரணம ஒனறும புலபபடவிலலை ராமனை அரணயததிறகு அனுபபுவது நிரமபவும நயாயவிருததமாயிருககினறது ஆயினும புததிககுறையினால ஆலோசியாமல மனனவன செயதுவிடடனன. ஆகையால அது இபபொழுது அவனுககே அனுதாபததை விளைவிககபபோகினறது தநதையை நிநதிககலாகாதெனபாயோ? எனககு மஹாராஜனிடததில தநதையின தனமை இருபபதாகத தெரியவிலலை அவரிடததில எனககுத தநதையெனனும புததியே உணடாகவிலலை எனககு உடனபிறநதவனும ஸவாமியும பநதுவும தநதையும ராகவனே. ஸமஸத லோகபரியனும ஸாவலோகஹிதனுமாகிய ராமனை விடடு, இபபடிபபடட கரூரகாமததைச செயததனால் உலகங்களுககெலலாம அபரியனும லோகஹிதத

தில் ஆஸக்தியற்றவனுமாகிய உன்னிடத்தில பரதனைப் போன்றவனுக்குத் தவிர மற்றை ஸமஸ்த லோகங்களுக்கும ப்ரீதி எப்படி உண்டாகும்? ஸகல ப்ரஜைகளின மனத்திற்கும இனிப்பைக கொடுக்கும் தன்மையனும் தாமஸ்வபாவனுமாகிய ராமனை அரணயத்திறகு அனுப்பி இவ்வுலகத்திலுள்ளவர அனைவரோடும விரோதித்துககொண்டு நீ எப்படி அரசனயிருக்கப்போகின்றனை?' என்று அரசனிடம சொல்லுவாயாக' என்றனன. மஹாராஜனே! ஸீதையோ வென்றால, லக்ஷ்மணனைபபோல ஒன்றும் கூறமாட்டாளே யன்றி மனத்திலுள்ள சோகாதிசயத்தினல பெருமூச்செறிந்துகொண்டு கம்பீரமான மனமுடையவளாகையால உள்ளே பூதம ஆவேசிக்கப பெற்றவளபோல அப்படி இப்படி அசையாமல நின்று திகைத்தவளபோல கணவிழிகள இரண்டும ஆணியிட்டாறபோல ஒரே நிலையாக விளங்கப பெற்று எல்லாவற்றையும மறந்து புன்சிரிப்புடன பரகாசிக்கும நிலையும தொலையபபெற்று வெறுமனே இருந்தனள. அவள ராஜகுமாரத்தியாகையால அதுவரையில எந்நாளும வயஸனத்தை அனுபவித்தறிந்தவ ளன்று அப்படிப்பட்ட ஸமயத்திலும கைகேயியைபபற்றி ஒருசொல சொல்லியும நிந்தியாதிருந்த அபபெண்பிள்ளையை எவவண்ணம புகழலாகும்? அந்த ஸீதை பாத்தாவின துயரத்தைப பார்த்து அதனல தனக்கு மனவருத்தம உண்டாகப பெற்று அழுதுகொண்டிருந்தனள் அதுவேயன்றி என்னிடம ஒன்றுஞ்சொல்லவில்லை அவள தன பாத்தாவை வெறுமனே பார்த்துக்கொண்டிருந்து மனவருத்தத்தினல் முகமவாடி வதங்கப்பெற்று நான பரயாணமாய்ப புறப்பட்டுபபோவதைக கண்டவுடனே 'ரதம போயிற்று; இனி ராகவன எப்படி நடக்கபபோகின்றன' என்றுதுக்கத்தைப பொறுக்க முடியாமல் கண்ணீர பெருக்கினள்.

லக்ஷ்மணன் புஜங்களால் சுப்ரூஷைகள் செய்து காத்துக்கொண்டிருக்கப்பெற்ற ஸ்ரீராமன் அங்ஙனம் மொழிந்து முகத்தில் கண்ணீர் ததும்பக் கைகளைக் குவித்துக் கொண்டிருந்தனன். அப்படியே ஸீதையும் பார்ப்பவர்களுக்கும் கேட்பவர்களுக்கும் மிகுந்த மன இரக்கமுண்டாகும்படி அழுதுகொண்டு ராஜ ரதத்தையும் ரதத்தைப்போலவே என்னையும் பார்த்துக்கொண்டிருந்தனள். ஐம்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

ஸுமந்த்ரன் தசரதனுக்கு, ராமனைப் பிரிந்து அயோத்தையிலுள்ள சராசரங்களனைத்தும் மனவருத்தமுற்றிருப்பதைக் கூறுதலும், தசரதன் அதைக் கேட்டுப் பச்சாத்தாபத்தினால் மூர்ச்சித்தலும்

[1] (இப்படி மந்த்ரிஶ்ரேஷ்டனும் ஸாரதியுமாகிய ஸுமந்த்ரன் சொல்லிக்கொண்டிருக்கையில் அரசன் கேட்டு 'மற்றை வருத்தாந்தங்களையும் சொல்லுவாயாக' என்றனன். ஸுமந்த்ரனும் அரசனது வார்த்தையைக் கேட்டுக் கண்ணீர் வந்து கண்டத்தில் நிறைகையில் மிகவும் ஆயாஸம் அடைந்து மீளவும் ராம வருத்தாந்தத்தை விஸ்தாரமாக இங்ஙனம் சொல்லத்தொடங்கினன் — 'மஹாராஜனே! வீரர்களாகிய அவ்விருவரும் ஜடைகளைத் தரித்து மரவுரிகளை உடுத்துக் கங்காநதியைக் கடந்து ப்ரயாகக்ஷேத்ரத்தைக் குறித்துப் போயினர். லக்ஷ்மணன் ராமனைக் காத்துக்கொண்டு எல்லோர்க்கும் முன்னே சென்றனன். பிறகு ஸீதை நடந்து சென்றனள். பின்பு ரகுகுலாநந்தகரனாகிய ராமன் நடந்து சென்றனன். அங்ஙனம் அவர்கள் போய்க்கொண்டிருக்கையில், அப்பொழுது பார்த்திருந்து பராதீனனாகையால் அவர்களைப் பின்றொடர்ந்துபோகக் கோராமல் நான் திரும்பி வந்தனன்) ராமன் வனத்திற்கு ப்ரயாணமாய்ப் புறப்பட்டுப் போனவுடனே நான் திரும்பிவிட்டனன்.

---

1 குண்டலிதம் வியாக்யானத்தில் இல்லை.

திருமபினபோதிலும் என்குதிரைகள் ராமவியோகததுக் கததினால மிகவும உஷ்ணமாக மூச்சுவிட்டுக்கொண்டு வழியில சரியாய நடந்து செல்லாமல இடக்கு பண்ணிக் கொண்டிருந்தன. பிறகு நான ராஜகுமாரர்கள இருவர் களுக்கும அஞ்ஜலிசெயது ரததத்தில ஏறிக்கொண்டு அடக்க முடியாத அந்த மனவருததம முழுவதையும அடக்கிக் கொண்டு பரயாணமாயப புறப்பட்டேன. நான அந்த ஸ்ருங்கிபேரபுரத்திலேயே 'திருமபியும எனனை ராமன சாரர்கள மூலமாக வரவழைப்பானோ' என்னும ஆசை யினால குஹனுடன கூடப [1] பலதினங்கள வஸித்திருந்

1 இங்கு (பலதினங்கள்) என்ற விடத்தில பலதினங்களென்றால—மூன்று தினங்களென்று சிலர் கருத்து. வாஸ்தவமாகப பார்க்கில—செடியின கீழ ஒரு நாள், பரதவாஜாஸ்ரமத்தில இரண்டாவது நாள், யமுனைககரையில மூன்றாவது நாள், நான்காவது நாள சித்ர கூட பரவேசம, ஐந்தாவது நாள குஹனுடைய சாரர்கள ராமவருத்தாந்தம தெரிவித்தல, ஆறாவது நாள ஸுமந்த்ரன அயோத்யைக்குப் புறப்படுதல ஆகையால ஆறு தினங்கள ஆயின அல்லது—இரண்டாவது நாள பரதவாஜாஸ்ரமத்தில ராமன சித்ரகூடத்திற்குப் போவதாக நிச்சயிக்கையால, அது தெரிந்து சாரர்கள் மூன்றாவது நாள் வந்து ஸுமந்த்ரனுக்குத தெரிவிக்க, நான்காவது நாள் ஸுமந்த்ரன புறப்பட்டானென்று நினைக்கலாமாயின கங்காதீரத்தில மூன்று தினங்கள் இருந்ததாகத தெரிய வருகின்றது. ஆகையால 'பலதினங்கள' என்றால மூன்று தினங்களென்று கொள்ளவேண்டும ராமவியோகத்தினால ஒவ்வொரு தினமும் ஒரு கல்பம் போல தோற்றுகையால அம்மூன்று தினங்களையே பலதினங்களாகச் சொல்லினன. இங்ஙனம கோவிந்தராஜா

ஸீதா ராம லக்ஷ்மணர்கள் கங்கையைச் சேர்ந்து குஹனுடனிருந்த தினம் ஒன்று, கங்கையைத் தாண்டி ஆலமரத்தினடியில் இருந்த தினம் ஒன்று. ராமன பரத்வாஜாஸ்ரமஞ் சேர்ந்தவன்றைத் தினம அங்கிருந்து சாரர்கள் வந்த தினம் ஒன்று, ஆக மூன்று தினங்கள் ஆகின்றன. இவையே பலவென்று சொல்லப்பட்டன.

தன்ன. மஹாராஜனே! [1] உன் தேசத்திலுள்ள வருக்ஷங்களுங்கூட ராமவ்யஸனம் பொறுக்க முடியாமல் இளைத்துப் புஷ்பங்களோடும் தளிர்களோடும் மொக்குகளோடும் வாடியிருக்கின்றன. இனி மனிதர்களைப்பற்றிச் சொல்லவேண்டுமோ? [2] நதிகளிலும் குளங்களிலும

---

ராமன் பரத்வாஜாஸ்ரமத்திற்குப் போய்ச் சேர்ந்த இரண்டாவது நாள் சாரர்கள் அங்கிருந்து வந்து ஸுமந்த்ரனுக்கு வருத்தாந்தந் தெரிவிக்கையில், அவனும் அன்றையதினமே ப்ரயாணமாய்ப் புறப்பட்டு மூன்றாவது நாள் ஸாயங்காலம்—அதாவது—புறப்பட்டதினத்தோடுகூட மூன்றாவது நாள் ஸாயங்காலம் அயோத்யையைச் சேர்ந்தனன் ஆகையால் 'ததஸ் ஸாயாஹ்நஸமயே த்ருதீயேஹநி ஸாரதி:। அயோத்யாம் ஸமநுப்ராப்ய நிராநந்தாம் ததர்ஸ ஹ' என்று அவன் மூன்றாவது நாள் அயோத்யையைச் சேர்ந்தானென்று சொல்லப்பட்டிருக்கின்றது ஆகையால் (த்ருதீயேஹநி) என்பதற்கு ஸ்ருங்கிபேரபுரத்தினின்று புறப்பட்ட தினத்தோடு கூட மூன்றாவது நாள் அயோத்யைக்குப் போய்ச்சேர்ந்தானென்று தெரிகின்றது இங்ஙனம் மஹேஸ்வர தீர்த்தர்.

1 இதற்கு—'விஷயே தே மஹாராஜ ராமவ்யஸநகர்ஸிதா:। அபி வ்ருக்ஷா: பரிம்லாநா: ஸபுஷ்பாங்குரகோரகா:' என்று மூலம். (மஹாராஜ) மஹாராஜனே! (விஷயே தே) உன் தேசத்தில், (ராமவ்யஸநகர்ஸிதா:) ராமதுக்கம் பொறுக்கமாட்டாமல் இளைத்திருக்கிற, (வ்ருக்ஷா அபி) வ்ருக்ஷங்களும், அபிஸப்தத்தினால் கொடிகள் முதலியவற்றையுங் கொள்ளவேண்டும். பருப்பருத்த வ்ருக்ஷங்களுக்கும் இந்தகதியாயின் சிறிய கொடிகளுக்குச் சொல்லவேண்டுமோவென்று கருத்து. (ஸபுஷ்பாங்குரகோரகா:) புஷ்பங்களோடும் தளிர்களோடும் மொக்குகளோடும் கூடவே இதனால் வ்யாதிமுதலியவற்றால் வ்ருக்ஷங்களில் ஏதோ ஒருபாகமே கெட்டுப்போயிற்றென்பது தடுக்கப்பட்டது. முழுவதும் கெட்டுப்போயிற்றென்றபடி. இதனால் வ்ருக்ஷாவயவங்களில் 'இளையது முற்றினது' என்னும் பேதமில்லாமல் எல்லா அவயவங்களும் ஏககாலத்தில் கெடுதியை அடைந்தனவென்று கருத்து.

2 இதற்கு 'உபதப்தோதகா நத்ய: பல்வலாநி ஸராம்ஸி ச। பரிஸுஷ்கபலாஸாநி வநாந்யுபவநாநி ச' என்று மூலம். (நத்ய:) நதிகள்,

குட்டைகளிலும் ஜலங்கள் கொதித்துக் கொண்டிருக் கின்றன. அரண்யங்களிலும் உத்யானவனங்களிலும் வ்ருக்ஷங்களின் இலைகள் எல்லாம் உலர்ந்திருக்கின்றன. அரண்யங்களில் ஜந்துக்கள் சலியாதிருக்கின்றன. க்ரூர ம்ருகங்கள் இரைக்காகத் திரிவதையும் இழந்து விட் டன. ராமவியோகத்துக்கத்தினால் அரண்யங்கள் முழு வதும் நிஷ்பந்தமாயிருக்கின்றன. மன்னவனே! தாமரை யோடைகள் அனைத்தும் கொடிகள் உலர்ந்தழிவ தனால் இலைகள் ஜலத்தில் மறையப்பெற்று, அந்த இலை கள் அழுகிப் பாழாய் விடுகையால் கலங்கிய ஜலமுடைய வைகளாகித் தாமரைப் பூக்கள் வாடி வதங்கவும் மீன் களும் ஜலபக்ஷிகளும் மழுங்கி மறையவும்பெற்றுக் கலக்க முற்றிருக்கின்றன. ஜலத்திலுண்டாகும் புஷ்பங்களும் பூமி யில் உண்டாகும் புஷ்பங்களும் பழங்களும் காய்களும் வாஸனை குறையப்பெற்று முன்போல் விளங்கவில்லை. இந்தப் பட்டணத்திலுள்ள உத்யானவனங்களெல்லாம் பக்ஷிகளின் இனிய நடைகளும் ஒலிகளும் ஓயப்பெற்றுப் பாழாயிருக்கின்றன. புருஷர்களில் சிறந்தவனே! உத்யா ஒன்றாவது எனமனத்திற்கு இனிதாகப் புலப

(உபதப்த உதகாः) கொதித்த ஜலமுடையவை நதிகள் கொதித் தன வென்னுமல் அதிலுள்ள ஜலம் கொதிக்கின்றதெனகையால் ஜலத்தில் ஏதோ ஒருபாகமன்றியே முழுவதும் அடிவரையில் கொதித் ததென்று பொருள். இதனால்—வெயில் பட்டுக் கொதித்துப் போனதன்றென்று ஏற்படுகின்றது. (பல்வலாநி ஸராம்ஸி ச) குட்டை களும் குளங்களும். இதனால் சிறியதென்றும் பெரியதென்றும் வாசி யில்லாமல் ஜலமுள்ள இடங்களெல்லாம் கொதித்தனவென்று கருத்து. (வநாநி) இடைவிடாமல் ஜலந்தேக்கி வளர்ப்பாரில்லாமல் வருமழை போமழைகளில் வளர்ந்தவையாகையால் கிடுகாரங்களா யிருப்பவை யென்றபடி. வெயில் முதலியவற்றிற்கு எட்டாத வலிமை

படவில்லை. நான அயோத்யைககுள புகுநதுவருகையில் என்னை ஒருவனாயினும அபிநநதிககவில்லை. ஜனங்கள் எல்லோரும என்னோடு கூட ராமன வரககாணாமையால் மனவருததம் மிகபபெறறு அடிக்கடி பெருமூசசெறிநது கொண்டிருக்கினறனா. தேவனே! ராமனில்லாமல இவவிடம திருமபிவநத ராஜரததைதக கணடு ராஜ மாாககததிலுள்ள ஜனஙகள எலலோரும துயாததினால் கண்ணீா பெருககுகினறனா. ஸதரீகள மேல மெத்தை களிலும விமானஙகளிலும உபபரிகைகளிலும ஏறிக கொணடு ராமனிலலாமல ரதமமாதரம வருவதைதக கணடு ராமனைக காணப பெறாமைககு வருநதி ஹாஹா காரஞ செயதனா ஸதரீகள மிகவும பரிதபிதது மேன மேலும வேகமாகக கணணீா பெருகி வருவதனால மிக வும அகனறு மை கரைநது குலையப பெறுகையால நிர்மலமாய விளஙகுகினற நீணட கணகளுடன ஒருவரை யொருவா ஸபஷடமாகப பாாகக நேராமலே பாாததுக கொணடிருககினறனா ராமனைப பறறி மனவருததப படும விஷயததில சதருககளுககாயினும மிதராக ளுககாயினும உதாஸீனாகளுககாயினும் பேதமெனபது சிறிதாயினும புலபபடவில்லை. எலலோரும ஒருவிதமா கவே வருததபபட்டுககொணடிருககினறனா. மஹா ராஜனே! இவவயோதயையிலுளள ஜனங்களெலலோரும மனககளிபபினறி வருநதுகினறனா. கஜஙகளும அஸ் வஙகளும வருததபபடுகினறன. எலலா விடத்திலும ஜனங்களின அழுகுரலினால ஸநதோஷமெனபது சிறி

---

யுடையவையெனறுகருத்து (உபவநாஸ்) பரதிதினமும ஜலம வற்று திருககுமாறு ஜலநதேககி வளாத்தவையாகையால மெதுவாயிருப பவை யென்றபடி. இவவிரணடும (பரிஸ-ஷகபலாஸாஸ்) ஒரே ரீதி யாக இலைகள் உலாநது போயின.

தும் புலப்படாதிருக்கின்றது. ஆங்காங்கு நீண்ட பெருமூச்சுக்களின் சப்தங்கள் எழும்புகின்றன. ஶ்வாஸவியாதியினால் மூச்சு தடைப்படப் பெற்றவர்போல் ஜனங்கள் துக்கத்தினால் வருந்தி ஹாஹாகாரம் செய்கின்றனர். எங்குப் பார்த்தபோதிலும் ஆனந்தம் உண்டாகாதிருக்கின்றது. ராமனைக் காட்டுக்கு அனுப்பினதனால் எங்குப் பார்த்தபோதிலும் மனவருத்தமே. ஆகையால் இவ்வயோத்தியை புத்ரனைப் பிரிந்த கௌஸல்யையைப்போல் எனக்குப் புலப்படுகின்றது' [1] என்றனன். இங்ஙனம் ஸாரதியாகிய ஸுமந்த்ரன் சொன்ன வார்த்தையைக் கேட்டு மன்னவன் கண்ணீர் கண்டத்தில் வந்தடைக்கையால் தழுதழுத்து மிகவும் தீனமாகிய உரைகளை உரைத்துக் கொண்டே அந்த ஸாரதியைப் பார்த்து, [2] 'கைகேயியின் கருத்தெல்லாம் பாபத்திற்குப் பிறப்பிடம். மேலும், அவள் பாபிஷ்ட வம்சத்திற் பிறந்தவளாகையால் அதற்குத் தக்கபடி பாபிஷ்டஸ்வபாவமுடையவளாயிருக்கின்றனள். அப்படிப்பட்ட கைகேயி 'ராமனைக் காட்டுக்கு அனுப்புவாய்' என்று தூண்டுகையில், நான் கார்யாலோசனையில் ஸமர்த்தர்களாகிய பெரியோர்க

---

1. இதுவரையில் ராமனது ஸாயாத்மதையை ரிஷி அனுஸந்தித்தாரென்று ப்ரபந்தகத்வஸ்துத்வனி ஏற்படுகின்றது. ப்ரபந்தகத்வஸ்துத்வனியாவது—ஒரு ப்ரபந்தத்தில் ஒரு கதை சொல்லிக்கொண்டுவர, அதில் மற்றொரு தாத்பர்யம் ஏற்படுவதே.

2. ஸுமந்த்ரன் தசரதனை கேட்டவற்றிற்கு உத்தரஞ் சொல்லி அதனோடு நில்லாமல் ராஜ்யத்திலுள்ள மனுஷ்யாதிகள் மனக்கலக்கமுற்றிருப்பதைச் சொல்லிக்கொண்டிருக்கையில் அரசன் யான் செய்தது அக்ருத்யமென்று தெரிவிக்கைக்காக ஸுமந்த்ரன் இங்ஙனம் சொல்லுகிறானென்று தெரிந்து தான் செய்தது அக்ருத்யமேயென்று அங்கீகரித்து உத்தரஞ் சொல்லுகிறான்— (கைகேயியின் கருத்தெல்லாம் பாபத்திற்குப் பிறப்பிடம்) என்றது முதலாக.

ளோடு கலநது விசாரஞசெய்யாமற போயினன். நான ஸனேஹிதாகளோடாவது மநத்ரிகளோடாவது நகரதது ஜனங்களோடாவது இநதராமனை அனுப்பும விஷயததைதபபறறி ஆலோசனை செயயாமற் போய் விடடனன. அதுவுமனறி ஒரு பெணபிளளையினிடததி லுளள மோஹததினல முனபின பாராமல திடீரெனறு இநதக காரயத்தைதச செயதுவிடடனன. ஸூதனே! அப படி இலலையாயின, நான ஜனமாநதரததிற செயத பாப வசததினல இபபடி நடககவேணடியதா யிருபபதுபறறி இநத வயஸனம மறறொரு ஹேதுவுமினறி தெயவா தீனமாக இககுலம பாழாகுமபடி எமககு நேரநதிருக் கலாம ஸூதா! உனககு எபபொழுதாயினும எதா யினும உபகாரஞ செயதிருபபேனுயின, அதைதபபறறி,நீ சீகரமாக எனனைராமனிடங கொணடுபோயச சோபிக கவேண்டும. என பராணனகள கிளமபிப போகினறவை போலிருககினறனவாகையால அவையே எனனை அவஸ ரபபடுததுகினறன. இபபொழுதும எனது ஆஜ்ஞையே செலலுமாயின, ராமனைத திருபபி அழைததுககொணடு வருவாயாக ராமனைப பிரிநது நான ஒரு முஹூரதத காலமாயினும ஜீவிததிருககப பொறேன. இலலையா யின, அமமஹாபாஹு வெகுதூரம போயிருககக கூடு மாகையாலஅவனைததிருபபி அழைததுககொண்டு வரு வதைககாடடிலும எனனையே ரததில ஏறறி அழைத துககொண்டுபோயச சீகரததில ராமனுககுக காட்டு வாயாக. குருககததியின மொககுபோல விளஙகும பல் வரிசைகள பொருநதியவனும பெரு விலலாளியுமாகிய லக்ஷமணனுககுத தமையன ராமன எஙகேஇருககினற னன? அவன எஙகே? சாகபபோகிற நான எஙகே? இப்படிப்பட்ட மஹானுபாவனுகிய இநத ராமனை நான்

ஸீதையுடன் பார்க்கப் பெறுவேனாயின் பிழைத்திருப்பேன். இல்லையென்றால் என் ப்ராணன்கள் நில்லா. சிவந்த கடைக்கண்கள் அமையப் பெற்று நீண்ட புஜதண்டங்களுடையவனாகி ரத்னங்களிழைத்த அழகிய குண்டலங்கள் அணிந்து விளங்குகின்ற ஸ்ரீராமபிரானைக் காணப் பெறேனாயின், யமலோகத்திற்குப் போவேனன்றி வேறில்லை. இப்படிப்பட்ட நான் இவ்வளவு துக்கஸ்திதி அடைந்திருக்கும்பொழுதும் இக்ஷ்வாகுகுலகுமாரனாகிய ராமனைக் காண நேராதிருக்கின்றேனே! எனக்கு இதைக்காட்டிலும் துக்கம் வேறு யாதிருக்கின்றது? ஐயோ! ராமா! ஐயோ! லக்ஷ்மணா! ஆ! ஸீதே! உன்னைப்பற்றி நிரம்பவும் சோகிக்க வேண்டியதாயிருக்கின்றது. நான் இவ்விடத்தில் அநாதன்போல் மனவருத்தமுற்றுச் செத்துப் போகின்றனன். இது உங்களுக்குத் தெரியவில்லையே' என்று இங்ஙனம் புலம்பினன். அரசன் அந்த மனவருத்தத்தினால் மனத்தை நிலைநிறுத்தி ஸ்வஸ்தனாயிருக்க முடியாமல் வருந்தியும் கடக்கமுடியாத சோகஸமுத்ரத்தில் ஆழ்ந்து கௌஸல்யையைப் பார்த்து 'தேவீ! எனக்குச் சோகம் இவ்வளவு அவ்வளவென்ன முடியாமல் ஸமுத்ரம்போல் பொங்கி வருகின்றது. இந்தச் சோகஸாகரத்திற்கு ராமதுக்கமே ப்ரவாஹத்தின் பரப்பு. ஸீதையை விட்டுப்பிரிவதே இதற்குக் கரை. பெரிய நெடுமூச்செறிகையே இதற்கு அலைகளும் சுழிகளும். கண்ணீரே இதில் நுரைகளுடன் கூடிய கலக்கமுள்ள ஜலம், கைகளை உதறுதலே மீன்களின் துள்ளல்களாகும். [1] ரோதனத்வனியே இந்த ஸமுத்ரத்தின் பெருங்கோஷம். அவிழ்ந்தலைகிற தலைமயிர்களே இதிலுள்ள வேலம்பாசிகள். கைகேயியே இதற்கு [2] படபாக்னி. ஸமுத்ரம் மழைக்கு ஹேதுவாயிருப்பது

1 அழுகுரல்

2. ஸமுத்ரத்தினிடையிலிருக்கும் ஓர் அக்னி.

போல இதுவும என கண்ணீராகிற [1] மஹாவர்ஷத்திற்கு ஹேது வாயிருக்கின்றது கூனியின துர்பபோதன வாக்யஙகளே இதறகுப பெருமுதலேகள். அநதப பாபிஷ்டையின வரமே இதறகு ஜலபரவாஹம பொஙகி வருத லாகும. ராமனேத்துரததுகையே இதறகு வைசாலயம். இபபடிபபடட சோகஸமுததரததில, ஐயோ! கௌஸலயே! மூழகிவிடடனன. தேவி! ராமன இலலாமல நான ஜீவிததிருநது இதைதத தாணட வலலனலலேன! நான இபபொழுது இவவிடததில ராமனேயும லக்ஷமணனே யும பாாககவேண்டுமெனறு ஓயாமலஆசைபபடடபோதி லும பாாகக நேரபபெறறிருககினறேனே! இதைககாட் டிலும அமஙகலம மறறொனறு யாதிருககினறது?' என்ற னன. மஹாகீாததிசாலியாகிய அமமஹீபாலன இஙஙனம புலமபிககொணடே மூாசசை அடைநது மஞசத தினமேல வேகமாக விழுநதனன. இவவணணம ராமனே நினேததுககொணடு மனனவன கேடபோாகளுககு மிக வும மன இரககமுணடாகுமபடி இருமடஙகாகப புலமபி மூாசசிததுக கீழே வீழகையில, அவன பதனியாகிய ராமனதாய கௌஸலயை அவன வாாததைகளேக் கேட்டு,முனபு ராமனுககு அரணயததில என்ன விபதது நேருமோ வெனறு பயநதிருநதும,இபபொழுது பாததா வுககு எதாகுமோ வெனறு மீளவும பயமுறறனள. ஐம் பததொனபதாவது ஸாககம முறறிற்று.

1· பெருமழை

ஸுமந்த்ரன் சொன்ன ராமவ்ருத்தாந்தத்தைக் கேட்டுக் கௌஸல்யை மிகவும் சோகித்தலும், ஸுமந்த்ரன் ஸமாதானப்படுத்தலும்

அனந்தரம் கௌஸல்யை பூதாவேசம் பிடித்தவள் போல் அடிக்கடி பூமியில் விழுந்து புரண்டுகொண்டு ப்ராணன்கள் வெளிக்கிளம்பிச்சென்றாற்போல் மூர்ச்சித்து உடனே தெளியப்பெற்று ஸுமந்த்ரனைப்பார்த்து 'ராமனும் ஸீதையும் லக்ஷ்மணனும் எங்கே இருக்கின்றார்களோ, அவ்விடத்திற்கு என்னைக்கொண்டு போவாயாக. நான் அவர்களைப் பிரிந்து க்ஷணகாலமாயினும் இங்குப் பிழைத்திருக்கப் பொறேன். சீக்ரமாகத் தேரைத்திருப்பி என்னைத் தண்டகாரண்யத்திற்குக் கொண்டுபோவாயாக. நான் அவர்களைப் பின்தொடர்ந்து செல்லப் பெறேனாயின், யமக்ருஹத்திற்குப் போய்ச் சேருவேனன்றி வேறில்லை' என்றனள். அந்த ஸுமந்த்ரன் கைகூப்பிக் கண்ணீர் வந்து தடுக்கையால் வார்த்தைகள் தழுதழுக்கப்பெற்றுமிகுந்த மனவருத்தத்துடன் கௌஸல்யையை ஸமாதானப்படுத்திக்கொண்டு 'நீ சோகத்தையும், ராமனுக்கு என்னாகுமோவென்ற மோஹத்தையும், மனவ்யாகுலத்தையும் மற்றும் துக்கத்தினால் உண்டாகுமவையெல்லாவற்றையும் துறப்பாயாக. ஏனெனில்—ராமன் சிறிதும் மனஸ்தாபமின்றி வனத்தில் ஸுகமாயிருப்பான். லக்ஷ்மணனும் தர்மத்தை அறிந்தவனாகையால் இந்த்ரிய ஸுகங்களில் கால் தாழாமல் வனத்தில் ராமனது பாதாரவிந்தங்களுக்குப் பரிசர்யைசெய்துகொண்டு பரலோகத்தை [1]ஆராதிக்கின்றனன். ஸீதையும் ஜனஸஞ்சாரமில்லாத வனத்திலிருந்தும், க்ருஹத்திற்போலவே

1 ஆராதிக்கை— அதைக் கைபுகும்படி ஸாதிக்கை.

பயமின்றி ராமனிடத்திலேயே மனத்தை நிலைநிறுத்தி மனக்களிப்புற்றிருக்கின்றனள் வனவாஸத்தினாலுண்டாகக்கூடிய துக்கம் எதுவும் எள்ளுழுக்களவாயினும் ஸீதையிடத்தில் புலப்படவில்லை ஆகையால் ஸீதையும் வனவாஸங்களுக்குத் தகுந்தவளென்றே எனக்குத் தோற்றுகின்றது. ஸீதை முன்பு இவ்விடத்தில் நகரத்திலுள்ள உத்யானவனங்களில் க்ரீடித்துக்கொண்டிருப்பதுபோலவே இப்பொழுது ஜனஸஞ்சாரமில்லாத அரண்ய ப்ரதேசங்களிலும் க்ரீடித்துக்கொண்டிருக்கின்றனள். பூர்ணசந்த்ரனை நிகர்த்த அழகிய முகத்துடன் கூடிய பதிவ்ரதையும் ஸுந்தராங்கியுமாகிய அந்த ஸீதை ராமனிடத்தில் மனம் பொருந்தப்பெற்று ஜனஸஞ்சாரமில்லாத வனப்ரதேசத்தில் குழந்தைபோல நாடுகளை மறந்து துக்கத்தைப் பாராட்டாமல் விளையாடிக்கொண்டிருக்கின்றனள். மேலும், ராமனே அவளுக்கு லீலோத்யானம். அவள் வனவாஸஞ்செய்தபோதிலும் ராமனது அருகில் இருப்பதுபற்றி அவளுக்கு மனவருத்தந் தெரியாதிருக்கின்றது ஸீதையினுடைய ஹ்ருதயமும் ப்ராணன்களும் ராமனுக்கு அதீனங்களாயிருப்பவை; ஆகையால் ராமனில்லையாயின் இவ்வயோத்யையும் அவளுக்கு அரண்யம்போன்றதேயாகும் மார்க்கத்தில் போகும்பொழுது ஸீதை அயோத்யைக்குக் கூப்பிடு தூரத்தில் விளையாடிக்கொண்டிருப்பதுபோல ஸந்தோஷம் பெருகப்பெற்று க்ராமங்களையும் பட்டணங்களையும் நதிகளின்ப்ரவாஹங்களையும் நானாவித வ்ருக்ஷங்களையும் பார்த்து ராமனையோ அல்லது லக்ஷ்மணனையோ வினவுவாள்; இங்ஙனம் வினவி அவைகளின் போக்கைத் தெரிந்துகொள்வாள். ஸீதையைப்பற்றி நான் இப்பொழுது எவ்வளவு சொன்னேனோ, அவ்வளவே எனக்கு

நினைவுக்கு வருகின்றது. அவள் 'கைகேயியைக் குறித்துத் திடமொன்று ஒரு வார்த்தை சொல்லினள் அது எனக்கு இப்பொழுது நினைவிற்கு வரவில்லை' என்று மனதுக்குள் தவறிச் சொல்ல ஆரம்பித்த அந்த ஸீதையின் வார்த்தையை மறந்தாற்போல் மறைத்துவிட்டுக் கௌஸல்யாதேவிக்கு முன்பு சொன்னவற்றைப்போலவே மனத்திற்கு இனிமையைக் கொடுத்து மதுரமாயிருக்கும்படி மொழிந்தனன்—'அதிகமாக வழி நடந்தபோதிலும், காற்று வேகத்துடன் வீசினபோதிலும் புழுதி முதலியவற்றைப்பார்த்துக் கலக்கமுற்றிருந்தபோதிலும் வெயிற்பட்டு வருந்தினபோதிலும் சந்திரகிரணம்போல் விளங்குகின்ற அந்த ஸீதையின் சரீரகாந்தி மாறாதிருக்கின்றது. அழகாய்ப் பேசுந்தன்மையளாகிய அந்த வைதேஹியின் முகம் தாமரைப்பூவை நிகர்த்துப் பூர்ண சந்திரன்போல் காந்தி விளங்கப்பெற்றிருக்குமல்லவா? அம் முகம் இப்பொழுதும் வழிநடப்பது முதலியவற்றால் தன்வர்ணம் மாறப்பெறாமல் அப்படியே இருக்கின்றது. அந்த ஸீதையின் பாதங்கள் இயற்கையாகவே செம்பஞ்சிக்குழம்பிட்டப்பெற்றவைபோல் சிவந்த காந்தியுடன் பிரகாசித்துக் கொண்டிருக்கும் அவை இப்பொழுது செம்பஞ்சிக்குழம்பு இடுவது மாறப்பெற்றிருந்தபோதிலும் அரண்யத்தில் திரிந்துகொண்டிருந்தபோதிலும் அப்படியே தாமரைமொக்குப்போல் பிரகாசிக்கின்றன. அரண்யத்தில் ஸஞ்சரிக்கும்பொழுதும் அப்பெண்மணி பூஷணங்களிலுள்ள ஆசையால் சிலம்பு முதலியவற்றைத் தரித்து அத்துடன் நடக்கும் பொழுதுண்டான கலகலத்வனியைக் கேட்டு வேடிக்கையாக நடப்பவள் போல் மிகவும் அழகாக நடந்து போகின்றனள். ஸீதை ராமனது பாஹுமத்யத்தை அடைந்திருப்பவளாகையால், பார்த்தவுடனே பயத்தை விளைக்கும்படியான பேருருவம் பொருந்திய யானையையாவது புலியையாவது ஸிம்ஹத்தையாவது பார்த்தபோதிலும், அந்த

யானை புலி ஸிம்ஹம் முதலியவை இல்லாதபோதிலும் இயற்கையாகவே பயத்தை விளைவிக்கும்படியான அரண்யத்திலிருந்தபோதிலும் பயமென்பது சிறிதும் உண்டாகப் பெறுகிறார்களில்லை. பித்ருவசன பரிபாலனமென்கிற இச்சரித்ரம் உலகத்திலெங்கும் ஶாஶ்வதமாக விளங்கிவரப்போகிறது; ஆகையால் அந்த ஸீதா ராம லக்ஷ்மணர்களைக் குறித்தாவது நம்மைக் குறித்தாவது ராஜனைக் குறித்தாவது மனவருத்தப்படவேண்டிய அவஶ்யமில்லை. அவர்கள் ராஜ்யத்தைத் துறந்துவிட்டு மனத்தில் ஸந்தோஷம் மிகப்பெற்று மஹர்ஷிகள் ஆசரிக்கும் மார்க்கத்தில் திடமாக நிலைநின்று வனத்தில் மனக்களிப்புற்று வனத்திலுண்டாகும் பழம் கிழங்குகளைத் தின்றுகொண்டு தந்தையின் சுபப்ரதிஜ்ஞையைப் பரிபாலித்துக்கொண்டிருக்கின்றார்கள்' என்றனன். கௌஸல்யாதேவி புத்ரசோகத்தினால் மிகவும் பரிதபித்துக்கொண்டிருப்பதனால், ஸுமந்த்ரன் அங்ஙனம் மிகவும் யுக்தமான வசனங்களைச்சொல்லி எவ்வளவு ஸமாதானப்படுத்தினபோதிலும், 'என்னப்பனே! என் குழந்தாய்! ராகவா!' என்று ஓயாமல் புலம்பிக்கொண்டே இருந்தனள். அறுபதாவது ஸர்க்கம் முற்றிற்று.

{ தசரதனைப் பார்த்துக் கௌஸல்யை ராமனைக் காட்டுக்கு அனுப்பினதைச் சொல்லிப் புலம்புதலும், அரசன் அது கேட்டு ஸமாசுவஸித்தலும். }

தர்மங்களை உணர்ந்தவனும் பிறரை மனக்களிப்புறச்செய்பவர்களில் மேன்மைபெற்றவனுமாகிய ராமன் இங்ஙனம் வனத்திற்குப் போகையில் கௌஸல்யை

மிகவும் பரிதபித்துப் புலம்பிக்கொண்டு பாதத்தாரவைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தனள்.—'ரகுவம்சத்திற் பிறந்தவனாகிய தசரதன் மிகுந்த மன இரக்கமுடையவன், மஹா தானசீலன், இனிய உரைகளையே உரைக்குந் தன்மையன்' என்று உன் பெருங்கீர்த்தி மூன்றுலோகங்களிலும் ப்ரஸித்தி பெற்றிருப்பினும், என்ன பயோஜனம்? அந்தப் பெருங்கீர்த்தியெல்லாம் ஒரு நொடிப்பொழுதில் பாழாகும்படி மிகுந்த அபகீர்த்தியை விளைக்கவல்ல இக் காரியத்தைச் செய்தனையே. அரசர்களில் தலைவனே! உனக்குப் பெருங்கீர்த்தி மூன்று லோகங்களிலும் பரம்பி பரகாசிக்கின்றதேயாயினும், இளம்பிராயமே பிடித்து ஸுகமாக வளர்ந்துவந்த உன் புதல்வர்களும் ஸீதையும் இப்பொழுது மனவருத்தத்தில் ஆழ்ந்து வனத்திலுண்டாகும் வருத்தங்களை எப்படி ஸஹிக்கப் போகின்றனர்? மன்னவனே! 'முதுமையில் பலவித வரதோபவாஸங்களைச் செய்து மிகவும் ப்ரயாஸப்பட்டுப்பெற்ற மூத்தகுமாரனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்து களிக்கவேண்டிய ஸமயத்தில் துரத்தியாயினும் ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றினன்' என்று உனக்கு உலகம் எங்கும் பெருங்கீர்த்தி பெருகிவருகின்றது, வாஸ்தவம். ராகவனும் தான மஹாதானசீலனாகையாலும் மிகுந்த மன இரக்கமுடையவனாகையாலும் இனிய உரைகளையே உரைக்குந்தன்மையனாகையாலும் 'எனக்கு முதலில் வாயால் தானஞ்செய்த ராஜ்யத்தை நான் விடமாட்டேன்' என்று சொல்லப்பொறுமையால் ராஜ்யத்தைக் கொடுத்துவிட்டனன். அதனால் அவனுக்கும் பெருங்கீர்த்தியே. ஆயினும் பால்யமே பிடித்து ஸுகமாக வளர்ந்துவந்த அப்புதல்வர்கள் இருவரும் 'வனம் போக நேர்ந்ததே' யென்று மனவருத்தமுற்று வனவாஸதுக்கத்தை எப்படி ஸஹிக்கப்போகின்றனர்? ஏறக்குறைய யௌவனப்பருவத்தின் இடையில் ப்ரகாசிக்

கின்றவளும் மிகுந்த [1]ஸௌகுமார்யமுடையவளும் ஸுகானுபவத்திற்கே உரியவளுமாகிய அந்த மைதிலி காட்டில் வெயிலையும் குளிரையும் எப்படி ஸஹிக்கப்போகின்றனள். நீண்டகண்களையுடைய அந்த ஸீதை இங்கு இதுவரையில் மிகுந்த ருசியுள்ள வ்யஞ்ஜனங்களோடு கூடிய மேலான ஆஹாரத்தைப் புசித்துக்கொண்டிருந்து, இனி அடவியில் விளைகின்ற செந்நெல்லரிசியிற் செய்த ஆஹாரத்தை எப்படி புசிக்கப் போகின்றனள்? எவ்விதத்திலும் நிந்தைக்கிடமாகாத அந்த ஸீதை மங்கலகரமான கீதவாத்யத்வனிகளைக் கேட்டுக்கொண்டிருந்து இனி ஆரண்யத்திலுள்ள க்ரூரங்களாகிய ஸிம்ஹாதி ம்ருகங்களின் பயங்கரமான கர்ஜனையை எவ்வண்ணம் கேட்கப் போகின்றனள்? இந்த்ரத்வஜம் போல மிகுந்த க்ஷேமங்களைக் கொடுக்க வல்லவனும் நீண்ட புஜதண்டங்களையுடையவனும் மஹாபலனுமாகிய ராமன் உழல்தடியை நிகர்த்ததாகிய தனது புஜத்தையே தலையணையாக வைத்துக்கொண்டு அடவியில் எங்கே படுத்துக்கொண்டிருக்கிறானோ? தாமரையிதழ் போன்ற ஒளி விளங்கப்பெற்றதும் அழகிய முன்னெற்றி மயிர்களோடு கூடியதும் தாமரைப்பூவின் வாஸனை அமைந்த மூச்சுக்காற்றுடையதும் தாமரையிதழ்போன்ற கண்கள் பொருந்தியதும் தனக்கு நிகரொன்று நேரப்பெறாமல் மேன்மை யுற்றிருப்பதுமாகிய ராமனது முகத்தை எப்போது பார்க்கப்போகிறேன்? ராமனைக் காண நேரப்பெறாதிருப்பினும் என் மனம் ஆயிரஞ்சுக்கலாய் வெடித்துப் போகாதிருக்கின்றதே! ஆகையால் இது வஜ்ராயுதத்தின் ஸாரத்தை எடுத்துச் செய்யப்பட்டதென்பதற்கு ஸந்தேஹம் இல்லை, நிச்சயம் ஸுகத்திற்கு உரியவர்களும் எனது ஆப்த பந்துக்களுமாகிய அந்த ஸீதா ராமலக்ஷ்மணர்கள் நீ துரத்திவிடுகையால் பட்டணத்தை

---

1 ஸௌகுமார்யம்—மென்மை

விட்டு, தீனாகளாகி அடவியில திரிகினறீாகளே! இது மிகவும மன இரககமிலலாத காரயம அனறு? ராமன பதினைநதாவது ஸமவதஸரததில திருமபி இவ விடததிறகு வருவானாயினும, பரதன தன கையிலுளள ராஜயத்தையும பொககசததையும விடுவானெனறு எனககுத தோறறவிலலை அபபடி கொடுபபானாயினும் அவன அனுபவிதத ராஜயததை ராமன வேணடா மெனறு துறபபானனறி அஙகீகரிககமாட்டான பராஹ மணாகளிற சிலா ஶராததகாமஞ செயயுமபொழுது, மிகவும உயாவுளள பராஹமணோததமாகள இருபபி னும, தாம கொடுககுந தக்ஷிணைகள தமமுடைய வாககே சேரவேணடுமெனறு நினைதது, அபபொழுது அநத உததமபராஹமணாகளை விடடுத தமககு பநதுக களாயிருபபவாகளையே புஜிபபிககினறாகளலலவா? அஙஙனம ஶராததகாமம முடிநத பினபு கீழ உபே க்ஷிதத பராஹமணோததமாகளை இஷடபஙகதியில புஜிப பிகக வேணடுவாாகள. அவாகளில குணஙகள அமை யபெறறவாகளும விதவானகளும தேவதைகளுககொப் பானவாகளுமாகிய பராஹமணோததமாகளாயிருபபவர், அஙஙனம தமமை விடடு குணஹீனாகளுககு ஶராத் தததில போஜனமிடடது பறறி, இஷடபஙகதியில தமககு அமாநதவ கொடுபபாாகளாயினும, அதறகு எளளளவும ஸமமதிககமாட்டாாகள முதலில புஜிதத வாகள பராஹமணாகளேயாயினும சூதரசேஷபோஜ னததிலபோல பராஹமணஶேஷ போஜனததில் தோஷம இலலையேயாயினும பராஹமணோததமர்கள், வருஷபஙகள தமது கொமபுகளை ஒடிபபதறகுப பொறு திருபபதுபோல, குணஹீனாகளாகிய அவாகள புஜித்த பினபு தாம் போஜனஞ செயய ஸமமதிககப்பொறுர்கள்.

அரசனே! இங்ஙனம் பின் பிறந்தவனாகிய பரதா அனுப வித்த ராஜ்யத்தைப பெரியவனும குணங்களில் சிறப புற்றவனுமாகிய ராமன ஏன கிரஹிக்கமாட்டான? பெருமபுலி மற்றொரு மருகம தின்று மிகுந்த பக்ஷ்யத தைத தின்னாது. அவனும புருஷாகளில பெருமபுலி போல மேனமையுற்றிருபபவனாகையால பிறா அனுப வித்த வஸ்துவைப பெரிதாக நினைக்கமாட்டான சரு முதலிய ஹவிஸ்ஸும ஹோமத்திற்கு வேண்டிய நெய யும புரோடாசமென்று சொல்லபபட்ட மாவிற்செய்த பதார்த்தங்களும தாபபங்களும கருங்காலி பலாசு முத லியவற்றால் செய்யபபட்ட யூபஸ்தம்பங்களும ஒரு யாகத தில உபயோகபபட்டிருக்குமாயின, மீளவும அவைகளை மற்றொரு யாகத்தில உபயோகபபடுத்தாாகள. அபபடி யே ராமனும திருமபி இந்த ராஜ்யம தனக்கு வருமாயி னும, ஸாரமசம எடுக்கபபெற்ற மதயமபோலவும மற றொருவா ஸோமபானஞ செய்யபபெற்ற யாகமபோல வும நிஸ்ஸாரமாகிய இந்த ராஜ்யத்தைச சிறிதும விரும பமாட்டான (ராமன மிகவும கோபித்துக் கொண்டிருப பானாயின, இபபடிபபட்ட அவமானத்தை அவன அடை ந்தே யிருக்கமாட்டான அவன கோபித்துக் கொளவா னாயின, தீக்ஷ்ணங்களாகிய தனது பாணங்களால மந்தர பாவதத்தையும இருபிளவாகப பிளந்துவிடுவான தான இபபடிபபட்ட மஹானுபாவனாயினும, அவன உன்னை மாதரம தந்தையெனகிற கௌரவத்தைபபற்றி அடக்க முயலான ராமன கோபமுறுவானாயின, சந்திரஸூாயா களோடும அஸ்வினி முதலிய நக்ஷத்ரங்களோடும கூடி ஸாதாரண நக்ஷத்ரங்களால விசித்ரமாயிருபபதுமாகிய ஆகாயத்தையாயினும ஸ்வாக்கத்தையாயினும அறுத துத தளளிவிடுவான நூறுநூறாகப பாவதங்களை நிரம பிய பூமண்டலம முழுவதையும கலக்கடித்து வெல்லவுப வல்லமையுள்ளவன அபபடிபபட்ட ஸமாத்தனாயினும

அவன் உன்னைமாத்ரம் உல்லங்கனஞ்செய்யாதிருக்கின்றனன்.) மிகுந்த பலமுள்ள பெரும்புலி தன் வாலைப்பிடித்திழுக்கப் பொறுக்கமாட்டாததுபோல, பலவானுகிய ராமனும் இப்படிப்பட்ட அவமானத்தைக் கொஞ்சமாயினும் ஸஹிக்கமாட்டான். உலகங்களெல்லாம் ஒன்று கூடி மஹாயுத்தத்தில் எதிர்த்து வந்தாலும், ராமனுக்குப் பயமென்பது சிறிதும் உண்டாகாது. ஆகையால் அவன் பௌருஷத்தை இழந்தவனன்று மேலும், தர்மஸ்வபாவனுகையால் அதர்மமார்க்கத்தில் நடந்து செல்கின்ற உலகத்தைத் தர்மத்தில் நடக்கச்செய்யவல்லவன். அன்றி அதுபற்றியே தான் தர்மந் தவறலாகாதென்று அரண்யம் போயினன். ஓ மஹாராஜனே! மிகுந்த பராக்ரமமுடையவனும் அதற்கேற்ற நீண்டபுஜதண்டங்களை யுடையவனுமாகிய ராமன், ப்ரலய காலாக்னியானது பூமி ஆகாயம் முதலிய பஞ்சபூதங்களைத் தஹிப்பதுபோல, ஸுவர்ணமயங்களாகிய பாணங்களைக் கொண்டு ஸமுத்ரங்களையாயினும் தஹித்துவிடுவான் அங்ஙனம் வாயாலும் மனத்தாலும் அளவிட வொண்ணுத பராக்ரமம் பொருந்தி ஸிம்ஹம்போல மிகுந்த பலமுடையவனும் வ்ருஷபம்போல நீண்டகன்ற கண்களுடன் ப்ரகாசிக்கின்றவனுமாகிய அப்புருஷசிகாமணியை, மீன் தன் குட்டியைக் கொல்வதுபோல, தந்தையே தானுக்கக் கொன்றுவிட்டனன் தர்மத்தில் நிலைநின்றிருக்க குந்தன்மையனுகிய உன் புதல்வனை அரண்யத்திற்கு அனுப்பிவிட்டனை, இப்படிப்பட்ட உனக்கு ப்ராஹ்மணர்கள் ஆசரிப்பதும் சர்வ சாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டதுமாகிய ஸநாதன தர்மம் உண்டா? உன்னைப்போன்றவனுக்கு அது எப்படி உண்டாகும்? மன்னவனே! ஸ்த்ரீக்கு முக்யமான கதி பர்த்தா ஒருவன்; இரண்டாவது கதி புதல்வன்; மூன்றுவது கதி பந்

துக்கள்; இனி நானகாங்கதியாகிய ஸவாதநதிரியம இவ்வுலகத்திலேயே இலலை. அமமூனறு கதிகளிலும முதல கதியாகிய நீ எனசககளததிககு உட்பட்டவளுகையால் எனக்கு இலலாதவன்போலவே ஆயவிடடனை. இரண்டாங கதியாகிய ராமனே வெனறால அரண்யமபோயச் சோநதனன. பாததரவை யுடையவளாகையால உனனை விடடு ராமனைப பினசெனறு அரண்யம போக நினைககலாகாது. அனறியே எனககுப பநதுககள தூர தேசததிலிருககிறாாக ளாகையால அவாகளும இலலை யெனறே சொல்லவேண்டும. எலலாவிததிலும நீ எனனைப பாழாககிவிடடனை. இககோஸலராஜயததையும் மற்றும, உன நணபாகளுடைய ராஜயஙகளையும உன மநதிரிகளையும பாழாககச செயதனை. உனனையும பாழாக்கிக கொணடனை, என புதலவனையும எனனையும நாசஞ செயதனை. படடணததது ஜனஙகளையும நாசமாககிவிடடனை. எவா எபபடி ஆனுலென? உனது அருமைப புதலவனுகிய பரதனும உனது ஆசை நாயகியாகிய கைகேயியும மிகக மனககளிபபுறறிருககிறாாகள அலலவா?' எனறனள. இஙஙனம பயஙகரமாகச செவியிற படுகினற அநத வாாததைகளைக கேடடு மஹாராஜன மனவருத்தமுறறு மூாசசை யடைநதனன. பிறகு கொஞசநேரங் கழிதது மூாசசை தெளியபபெறறு, அநத துககததிற்குக காரணமாகிய தன பூாவஜனம [1] துஷகருததததை நினைததுககொணடு, மீளவும சோகமுறறனன. அறுபத்தொனறுவது ஸாககம முறறிறறு.

1. துஷ்க்ருதம்—பாபம்

மூர்ச்சை தெளிந்த மன்னவனைக் கௌஸல்யை ஸமாதானப் படுத்துவதும், கௌஸல்யை தான பருஷவாக்யங்கள் சொன்னதற்கு ராஜாவிடம் மன்னிக்கும்படி வேண்டிக்கொள்வதும, சோகத்தினால மன்னவன நித்ரைபோதலும



இங்ஙனம ராமன தாயாகிய கௌஸல்யை மிகுந்த மனவருத்தமுற்றுக் கோபித்துச சொன்ன பருஷவாக்யங்கள முழுவதும செவியிற படடபெற்ற மன்னவன மனவருத்தத்திலாழ்ந்து 'தப்புக காரயஞ செயதுவிட்டோமே' என்று சிந்தித்துக கொண்டிருந்தனன. பகைவரைப பறந்தோடச செயயவல்ல பராக்ரமசாலியாகிய அம்மன்னவன அங்ஙனஞ சிந்தித்துக கொண்டிருந்து இந்த்ரியங்கள கலங்கப்பெற்று மூர்சசையடைந்தனன, பிறகு வெகு நேரங்கழித்து மூர்சசை தெளியப பெற்றனன. அவன மூர்சசை தெளிந்தவுடனே அத்யுஷ்ணமாகப் பெருமூசசெறிந்துகொண்டு தனபக்கத்திலிருக்கிற கௌஸல்யையைப பார்த்து மீளவும 'இப்படிப்பட்ட துக்கத்தை அனுபவிக்கும்படி நான பூரவ ஜனமத்தில என்ன பாபஞ செயதேனே' என்று சிந்திக்கத தொடங்கினன. அங்ஙனம அவன சிந்தித்துக்கொண்டிருக்கையில, லக்ஷ்யம தன கண்ணுக்குப புலப்படாதிருப்பினும அதன சப்தத்தைப்பிடித்துக் குறிவைத்து அடிக்கும வல்லமையுடையவனாகையால், அந்த ஸாமாத்யத்தினால முன்பு தெரியாமல இவன என்ன பாபகாரயஞ செயதானோ, அது அப்பொழுது புத்தியிற பட்டது. அந்த பாபு முன்பு தான செய்த பாபத்தினாலுண்டான சோகமும ராமனைப பற்றிய சோகமும ஆக இரண்டும மேலெழப பெற்று மனங் கலங்கி மிகவும பஶ்சாத்தாப முற்றனன. அரசன இரண்டுசோகங்களாலும் தஹிக்கப்பட்டு,

கடுக்கமுற்றுத் தலை வணங்கப் பெற்றுக் கைகளைக் குவித்துக்கொண்டு கௌஸல்யையை மனந் தெளிவுறச் செய்யும்பொருட்டு அவளைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தனன்—'கௌஸல்யே! நீ என்னிடத்தில் அருள்புரியும்படி. உன்னை வேண்டுகின்றனன். இதோ உனக்கு அஞ்ஜலி செய்கின்றனன். நீ பகைவரிடத்திலும் தோஷத்தைப் பாராமல் மிகுந்த மன இரக்கமுடையவள். உனக்குக் கொடுமையென்பது சிறிதும் தெரியாது. தேவீ! தர்மத்தைப் பராமரிக்குந் தன்மையர்களாகிய உன்னைப்போன்ற மடந்தையர்களுக்குக் குணமுடையவனாயினும் குணமற்றவனாயினும் பர்த்தாவே ப்ரத்யக்ஷதெய்வமன்றோ? அங்ஙனம் பதிதேவதையாகிய (பர்த்தாவையே தெய்வமாக நினைத்திருக்கிற) நீ எப்பொழுதும் தர்மத்திலேயே விருப்பமுடையவள். உலகத்திலுள்ள ஏற்றக்குறைவுகளை அறியுந் திறமுடையவள். இப்படிப்பட்ட உனக்கு எப்படிப்பட்ட மனவருத்தம் உண்டாயிருப்பினும் மிகவும் மனவருத்தமுற்றிருக்கிற என்னைப் பார்த்து இத்தகைய அப்ரியங்களை உரைப்பது யுக்தமன்று' என்றனன். அரசன் தீனனாகி மன இரக்கமுண்டாகும்படி சொன்ன அந்த வார்த்தைகளைக் கேட்டுக் கௌஸல்யை, மேடைகளின் மீதிருந்து மழைஜலம் கீழே விழும்பொருட்டு மரம் முதலியவற்றால் ஏற்படுத்தப்பட்ட ஜலதாரை புதிய மழைஜலத்தைச் சலசலவென்று பெருக்குவதுபோல் கண்ணீர் பெருக்கினள். அந்தக் கௌஸல்யை 'பர்த்தாவை இங்ஙனம் மொழிந்தேனே' என்று தர்மலோபத்திற்குப் பயப்பட்டுக் கதறிக்கொண்டே அரசனது அஞ்ஜலியைத் தாமரைப்புஷ்பம்போன்ற தன் கைகளால் எடுத்துச் சிரத்தில் இட்டுக்கொண்டு பரபரப்பினால் விரைந்த அக்ஷரங்களையுடைய வசனத்தை இங்ஙனம் மொழிந்தனள்.—'தேவா! என்மீது அருள் புரியவேண்டும். தரையில் தலை படும்படி வீழ்ந்து உனக்கு நமஸ்காரஞ் செய்து வேண்டுகின்றனன். பாத்

தாவாகிய நீ என்னை யாசிக்கும்படி செய்து கொண்ட
னை. இதை அபராததைதபபற்றி நான உனககுத தாஸி
போல நனகு புடைககத தகுநதவளா யிருககினறேன.
நான ஸவயமாகவே அடிபபட்டிருககினறேனாகையால்
என்னை மீளவும நீ அடிககவேண்டாம. வீரனே!கொண்
டாடத தகுநதவனும சிறநத புததியுடையவனுமாகிய
பாரததாவானவன தன்னை மிகவும வேண்டிககொண்டு
கலககந தெளிவிக்கும்படி எவள செயதுகொள்வாளோ,
அநத ஸதரீ இரண்டு லோகங்களுக்கும ஆகமாட்டாள.
அவளை இவவுலகததிலுளளவாகளும நிநதிபபாாகள. பர
லோகததிலும அவள தண்டனைககிடமாவாள. தாமங
களை உணராநதவனே! நான தாமஙகளை அறிவேன நீ
ஸதயவாதி யெனபதும தெரியும ஆயினும புதரசோ
கத்தினுல பீடிககபபடடு முனபின பாராமல எதோ உன
னைத தகாத வாாததைகள் சொலலினன இவவளவே
யாகையால என்னை மனனிககவேண்டும சோகததினுல
தைரியம நசிததுபபோகும சோகததினுல கலவியும
பாழாயவிடும சோகம எலலாவறறையும தொலைதது
விடுமாகையால சோகததைபபோனற சதரு மறறொரு
வனும கிடையான. பகைவனது ஹஸததகதினினறு திடீ
ரெனறு விழுநத உதையையாயினும பொறுககலாகும.
அபபடியே திடீரெனறு சோகம மேலெழுமாயின, அது
எவவளவு சிறிதாயினும், அதைப பொறுத்திருககமுடி
யாது. (வீரனே! தாமஜஞாகளும வேத மோதினவர்
களும தாமாததஙகளைப பறறின ஸநதேஹங்களைத்
தீாககவலலவாகளுமாகிய மஹாஷிகளுங்கூட, சோகம
வநது மனததை நனறுகக கலககையில, மதி கெடடு
ஏமாறிப போவாாகள.) ராமன வனவாஸஞ செய்ய
ஆரமபிதது இபபோதைககே ஐநது ராததரிகள ஆயின.
அவவைநது ராததரிகளும துககததினுல மனக்களிப்
பைதத துறந்திருககிற எனககு ஐநது ஸம்வத்ஸரங்கள்

போல் இருக்கின்றன. அவைகளை நினைத்த மாத்ரத்தில் தானே, நதீவேகத்தினால் ஸமுத்ர ஜலம் வளர்ந்து வருவதுபோல்" என் மனத்தில் அந்தத் துயரம் பெருகி வருகின்றது' என்றனள். இங்ஙனம் கௌஸல்யை ஸமாதானம் உண்டாகும்படி நல் வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டிருக்கும்பொழுதே ஸூர்யன் அஸ்தமித்தனன். ராத்ரியும் வந்துவிட்டது. அரசன் அங்ஙனம் மொழிந்த கௌஸல்யையின் சுப வாக்யங்களால் மனக்கலக்கந் தீர்ந்தமையாலும் சோகத்தினால் பீடிக்கப்பட்டு வருந்தி ஓய்ந்திருந்தமையாலும் நித்ரைக்கு வசமாயினன். அறுபத்திரண்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

தசரதன் கௌஸல்யைக்குத் தான் பூர்வத்தில் ஸரயூநதிக்கருகில் ஒரு ரிஷிகுமாரனை யானையென்று நினைத்துக் கொன்ற வ்ருத்தாந்தத்தைக் கூறுதல்.

பிறகு தசரதமஹாராஜன் ஒரு முஹூர்த்த காலங் கழிந்தவுடனே விழித்துக்கொண்டு சோகத்தினால் மதி மயங்கப் பெற்றுச் சிந்தையுற்றனன். தேவேந்த்ரனை நிகர்த்த அந்தத் தசரத மன்னவன் ராம லக்ஷ்மணர்களை வனத்திற்கு அனுப்பினதைப்பற்றி ராஹுவினால் பிடிக்கப்பட்ட ஸூர்யன்போல மிகவும் உபத்ரவம் அடைந்தனன். ராமன் பார்யையோடுகூட வனத்திற்குப் போகையில், அந்தக் கோஸலாதிபதியாகிய தசரதன் தான் முன்பு நடத்தின பாபகார்யத்தை நினைத்துக்கொண்டு கறுத்தழகிய கடைக்கண்களையுடைய கௌஸல்யையைப்பார்த்துச் சொல்ல விருப்பமுற்றனன். ராமனை அரண்யத்திற்கு அனுப்பின பின்பு அந்தத் தசரதமஹாராஜன் ஆறாவது ராத்ரியின் அர்த்தராத்ரியில் முன்பு தான் செய்த பாப கார்யத்தை நினைத்துக்

கொண்டிருந்தனன். அங்ஙனம் புத்ரசோகத்தினால் பரி
தபிக்கின்ற அம்மன்னவன் தான் பூர்வத்தில் செய்த [1]
துஷ்க்ருத்யத்தை நினைத்துக்கொண்டு தன்னைப்போ
லவே புத்ர சோகத்தினால் புலம்பிக்கொண்டிருக்கிற
கௌஸல்யையைப் பார்த்து இவ்வசனத்தை மொழிந்த
னன்—'மங்கல ஸ்வபாவமுடையவளே! க்ஷேமத்தை
விளைவிப்பவளே! ஒருவன் பிறர்க்கு நல்லதாவது கெட்ட
தாவது ஏதாவதொரு கார்யத்தைச் செய்வானாயின்,
அதனால் பிறர்க்கு விளையும் பலனைப்போன்ற பலனையே
தானும் அநுபவிப்பான். எவன் ஒருகார்யத்தைச் செய்ய
ஆரம்பிக்கும்பொழுது அதன் பலத்தினுடைய ஏற்றக்
குறைவுகளையாவது அந்தப்பலத்தாலுண்டாகும் ஸுகத்
தையும் துக்கத்தையுமாவது தெரிந்துகொள்ளானோ,
அவனே மூடனென்று சொல்லப்படுவான். எவனாவதொரு
வன், புஷ்பம் எவ்வளவோ அவ்வளவே பலமும் விளையு
மென்று புஷ்பத்தைப் பார்த்துப் பலத்தில் பேராசை
யுடையவனாகி, மாம்பூ சிறியதும் வர்ணமில்லாதிருப்பது
மாகையால் அந்த வ்ருக்ஷத்தின் பலம் சிறியதாகவே
யிருக்குமென்றும் பெரியதும் அழகிய வர்ணம் பொருந்தி
யதுமாகிய பலாசின் புஷ்பங்களைப் பார்த்து அந்த வ்ரு
க்ஷத்தின் பலன் பெரிதாயிருக்குமென்றும் ஆலோசித்
துக்கொண்டு மாந்தோப்புகளையெல்லாம் வெட்டி
வேரைக் களைந்து பலாச வ்ருக்ஷங்களை வைத்து ஜலம்
பாய்ச்சி வளர்ப்பானாயின், அவன் பலமுண்டாகும் காலத்
தில் பலாசவ்ருக்ஷத்தில் தான் எதிர்பார்த்திருந்த மஹா
பலனைக் காணாமல் மனவருத்தமுழுவான். எவன் வரப்
போகிற பலம் தெரியாமல் மனத்திற்குத் தோன்றியபடி
கார்யங்களைச் செய்து கொண்டிருப்பானோ அவன் மா
மரங்களை வெட்டிப் பலாசமரங்களை நீர் வார்த்து வளர்ப்
பவன்போல் பல காலத்தில் மனவருத்தப்படுவான். ராம

1. துஷ்ட கார்யத்தை.

னுக்குப் பட்டாபிஷேகஞ் செய்யவேண்டியிருக்க அதைச் செய்யாமல் அவனை அரண்யத்திற்கு அனுப்பிக் கைகேயிக்கு ப்ரியஞ் செய்தவனாகிய நான் மாந்தோப்புகளை வெட்டிப் பலாசவ்ருக்ஷங்களை ஜலம் வார்த்து வளர்ப்பவனாயவிட்டேன். ஆனதுபற்றி நான் இம்மனம் புத்தி கெட்டுப் பலன் பெறவேண்டிய காலத்தில் அப்படிப்பட்ட அசுபகார்யத்தைச் செய்ததற்குப் பலனாக ராமனைப் பிரிந்து பிறகு அவனை விட்டுப் பிரிந்த பலனை அனுபவித்துக்கொண்டு துக்கிக்கின்றனன். கௌஸல்யே! நான் குமாரனாயிருக்குந் தசையில் நல்ல வில்லாளியாகி 'இந்தப் பயல் சப்தத்தையே குறியாகக் கொண்டு அடிக்கவல்லவன்' என்று ப்ரஸித்தி பெற்றிருந்தனன் அந்த இளமைப் பருவத்தில் இந்தப் பாபத்தைச் செய்தனன் கர்ம பலம் லோகாந்தரத்திலேயோ, அல்லது —இதர ஜன்மத்திலேயோ விளையுமென்பது உண்டு. எனக்கோவென்றால் உலகத்தில் வாலிபனாயிருப்பவன் அஜ்ஞானத்தினால் விஷத்தைத் தின்பானாயின், அது அவனுக்கு உடனே துக்கத்தை விளைவிப்பதுபோல, எனக்குள் தெரியாமையால் செய்த பாபத்தின் பலமாக இந்த மனவருத்தம் இதோ உடனே ஸம்பவித்தது ஸாமான்யனாயிருப்பானொருவன் புஷ்பத்தைப்போலவே பலமும் இருக்குமென்று நினைத்துப் பலாசின் புஷ்பங்கள் அழகாயிருப்பது கண்டு அதனுடைய பலன்களும் நன்றாயிருக்குமென்று ப்ரமிப்பதுபோல், நானும் மிருகங்களின் சப்தத்தையே குறியாகப் பிடித்துப் பாணங்களால் அவைகளை அடித்து அதனால் எனக்கு உலகமெங்கும் பரந்து விளைந்த ப்ரஸித்தியைக் கண்டு, அதன் பலனும் அப்படியே உலகம் முழுவதிலும் புகழத் தக்கதாயிருக்குமென்று ப்ரமித்து, அதனாலுண்டாகக் கூடிய அனர்த்த

பலனை அறியாமற் போயினன. தேவி! உனககு அபபொழுது விவாஹம ஆகவிலலை. என தநதையும் இருநதனா நான அபபொழுது யுவராஜனுயிருநதனன. பிறகு மதத்தையும காமததையும வளரச் செய்வதாகிய வாஷாகாலம வநதது. ஸூரியன தனது கிரணஙகளால பூமியிலுளள ரஸததை இழுதது உலகததைத தபிககச செயது பரேதஙகள திரியபபெறறு பயஙகரமாகிய தெனதிசைககுப போயச சோநதனன அபபொழுது வெயில குறைநது மறைநதது மேகஙகள நீா கொணடு நிருமிகெனறு கறுததுக குளிாநதவைகளாயக காணபபடடன பிறகு தவளைகளும சாதகபபறவைகளும மயிலகளும ஆகிய இவையெலலாம ஸநதோஷிததன. பக்ஷிகள சிறகுகளின மேல பாகஙகளெலலாம நனைபபெறறு ஸனனஞ செயதாறபோல புலபபட்டு மழையினுலும காறறினுலும அசைகினற நுனிகளையுடைய வருக்ஷஙகளினமீது நனைநத இறகுகளுடன எபபடியோ கஷ்டபபடடுப போயச சோநதன. யானை தாரைதாரையாகத தனமேல விழுநதும விழுநது கொணடிமிருககிற மழை ஜலததினுல (அதாவது விடா மழையினுல) மறைககபபடடு ஜலம சுறறிலும சூழநத மலைபோலவும, அலைகளினறி அசையாமலிருககினற ஸமுதரமபோலவும பரகாசிததுககொணடிருநதது. ஜலபரவாஹஙகள தாம இயறகையாகவே அழுககினறி நிரமலமாயிருபபவைகளாயினும வெளுததும சிவநதும விளஙகுகினற கைரிகதாதுககள (காவிக கலகள) வநது சேருகையால நானாவாணஙகளுடையவைகளும,காட்டுத் திககளின சாமபலகளை வாரிககொண்டு வருபவைகளுமாகிய பல வாணஙகளுளள ஸாபபமபோல் கோணல கோணலாக மலைகளினினறும் பெருகிவநதன. (ஜலப்ரவாஹஙகள, தாம இயற்கையாகவே நிரமலமாயிருப்பவையாயினும மழை பெய்வதனுல கலஙகிச் சிவந்த

ஜலமுடையவைகளாகித் தமது வழியைக் கடந்து மேட்டுப்புறங்களிலும் பாய்ந்து கொண்டிருந்தன.) மிகவும் ஸுகத்தை விளைவிப்பதாகிய அக்காலத்தில் நான் வேட்டையாட வேண்டுமென்று நிச்சயித்து வில்லையும் பாணத்தையும் தரித்து ரதத்தின்மீதேறிக்கொண்டு ஸரயூநதியைக் குறித்துப் போயினன். நான், இந்திரியங்களை வெல்லப்பெறாத மூடனாகையால் அந்நதியில் இழிந்து ராத்திரியில் ஜலங்குடிக்குந்துறையில் காத்திருந்து ஜலங்குடிப்பதற்காகக் காட்டுக்கடாவாயினும் யானையாயினும் மற்றைக் க்ரூர மிருகம் எதாயினும் வருமாயின் அவைகளை அடிக்கலாமென்று விருப்பமுற்றிருந்தனன்.

(ஜனஸஞ்சாரமில்லாமையாலும் இரவாகையாலும் ஏகாந்தமாயிருக்கிற அந்த ஸரயூநதிக்கரையில் நான் வில்லை நாணேற்றிப் பிடித்துக்கொண்டு நின்றிருக்கையில் ஓர் ஆரண்ய மிருகம் அந்நதிக்கரையில் வந்து கண்ணுக்குத் தெரியாதிருந்து சப்தம் செய்ய, செவியிற்பட்ட சப்தத்தைக் குறிசெய்து அந்த மிருகத்தை அடித்தனன். அதன் பிறகு மற்றொரு க்ரூரமிருகத்தையுங் கொன்றனன்.) அனந்தரம் காடாந்தகாரத்தில் கண்ணுக்குப் புலப்படாத இடத்தில் ஆற்றில் குடத்தில் ஜலம் மொள்ளுகிற த்வனி யொன்று யானை காஜிக்கிற சப்தம்போல என் செவிக்குப் புலப்பட்டது. பிறகு நான் யானை காஜிக்கிறதென்று ப்ரமித்து ஸர்ப்பம்போல ப்ரகாசிக்கின்ற பாணத்தை எடுத்து அந்த யானையைக் கொல்லவிரும்பி அந்த சப்தம் வந்த வழியைப் பிடித்து இன்ன இடத்தில் யானை இருக்குமென்று குறி வைத்து பாணத்தை எய்தனன். நான் கூரான பாணத்தைப் போகட்ட இடத்தினின்றுமே, நான் போகட்ட பாணம் மர்மத்தில் நன்கு படப்பெற்று வருந்தி ஜலத்தில் வீழ்

கின்ற ஒரு முனி குமாரன் 'ஐயோ!' என்று கத்தும் வார்த்தை விடியற்காலத்தில் ஸ்பஷ்டமாகச் செவிக்குபலப்பட்டது. அந்த பாணம் போகட்டவுடனே அது விழுந்த இடத்தினின்றும் நான் ரிஷியாயிறறே! ஆகையால எனககுப பகைவன ஒருவனும இலலையே! இப படிபபட்ட என்மேல் பாணம எபபடி விழுந்ததோ! நான அாததராத்ரி காலததில ஒருவனும இல்லாதபொழுது ஆற்றினின்று ஜலம கொணடு போவதறகாக வநதனன. எனனை எவன பாணததினால அடிததனன? நான எவனுககு யாது அபகாரஞ் செயதனன? வாககு மனம சரீரம ஆகிய இமமூனறினுலும பிறர்கு எள்ளளவாயினும ஹிமசை செயயாமல அரணயததில அகபபடு மவறறைத தினறு காலங்கழிக்கின்ற என்னைபபோன்ற ரிஷியை ஆயுதஙகொணடு அடிபபது எபபடி ஸமப விததது? ஜடாபாரததைத தரிதது மரவுரியையும கருஷணாஜினததையும உடுததுத திரிகின்ற எனனைக கொன்று எவன என்ன பரயோஜனததைப பெற விரும்பினனோ? அபபடிபபட்டவனுககு நான என்ன அபகாரஞ் செயதனன? இபபடிபபட்ட காரியம நடந்தினதால கேவலம அனாததமமாதரம விளைநததே யனறி மறற யாது பயனும உணடாகாது. இச்செயல செயதவனை, குரு பதனியிடம சென்ற மஹாபாதகனைபபோல எவனும நனறாக நினைககமாட்டான. என பராணனகள போவதைபபறறி நான அவவளவு துககப படவிலலை. என்னை வதிககையில, என தாய தந்தைகள் திககறறவரானாகளே யென்று நினைத்து வருந்தபபடு கின்றேனனறிவேறிலலை. வெகு காலமாக நான வருந்தர்க ளாகிய இநதத தமபதிகளைப போஷித்துக்கொண்டு வந்தனன. நான மரணம அடைகையில் இனி இவர்கள

எவவிதமாக ஜீவிககப போகினறனர்? எவன மிகவும் மூடனுகிச் சிறிதும தெளிவினறி ஒரு பாணததினுல் என னையும கிழவாகளாகிய என தாய தகதைகளையும ஆக மூவரையும கொனறுவிட்டனன?" எனறு மனுஷ்ய வாக் யம செவியிறபட்டது. மிகவும மன இரககததை விளை விககுமபடியான அவவாாததையைக கேட்டு நான தா மததில ஆஸகதியுடையவனுகையால அதாமஞ செய தோமே யெனறு வருத்தபபட்டுககொணடிருககையில என கைகளினினறு விலலும பாணமும கீழே விழுநது விட்டன. ராததிரி காலததில இஙஙனம தீனமாகப புலமபு கினற அநத முனி குமாரனது தீனவாககியஙகள பலவும செவிபபட்டவுடனே தடுமாறி மிகுநத சோகம மேலெழுப பெறறு மதிமயககி இருநதனன. இபபடி மிகவும மனங கலஙகப பெறறுச சரீரததிலும பலம குறைநதிருககிற நான அவவிடஞ் சென்று ஸரயூநதிக கரையில பாணத தால அடிககபபட்டுக கீழே விழுநதிருககிற முனியைக கணடனன. அவன ஜடைமுடி அவிழநது குடததுஜலம பெருகிச சரீரததில புழுதியும ரததமும படிநது பாணத தின நுனியால அடியுணடு பீடிககபபட்டுக கீழே விழுந திருநதனன அமமுனிகுமாரன சிககிலபட்டு மனஙகலஙகி யிருககிற எனனைத தனது தேஜஸஸினுல தஹிபபவன போல இரணடு கணகளாலும கரூரமாக உறறுபபாாத துப பிறகு இஙஙனம பருஷமாகச சொலலத தொடஙகி னன 'அரசனே! தாய் தநதையாகளுககு ஜலங கொண்டு போவதறகாக வநத எனனை நீ பாணததினுல அடித்தனையே வனததில் வாஸஞ் செயதுகொண்டு காலததைக் கழிக்கினறவனுகிய நான உனககு யாது அப காரஞ் செயதனன? எனது மாமஸ்தானஙகளில ஒரு பாணத்தினுல் அடிக்கையில் நான செத்துபபோவது

மாத்ரமேயன்றி வயது சென்றவர்களும் கண் தெரியாதவர்களுமாகிய தாய் தந்தைகளுங்கூடச் செத்துப்போய் விடுவார்களே! அவ்விருவரும் மிகவும் துர்ப்பலர்களாகி எழுந்திருக்கவும் முடியாதிருக்கின்றனர்; மேலும் குருடர்கள். அவர்கள் தண்ணீர் தாஹத்தினால் தபித்துக்கொண்டு நான் எப்பொழுது வருவேனோவென்று என்னை எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்கள். வெகுநேரம்வரையில் 'பாலகன் ஜலங்கொண்டு வருவான்' என்னும் ஆசையுடன் ஸஹிக்கமுடியாத தாஹத்தை எங்ஙனம் அடக்கிக் கொண்டிருக்கப்போகிறார்கள்? நான் இங்ஙனம் தரையில் விழுந்து பரிதபித்துக்கொண்டிருப்பது என் தந்தைக்குத் தெரியாதல்லவா? மிகத் தவஞ் செய்தும் கல்வியைக் கற்றும் தந்தைக்குங்கூடத் தெரியாமல் தரையில் விழுந்து படுத்திருக்கின்றேனே! ஆகையால் எவ்வளவு தவஞ் செய்தபோதிலும் எவ்வளவு கல்வியைக் கற்றபோதிலும் யாதும் பயன் இல்லை. நடக்கவுங்கூட முடியாத என் தந்தைக்கு நான் இங்ஙனம் விழுந்திருப்பது தெரிந்தபோதிலும் தான் என்ன செய்யப்போகின்றனர்? காற்று முதலியவற்றால் ஒரு வ்ருக்ஷம் முறிக்கப்பட்டுக் கீழே விழும்போது மற்றொரு வ்ருக்ஷம் பக்கத்தில் பார்த்துக்கொண்டிருந்த போதிலும் அதைக் காப்பாற்றமுடியுமா? முடியாது. ராகவனே! என் தந்தையிடம் நீயே சீக்ரமாகச் சென்று என் ஸங்கதியைச் சொல்வாயாக. அவர், காட்டுத் தீ வளர்ந்து அரண்யத்தைக் கொளுத்துவது போல, கோபித்துக்கொண்டு உன்னைக் கொளுத்தாதிருப்பாராக. நீ சொல்லாத பக்ஷத்தில், அவர் வெகுநேரம் எதிர்பார்த்தும் என்னை வரக்காணாமல் கோபித்துத் தனது தேஜஸ்ஸினால் ஒருகால் தஹிக்கவுங்கூடும். இதோ போகின்ற ஒற்றைக்கால் வழியே

நடந்து போவாயாயின், எனது தந்தையின் ஆஶ்ரமத் திறகுப் போயச் சேருவாய. நீ அங்னெனு சென்று அவரைக் கலக்கந் தீரச் செயவாயாக. அப்பொழுது கோபித்துக்கொண்டு உன்னைச் சபியாதிருப்பார். இல லையாயின் தப்பாமல் சபித்து விடுவார் மன்னவனே! என் சரீரத்திலுள்ள பாணத்தைப் பிடுங்கிவிடுவாயாக. ஜலப்ரவாஹம் உயர்ந்து மண்ற குன்றுயிருப்பதுபற்றி மெதுவாயிருக்கிற கரையைக் கரைப்பது போல இக் கூரான பாணம் என் மர்மஸ்தானத்தைப் பீடிக்கின்றது' என்றனன் அது கேட்டவுடன் 'இம்முனி குமாரன் பொத்தின பாணத்துடனே யிருப்பானுயின், பாதைப்படு வான்; பாணத்தைப் பிடுங்கி விடுவேனுயின் ப்ராணன் களை விட்டுச் சாவான். ஆகையால் இந்தப் பாணத் தைப் பிடுங்கலாமோ, கூடாதோ, என்று அந்த பாணத் தைப் பிடுங்கும் விஷயத்தில் எனக்குள் சிந்தை உண் டாய்விட்டது 'இப்படிப்பட்ட அகார்யஞ் செய்தேனே' என்று துக்கித்தவனுகி 'ப்ரஹ்மஹத்தயை உண்டாகுமோ என்னவோ' என்று சோகத்தினுல் பரிதபித்துச் சரீரம் தளர்ந்து மனத்தில் நான் சிந்தித்துக் கொண்டிருப் பதை அம்முனிகுமாரன் தெரிந்துகொண்டனன் அவன் மிகவும் இளைப்புற்றுத் துடித்துப் பரிதபித்து உடம்பைத் திருப்பித் திருப்பித் தரையில் புரண்டு மரணகாலம் ஸமீ பிக்கப்பெற்று என்னைப் பார்த்து 'நான் தைர்யத்தினுல் துக்கத்தை அடக்கி மனத்தை உறுதியாக நிலை நிறுத் திக்கொண்டிருக்கின்றனன் ஆகையால் நீயும் அப்படி யே மனவருத்தப்படாதிருப்பாயாக. என்னை அடித் ததனுல் ப்ரஹ்மஹத்யை ஸம்பவித்ததே யென்னும் சங் கையை மனத்தினின்றும் துரத்தி விடுவாயாக. அர சனே! நான் ப்ராஹ்மணனல்லேன். அதற்காக நீ பரி

தபிக்க வேண்டாம். நான் வைஸ்யனுக்குச் சூத்ரஸ்த்ரீயிடத்தில் பிறந்தவன்' என்றனன். இங்ஙனம் அவன் பாணத்தினால் மர்மஸ்தானத்தில் அடிக்கப்பட்டு வருந்துவதனால் வார்த்தை சொல்ல முடியாமலிருந்து மிகவும் வருந்தப்பட்டு எனக்கு இவ்வார்த்தையைச் சொல்லி ஒருகால் தரையில் கடகடவென்று சுழன்றும் ஒருகால் கைகால்களையசையாமல் சேஷ்டையின்றி யிருந்தும் ஒருகால் சிறிது நகைக்கமுற்றும் ஒருகால் நோயினால் உடம்பைச் சுருட்டிக் கொண்டிருந்தும் வருத்தமுற்றிருக்கையில் அவனது சரீரத்தினின்றும் பாணத்தைப் பிடுங்கிப் போகட்டனன். அந்தத் தபோதனன் மிகவும் ஆயாஸப்பட்டு என்னைப் பார்த்துக்கொண்டே ப்ராணன்களை விட்டனன். நல்ல ஸ்வபாவமுடையவளே! மர்மத்தில் அடிக்கப்பட்டு மிகவும் வருந்திப் புலம்பி அனந்தரம் புலம்பவும் முடியாமல் ஓயாமல் பெருமூச்செறிந்து கொண்டு ஜலத்தினால் சரீரம் முழுவதும் நனையப்பெற்று ஸரயூ நதியின் கரையில் தரையில் படுத்திருக்கிற அம்முனிகுமாரனைப் பார்த்து மிக்க மனவருத்தமுற்றேன்' என்றனன் அறுபத்து மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

தசரதன் மரணமடைதல்

தர்மஸ்வபாவனாகிய அந்தத் தசரதன் நடுநடுவில் ராமனை நினைத்துப் புலம்பிக்கொண்டே மீளவும் கௌஸல்யையைப் பார்த்து அம்முனி குமார வதத்தையே சொல்லத் தொடங்கினன்:—'அங்ஙனம் நான் தெரியாமல் அம்மஹாபாபத்தை நடத்தி அனந்தரம் மனக்கலக்கமுற்று, 'இனி எப்படி செய்தால் நன்மை உண்டாகும்?' என்று நானொருவனே புத்தியில் ஆலோசித்த

னன். பிறகு அம்முனிகுமாரன் சொல்லியபடி செய்வதே நல்லதென்று நிச்சயித்துக் கலக்கமில்லாத நல்ல ஜலம் நிரம்பிய அந்தக் குடத்தை எடுத்துக்கொண்டு அவன் சொன்ன வழியாகவே நடந்து சென்று அவ்வாஸ்ரமத் திற்சேர்ந்தனன். அங்கு துர்ப்பலர்களாகிக் கண்கள் தெரியாதவர்களும் தம்மைக் கைப்பிடித்து அழைத்துக் கொண்டு போவானன் எவனுமில்லாமல் இறகொடிந்த பறவைகள்போன்றவர்களும் வயது முதிர்ந்தவர்களு மாகிய அவனது தாய் தந்தைகளைக் கண்டனன் அவர் கள் நடக்கமுடியாதவர்களாகையால் ஒன்றுஞ் செய்ய முடியாமல் வெறுமனே பிள்ளையைப் பற்றிய அவ்வோர் கதைகளைச் சொல்லிக்கொண்டு உட்கார்ந்து மற்றொரு பிரயத்னமும் செய்ய முடியாமல் திக்கற்றவர்கள்போல இருந்தனர். என் நிமித்தமாக அவர்களுக்குப் புதல்வன் வருவானென்றாவது ஜலங்கொண்டு வருவானென்றாவது ஆசையும் இல்லாமற் போயிற்று முதலில் அந்த ரிஷி குமாரனை அடித்ததற்கே என்மனம் சோகத்தினால் மிக வும் பரிதபித்துக்கொண்டிருந்தது, இப்படிப்பட்ட எனக்கு அவ்வாஸ்ரமஞ் சென்று அந்த வருத்தர்களைப் பார்த்தவுடனே மேலும் சோகம் அதிகமாயிற்று. மற் றும், 'இவர்கள் என்னை என்ன சபிப்பார்களோ?' என்னும் பயத்தினால் என்மனம் மிகவும் திகிலடைந் தது. அம்முனிவர் என் காலடியைக் கேட்டவுடனே [1] 'என் குழந்தாய்! ஏன் இவ்வளவு தாமஸம்? சீக்கிரமாய் ஜலங்கொண்டு வருவாயாக. என்னப்பா! நீ எதற்காக ஜலத்தில் விளையாடிக்கொண்டிருந்தாய்? இதோ உனது

1 இதற்கு—'யந்நிமித்தமிதம் தாத ஸலிலே க்ரீடிதம் த்வயா' என்று மூலம். இதற்கு 'யந்ந உத்தமிதம் தாத' என்னும்பாடத்தில்— 'என்னப்பா! நீ இதுவரையில் ஜலங்கொண்டு வந்து கொடாமை யால் நீ ஜலத்தில் விளையாடிக்கொண்டிருந்தா யென்பது நிச்சயம்' என்று பொருள்.

அன்னை உன்னை நினைத்துக்கொண்டு நீ வராததைப் பற்றிப் பரிதபிக்கின்றனள். ஆஸ்ரமத்திற்குள் வேக மாய நுழைந்து வருவாயாக பிள்ளாய்! உன் தாயாவது நானாவது உனக்கு ஏதேனும் அப்ரியமோவது அபராதமா வது செய்திருப்போமாயின், நீ தபஸ்வியாகையால் அதை மனத்திற் கொள்ளலாகாது கதியற்ற எங்களுக்கு நீயேயன்றோ கதி. கண்கள் இல்லாத எங்களுக்கு நீயே நடை கொடுப்பவன். கண்களில்லாத எங்களுக்குக் கண்களும் நீயே. எங்கள் ப்ராணன்களும் உன்னிடத்தி லேயே நிலை பெற்றிருக்கின்றன. நீ எங்களிடம் பேசா திருப்பதேனோ?' என்றனர். நான் அம்முனியைப்பார்த்து மிகவும் பயந்து வார்த்தைகள் தழுதழுக்கவும் எழுத்துக் கள் மறையவும் பெற்று அஸ்பஷ்டமான வார்த்தையுடன் பேசத் தொடங்கி மனஸ்ஸை எங்கும் சலிக்கவொட்டா மல் நிலைப்படுத்திக் கை கால் முதலியவற்றின் சேஷ் டைகளையும் நிறுத்திவிட்டுத் தழுதழுத்த வார்த்தையை யும் கஷ்டப்பட்டு வழிப்படுத்திக்கொண்டு அவர்க் குப் பயத்தை விளைக்கும்படியான புத்ரமரண [1] விபத் தைச் சொல்லினன். 'நான் க்ஷத்ரியன். எனக்குத் தசரதனென்று பேர் நான் மஹானுபாவராகிய உமது புதல்வனல்லேன். பூர்வத்தில் நான் செய்த காமவசத் தினால் ஸத்புருஷர்கள் நிந்திக்கும்படியான இந்த வ்ய ஸனம் இப்போது நேர்ந்தது. மஹானுபாவரே! நான் நதியில் ஜலங்குடிக்குந் துறையில் வந்த ஏதேனும் க்ரூர ஜந்துவையாவது யானையையாவது அடிக்கவிரும்பி வில் லுங்கையுமாக ஸரயூநதிக்கரைக்கு வந்தனன். அவ்விடத் தில் நான் குடத்தில் ஜலம் மொள்ளும் சப்தத்தைச்

1 விபத்து—ஆபத்து.

ரன்ன. நான, 'இது யானையாயிருக்கும்' என்று நினைத்து இதைக் குறி வைத்து பாணத்தினால் அடித்தனன. பிறகு நான அந்தத் துறைக்குச் சென்று அங்கு என பாணத்தினால அடியுண்டு பராணன போனாற்போல் பூமியில விழுந்திருக்கிற ஒரு தாபஸனைக் கண்டனன. மஹானுபாவரே! நான சபதத்தைக் குறிசெய்து யானையைக்கொல்லமுயன்று ஜலத்தில பராணபரயோகஞ் செய்கையில, அந்த பாணத்தால உமது புதலவன அடியுண்டனன. உடனே அவனருகிற சென்று, பாணவேதனையைப பொறுக்க முடியாமல பரிதபிக்கின்ற அந்தத் தாபஸகுமாரன 'இந்தப பாணத்தைப பிடுங்கி விடுவாய' என்றுரைக்கையில, அப்பொழுது உடனே அவனது மாமஸதானத்தினின்றும அந்த பாணத்தைப பிடுங்கிவிட்டனன பாணத்தை எடுத்தவுடனே அம முனிகுமாரன 'என தாய தந்தைகள கண்ணில்லாதவர்களாயிருக்கின்றார்களே! இனி அவர்களை யாவர போஷிப்பார்களோ!' என்று உங்களைக் குறித்துச் சோதித்துப புலம்பிக்கொண்டே ஸவர்க்கஞ் சேர்ந்தனன. நான அஜ்ஞானத்தினால உமது புதலவனைத திடமென்று கொன்று விட்டேன. இங்ஙனம நடந்து போயிற்று. இதற்கு மேல சாபமோ, அனுக்ரஹமோ, எது செய்ய வேண்டுமோ, அதை எனக்கு முனிவர அருள புரிய வேண்டும்' என்றனன. மஹிமை பொருந்திய அந்த ரிஷி, நான இங்ஙனம அந்தத் துக்கத்தைத தெரிவிக்கையில கரூரமாகிய அந்த வார்த்தையைக் கேட்டு மேலெழுந்த மிகவும தீவரமாகிய வயஸனத்தை அடக்க வல்லவராகவில்லை. மஹாதேஜஸவியாகிய அந்த மஹாரஷி முகத்தில கண்ணீர வழியப பெற்றுப பெருமூச்செறிந்து சோகத்தினால பரிதபித்து, கைகளைக் கூப்பிக்

கொண்டு எதிரில் நின்று கொண்டிருக்கிற என்னைப் பார்த்து 'மன்னவனே! இவ்வசுப காரியத்தை நீயே எனக்குச் சொல்லாமல் மற்றொரு விதமாக எனக்குத் தெரியுமாயின், உன் தலை இந்த க்ஷணத்திலேயே லக்ஷஞ் சுக்கலாகப் பிளந்து போயிருக்கும். அரசனே! ராஜ்ய பரிபாலனஞ் செய்கிற மன்னவன் வானப்ரஸ்தனை எவனையாயினும் தெரிந்து வதிப்பானாயின், அவன் தேவேந்திரனாயினும் அவனை அவ்வதம் தன் பதவியினின்று நழுவச் செய்யும். தவஞ் செலுத்தும் ப்ரஹ்மஜ்ஞானியாகிய அத்தகைய முனிவன் மேல் தெரிந்து ஆயுதம் இட்டிருப்பாயாயின், உன் சிரஸ்ஸு பல சுக்கலாய் விட்டிருக்கும். நீ தெரியாமையால் இந்தக் காரியஞ் செய்தனை ஆனதுபற்றியே பிழைத்திருக்கின்றனை' தெரிந்தே செய்திருப்பாயாயின், உனது இக்ஷ்வாகு வம்சம் முழுவதும் இப்பொழுது இல்லாமற் போய்விடுமே? இனி, நீ ஒருவன் எவ்வளவு?' என்று மொழிந்து மீளவும் என்னைக் குறித்து இங்ஙனம் மொழிந்தனர்.— 'ராஜனே! இதுவே என்புதல்வனை நான் கடைசியாகப் பார்ப்பது. இனிமேல் அவனைப் பார்க்கப்போகிறதில்லை. ஆகையால் இப்பொழுது அவயவங்களில் ரக்தந்தோயப் பெற்று அரையில் உடுத்த க்ருஷ்ணாஜினவஸ்த்ரமும் அவிழ்ந்து கீழே விழுந்து ப்ரஜ்ஞையின்றி யமன் வசத்தில் இருக்கின்ற அந்தப் புத்ரனைப் பார்க்க விரும்புகின்றேம். எங்களை அவ்விடங் கொண்டுபோவாயாக' என்றனர். அனந்தரம் நானொருவன் மிகவும் துக்கிதர்களாயிருக்கின்ற அவ்விருவரையும் அவ்விடங் கொண்டு சென்று, அவர்களுக்குக் கண்கள் தெரியாததாகையால் நானே அம்முனிவர்க்கும் அவரது பார்யைக்கும் அவர்களது புதல்வனைத் தொடுவித்துக் காட்டினன். அம்

முனிதம்பதிகள் இருவரும் தமது புதல்வனைத் தடவிப் பார்த்து அவனது அருகிற் சென்று துக்கத்தினால் அவனது சரீரத்தின் மேல் விழுந்தனர். அவர்களில் தந்தை புதல்வனைப் பார்த்து 'என்னப்பா! என்னைப் பார்த்து இப்பொழுது ஏன் வணங்காதிருக்கின்றனை? மேலும், என்னைப் பார்த்து ஒன்றும் பேசாதிருக்கின்றனை. நீ ஏன் வெறுந்தரையிற் படுத்திருக்கின்றனை? குழந்தாய்! என்மேல் கோபமா என்ன? தாமளவடாவனே! நான் உனக்குப் பிரியனல்லேனாயின், என்னைப் பார்க்க வேண்டாம்; இதோ உனது அன்னை வந்திருக்கின்றனள், பார். எங்களை ஏன் எழுந்திருந்து கட்டியணையாதிருக்கின்றனை? [1] ஸுகுமாரமான பேச்சைப் பேசுவாயாக, செவியாரக் கேட்கின்றனம். இனி எவன் அர்த்தராத்ரத்தில் எழுந்திருந்து வேதசாஸ்த்ரங்களையாவது மற்றைப்புராணேதிகளையாவது வாசித்துக்கொண்டிருக்கையில், மனத்திற்கு மிகவும் இனிதாயிருக்கின்ற அம்மதுரத்வனியைக் கேட்கப்போகின்றேன்? இனி எவன் ஸ்நானஞ்செய்து ஸந்த்யாவந்தனம் முடித்து அக்னியில் ஹோமத்தை நிறைவேற்றி எனது அருகில் உட்கார்ந்திருந்து புத்ரசோகத்தினால் வருந்திப் பரிதபிக்கின்ற எனக்குப் பரிசாரயை செய்வான்? இனி எவன், காமங்களை அனுஷ்டிக்கச் சக்தியின்றி, செங்கோல் முதலியவற்றைச் சேர்த்து வைத்துக்கொள்ள வல்லமையற்றுத் தடியைப் பிடித்து நடப்பித்துக்கொண்டு போவாரொருவனும் நேரப்பெறாமல் வருந்துகின்ற எனக்கு, ஜலத்தில் உண்டாகுந் தாமரைக்கிழங்கு முதலிய கிழங்குகளையும் நிலத்தில் விளையும் சேம்பு முதலிய கிழங்குகளையும் கொண்டுவந்து, பிரியனாயிருக்கும் ஓர் அதிதிக்கு இடுவதுபோல், போஜனம் இடப்போகின்றனன்? என்னப்பா! கண்கள் தெரியாதவளும் கிழத்தனம் மேலெழப்பெற்றவளும் பிள்ளையிடத்தில் மிகுந்த ப்ரீதியுடையவளும்

---

1 ஸுகுமாரமான- இனிதான.

உன்னைப் பிரிந்து மிகவும் தீனையாகிக் காண்போர்களுக்கு மன இரக்கமுண்டாகும் நிலையில் இருக்கின்றவளுமாகிய உனது அன்னையை நீ போன பிறகு நான் எப்படி போஷிக்கப்போகிறேன்? பிள்ளாய்! என்னைப்பற்றிக் கொஞ்சநேரம் நிற்பாயாக. போகவேண்டாம். நாளையதினம் நானும் உனது அன்னையும் கூட வரன் எங்களையும் அழைத்துக்கொண்டு யமனது கருஹத்திற்குப் போகலாம். அரண்யத்தில் உன்னைப் பிரிந்து அநாதர்களாகித் துயரத்தினால் பரிதபித்து மிகவுந்தீனர்களாகிய நாங்கள் இருவரும் ஒரு நிமிஷமாயினும் இருக்கமாட்டோம். இதோ சீக்ரமாக உன்னுடன் கூடவே யமனது லோகத்திற்கு வருகின்றனம். அனந்தரம் நான் யமனைப் பார்த்து 'என்னுடைய குமாரனாகிய இப்பாலகன் தாயதந்தைகளுக்குப் பரிசாயை செய்துகொண்டிருப்பானாக' என்னும் இவ்வார்த்தையைச் சொல்லுகின்றனன். தர்மராஜனும் தன் ஸமீபத்திற்கு எனது புதல்வன் தாமதித்து வருவதைப் பொறுப்பானாக. அந்த யமன் தார்மிகன், மிகுந்த புகழுடையவன், லோகபாலன்; ஆகையால் இப்படிப்பட்ட அநாதனாகிய எனக்கு, நாசமில்லாத ஓர் அபய தக்ஷிணை கொடுக்கத் தகும். புத்ரனே! இந்தப் பாபிஷ்டன் உன்னை அடித்ததனால் நீ செய்த பாபங்களெல்லாந் தொலைந்து போயின. ஆனது பற்றியும் எனது ஸத்யத்தின் மஹிமையாலும், ஆயுதமெடுத்து யுத்தஞ் செய்யும் வீரர்களுக்கு எந்த லோகங்கள் நேருமோ, அந்த லோகங்களுக்கு நீ வேகத்துடன் போய்ச்சேருவாயாக. புதல்வனே! சூரர்கள் யுத்தத்தில் பின்வாங்காமல் எதிர்கொண்டு போர்செய்து அடியுண்டு எந்தக் கதியைப் பெறுவார்களோ, அந்தப்பரமகதியை நீயும் பெறுவாயாக. குழந்தாய்! ஸகரனும் சைப்யனும்

திலீபனும் ஜனமேஜயனும் நஹுஷனும் துந்துமாரனும் எந்தக் கதியைப் பெற்றார்களோ, அந்தக் கதியை நீயும் பெறுவாயாக. என் அருமைப்புதல்வனே! ஸத்புருஷராயிருப்பவர்களெல்லோர்க்கும் வேதாத்யயன சீலர்களாயிருப்பவர்களுக்கும் தபஸ்விகளாயிருப்போர்க்கும் எந்தக் கதி உண்டாகுமோ, பூதானஞ் செய்பவனுக்கும் ஆஹிதாக்னியாயிருப்பவனுக்கும் ஏகபத்னீவ்ரதமுடையவனுக்கும் எந்தக் கதிகள் ஸித்திக்குமோ, ஆயிரம் பசுக்களைத் தானஞ் செய்தவர்களுக்கு எந்தக் கதி விளையுமோ, குருசுச்ரூஷை செய்தவர்களுக்கு எந்தக் கதியோ, மஹாப்ரஸ்தானம் முதலியவற்றிலாவது கங்காயமுனாஸங்கமம் முதலிய புண்யஸ்தானங்களிலாவது அக்னியிலாவது ஸங்கல்பஞ்செய்துகொண்டு தேஹத்யாகஞ் செய்தவர்களுக்கு எந்தக் கதி உண்டாகுமோ, அந்தக் கதிகளை நீ அடைவாயாக. தபோநிஷ்டர்களாகிய நமது இக்குலத்தில் பிறந்தவன் எவனாயினும் துர்க்கதியைப் பெறமாட்டானல்லவா! என் புதல்வனாகிய உன்னை அடித்தவன் மாத்ரம் துர்க்கதியைப் பெறுவான்' என்று இங்ஙனம் அம்முனி அவ்விடத்தில் அடிக்கடி மிகவும் தீனமாகப் புலம்புற்றனன். அனந்தரம் அம்முனி பார்யையுடன் கூடி அக்குமாரனுக்கு ஸம்ஸ்காரத்தைச் செய்து ஜலதர்ப்பணாதிகளைச் செய்ய முயன்றனன். தர்மங்களை அறிந்தவனாகிய அம்முனிகுமாரன் தனது புண்யகர்மங்களால் திவ்யரூபம் பெற்று[1] இந்த்ரனோடு கூடச் சீக்ரமாக ஸ்வர்க்கலோகம் போய்ச் சேர்ந்தனன். அம்முனிகுமாரன் தேவேந்த்ரனோடு கூடவே வருத்தர்களாகிய அந்தத் தாய் தந்தைகளைப் பார்த்து மொழிந்தனன். ஆயினும், வருத்தர்களாகிய அவர்களுக்கு அது செவியில் படாமையால் மீளவும் அவர்களைக் கொஞ்சநேரம் ஸமாதானப்படுத்தி அனந்தரம் அவர்களைப் பார்த்து 'நான் உங்களுக்குச் சுச்ரூஷை

1. இதனால், அம்முனிகுமாரனை அழைத்துக்கொண்டு போக இந்த்ரன் வந்தானென்று தெரிகிறது.

செய்ததனால் மேலான பதவியைப் பெற்றனன். நீங்களும் சீக்ரமாகவே என்னிடம் வந்து சேருவீர்கள்' என்றனன். ஜ்யேஷ்டரியனுகிய அம்முனிகுமாரன் இங்ஙனம் அவர்களுக்கு ஸமாதானஞ் சொல்லி சிறந்த உருவமுடைய திவ்யவிமானத்தின்மேல் ஏறிக்கொண்டு சீக்ரமாகவே ஸ்வர்க்கலோகம் போய்ச் சேர்ந்தனன். மஹாபராபவமுடையராகிய அம்முனிவர் பார்யையோடு கூடப் புத்ரனுக்கு விரைவில் ஜலதர்ப்பணம் நடத்தி அருகில் கையைக் கூப்பிக்கொண்டு நிற்கிற என்னைப் பார்த்து மொழிந்தனர் .— 'அரசனே! என்னை இப்பொழுதே கொன்று விடுவாயாக. செத்துப்போவேனுயின் எனக்குப் பாதை இல்லாதிருக்கும் 'சாவது பாதையன்றே' என்பாயாயின், சொல்லுகிறேன், கேள். போயும் வந்தும் எனக்குப் புதல்வன் ஒருவனே அந்தப் புதல்வனையும் நீ பாணத்தை எய்து முடித்து என்னைப் பிள்ளையில்லாதவனுகச் செய்து விட்டனை. இதைக்காட்டிலும் வேறொரு பாதையும் உள்தோ! இதைப் பார்க்கிலும் எனக்கு மரணமே மேலாயிருக்கின்றது. நீ நிர்மலனுகிய என் புதல்வனைத் தெரியாமல் அடித்து விட்டனை. ஆனது பற்றியே நான் இப்பொழுது உன்னைப் பஸ்மஞ்செய்யாமல் மிகவும் துயரத்தை விளைப்பதாகிய ஒரு கொடுஞ்சாபத்தை இடுகின்றனன். மன்னவனே! எனக்கு இப்பொழுது அந்தயகாலத்தில் புத்ரநாசத்தினுல் மரணத்தில் வந்துமுடியும்படியான துக்கம் உண்டாயிற்று. நீயும் இவ்வண்ணமே புத்ரசோகத்தினுல் மரணம் அடைவாயாக அரசனே! க்ஷத்ரியனுகிய நீ முனிவனைத் தெரியாமல் அடித்தாயாகையால் உனக்கு அதனுல் பரஹ்மஹத்யையைப்போன்ற மஹாபாதகம் உண்டாகாதிருக்கின்றது. தெரிந்து செய்திருப்பாயாயின் அது உனக்கு ஸித்தமே. ஆயினும், நீ எனக்கு யாதொனக்கினித்

தொலைக்கும்படியான இப்படிப்பட்ட கொடுநிலைமையை விளைத்தாயாகையால், தக்ஷிணை கொடுத்தவன் அதற்குத் தகுந்த புண்யத்தைப் பெறுவதுபோல், என்னைப் போன்ற நிலைமையை நீயும் சீக்ரத்தில் இந்த ஜன்மத்திலேயே பெறப்போகின்றாய்' என்றனன். இம்மை என்க்குச் சாபத்தைக் கொடுத்து அந்தத் தம்பதிகள் இருவரும் கேட்போர் மனம் கரையும்படி பலவாறாகப் புலம்பி இருவர் சரீரத்தையும் ஒன்றாகக் கட்டிக்கொண்டு சிதையில் ஏற்றுவித்து ஸ்வர்க்கஞ் சேர்ந்தனர். தேவீ! மரணத்தில் வந்து முடியும்படியான இந்தப் புத்ரசோகத்திற்குக் காரணம் யாதென்று சிந்தித்துக்கொண்டிருக்கையில், முன்பு பால்யத்தில் சப்தத்தைக் குறிவைத்து பாணப்ரயோகஞ் செய்யும் விளையாடலை நடத்திக்கொண்டிருந்த பொழுது நான் முனிகுமாரனை அடித்த பாதகம் தானாகவே எனக்கு நினைவுக்கு வந்தது. தேவீ! பத்யங்களல்லாத பதார்த்தங்களோடு அன்னத்தைப் புசிக்கையில் வியாதி வளர்ந்து வருவது போல், நான் செய்த அந்தப் பாபகர்மத்திற்குப் பலமாக இப்படிப்பட்ட துக்கம் விளைந்தது. மங்கலஸ்வபாவமுடையவளே! நான் இப்பொழுது புத்ரசோகத்தினால் ப்ராணன்களை விடப்போகிறேனாகையால், மஹானுபாவராகிய அம்முனிவர் மொழிந்த அந்தச் சாபவசனம் எனக்குப் பலித்துவிட்டது, கௌஸல்யே! என் கண்களுக்குப் பார்வை தொலைந்துவிட்டது. ஆகையால் உன்னை என் கண்களால் பார்க்க நேராதிருக்கின்றனன். என்னை நன்றாகப் பரிசிப்பாயாக' என்று மொழிந்து மீளவுங் கதறிக்கொண்டு பயந்து மீளவும் பார்யையைப்பார்த்து 'தேவீ! ராமனிடத்தில் நான் செய்த க்ரூரகார்யம் பாபிஷ்டனாகிய எனக்குத் தகுந்தேயிருக்கின்றது. ராமன் என்னு கட்டளைக்கு மறுமொழி கூறாமல் உடனே அரண்யத்திற்குச் சென்றானே; அது தர்மஸ்வபாவனாகிய அந்த ராமனுக்கே தகுமன்றி, மற்றை எவனுக்குந் தகாது. பிள்ளையை, அவன் எவ்வளவு துர்மார்க்கனாயிருப்பி

னும் பண்டிதனுயிருப்பவன் எவன்தான் கைவிடுவான்? தகப்பன் தன்னைத் துரத்தியனுப்புகையில், பிள்ளையாயிருப்பவன் எவன்தான் அவனிடத்தில் அஸூயையைப் பாராட்டாதிருப்பான்? ராமன் இப்பொழுது என்னைப் பரிசிப்பானுயின், அல்லது ஒருகால் என் கண்களுக்குப் புலப்படுவானுயின், பிழைப்பேன். யமலோகத்திற்குப் போனபின்பு மனுஷ்யர்கள் தமது பந்துக்களைப் பார்க்க முடியாதல்லவா? ஆகையால் பிராணன்கள் இருக்கும்பொழுதே ராமனைப் பார்க்க விரும்புகின்றனன். கௌஸல்யே! உன்னைக் கண்ணால் காணநேராதிருக்கின்றனன். எனக்கு நினைவுங்கூட க்ஷீணித்துக்கொண்டிருக்கின்றது. இதோ யமதூதர்கள் என்னை வேகமாகக் கிளம்புவாயென்று தொந்தரவு செய்கின்றனர். மரண காலத்தில், தர்மங்களை அறிந்தவனும் உண்மையான பராக்கிரம முடையவனுமாகிய ராமனைப் பார்க்க நேராதிருக்கின்றேனே! இதைக்காட்டிலும் வேறு துக்கம் என்னிருக்கின்றது? ராமன் செய்ய முயன்ற கார்யத்திற்குத் தடைசெய்ய ஒருவரும் வல்லரல்லர். இப்படிப்பட்ட ராமனுடைய தர்சன மில்லாமையால் எனக்கு நேரிட்ட இந்தத் துயரமானது, கொஞ்சமாகிய ஜலத்தை வெயில் இழுத்துக்கொள்வதுபோல, இப்பொழுது என் பிராணன்களை இழுக்கின்றது. பதினைந்தாவது ஸம்வத்ஸரம் பிறக்கையில், அழகிய மேலான குண்டலங்கள் விளங்கப்பெற்ற ராமனது முகாரவிந்தத்தை மீளவும் எவர் பார்க்கப் பெறுவார்களோ, அவர்கள் [1] தேவதைகளே ஆவார்களன்றி மனுஷ்யர்கள் அல்லர். தாமரை

1 'அஹம புநா தேவகுமாரரூப மலங்க்ருதம் ஸுதமாவ்ராஜந்தம் நந்தாமி பஸ்யந்நபி தர்ஸநேந பவாமி த்ருஷ்ட்வாச புநர்யுவேவ'. (தேவகுமாரனைப்போல் விளங்குகின்ற எனது ராமனைக் கண்டு மீள:

மிதம்போனற கண்களையுடையதும அழகிய புருவங்கள் விளஙகபபெற்றதும அநதம பொருநதிய பறகளோடு கூடியதும் அழகான மூக்குடன பரகாசிபபதும சநதர மணடலம போனறதுமாகிய ராமனது முகததைப புண யபுருஷாகளாயிருபபவாகளனறோ பாாககபபோகினற னா சரதகாலதது சநத்ரனபோலவும அபபோதலா கத செநதாமரைமலர் போலவும பரகாசிததுக கொண்டு கமகமவெனறு மணஙகமழுநதனமையதுமாயிருககினற எனது நாதனுகிய ராமனது அவவழகிய முகமண டலததைப புண்யபுருஷாகள் பாாககபபோகினறனா. வனவாஸத்தைத தீாததுத திருமபி அயோதயைககு வநத ராமனை, மூடததை விட்டுத் தான இருககவேண டிய ஸதானததிறகுச சோநதிருககிற சுகரனைபபோல மிகுந்த ஸநதோஷததுடன புண்யசாலிகள பாாககப போகினறனா. கௌஸலயே! என மனம இருள மூடப பெறறிருககினறது. ஆகையால அதறகு இடமாகிய ஹ்ருதயமும விரிவதுபோல வருநதுகினறது. மேலும், எனது இநதரியஙகளோடு சபத ஸபாச ரஸங்கள் ஸம்பந் தித்தபோதிலும், அவவிநதரியங்கள் நசிததமையால அநதச் சபதாதிகள எனககுத தெரிய வரா திருககின றன. எனது இநத்ரியஙகள நசிபபதற்குக காரணம சொல்லுகிறேன, கேள். எணணெய வறறிபபோகையில, தீபத்துடன இடைவிடாமல் கூடியிருக்கும் கிரணஙக

வும் யௌவனம திருமபி வரப பெறறவனபோல ஆவேன)எனறு தசரதன் சொன்னதுபற்றி இஙகு மீளவும் ராமனது முகததைப் பார்க்க நேரப் பெற்றவர்கள் மனுஷ்யர்களனறெனறால்—மனிதர் களைப்போல் கிழததனம் பெறுவோரலலா, தேவதைகளைப்போல் நித்ய யௌவன முடையராயிருப்பாாகளெனறு பொருள. இதனுல ராமனது முகஸௌநதர்யாதிசயத்தின மஹிமை தோற்றுவிககப் பட்டது.

ளும் நசித்துப்போவதுபோல், என் சரீரம் கட்டுத் தளரு கையில், மனமும் நசித்து அதனுடன் ஸம்பந்தித்த என்னு இந்திரியங்களும் எல்லாம் நாசம் அடைகின்றன. ஆற்றின் ப்ரவாஹம் அதன் கரையைக் கரைப்பதுபோல், அந்தப் புத்ரசோகமானது, நாதனற்றவனும் பாஜனைத் தப்பியிருப்பவனுமாகிய என்னைப் பீடிக்கின்றது. ஐயோ! ராகவா! மஹாபாஹுவே! ஆ! என் துயரத்தைப் போக்குமவனே! ஆ! தந்தைக்கு ப்ரியனாயிருப்பவனே! தந்தையிடத்தில் ப்ரீதியுடையவனே! எனது நாதனே! ஆ! புதல்வனே! இப்பொழுது எங்குப் போயினை? ஐயோ! கௌஸல்யே! நான் மரணம் அடையப் போகிறேன். சேர்க்கவேண்டிய நிலைமையி லிருப்பவளே! ஸுமித்ரே! ஆ! கொடியவளே! எனக்குச் சத்ருவாயிருப்பவளே! அடி! குலத்தைப் பாழாக்கவந்தவளே! கைகேயி!' என்று ராமனது தாயாகிய கௌஸல்யையையும் ஸுமித்ரையையும் எதிரில் பார்த்துத் துக்கித்துக் கொண்டே அந்தத் தசரத மஹாராஜன் மரணம் அடைந்தனன். பெருங் காயத்தில் கண் செலுத்துந் தன்மையனாகிய அம்மன்னவன் தனது ப்ரிய புத்ரனாகிய ராமனை அரண்யத்துக்கு அனுப்பி அதை நினைத்து மிகவும் பரிதபித்துத்[1] தீனாலாபங்களை இங்ஙனம் புலம்பிக்கொண்டிருந்து அர்த்தராத்ரம் கடக்கையில், அப்பொழுது மனவருத்தத்தினால் மிகவும் பீடிக்கப்பட்டு அதைப் பொறுக்க முடியாமல் ப்ராணனைத் துறந்தனன். அறுபத்துநான்காவது ஸர்க்கம்

### (தசரதன் மரணமடையவும் ராஜபத்னிகள் புலம்புதல்)

அனந்தரம் அன்றிரவு கடந்து செல்ல, மற்றைநாள் பின்மாலையிற்றானே வந்திஜனங்களும், வம்சாவளி படிக்

1. தீனாலாபங்களை—மன இரக்கத்திற்கிடமான மொழிகளை.

க்கும் ஸூதர்களும், மங்கல பாடகர்களாகிக் கந்தர்வ வித்யையைப் பெரியோர்களிடம் நன்றாகக் கேட்டுத் தேர்ந்த காயகர்களும் ஆகிய அனைவரும் இலக்கணம் முதலிய சிறந்த ஸம்ஸ்காரத்துடன் கூடி ஸ்துதி சிலர்களாகி முகத்தை நன்கு அலங்காரஞ்செய்து கொண்டு வந்து வேறு வேறாகத் தந்தமது காரியங்களை நிறைவேற்றுபவர்களாகி அம்மன்னவனிருக்கும் மாளிகையைச் சேர்ந்தனர் அப்பொழுது மன்னவனைத் துதி செய்ய ஆரம்பித்துப் பெருங்குரலுடன் ஆசீர்வாதங்களை நடத்துகின்ற அவர்களது ஸ்தோத்ரத்வனியானது அந்த ராஜக்ருஹத்தின் விஸ்தாரம் முழுமையும் பரம்பி வளர்ந்து வந்தது. பிறகு வம்சாவளிபடிக்கும் ஸூதர்கள் ராஜாவைப் புகழ்ந்துகொண்டிருக்கையில், கைத்தாளமிடும் பாடகர்கள், பூர்வராஜாக்களும் தசரதமஹாராஜனும் நடத்திய அற்புத காரியங்களை எடுத்து வர்ணித்துக் கைத்தாளமிட்டுக் கொண்டிருந்தனர் அந்த ராஜக்ருஹத்தின் உத்யானங்களிலுள்ள வ்ருக்ஷங்களின் கிளைகளில் இருக்கும் பக்ஷிகளும் ராஜக்ருஹத்தில் கூடுகளில் இட்டு வளர்க்கப்படும் பக்ஷிகளும் அந்தச் சப்தத்தைக் கேட்டு விழித்துக்கொண்டு பலவாறு த்வனிகளைச் செய்தன ஹரிநாராயணாதி புண்ய சப்தங்களும், ப்ராஹ்மணர்கள் புண்யபுருஷர்களையும் புண்யக்ஷேத்ரங்களையுங் குறித்துச் செய்யுங் கீர்த்தனங்களும், வீணைகளின் நாதங்களும், ராஜசரித்ரங்களைக் கூறும் ப்ரபந்தங்களைக் கொண்டு ஆசீர்வாதரூபமாகச் செய்யுங் கானமும் அந்த ராஜக்ருஹம் முழுமையும் நிரம்பியிருந்தன அனந்தரம் பரிசுத்தாசாரமுடையவர்களும் ராஜஸேவையில் ஸமர்த்தர்களுமாகிய பரிசாரகர்கள், பெரும்பாலும் அந்தப்புரத்துத் தலைவர்களாகிய ஸ்த்ரீகளும் பேடிகளும் தம்மில் வந்து கலக்கப்பெற்று முன்போலவே மன்னவனைப் பணிய வந்தனர். ஸ்நானஞ்செய்விக்க வேண்டிய

விதிகளெல்லாம் அறிந்த வேலைக்காரர்கள், ஸ்நானஞ் செய்யவேண்டிய காலத்தில் விதியின்படி ஹரிசந்தனம் கலந்த ஜலத்தைப் பொற்குடங்களிற்கொண்டு வந்தனர். பெரும்பாலும் இளமைப்பருவம் நிரம்பிய கன்னிகைகள் சூழப்பெற்ற பெண்டுகள் பலர் எண்ணெய் நலங்கு முதலிய மங்கலப்பூச்சுக்களையும் பல தேய்த்த பிறகு வாயைக் கொப்பளிப்பதற்கு வேண்டிய ஜலம் முதலியவற்றையும் கண்ணாடி வஸ்திரம் ஆபரணம் முதலிய அலங்காரஸாமக்ரிகளையும் கொண்டு வந்தனர். விடியற்காலத்தில் மன்னவனுக்கு மங்கலத்தின் பொருட்டு வழக்கமாகக் கொண்டுவருகிற அந்தப் பதார்த்தங்களெல்லாம் ஸமஸ்தலக்ஷணங்களும் அமைந்து, விதிப்படி சீர்திருத்தப் பெற்றுக் குணங்கள் பொருந்திப் பளபளவென்று ஒளியும் உடையனவாயிருந்தன. அந்தப் பரிஜனங்களெல்லாம் அரசனைப் பணிய மிக்க ஆவலுடன் ஸூர்யோதயம் வரையில் காத்துக்கொண்டிருந்து அதன் பிறகும் மன்னவன் வெளிப்பட்டு வாராதிருந்தமைபற்றி 'அரசனுக்கு என்ன வந்ததோ' என்று சங்கித்திருந்தனர்.

அனந்தரம் கோஸலாதிபதியாகிய தசரதனதுபடுக்கைக்கு அருகிலிருந்த அந்தப்புரஸ்திரீகள் வந்து தமது பர்த்தாவாகிய அம்மன்னவனை வணக்கத்துடன் மெதுவான வாக்யங்களைச் சொல்லி எழுப்பினர். அங்ஙனம் எழுப்பினபோதிலும் எழுந்திராமையால் அந்த மடந்தையர் அப்பொழுதைக்குத் தகுந்த வ்யாபாரங்களால் விநயத்தோடும் யுக்தியோடும் அம்மன்னவன் படுத்துக்கொண்டிருக்கும் இடத்தைப் பரிசித்துக்கொண்டுநின்று நிதானித்துப் பார்த்தும் மூச்சு முதலிய நித்திரையின் அடையாளங்கள் ஒன்றையுங் காணப்பெறாதிருந்தனர். அந்த ஸ்த்ரீகள் நித்ராஸ்வபாவத்தின் லக்ஷணங்களை

னைகழிந்தவர்களாகையால் அம்மன்னவனிடத்தில் கைகால்களை ஆட்டுதல் ஹ்ருதயம் முதலியவற்றை அசைத்தல் மூச்சுவிடுதல் முதலிய நித்ரையின் அடையாளங்களில் ஒன்றையும் காணப்பெற்றிலர். அம்மடந்தையர் 'அரசனுக்கு ப்ராணன்கள் இருக்கின்றனவோ இல்லையோ' என்று ஸந்தேஹம் உண்டாகப்பெற்று நடுக்கமுற்று, ப்ரவாஹத்திற்கு எதிரப்பட்ட நீர்வஞ்சி முதலிய புற்களின் நுனிகள்போல் புலப்பட்டனர். அனந்தரம் நடுங்குகின்ற அந்த ஸ்தரீகள் எல்லோரும் மன்னவன் இருக்குமிருப்பைக் கண்டு முன்பு மரணம் அடைந்தானோ என்னவோ என்று மரணரூபமான பாபத்தைப்பற்றித் தங்களுக்கு உண்டான ஸந்தேஹத்தைப் போக்கி மரணம் அடைந்தானென்றே நிச்சயித்துக்கொண்டனர். கௌஸல்யையும் ஸுமித்ரையும் புத்ரசோகம் மிகவும் மேலெழுப்பெற்றுப் பராதீனர்களாகி மெய்ம்மறந்திருந்தமையால் மரணம் அடைந்தவர்கள்போல் கண்விழித்துக்கொள்ளாமலேயிருந்தனர். கௌஸல்யை, காந்தி குறைந்து நிறம் மாறப்பெற்றுச் சோகத்தினால் இளைத்து அந்த இளைப்பினால் வணங்கி, உத்பாதத்தில் பிறக்கும் புகையாகிற இருள் மூடப்பெற்று ஒளிமழுங்கிய நக்ஷத்ரம்போல் ப்ரகாசியாதிருந்தனள். முதல் முதலாக மன்னவன், மரணம் அடைந்தது பற்றிக் காந்தியற்றிருந்தனன். அவனுக்குப் பின்பு கௌஸல்யை, ஓயாமல் கண்ணீர்களைப் பெருக்கி முகத்தில் அழுக்கு மழுங்கப்பெற்றிருப்பதனால் காந்தியற்றிருந்தனள். அவளுக்குப் பிறகு ஸுமித்ரையும் அப்படியே காந்தி குறையப்பெற்றிருந்தனள். அந்தப்புரத்திலுள்ளவர் அம்மன்னவன் நித்ரைக்குட்பட்டுக்கிடக்கிற மங்கலஸ்வபாவைகளாகிய அந்தக் கௌஸல்யாஸுமித்ரைகளைப் பார்த்து, அப்படியே நித்ரித்துக்கொண்டேயிருந்து ப்ராணன்கள் போகப்

பெற்ற மன்னவனையும் பார்த்தனர். அனந்தரம் மடந்தையாமணிகளாகிய அந்த ராஜபத்னிகள் முகம் வாடப்பெற்று அரண்யத்தில் இருக்கவேண்டிய இடத்தினின்றும் கூட்டத்திற்குத் தலைவனாகிய ஆண்யானை தவறிப்போகப்பெற்ற யானைப்பேடுகள் கதறுவதுபோல் பெருங்குரலுடன் கதறினர். அவர்களது அழுகுரலைக் கேட்டுக் கௌஸல்யையும் ஸுமித்ரையும் திடீரென்று விழித்துக்கொண்டு தூக்கத்தைவிட்டெழுந்தனர். கௌஸல்யையும் ஸுமித்ரையும் அரசனை உற்றுப்பார்த்தும் பரிசித்தும் மரணம் அடைந்தானென்று தெரிந்துகொண்டு ‘ஆ! நாதா’ என்று கதறிக்கொண்டு கீழே விழுந்தனர். கோஸலராஜன் புதல்வியாகிய கௌஸல்யை, இங்ஙனம் தரையில் விழுந்து புலம்பிக்கொண்டே, மேனி முழுவதும் புழுதி நிரம்பப்பெற்று, ஆகாயத்தினின்று கீழே விழுந்த நக்ஷத்ரம்போல் ஒளியற்றிருந்தனள். தேஹத்திலுள்ள உஷ்ணம் முதலிய குணங்கள் நசிக்கப்பெற்று மன்னவன் மரணம் அடைந்தபின்பு தரையில் விழுந்திருக்கிற கௌஸல்யை, அடியுண்டு பூமியில் விழுந்த யானைப்பேடுபோல் அவ்வந்தப்புரத்திலுள்ள மடந்தையர் அனைவர்க்கும் புலப்பட்டனள். அனந்தரம் கைகேயி முதலிய ராஜபத்னிகள் யாவரும், ராஜனது மரணம் தெரிந்துகொண்டு அவ்விடம் வந்து சோகத்தினால் பரிதபித்துப் புலம்பிக்கொண்டு பரஜ்ஞை தப்பிக் கீழே விழுந்தனர். கௌஸல்யை முதலியவர்களின் அழுகுரல், அவர்களுக்குப் பின்பு வந்த கைகேயி முதலியவர்களின் அழுகுரலோடு கலந்து வலியுற்று நிலைநின்று அம்மாளிகை முழுவதும் நிரம்பி மிகுந்த ப்ரதித்வனியை விளைத்தது. முன்பு உத்ஸாஹத்துடன் ஜனங்கள் நிரம்பியிருந்த அந்த ராஜக்ருஹம் அரசன் மரணமடைந்தவுடனே, அந்த ஜனங்க

ளெலலோரும ஸநதோஷ மறறு நடுநடுங்கி அலைநது சிதறபபெறறிருநதது அமமாளிகையில எஙகுபபாாக்கிலும அழுகுரலே நிரமபியிருநதது. பநதுககள அனைவரும பரிதாபததால நொநதிருநதனா மரணம அடைநத மனனவனுடைய கருஹததில, ஆநநத மெனனும வாாததை உடனே அடியோடு இல்லாமற போயவிடடது, எவரைப பாாததபோதிலும முகவொளி மழுஙகி மனககளிபபினறிக கணகொணடு காணககூடாதிருநதனா. மிகுநத புகழுடையவனுகிய அமமஹாராஜன மரணம அடைநத வருததாநதந தெரிநதவுடனே அவனது பதனிகள அவனைசசுறறிச சூழநதுகொணடு மிகக மனவருததமுறறுக கேடபோாகளுககுக கருணை உணடாகுமபடி அளவினறிய ரோதனஞ செயதுகொணடு ஒருவாககொருவா கைகளைப பிடிததுககொண்டு அநாதைகளாகிப புலமபினா. அறுபததைநதாவது ஸாககம முற்றிறறு

கௌஸலயையின கதறலும, அரசனை எணணெயக கொபபரையில இடடுவைததலும, ராஜஸத்ரீவிலாபமும, படடணககலககமும.



அரசன மரணம அடைநது, அணைநத அகனி போலவும ஜலம வறறின ஸமுததரமபோலவும, ஒளியறற ஸூாயனபோலவும இருபபது கணடு, கௌஸலயை சோகததினுல பரிதாபமுறறுக கண்களில நீா நிரமபப பெற்று, மனனவனது சிரஸஸைத தனது துடைமேல இட்டுக்கொணடு கைகேயியைப பாாததுப பலவாறு மொழிநதனள:—'கைகேயி! உன கருத்து நிறைவேறிவிட்டது. கரூரஸவபாவமுடையவளே! ஒரே பிடிவாத

மாயிருந்து உன் முயற்சியை நிறைவேற்றிக்கொண்ட னையல்லவா! மன்னவனைக் கைவிட்டனை. மற்றை ராமனும் இல்லை. ஆகையால் இனி அகண்டகமாக ராஜ்யம் முழுவதையும் உன் தலையிற்றானே கட்டிக்கொண்டு அனுபவிப்பாயாக. என்னை விட்டுத் துறந்து ராமன் அரண்யம் போயினன். என் பர்த்தாவும் ஸ்வர்க்கம் அடைந்தனன். வழி தப்பி நடந்து தன்னுடன் துணையாக வந்த கூட்டத்தை விட்டுப் பிரிந்த பெண்பிள்ளை போல், உன்னைப்போன்ற துஷ்டர்களிருக்கப் பெற்ற இந்த பரதேசத்தில் எனக்குத் துணையாகிய பர்த்தாவையும் புதல்வனையும் துறந்து நான் பிழைத்திருக்கப் போறேன். தர்மத்தைக் கைவிட்ட கைகேயி தவிர மற்றை எவள் தான் தனக்கு ப்ரத்யக்ஷ தெய்வமாகிய அந்தப் பர்த்தாவை விட்டுப் பிழைத்திருக்க விரும்புவாள்? எட்டிக் கொட்டையைச் சாப்பிட விருப்பமுற்றவன் அதனாலுண்டாகும் கெடுதியைப் பாராட்டாதது போல், பேராசையுடையவன் தனது லோபத்தினால் வரும் தோஷங்களை ஆராய்ச்சி செய்யமாட்டான், ஒரு கூனியின் நிமித்தமாகக் கைகேயி, ராஜ்யத்தில் பேராசை கொண்டு அதனாலுண்டாகும் தோஷங்களைச் சிறிதும் தெரிந்துகொள்ளாமல் தனது லோபத்தினால் ரகுகுலத்து மன்னவர்களின் ஸந்ததியைப் பாழாக்கிவிட்டனள். முன்பு வரங்கொடுக்கும் பொழுது இன்ன வரமென்று ஏற்பாடு இல்லாமற் போனமையால், அவைகளுக்காக ராமனை அரண்யத்திற்குத் துரத்திப் பரதனுக்குப் பட்டங் கட்டவேண்டுமென்று கைகேயி தூண்டுகையில், அரசன் செய்வது தோற்றாமல் ராமனை அவனது பார்யையோடுகூட அனுப்பினானென்று ஜனகமன்னவர் கேட்பாராயின் என்னைப்போலவே

பரிதபிப்பார். [1] ராமன பிழைததிருநத போதிலும் இவ்விடம இராமையால நாசம் அடைநதாற்போலவே ஆயவிட்டினன. ஆகையால் தாமரையிதழபோனற கண்களையுடைய அநதத தாமிகன, நான இப்பொழுது அநாதையாயிருபபது மாத்ரமேயனறி விதவையுமாயிருபபதை அறியானலலவா! துககததை அனுபவிககத தகாதவளும துக்கத்தில ஆழநது மன இரக்கத்திற்கிடமாயிருபபவளும கனனடததை யுடையவளும ஜனகராஜன புதலவியுமாகிய அந்த ஸீதையும அநநனம ஆரணயததில மனவருததம மிகபபெறறுப பயந திருககப போகினறனள. அவள, ராதரிகளில பயஙகரமான கோஷததையுடைய மருகஙகளும பக்ஷிகளும சபதிககையில, அநத சபதத்தைக கேட்டு நடுககமுற்று ராமனைககட்டியணைபபது நிஜம. வயதுசெனறவரும இநதப பெண தவிர வேறு புதலவாகளிலலாதவருமாகிய அந்த ஜனகமஹாராஜரும தன புதலவியாகிய ஸீதையை நினைத்துககொண்டு துககம மேலெழபபெறறுபபொறுக்கமுடியாமல பராணனகளை விட்டுவிடுவாா. நான பதிவரதையாயிருபபவள ; ஆகையால இபபொழுதே பாததாவோடு கூட பராணனகளை விடபபோகினறனன். இநதப பாததாவின சரீரததை ஆலிஙகனஞசெய்து கொணடு அகனியில குதித்துவிடப போகினறேன'

1 இதறகு—'ஸமாமநாஶாஂவியவா० நாஈய ஜாநாதி யாாமிகஃ। ராமஃ கமலபத்ராக்ஷோ ஜீவநாஶமிதோ ஹதஃ' எனறு மூலம. இதில் 'ஜீவநாஶம' எனற இதறகு 'ஜீவநாஶம, எனறு பாடாநதரமான போது—(தாமரை யிதழபோனற கணகளை யுடையவனும தாாமிகனுமாகிய ராமன தான இவவிடம இலலையாகையால, அரசன மரணம அடைநததையும், அதனல் நான அநாதையும விதவையுமாயிருப்பதையும அறியான) எனறு மஹேஶ்வர தீாததா.

என்று சொல்லிக்கொண்டே கதறிவிட்டனள். அனந்தரம் [1] ராஜ்யவ்யவஹாரங்களெல்லாவற்றிலும் ஏவப்பட்டவர்களாகிய மந்திரிகள் வந்து மிகுந்த மனவருத்தத்தினால் பீடிக்கப்பட்டு மன இரக்கத்திற்கிடமாகி அரசனை ஆலிங்கனஞ் செய்துகொண்டு புலம்புகின்ற கௌஸல்யையை மன்னவனிடத்தினின்று விடுவித்து அப்புறங் கொண்டுபோயினர். பிறகு மந்திரிகள் வஸிஷ்டர் திகளின் ஆஜ்ஞையின்படி மன்னவனது சரீரத்தை எண்ணெயக்கொப்பரையில் இட்டுவைத்துப் பிறகு மேல் ராஜகார்யங்களை நடத்திக்கொண்டிருந்தனர். அம்மந்திரிகள் ஸமஸ்த தர்மங்களையும் அறிந்தவர்களாகையால், புத்திரனில்லாமல் அரசனுக்கு ஸம்ஸ்காரம் செய்ய ஸம்மதப்படவில்லை. ஆகையால் அவனது சரீரத்தைக் கெடவொட்டாமல் பத்திரமாகக் காப்பாற்றி வைத்திருந்தனர். மந்திரிகள் மரணம் அடைந்த அம்மன்னவனை எண்ணெயக் கொப்பரையில் இட்டு வைப்பதைக் கண்டு, அந்த ஸ்திரீகள் எல்லோரும் 'ஐயோ! இவன் மரணம் அடைந்தானே!' என்று மிகவுங் கதறிவிட்டனர். அவர்கள் சோகத்தினால் மிகவும் பரிதபிக்கப்பட்டு மன இரக்கத்திற்கிடமாகிக் கைகளை உயர எழுப்பிக்கொண்டு கண்களில் நீர் ததும்ப 'ஐயோ! மஹாராஜா! எப்பொழுதும் ப்ரியத்தையே பேசுந்தன்மையனும் ஸத்ய ஸந்தனுமாகிய ராமன் முதலே எங்களைக் கைவிட்டனன். அப்படிப்பட்ட எங்களை நீயும் ஏன் துறந்து விடுகின்றனை? ராமன் எங்களை விட்டுப்போகையில், பார்த்தாவாகிய நீயும் மரணம் அடைகையில், விதவைகளாகிய நாங்கள் இனி துஷ்டஸ்வபாவையும் [2] பதிகாதுகையுமாகிய கைகேயியினிடத்தில் எப்படி இருப்போம்! ராமன் எங்களுக்கும்

---

1 இதற்கு—'வ்யாவஹாரிகா:' என்று மூலம். (அந்தப்புரத்துத் தலைவர்களாகிய ஸ்திரீகள்) என்ற இதற்கு மஹேஸ்வர தீர்த்தர் கூறும் பொருள்.

2 பதிகாதுகை—பதியைக் கொல்பவள்.

உனக்கும் எப்பொழுதும் நாதனாயிருப்பவன்; திறமையுடையவன்; அழகிய மனமுடையவன்; ஸமஸ்த ஸம்பத்துக்களும் நிறைந்திருக்கப் பெற்றவன். அப்படிப்பட்ட ராமனும் ராஜ்யலக்ஷ்மியைப் பரித்யாகஞ் செய்து அரண்யத்திற்குப் போனானல்லவா! உன்னையும் அவ்வீரனையும் விட்டுப்பிரிந்து அந்த வ்யஸனத்தினால் மெய்ம்மறந்திருக்கின்றனம். இதனோடுகூட ராஜ்யம் கைபுகுந்த கர்வத்தினால் கைகேயி பலவாறாகத் திரஸ்காரஞ் செய்கையில், அதையுங்கூடப் பொறுத்துக்கொண்டு எப்படி இருக்கப் போகிறோம்? பர்த்தாவாகிய மஹாராஜனையும் ராமனையும் மிகுந்த பலமுள்ள லக்ஷ்மணனையும் ஸுகுமாரியாகிய ஸீதையையும் எவள் பரித்யஜித்தனளோ, அப்படிப்பட்டவள் மற்றை எவரைத்தான் [1] பரித்யஜிக்கமாட்டாள்?' என்று இங்ஙனம் புலம்பினர் மடந்தையர்களில் மேன்மையுற்றவராகிய அந்த தசரதமஹாராஜனது பார்யைகள் கண்ணீர் நிரம்பப்பெற்று மிகுந்த சோகஸாகரத்தில் மூழ்கி மனக்களிப்பின்றித் தரையில் வீழ்ந்து புரண்டனர். அப்பொழுது சந்த்ரனில்லாத ராத்ரிபோலவும், பர்த்தாவை இழந்த மடந்தைபோலவும், மஹானுபாவனாகிய அம்மன்னவன் இல்லாமையால் அவ்வயோத்யாபுரம் விளக்கமற்றிருந்தது. அதில் ஜனங்களெல்லோரும் மனவருத்தமுற்றுக் கண்ணீர் பெருக்கிக்கொண்டிருந்தனர். குலஸ்த்ரீகளெல்லோரும் ஹாஹாகாரஞ் செய்துகொண்டிருந்தனர். நாற்சந்திவீதிகளும் வீட்டுவாசற்புறங்களும் மெழுகுவது விளக்குவது முதலிய ஸம்ஸ்காரங்களொன்றுமின்றிப் பாழடைந்திருந்தன. அதனால் அந்தப் பட்டணம் முன்போல் ப்ரகாசிக்கவில்லை. அரசன் புத்ரசோகத்தைப் பொறுக்க முடியாமல் ஸ்வர்க்கத்திற்குப் போகையில், ராஜபார்யைகள் அனைவரும் தரையில் விழுந்து புரண்டு புலம்பிக்

1. பரித்யஜிக்கை—துற

கொண்டிருக்கும் பொழுதே ஸூரியன் கிரணங்களை இழுத்துக்கொண்டு அஸ்தமயபர்வதம் போய்ச் சேர்ந்தனன். பிறகு ராத்திரியும் திசைகளில் இருட்டைப்பரப்பிக் கொண்டு நெருங்கி வந்தது. அப்பொழுது அங்கிருந்தவர்களிற் சிலர் 'அரசனுக்குப் பல பார்யைகள் பொருந்திய ஸ்துபுத்ரர்கள் இருந்தும் தெய்வாதீனமாக இப்பொழுது அவர்களில் ஒருவனும் கூட அருகில் இல்லாமற்போயினன். நாம் வெறுமனே யிருப்பது யுக்தமன்று. ஆகையால் எதோ ஒருவிதமாக மன்னவனுக்கு ஸம்ஸ்காரஞ் செய்வோம்' என்று யத்னிக்கையில், அங்கிருந்த பந்துக்களுக்குப் புதல்வனில்லாமல் அரசனுக்கு தஹனம் முதலிய ஸம்ஸ்காரங்களைச் செய்வது எவ்வளவும் ஸம்மதமாயிருக்கவில்லை. ஆகையால் பிள்ளை இல்லாமல் ஸம்ஸ்காரஞ் செய்யக்கூடாதென்று நிச்சயித்து நெஞ்சிலும் நினைக்கத்தகாத காட்சியையுடைய மன்னவது சரீரத்தை எண்ணெய்க் கடாரத்தில் இட்டு வைத்தனர். அப்பொழுது மஹானுபாவனாகிய அம்மன்னவனைப் பிரிந்த அவ்வயோத்திமாநகரமானது மார்க்கங்களிலும் நாற்சந்திவீதிகளிலும் ஜனங்கள் நெருங்கிக் கண்ணீர்களைப் பெருக்கி மனக்களிப்பற்று வருத்தமுற்றிருக்கப்பெற்று, ஸூரியன் அஸ்தமிக்கையில் வெளிச்சமில்லாத ஆகாயம்போலவும், நக்ஷத்ரங்கள் விளங்கப்பெறாத ராத்திரிபோலவும் விளக்கமற்றிருந்தது. இங்ஙனம் அரசன் மரணம் அடைகையில் அப்பொழுது அந்தப்பட்டணத்திலுள்ள புருஷர்களும் ஸ்த்ரீகளும் ஆங்காங்குக் குவியல்குவியலாகக் கூடிப் பரதனது தாயாகிய கைகேயியை வைது வயிறெரிந்துகொண்டிருந்தார்களேயன்றிச் சிறிதாயினும் ஸுகம் பெறவில்லை. அறுபத்தாறுவது ஸர்க்கம் முற்றிற்று.

{ மார்க்கண்டேயாதிகள் வஸிஷ்டரிடம் அராஜகத்தைச் சொல்லிப் ப்ரார்த்தித்தல் }

அயோத்யையிலுள்ள ஜனங்கள் எல்லோரும் 'ஐயோ' என்று கதறிக்கொண்டு மனக்களிப்பற்றுக் கண்டத்தில் கண்ணீர் தடுக்கப்பெற்று துக்கித்துக்கொண்டிருக்கையில், அந்த ராத்ரியானது வெகுநேரம் வளர்ந்ததுபோல் புலப்பட்டுக்கொண்டிருந்து எப்படியோ கடந்துசென்றது. அவ்விரவு கடக்கையில் பிறகு ஸூர்யோதயம் ஆயிற்று. அனந்தரம் ராஜனை அபிஷேகஞ்செய்யும் ப்ராஹ்மணர்கள் வந்து ஸபை கூடினர். மார்க்கண்டேயர், மௌத்கல்யர், வாமதேவர், காச்யபர், காத்யாயனர், கௌதமர், மிகுந்த புகழுடைய ஜாபாலி ஆகிய ராஜாவை ஏற்படுத்துகிற இந்த ப்ராஹ்மணோத்தமர்களும் மந்த்ரிகளும் வந்து ராஜபுரோஹிதருள் ச்ரேஷ்டருமாகிய வஸிஷ்டரிருக்குந் திசையில் முகத்தைத் திருப்பிக்கொண்டு அவரைப்பார்த்து வேறுவேறாக மொழிந்தனர்—'இந்த நமது அரசன் புத்ரசோகத்தினால் மரணம் அடைகையில், அதனால் இவ்விரவு நமக்கு நூறு ஸம்வத்ஸரங்கள்போல் கடத்தவேண்டியதாகப் புலப்பட்டு அதிகஷ்டமாகக் கடந்தது. அரசன் ஸ்வர்க்கம் அடைந்தனன். ராமன் அரண்யத்திற்குப் போயினன். தேஜஸ்வியாகிய லக்ஷ்மணனுங் கூட சிறந்த ராமனைப் பின்தொடர்ந்தே சென்றனன். பகைவரைப் பரிதபிக்கச் செய்யுந் திறமுடையவர்களாகிய பரத சத்ருக்னர்களிருவரும் கேகயதேசத்தில் ரமணீயமாகிய ராஜக்ருஹமென்னும் பட்டணத்தில் பாட்டனாரகத்தில் இருக்கின்றனர். இக்ஷ்வாகு வம்சத்திற் பிறந்தவர்களில் எவரையாவது ஒருவரை இந்நகரத்தில் இப்பொழுதே ராஜாவாக ஏற்படுத்தவேண்டும். அரசனில்லாத பக்ஷத்தில் ராஜ்யம் நாசம் அடையாமலிருக்கமாட்டாதல்லவா? [1]அராஜகமாகிய தேசத்தில் மேகம் பளபளவென்று மின்னலால் விளங்கப்பெற்றுப்

1. அராஜகமாகிய—அரசனில்லாத

பெருங் காஜனயுடன திவயமான ஜலத்தைப பூமியின மீது வாஷிககாது. அராஜகமான தேசத்தில மழை பெய்யாமையாலும ஒருகால மழைபெய்து விளையுமாயினும திருடுபோகுமெனனும பயத்தினாலும காலஙகளில விதை விதைககமாட்டாாகள. அராஜகதேசததில தபபுச் செயவோரைச சிக்ஷிபபவன இலலையாகையால தந்தைககுப பிளளையாவது பாததாவுககுப பாாயையாவது உடபடடு நடககமாடடாாகள. ராஜன இலலாத ராஜ்யததில திருடா பறிபபாாகளாகையால தனமுங கைபபடாது இனனவள இனனவனுககு மனையாளெனனும நிலைமையும உண்டாகாது. இதுவேயனறி மறறொரு மஹாபயமும உணடு:—அரசன இலலையாயின, காயவிகரயம முதலிய ஸத்யம எஙகிருநது ஸமபவிககும? இதைககாட்டிலும பயம வேறு யாது? ராஜா இலலாத ராஜயத்தில ஜனஙகள ஸந்தோஷிததிருகக மாட்டாாகளாகையால ஸந்தோஷததுடன ஸபை கூட்டாாகள. எவராவது வெடடிப போடுவாாகளெனனும பயததினால அழகிய உதயானவனஙகளையும ஏறபடுததமாட்டாாகள. துஷ்டாகள மறைநதிருகக மறைவிடமாகுமெனறு தேவாலயாதி புணயஸ்தலங்களையுங் கட்டாாகள். ராஜா இலலாத தேசததில இடைவிடாமல யாகஞசெயபவாகளும வேதாதயயனசீலாகளும தீக்ஷணமான வரதஙகளை ஆசரிபபவாகளும ஜிதேநதரியாகளுமாகிய பராஹமணாகள மஹாயஜஞஙகளை விசனபயததைபபற்றி அனுஷ்டிகக மாட்டாாகள. அராஜகமான தேசததில யாகஙகளைச் செயயும பராஹ்மணாகள தனஸமபனனாகளாயினும யாகஞசெயயும்பொழுது தாம தனிகாகளென்று தெரியுமாயின, துஷடாகள் தமமைத தண்டித்துக் கொள்ளையடிபபாாகளெனனும பயத்தினால் ருத்விக்குகளைக்

கொடுக்கமாட்டார்கள். அராஜகமான தேசத்தில் உத்ஸாஹப்படுத்துகிறவர்களும் வெகுமதி கொடுப்பவர்களும் இல்லாமையால் நடர்களும் நர்த்தகர்களும் நிறைந்த உத்ஸவங்களும் தேசத்தைச் செழிக்கச்செய்யும் ஸபைகளும் நடக்கிடேறு. அராஜகதேசத்தில் நடர்களும் நர்த்தகர்களும் ஏராளமாயிருக்கப்பெற்ற உத்ஸவங்கள் நடக்கமாட்டா, தீர்த்தயாத்திரைகளும் நடக்கமாட்டா. இவையிரண்டும் தேசத்தை வளரச்செய்யுந்திறமுடையவை. அராஜகதேசத்தில் ந்யாயம் வேண்டுவார் கிடைப்பது அரிதாகையால் வ்யவஹாரம் பேசுகிறவர்களுக்கு ப்ரயோஜனம் நேராது. பின்னும் இதிஹாஸ புராணங்களைச் சொல்பவர்களும் கதைகளைக் கேட்க ஆசையுடையவர்களுக்குக் கதைகளைச் சொல்லுவித்துப் பாரிதோஷிகங் கொடுப்பிக்கும் ப்ரபுக்களில்லாமையால் கதாப்ரஸங்கங்களைப் பற்றின ஸந்தோஷம் பெறமாட்டார். அராஜகமான தேசத்தில் திருடர்களுக்குப் பயந்து கன்னிகைகள் ஸ்வர்ணாபரணங்களை அணிந்து குவியல்குவியலாகத் தோழிகளுடன் கூடி ஸாயங்காலத்தில் விளையாடுவதற்காக உத்யானங்களுக்குப் போகார். ராஜன் இல்லாத தேசத்தில் துஷ்டர்கள் பரிபவிப்பார்களென்னும் பயத்தினால், காதலுற்ற புருஷர்கள் தமது காதலிகளோடு கூடி வேகமாகப்போகும் வாஹனங்களின்மேல் ஏறிக்கொண்டு விஹாரத்தின்பொருட்டு க்ரீடாவனங்களுக்குப் போக வெளிப்படார். அராஜகமான தேசத்தில் க்ருஷியினாலும் கோரக்ஷணத்தினாலும் ஜீவிக்குந் தன்மையுடைய தனிகர்களாகிய வைஸ்யர்கள் திருடரிடம் பயத்தினால் காற்று வீசும்பொருட்டுக் கதவுகளைத் திறந்துகொண்டு ஸுரக்ஷிதமாக ராத்ரிகளில் படுக்க நேரப்பெறார். அராஜகமான தேசத்தில் கணகணவென்று சப்திக்கின்ற மணிகள் கட்டப்பெற்று அழகிய தந்தங்களோடு விளங்குகிற அறுபதுவயதுள்ள யானைகளும் ராஜமார்க்கங்களில் அழகாய உலாவிக்கொண்டிருக்க நேராது. ராஜன் இல்லாத தேசத்தில் மந்த்ரமில்லாத

பாணங்களையும் மந்த்ரங்களோடுகூடிய பாணங்களையும் ப்ரயோகஞ்செய்ய அப்யஸிக்கும் பொழுது இடைவிடாமல் அந்தப் பாணங்களைப் ப்ரயோகஞ்செய்பவர்களின் நாணிழுக்கும் ஓசையானது ஒருபொழுதும் செவிப்படாது. அராஜகமான தேசத்தில் சரக்குகளைப் பலவாக ஏற்றிக்கொண்டு விக்ரயிப்பதற்காகத் தூரதேசாந்தரம் போகும் வர்த்தகர்கள் க்ஷேமமாக வழிநடந்து செல்லப்பெறார்கள். அராஜகமான தேசத்தில், இந்த்ரியங்களை வென்று தனியனாகத் திரிந்துகொண்டு, எவ்விடத்தில் பொழுது போகுமோ அதையே வாஸஸ்தானமாகக் கொள்ளும் யதி அன்னமிடுவாரில்லாமையால் மனத்தில் பரமாத்ம த்யானஞ்செய்துகொண்டு ஸஞ்சரிக்கநேராது. அராஜகமான தேசத்தில் [1] யோகக்ஷேமங்கள் ஸம்பவிக்கா. அராஜக தேசத்தில் ஸேனையும் யுத்தத்தில் பகைவரைப் பொறுத்துப் பொருது வெல்லுந் திறமை நேரப்பெறாது. அராஜகதேசத்தில், சோரபயத்தினால் ஜனங்கள் ஆபரணங்களை அணிந்து சிறந்த குதிரைகளின்மேலும் தேர்களின்மேலும் ஏறிக்கொண்டு விஹாரத்தின்பொருட்டு நினைத்தபடி சீக்ரமாக வெளிப்புறப்படார். அராஜகதேசத்தில் துஷ்டர்களுக்குப் பயந்து சாஸ்த்ரங்களை யறிந்த பண்டிதர்கள் ரிஷ்யாச்ரமங்களிருக்கும் வனங்களிலும் உபவனங்களிலும் சாஸ்த்ரங்களை எடுத்து உபந்யாஸஞ் செய்துகொண்டிருக்க நேராது. அராஜக தேசத்தில் விக்னம் நேருமென்கிற பயத்தினால் ஜனங்கள் நியமத்துடனிருந்து தேவதார்ச்சனத்தின்பொருட்டுப் பூமாலைகளையும்[2] மோதகங்களையும் தக்ஷிணைகளையும் ஸித்தப்படுத்த மாட்டார்கள். அராஜகமான தேசத்தில், ராஜ புத்ரர்கள், சந்தனம் அகில் முதலிய பரிமளங்

---

1. யோகமாவது தனக்கில்லாத வஸ்துவைத் தான் பெறுதல்; க்ஷேமமாவது தனக்குள்ள வஸ்துவைப் பத்ரமாகப் பாதுகாத்துக் கொள்ளுதல்.

2. ஒருவகையான பக்ஷணம். கொழுக்கட்டையென்பார் சிலர், லட்டு என்பார் சிலர்.

களைப் பூசிக்கொண்டு, வஸந்த காலத்து வருக்ஷங்கள் போல ப்ரகாசிக்கமாட்டார்கள். ஜலமில்லாத நதிகள் போலும் புற்களில்லாத வனம்போலும், பசு காப்பவனில்லாத பசு மந்தைபோலும் ராஜன் இல்லாத ராஜ்யம் ப்ரகாசிக்காது. ரதத்திற்குக் கொடி அடையாளம்; அக்னிக்குப் புகை அடையாளம்; அப்படியே நம்மெல்லோர்க்கும் அரசன் த்வஜம்போலும் புகைபோலும் ப்ரகாசகனாயிருந்தனன். அப்படிப்பட்ட மன்னவன் நம்மை இன்னம் விட்டு தெய்வத்தன்மையை அடைந்து ஸ்வர்க்கம் போயினன். அரசனில்லாத ராஜ்யத்தில் ஒருவனுக்கும் ஒன்றும் ஸொந்தமாயிருக்க நேராது. மத்ஸ்யங்கள் ஒன்றை ஒன்று பக்ஷிப்பதுபோல, மனிதர்களும் ஒருவரை ஒருவர் பக்ஷித்துவிடுவார்கள். [1] வர்ணாஸ்ரம சாஸ்த்ரமர்யாதைகளை உல்லங்கனஞ்செய்து தெய்வமே இல்லையென்று வாதித்துச் சங்கையின்றித் திரியும் நாஸ்திகர்கள், அரசன் உளனாயின், அவனுடைய தண்டனையால் பீடிக்கப்பட்டுப் பயந்து ஸாதுக்களாவார்கள். எப்படியானால் கண்ஸாவகாலத்திலும் சரீரத்திற்கு ஹிதத்தைச் செய்து அஹிதத்தைப் போக்குகின்றதோ, அப்படியே அரசனும் ராஜ்யத்திற்கு நன்மைகளை நடத்தித் தீமைகளைப் போக்கி ஸத்யத்தையும் தர்மத்தையும் விளையச்செய்கின்றனன். ஸத்யம் தர்மம் இவையிரண்டும் அரசனே அவற்றிற்கு அவனே காரணம் அவனில்லையாயின் அவை நடையாடா. அரசனே ஸத்குலத்தில் பிறந்தவர்களின் குலாசாரங்களை நடத்துகின்றனன். அரசனே ஜனங்களுக்குத் தாயுந்தந்தையுமாயிருக்கின்

1 இதற்கு—'யேஹி ஸம்பிந்நமர்யாதா நாஸ்திகாச் சிந்நஸம்ஸயா:। தேபி பாவாய கல்பந்தே ராஜதண்டநிபீடிதா:' என்று மூலம் இதற்கு (சாஸ்த்ரமர்யாதைகளை அதிக்ரமித்துப் பூர்வம் ராஜதண்டனையில் அகப்பட்டுவருந்திய நாஸ்திகர்கள் இப்பொழுது ராஜதண்டனை உண்டாகுமென்கிற சங்கை சிறிதுமின்றித் தலை காட்டிக்கொண்டு ஸமஸ்த ஆஸ்திகர்களுக்கும் மனவருத்தம்விளைக்கவல்லராவார்கள்) என்று கோவிந்தராஜர் கூறும் பொருள்.

றனன். அரசன ஜனங்களுககு ஹிதஞ்செயபவன். யமன தண்டனை மாத்ரமே செயவான. குபேரன தனத்தை மாத்ரம் கொடுபபான. இநத்ரன பாலனமாதரமே செய் வான. வருணன நனனடததைகளை மாத்ரமே ஏற்படுத் துவான. அரசனேவெனருல் இநத எலலா விதத்தை யும தாஞெருவனே செயது ரக்ஷிககையால அநத யம குபேராதிகள நாலவரினும அதிசயித்திருபபான. 'இது நலலது; இது கெட்டது' என்று வேறு வேருக நிரணயஞ்செயது பத்ததிகளை ஏற்படுததும மனன வன உலகத்தில இலலாமற போவாஞயின, ஐயோ! இநத ஜகதது முழுவதும இருள மூடபபெறறதுபோல் ஆய்விடும. மேலும, 'இது தருமம், இது தகாது' என்று ஒன்றுமே ஏறபடாது மஹாராஜன பிழைத்திருககும் பொழுதும நாமகளெலலோரும, ஸமுத்ரம தனகரை யைத தாண்டாதிருபபதுபோல, உமது வாரத்தையை எள்ளளவும அதிகரமித்தறியோம. இனி மனனவன காலஞ்சென்றபினபு அபபடியே இருபபோமென்பதுபற் றிச் சொலலவேண்டுமோ? பராஹமணோததமரே! ராஜாவை ஏற்படுத்துவது நமககுள்ள கடவடிககையென பதை ஆலோசிததும, ராஜன இலலாமையால நமககு உண்டாகும நாசத்தை ஆராயநது பாரத்தும, ராஜன இலலாதபக்ஷத்தில ராஜ்யம முழுவதும் அரண்யமபோல் ஆய்விடுமெனபதை ஸஹித்தும இக்ஷ்வாகு வம்சத்திற பிறநதவனும தான தரம ஸ்வபாவனுமாகிய குமார ஞெருவனை ராஜனகப் பட்டாபிஷேகஞ் செயவீராக' என்றனர். அறுபததேழாவது ஸர்ககம முற்றிற்று.

வஸிஷ்டர், பரதனை அழைத்து வருவதற்காகக் கேகய தேசத்திற்குத் தூதர்களை அனுப்புதல்.

அவர்களது வார்த்தையைக் கேட்ட வஸிஷ்டரும், தனக்கு நண்பர்களாகிய ஸுமந்த்ரர் முதலிய மந்த்ரிகளையும் மார்க்கண்டேயர் முதலிய மற்றைப் பிராஹ்மணர்களையும் ஆகிய அனைவரையும் நோக்கி இங்ஙனம் மறுமொழி கூறினார்.—'பரதன் தனது தம்பியாகிய சத்ருக்னனோடு கூட ராஜக்ருஹமென்னும் பட்டணத்தில் தனது மாமாவின் அகத்தில் ஸுகமாயிருக்கின்றனன். ஆகையால் இப்பொழுது வீரர்களாகிய அவ்விரண்டு தம்பிகளிருவரையும் அழைத்துக்கொண்டு வருவதற்காகச் சீக்ரமாகப் போகவல்ல தூதர்கள் வேகமாகச்செல்லுங் குதிரைகளின்மேல் ஏறிக்கொண்டு விரைவில் போவார்களாக. ராஜன் பரதனுக்கு ராஜ்யங் கொடுத்திருக்கிறானே! இனி நாம் விசாரிக்கவேண்டியது யாதிருக்கின்றது?' என்றனர். அனந்தரம் மந்த்ரிகள் முதலிய அவர்களெல்லோரும் 'நீர் சொல்லியபடியே தூதர்கள் போவார்களாக' என்று வஸிஷ்டரிடஞ் சொல்லினர். வஸிஷ்டரும் அவர்கள் சொன்னதுகேட்டு இங்ஙனம் மொழிந்தனர்—ஸித்தார்த்தா! விஜயனே! ஜயந்தா! அசோகா! நந்தனா![1] இங்கு வாருங்கள் நீங்களெல்லோரும் என்ன செய்யவேண்டுமோ, அதைச் சொல்லுகிறேன், கேளுங்கள் வேகமுள்ள குதிரைகளின்மீது ஏறிக்கொண்டு நீங்கள் வேகமாக ராஜக்ருஹமென்னும் பட்டணத்திற்குச் சென்று துக்கத்தைத் துறந்து எனது ஆஜ்ஞையின்படி பரதனைப் பார்த்து இங்ஙனம்

1 இங்குச் சொல்லுகிற ஸித்தார்த்தன் முதலியவர்கள் மந்த்ரிகளல்லர். மந்த்ரிகளின் பேரைப் போன்ற பேருடைய வேறு சிலர். அதுபற்றியே இவர்களோடு மந்த்ரியாகாத நந்தனென்பவனும் சேர்த்துச் சொல்லப்பட்டனன்.

சொல்லவேண்டும்:—'புரோஹிதரும் மந்த்ரிகளும் ஆகிய அனைவரும் உனக்குத் தமது க்ஷேமத்தைத் தெரிவித்து உன்னை க்ஷேமம் விசாரிக்கின்றனர். நீ இல்லாமையால் ஒரு காரியம் காலம் விஞ்சிப்போகிறது. நீ அதைச் செய்யவேண்டியதாயிருக்கையால் தாமதஞ் செய்யாமல் உடனே புறப்பட்டுவரவேண்டும்' என்று சொல்வீர்களாக. நீங்கள் சென்று 'ராமன் அரண்யத்திற்குப் போனான்' என்றாவது 'உங்கள் தந்தை காலஞ் சென்றார்' என்றாவது ரகுகுலத்திற்கு நேர்ந்த இந்தத் தேஜோநாசத்தை எள்ளளவுஞ் சொல்லவேண்டாம். கேகயராஜனுக்கும் பரதனுக்கும் காணிக்கையாகப் பட்டுவஸ்த்ரங்களையும் விலையுயர்ந்த ஆபரணங்களையும் சீக்ரமாக எடுத்துக்கொண்டு போவீர்களாக' என்று ஆஜ்ஞாபித்தனர். இங்ஙனஞ் சொல்லி வழியில் ஆஹாரஞ்செய்வதற்குவேண்டிய ஸாமக்ரிகளைக் கொடுத்தனுப்புகையில் அந்தத் தூதர்கள் பரயாணத்திற்குத் தகுந்தவையென்று புகழ்பெற்ற மேலான குதிரைகளின்மேல் ஏறிக்கொண்டு கேகயதேசத்திற்குப் போகமுயன்று மனைவி முதலியவர்களுக்குத் தமது பரயாணத்தைத் தெரிவிக்கும் பொருட்டுத் தந்தம் வீட்டிற்குச் சென்றனர். அனந்தரம் அந்தத் தூதுவர்கள் பரயாணத்திற்கு வேண்டிய [1] பாதேயம் முதலியவற்றை ஸித்தப்படுத்திக் கொண்டு மற்றைக் காரியங்களையும் நிறைவேற்றி விட்டு மீளவும் வஸிஷ்டரிடம் வந்து அநுமதி பெற்றுக் கொண்டு வேகமாகச் சென்றனர். அவர்கள் அயோத்யைக்கு மேற்றிசை வழியாகப் புறப்பட்டு அபரதாலமென்னும் பர்வதத்திற்கு மேலண்டையாகச் சென்று அந்தப் பர்வதத்திற்கும் அதற்கு மேலண்டையிலிருக்கிற ப்ரலம்ப பர்வதத்திற்கும் இடையிலுள்ள மாலினி யென்னும் நதியின் கரைவழியாகக் கொஞ்சதூரம் வடதிசையாகச்

---

1. பாதேயம்—வழியில் கொண்டுபோய்ச் சாப்பிடுமாஹாரம்.

அனந்தரம் ப்ரலம்பபர்வதத்திற்கு வடக்கு பாகத்தைத் தொடர்ந்து மேற்கு முகமாக ப்ரயாணமாய்ப்போயினர். அவர்கள் ஹஸ்தினபுரத்தினருகில் கங்கையைத் தாண்டி மேற்கு முகமாகத் திரும்பிக் குருக்ஷேத்ரத்தி லடங்கிய ஜாங்கல தேசத்தின் மத்யமார்க்கமாகப்போய்ப் பாஞ்சாலதேசஞ்சேர்ந்து அங்கு ஜலம் நிரம்பிய குளங்களையும் தெளிந்த ஜலமுடைய நதிகளையும் பார்த்துக்கொண்டு கார்ய வசத்தினால் எங்கும் நிற்க நேராமல் த்வரையாகப் போயினர். அவர்கள், தெளிந்த ஜலமுடையதும் பலவித பக்ஷிகள் குலாவப்பெற்றதும் ஸ்நானபானங்கள் செய்யும் ஜனங்கள் நிறைந்திருப்பதும் அற்புதமுமாகிய சரதண்டாநதியின் அருகில் சீக்ரமாகச்சென்று அங்கு நிற்காமல் அதைத் தாண்டிச் சென்றனர். அந்தத் தூதர்கள் அந்தச் சரதண்டாநதியின் மேல்கரையிலிருப்பதும் தேவதாதிஷ்டானமுடையதும் விரும்பியவற்றையெல்லாம் ஈடேற்றுவதுபற்றி ஸத்யோபயாசனமென்னும் யதார்த்தநாமம் பொருந்தியதுமான புண்யவ்ருக்ஷத்தின் அருகிற்சென்று எல்லோர்க்கும் நமஸ்கரிக்கத் தக்கதாகிய அந்த வ்ருக்ஷத்திற்கு ப்ரதக்ஷிணஞ்செய்து நமஸ்கரித்துக் குலிங்கையென்னும் பட்டணத்திற்குச் சென்றனர். அனந்தரம் அங்கிருந்து புறப்பட்டு அபிகாலமென்னும் க்ராமஞ்சேர்ந்து அங்குபோதிபவனமென்னும்பேருடைய பர்வதத்திலேறியிறங்கி அதினின்றும் பெருகிவருகின்ற இக்ஷுமதியென்னும் நதியைக் கடந்துசென்றனர். அந்நதியின்கரையில் உள்ள க்ராமங்கள் தசரதனது வம்சத்தில் பிறந்தமன்னவர்களால் [1] பித்ரு பிதாமஹக்ரமமாக ஆண்டு வரப்படுபவை. அவர்கள், அந்நதியின் கரையில் அஞ்ஜலியளவு ஜலத்தைமாத்ரமே ஆஹாரமாகக்கொண்டு தவஞ

1. தந்தை பாட்டன் முதலிய முறையாக

செய்யும் வேதபாரகர்களாகிய ப்ராஹ்மணர்களைக் கண்டு, பாஹ்லிகதேசத்திலுள்ள க்ராமங்களின் இடை வழியாகவே சென்று ஸுதாம பர்வதத்திற்குப் போயினார். அவர்கள் அந்தப் பர்வதத்தில் விஷ்ணுபாதாரவிந்தத்தின் அடையாளமுடைய ஒரு புண்யஸ்தானத்தையும் அம்மலைச்சாரிலுள்ள விபாசாநதியையும் அந்நதிக்கரையிலுள்ள ஒரு இலவமரத்தையும் பார்த்துக்கொண்டே நடந்துசென்று ஆங்காங்குள்ள நதிகளையும் தடாவாவிகளையும் குளங்களையும் குட்டைகளையும் ஓடைகளையும் ஸிம்ஹம் புலி மான் யானை முதலிய பலவகை மிருகங்களையும் பார்த்துக்கொண்டே ராஜாஜ்ஞையைச் செய்ய விரும்பி நெடுந்தூரம் வழியைக் கடந்து சென்றனர். அனந்தரம் அந்தத் தூதர்கள் குதிரைகளுக்கு ச்ரமமும் இளைப்புண்டாகும்படி நெடுந்தூரங்கடந்து சென்று விரைவாகவே கிரிவ்ரஜமென்னும் வேறு பேருடைய கேகயராஜனது பட்டணத்துக்குப்போய்ச் சேர்ந்தனர். பரதனைச் சீக்ரமாக அழைத்துக்கொண்டுவந்து, அவனால் [1] ஔர்த்வதைஹிகம் முதலியவற்றைச் செய்வித்துப் பரலோகப்ராப்தியென்னும் ப்ரியத்தைத் தமது ப்ரபுவாகிய தசரதமஹாராஜனுக்கு விளைவிப்பதற்கும், தசரதனது குலத்திலுள்ளவர் யாவரும் அநாதர்களாயிருக்கையால் பரதனை அழைத்துக்கொண்டுவந்து அவனை நாதனாகச் செய்து அவர்களை ரக்ஷிப்பதற்கும், பர்த்தாவாகிய தசரதனுடைய வம்சமாகிய பரதாதிகளை அழைத்துக்கொண்டு வந்து அவனது வம்சத்திற்கு மேன்மேலும் ப்ரதிஷ்டையை விளைப்பதற்கும் அந்தத் தூதர்கள் மிகுந்த ஆதரத்துடன் த்வரைப்பட்டுப் பொழுது போயினும் ப்ரயாணத்தை நிறுத்தாமல் ராத்ரியிலும்

---

1 ஸ்ராத்தம்.

கொஞ்சம் நடந்து சென்று அன்றையதினம் ராத்திரியே அந்த ராஜக்ருஹத்திற்குப் போய்ச் சேர்ந்தனர். அறுபத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

{ கேகய நகரத்தில் பரதன் தனக்குண்டான துஸ்ஸ்வப்னங்களைத் தன் நண்பர்களுக்குச் சொல்லுதல் }

அந்தத் தூதர்கள் கிரிவ்ரஜபுரம் போய்ச் சேர்ந்த ராத்திரியே பரதனுக்கு மனவருத்தத்தை விளைக்கையால் அப்ரியமான இந்த ஸ்வப்னம் உண்டாயிற்று. அன்றிரவு விடியும் பொழுதே அநிஷ்டமாகிய அந்த ஸ்வப்னத்தைக்கண்டு ராஜாதி ராஜகுமாரனாகிய பரதன்[1] இந்த ஸ்வப்னம் சீக்கிரத்தில் பலிக்குமேயென்று பரிதபித்தனன். ப்ரியங் கூறுந் தன்மையர்களாகிய பரதனது நண்பர்கள் அவன் ஏதோ பரிதபிக்கிறானென்று தெரிந்துகொண்டு அவனுக்குள்ள அம்மனவருத்தத்தைப் போக்க விரும்பி ஸபையில் பலவிதக் கதைகளைச் சொல்லிக்கொண்டிருந்தனர். பரதனுடைய துக்கத்தைப் போக்குவதற்காகச் சிலர் வீணாதி வாத்யங்களைக்கொண்டு பாடினர். சிலர் அபிநயஞ் செய்தனர். மற்றுஞ் சிலர் நாடகங்களை வாசித்தனர். சிலர் பலவகையான[2] ஹாஸ்யங்களைச் செய்தனர். ரகுவம்சத்திற் பிறந்த அம்மஹானுபாவன் பரதன், ப்ரியத்தைக் கூறுந் தன்மையராகிய தனது நண்பர்கள் ஸபைக்குரிய ஹாஸ்யங்கள் எவ்வளவு செய்யினும் ஸந்தோஷம் பெறாதிருந்தனன். அப்பொழுது நண்பர்களால் சூழப்பெற்றிருக்கிற பரதனைப் பார்த்து அந்தரங்கஸ்னேஹிதனொருவன் 'அப்பனே! அன்பர்கள் சுற்றிலுஞ் சூழ்ந்திருந்து எவ்வளவு வேடிக்கைகளைச் செய்யினும் நீ ஸந்தோஷமுறாதிருக்கின்றனை, ஏன்?'

1. இந்த ஸ்வப்னம்—விடியற்காலத்து ஸ்வப்னம். அது சீக்கிரத்தில் பலிக்குமென்று ஸ்வப்ன சாஸ்த்ரம்.

2. ஹாஸ்யமாவது—சிரிப்பை விளைக்கும்படியான வாக்யம்.

என்று வினவினன். இங்ஙனம் நண்பன் கேட்கையில், பரதன் அவனைப்பார்த்து மொழிந்தனன்—'எனக்கு இந்த மனக்கவலை உண்டானதற்குக் காரணஞ்சொல்லுகிறேன், கேட்பாயாக—நான் ஸ்வப்னத்தில் என் தந்தை அழுக்கடைந்த சரீரத்துடன் தலைமயிர்களை விரித்துக்கொண்டு பர்வத சிகரத்தினின்றும் கலங்கின சாணி மடுவில் விழக்கண்டனன். மேலும் அவர் அந்தச் சாணி மடுவில் தவளைபோல் நீந்திக்கொண்டும் அஞ்சலியால் எண்ணெயையெடுத்துச் சாப்பிட்டுக் கொண்டும் அடிக்கடி விகாரமாகச் சிரித்துக்கொண்டு மிருக்கக் கண்டனன். பிறகு அவர் எள்ளோரை சாப்பிட்டு அடிக்கடி தலைகீழாகிச் சரீரம் முழுவதும் எண்ணெயைப் பூசிக்கொண்டு எண்ணெயிலேயே முழுகிவிட்டனர். மேலும் அந்த ஸ்வப்னத்தில் ஸமுத்ரம் உலர்ந்துபோகவும், சந்த்ரன் பூமியில் விழவும், உலகமெல்லாம் இருள் மூடப்பெற்றதுபோன்று ஒன்றும் தோற்றாமல் மறைந்திருக்கவும், அரசனது பட்டத்து யானையின் தந்தங்கள் சுக்கல் சுக்கலாய் ஒடிந்து விழவும், எரிந்துகொண்டிருக்கிற அக்னி திடீரென்று அணைந்துபோகவும், பூமி கீழே விழவும் (பூமி வெடிக்கவும்) பலவகை வ்ருக்ஷங்கள் பட்டுப்போகவும், பர்வதங்கள் சிதறிட புகையவும் கண்டனன். பின்னும், அம்மன்னவர் கறுத்த வஸ்த்ரந் தரித்து இரும்பு மணையின்மேல் உட்கார்ந்திருக்கையில், கறுப்பு வர்ணமும் கோரோசனு வர்ணமுமுடைய ஸ்த்ரீகள் அவரைப்பார்த்துச் சிரித்துக்கொண்டிருக்கக் கண்டனன். மேலும், தாமஸ்வபாவராகிய அம்மன்னவர் சிவந்த பூமாலையைச் சூடிச் செஞ்சந்தனம் பூசி வேகமாகக் கழுதைகள் கட்டப்பெற்ற ரதத்தின்மேல் ஏறிக்கொண்டு தென்திசைநோக்கிச் செல்லக்கண்டனன். சிவந்த வஸ்த்ரந் தரித்து விகாரமான முகத்துடன் கூடிய ராக்ஷஸமடந்தை

யொருததி, பெருஞ சிரிபபு சிரித்துககொண்டு அரச ஜனப பிடிதது இழுதது்கொண்டு போகக கண்டனன். இஙஙனம இனறிரவு மிகவும பயஙகரமான இநத ஸவப னங கணடேனன. ஆகையால எனககோ, ராமனுககோ, அரசனுககோ, அலலது லக்ஷமணனுககோ மரணம உணடாகப போகினறது. ஸவபனத்தில எநத மனிதன கழுதை கடடின ரததகதினமேல ஏறிககொணடு போவ தாகப புலபபடுவானே, சிதையில அவனது சரீரததி னினறும புகையின சிகை புலபபடும இததகக காரணத தைபபறறி நான மனககளிபபறறிருககினறனன ஆனது பறறியே நான உஙகளைக கௌரவிததுப பாராடடா திருககநேரிடடது. என நெஞசு உலாநதுபோவதுபோ லிருககினறது என மனம சிறிதும நிலைமையிலறித தத தளிககினறது. பயம உண்டாவதறகுக காரணம எது வும எனககுத தோறறவிலலை. ஆயினும, எனககும வசபபடாமல பயமே மேலெழுநது வருகினறது எனகண டதவனியும அடஙகிவிடடது என சரீரகாநதியும மாறி விடடது எனனையே நான பாாதது ஜுகுபசைபபடு வது போலிருககினறனன. காரணமோ தெரியவிலலை. இநத ஸவபனபரகாரம பலிததால யிருககினறது இபப டிபபடடதை இதறகு முனபு நான எபபொழுதும விசா ரித்துப பாாததிலலை. இபபடிபபடட துஸஸவபனங கணடதனால மனனவரைபபாாகக நேருமோ நேராதோ வெனறு மனககவலை உணடாகப பெறறிருககினறனன. இபபொழுது பாாககமுடியாதிருககிற மனனவரை நினைக கையில, என மனததில உண்டான இமமஹாபயம அதைவிடடுப போகாதிருககினறது' எனறனன. அறு பததொனபதாவது ஸாககம முற்றிறறு.

## பரதன் அயோத்யைக்கு ப்ரயாணமாய்ப் புறப்படுதல்.

பரதன் அங்ஙனம் ஸ்வப்னவ்ருத்தாந்தத்தைச் சொல்லிக்கொண்டிருக்கையில், தூதர்கள் தமது குதிரைகளை மிகவும் ச்ரமப்படுத்திக்கொண்டுவந்து, பகைவருக்குத் தாண்டமுடியாத அகழியுடைய ரமணீயமான அந்த ராஜக்ருஹமென்னும் பட்டணத்தில் ப்ரவேசித்துக் கேகயராஜனும் ராஜகுமாரனாகிய யுதாஜித்தும் எதிர்கொண்டு செய்யும் பூஜைகளைப் பெற்றுக் கேகயராஜனது பாதங்களில் நமஸ்காரஞ்செய்து அனந்தரம் அங்கு பரதனிடஞ்சென்று இங்ஙனம் மொழிந்தனர்:—'புரோஹிதர் உன்னிடம் தமது க்ஷேமத்தை அறிவித்து உன் க்ஷேமத்தை விசாரிக்கின்றனர். அப்படியே மந்த்ரிகள் அனைவரும் உன் க்ஷேமத்தை விசாரிக்கின்றனர். ஆனால் நீ சீக்ரமாய்ப் புறப்பட்டு வர வேண்டும். நீ இல்லாமையால் ஒரு கார்யம் காலந்தவறிப்போகின்றது. நீ அதைச்செய்யவேண்டும். ஆகையால் வேகமாகப் புறப்பட்டு வரவேண்டும். அகன்றழகிய கண்களையுடையவனே! மிகவும் மேலான இந்த வஸ்த்ரங்களையும் ஆபரணங்களையும் கைப்பற்றி உனது மாதாமஹனுக்கும் மாமனுக்கும் கொடுப்பாயாக. ராஜகுமாரனே! இதில் உனது மாதாமஹனாகிய கேகயராஜனுக்குக் கொடுக்கவேண்டிய வஸ்த்ராபரணங்கள் குறைவில்லாமல் இருபதுகோடி விலையுள்ளவை இருக்கின்றன. அப்படியே உனது மாமனுக்குக் கொடுக்கவேண்டிய வஸ்த்ராபரணங்கள் குறைவின்றிப் பத்துக் கோடி விலையுள்ளவை இருக்கின்றன. ஆகையால் இவைகளை வாங்கி அவர்களுக்குக் கொடுப்பாயாக' என்றனர். நண்பர்களிடத்தில் மிகுந்த ப்ரீதியுடைய பரதன் அவையெல்லாவற்றையும் வாங்கிக்கொண்டு [1]மாதாமஹனுக்கும் மாதுலனுக்கும் கொடுத்து, அந்தத்

1. மாதாமஹன்—தாயைப்பெற்ற பாட்டன்; மாதுலன்—மாமன்.

தூதர்களுக்கும் வேண்டிய தனம் முதலியவற்றைக் கொடுத்து ஸந்தோஷப்படுத்தி, அனந்தரம் அவர்களை நோக்கி 'என் தந்தை தசரத மஹாராஜர் நன்கு க்ஷேமமாயிருக்கிறாரா? அன்றியே ராமனும், மஹானுபாவனாகிய லக்ஷ்மணனும் ஆரோக்யம் உண்டாகப் பெற்றே யிருக்கிறார்களல்லவா? புத்தியிற் சிறந்த ராமனது தாயும் பூஜிக்கத்தகுந்தவளும் தர்மத்தில் நன்கு மனஞ்செலுத்தியவளும் தர்மங்களை நன்குணர்ந்தவளும் பரர்களிடத்தில் குணத்தை மாத்ரமே க்ரஹிப்பவளுமாகிய கௌஸல்யை க்ஷேமமாயிருக்கின்றாளா? லக்ஷ்மணனுக்கும் வீரனாகிய சத்ருக்னனுக்குந் தாயும் தர்மங்களை உணர்ந்தவளும் நடுத்தாயுமாகிய ஸுமித்ரையும் ஆரோக்யத்தோடிருக்கின்றாளல்லவா? தனது காரியத்தையே பாராட்டுந் தன்மையுடையவளும் எப்பொழுதும் க்ரூரமாயிருப்பவளும் கோபத்தினால் கருமபுருமென்றிருப்பவளும் தன்னை எல்லாமறிந்தவளாக நினைத்துக் கர்வித்திருப்பவளுமாகிய எனது அன்னை கைகேயியும் ரோகங்களின்றி க்ஷேமமா யிருக்கின்றாளா? அன்றியே நீங்கள் தனது பந்துக்களிடம் வருவது தெரிந்து அவள் ஏது ஸமாசாரஞ் சொல்லினள்?' என்று வினவினன். மஹானுபாவனாகிய பரதன் இங்ஙனம் சொல்லுகையில், அதைக் கேட்ட அத்தூதர்கள் வணக்கத்துடன் அந்தப் பரதனை நோக்கி.—'புருஷச்ரேஷ்டனே! நீ எவருடைய க்ஷேமத்தை விரும்புகின்றனையோ, அவர்கள் எல்லோரும் க்ஷேமமே. [1] கையில் தாமரை மலரேந்திய மஹாலக்ஷ்மியும் உன்னைக் கைப்பற்றுகின்றனள் ரதத்தைச

---

[1] இங்கு—ராஜ்யலக்ஷ்மி உனக்கு நேரப்போகிறதென்று தூதர்களின் உட்கருத்து. அதை, அமங்கலந் தொலைவதற்காகச் சுபமாகச் சொன்னார்களென்று பரதனுக்குத் தோற்றும்படி மறைத்துச் சொல்லினர்.

சித்தப படுத்திக்கொள்வாயாக' என்றனர். பரதனும் அந்தத் தூதர்கள் இவ்வாறு சொல்லக் கேட்டு, அவர்களை நோக்கி 'நான் கேகயமஹாராஜரிடம் சென்று 'தூதர்கள் வந்து என்னை வரவேண்டுமென்று த்வரைப் படுத்துகிறார்கள்' என்று தெரிவித்து வருகிறேன்' என்று சொல்லி அந்த ராஜகுமாரன் தூதர்கள் தூண்டுதலால் மாதாமஹனாகிய கேகயராஜனிடம் சென்று 'மன்னவரே! என் தந்தையினிடமிருந்து தூதர்கள் வந்து என்னை அயோத்தைக்கு வரும்படி அழைக்கின்றனர். ஆகையால் தந்தையினிடம் போகின்றேன். மீளவும் நீர் எப்பொழுது நான் வரவேண்டுமென்று நினைக்கின்றீரோ; அப்பொழுது அது தெரிந்து வருகின்றேன்' என்றனன். பரதன் இவ்வாறு சொல்லுகையில், அவனது மாதாமஹனாகிய அந்தக் கேகயராஜன் அந்த ரகுகுல குமாரனை உச்சியில் மோந்து அவனைப் பார்த்து:—'என்னப்பனே! பகைவரை அடக்கும் பராக்ரமசாலியே! நான் அநுமதி கொடுக்கின்றனன், போய் வருவாயாக. உன்னைப் பெற்ற கைகேயி நல்ல புத்ரனுடையவளாயினள். உன் தாய்க்கும் உன் தந்தைக்கும் க்ஷேமத்தை அறிவித்து நான் விசாரித்ததாக க்ஷேமம் விசாரிப்பாயாக. அப்பனே! புரோஹிதராகிய வஸிஷ்டருக்கும் மற்றுமுள்ள ப்ராஹ்மணோத்தமர்களுக்கும் பெருவில்லாளிகளாகிய அவ்வண்ணன் தம்பிகள் ராமலக்ஷ்மணர்களுக்கும் இவ்விடம் க்ஷேமமென்று சொல்லி அவர்களை நான் க்ஷேமம் விசாரித்ததாகச் சொல்லுவாயாக' என்று இவ்வாறு சுபமான மொழிகளைக் கூறினன். இவ்வாறு சொல்லிக் கேகயமன்னவன் பரதனுக்கு மிகுந்த கௌரவத்துடன் சிறந்த யானைகளையும் அற்புதமான சித்ரகம்பளங்களையும் மேலான மான்தோல்களையும்[1] தனமாகக் கொடுத்தனன். மேலும் கேகயாதிபதி, கைகேயியின் குமாரனை மேன்மைப்படுத்தி அவனுக்குப் பொன்னிறச்செய்த இரண்டாயிரம் கண்டபூஷணங்களையும் ஆயிரத்தறுநூறு

1, தனம். பரிசு.

குதிரைகளையும் தனமாகத் தந்தனன். பின்னும் அவ்வச்வபதிமன்னவன் பரதனுக்கு, பரபுவோடுகூட பிராணன்களை விடும்படியான ஸ்வாமிபக்தி அமைந்தவர்களும் எவ்வித ஸங்கடத்திலும் ஸஹாயமாயிருப்பவர்களும் விச்வாஸஞ் செய்வதற்குரியவர்களும் குணங்களெல்லா முடையவர்களுமாகிய தனது அந்தரங்க புருஷர்களை அவனைப் பின்சென்று போகும்படிக்குக் கொடுத்தனுப் பினன். பரதனது மாமாவாகிய யுதாஜித்தும், [1] இராவதமென்னும் பர்வதத்தில் உண்டானவைகளும் இந்திர சிரமென்னும் பர்வதத்திலுண்டானவைகளும் பார்க்க மிக இனியவைகளுமான யானைகளையும், வேகமுள்ளவை களும் பாரஞ் சுமப்பதற்குத் தகுந்தவைகளும் அதில் பழக்கப்பட்டவைகளுமாகிய கழுதைகளையும், தனமாகக் கொடுத்தனன் மேலும், அவன் அந்தப்புரத்திலேயே ஸுகமாக வளர்ந்தவைகளும் பெரும்புலியைப்போல வீர்யமும் பலமும் பொருந்திக் கோரைப்பற்களே ஆயுதமாகப்பெற்றுப் பெரிய சரீரத்துடன் விளங்குகின்றவைகளு மான நாய்களையும் காணிக்கையாகக் கொடுத்தனன். அப்பொழுது கைகேயியின் குமாரனாகிய பரதன், பரயாணத்திலுள்ள த்வரையினால், கேகயமஹாராஜன் தனக்கு அவ்வளவு தனங் கொடுத்ததற்குச் சந்தோஷம் உண்டாகப் பெற்றிருந்தனன். அப்பொழுது தூதர்கள் அவ ஸரப்படுத்துவதனாலும் துஸ்ஸ்வப்னங்கண்டிருப்பதனா லும் அனர்த்தம் ஏதோ உண்டாயிருக்கிறதென்று அவன் மனத்தில் பெரியதொரு சிந்தை உண்டாயவிட் டது ஐச்வர்யம் பொருந்திய அந்தராஜகுமாரன் தனது விடுதியினின்றும் புறப்பட்டுச் சென்று ஜனங்களும் யானை குதிரைகளும் சூழப்பெற்று மிகவும் விசாலமாகி அழ காயிருக்கின்ற ராஜவீதிவழியாகச் சென்றனன். பிறகு

1. இங்கு 'ஐராவதாந் நாகசிராந்' என்று மூலம். இதற்கு-ஐராவதாந்—ஐவதகுலத்தில் பிறந்தவைகளும், நாகசிராந்- நாகசிரமென னும் தேசத்தில் பிறந்தவைகளுமென்று மஹேச்வர தீர்த்த வியாக யானம்

ந்த மதியுடையவனாகிய அந்த ராஜகுமாரன் அந்தகைய ராஜவீதியைக் கடந்து அந்தப்புரத்தைக் கண்டனன். ஸ்ரீமானாகிய அப்பரதன் அவ்வந்தப்புரத்திற்குள் தடையின்றி ப்ரவேசித்தனன். அந்தப் பரதன் சத்ருக்னனும் தானுமாகப் பாட்டனாகிய கேகயராஜனையும் மாமாவாகிய யுதாஜித்தையும் பார்த்து அவர்களிடம் அநுமதி பெற்றுக்கொண்டு ரதத்தின்மேல் ஏறி ப்ரயாணமாய்ச் சென்றனன். அங்ஙனம் பரதன் போய்க்கொண்டிருக்கையில், வட்டமான சக்ரங்களை யுடைய பலநூறு தேர்களில் ஒட்டைகளையும் எருதுகளையும் குதிரைகளையும் கட்டி ஓட்டிக்கொண்டு பல ப்ருத்யர்கள் அவனைப் பின்சென்று போயினர். மஹானுபாவனாகிய அப்பரதன் பாட்டன் கொடுத்த ஸைன்யம் தன்னைக் காத்துக்கொண்டு வரப்பெற்றுச் சத்ருக்னனையும் அழைத்துக்கொண்டு தன்னைப் போன்றவர்களாகிய பின்றொடர்ந்து வருகின்ற ஸஹாயபுருஷர்களோடுங்கூடிச் சத்ருக்களொருவருமின்றி, ஸ்வர்க்கத்தினின்றும் ஸித்தன் புறப்படுவதுபோல் க்ருஹத்தினின்றும் புறப்பட்டனன். எழுபதாவது ஸர்க்கம்

{ பரதன் அயோத்யைக்கு வருதலும், தந்தையின் க்ருஹத்திற்குப் போதலும். }

பிறகு ரகுகுலாலங்காரனும் மிகுந்த ஒளியுடையவனும் ஐஶ்வர்யங்களெல்லாம் அமைந்தவனும் இக்ஷ்வாகு வம்சத்திற்கு ஸந்தோஷத்தை விளைப்பவனுமாகிய அந்தப் பரதன் ராஜக்ருஹமென்னும் கேகயராஜனது நகரத்தினின்றும் புறப்பட்டுக் கிழக்கு முகமாகச் சென்று வழியில் புலப்படுகிற ஸுதாமை யென்னும் நதியைக் கண்டு ஸந்தோஷித்து அதைத் தாண்டி, அக்கரை வெகு தூரமாயிருக்கப்பெற்றதும் மிகவும் அகன்றிருப்பதுமா

இய ஹ்லாதினியெனனும நதியையும் கடநது மேற்கு முகமாகப பெருகி வருவதும அலைகள ஓயாது வீசப பெற்றதுமாகிய சததருநதியைத தாண்டினன செலவம நிறைநதவனாகிய அநத ராஜகுமாரன ஏலாதான மெனனும க்ராமததின அருகில அநதச சததருநதியைத தாணடி இளைபபாறுவதறகாக அபராபபட மெனனும் கராமஞசேரநது, கறகளைப புரட்டிககொணடுவருந தன்மையுடைய சிலாவஹையெனனும நதியைத தாணடி, அதறகுத தெனகிழககு மூலையில இருககினற சலயகாததன மெனனும பட்டணஞ சேரநது அதன அழகைப பாரதது ஸதயஸநதனும பரிசுததனுமாகையால அங்குள்ளவர்களின ஈதிபாதைகளைப போககுவ தாகச சொலலி அபபடியே செயது, சைதராதமெனகிறவனத்தைப பாரககவேணடுமெனனும் குதூஹலததினால் வழியில் கிடககிற பல மஹாசைலஙகளைக கடநது சென்றனன அவன ஸரஸவதீ நதியும [1] கஙகாநதியும ஸங்திககிற இடததிறகுச சென்று, வீரமதஸய தேசத்திறகு வடபாகததிலுள்ள பாருணடமெனனும வனத்தில பரவேசிததனன அனநதரம அவன, வேகததுடன பெருகி வருவதும மனததிறகு மிகவும இனிபபைக் கொடுபபதும பாவதஙகளால சுறறிலுஞ சூழபபடடதுமாகிய குலிஙகாநதியைச சேரநது சில இடஙகளில பரவாஹ வேகததினாலும மறறைச சில இடஙகளில மலைகள் சூழநதிருபபதனாலும் தாணடமுடியாமையால் யமுனையினருகில வநது அநநதியைத தாணடி அபபொழுது

1 இஙகு 'ஸரஸவதீஞச கஙகாஞச' என்று மூலம். இஙகு கஙகை யென்று ப்ரஸித்தகஙகையைச சொலலுகிறதன்று. கஙகை யென்னும பெயருடைய மறறொரு நதியைச சொல்லுகிறது. அது மேற்கு ஸமுத்ரததிற்குப் போகும நதி. அலலது கங்காபரவாஹங்களில இதுவொன்றென்று கொள்ளவேணடும்.

வெயிலில் வழி நடந்துவந்த ச்ரமத்தினால் ஓய்ந்திருக்கிற தனது ஸைன்யத்தை இளைப்பாறும்படிக்குக் கட்டளையிட்டனன். குளிங்கையும் யமுனையும் ஸங்கிக்கும்படியான அவ்விடத்தில குதிரைகளின ச்ரமத்தைத்தீர்த்து ஜலங்களை யிறைத்துக்குளிப்பாட்டித் தானும அவ்விடத்தில் ஸ்நானபானங்களைச் செய்து இதற்குமேல் ஜலம் அகப்படுவது கஷ்டமாகையால வேண்டிய ஜலத்தையும் ஸித்தப்படுத்திக கொண்டு சென்றனன. மங்கலாசாரம பொருந்திய அந்த ராஜகுமாரன் பத்ரஜாதியிற் பிறந்த யானையினமேல் ஏறிககொணடு எவவளவும் ஜனஸஞ்சாரமில்லாத அம் மஹாரண்யத்தை, வாயு ஆகாசத்தைக் கடந்து செல்வதுபோல, ஸுகமாகக் கடந்து சென்றனன. அனந்தரம் அநதப பரதன அம்சுதானமென்னும் தேசத்தில அடங்கிய பராகவட மென்னும் பட்டணம கங்கையைத தாண்டுவதற்குரிய இடமென்று ப்ரஸித்தமாகையால அவ்விடத்தில் அநநதியைத் தாண்டும பொருட்டுச் சென்றனன. அவன ஸைன்யத்துடனகூட ப்ராக்வடத்தில கங்கையைத தாண்டி அனந்தரம் குடிகோஷ்டிகை யெனனும நதியைக் கிடடி அதையும தாண்டி அதனபிறகு தாமவர்த்தனமெனனும க்ராமஞ் சேரநதனன. தசரதகுமாரனுகிய அப்பரதன, அங்கிருந்து தோரணமெனனும கராமஞ் சேர்ந்து, அதற்குத் தெனபுறமாகப புறப்பட்டுச் சென்று ஜமபூப்ரஸ்த மென னும கராமம அடைந்து அங்கிருந்து அழகியதான வரூதமெனனும கராமம போயச்சேரநதனன. அவன அவ்வூருக்கருகில இருக்கின்ற அழகான ஒரு வனத்தில் அனறிரவு வஸித்திருந்து, விடிநதவுடன கிழக்கு முகமாகப புறப்பட்டு உஜ்ஜிஹானை யெனனும் நகரத்தின உத்யானவனம் போய்ச் சேர்ந்தனன. அங்குக் கடம்ப

மரங்கள் வெகுவாயிருக்கும். அவன் அவ்வனத்திலுள்ள கடம்ப வருக்ஷங்களைக் கிடடினவுடனே இனிமேல் எல்லாம் தனது தேசமே யாகையால் பயமில்லாமல மெதுவாக வாருங்களென்று ஸைன்யத்திறகு கட்டளை யிட்டு அந்த ஸைன்யத்தினால் அனுமதி கொடுக்கவும பெற்று வேகமுள்ள குதிரைகளை ரதத்தில பூட்டிக்கொண்டு த்வரையாகச் சென்றனன். அவன் பிறகு [1] ஸர்வதீர்த்தமெனனும கராமததில ஓரிரவு வஸிததிருந்து, விடிநதவுடன புறப்பட்டு உததானிகை யெனனுங நதியையும மற்றுமுள்ள பலவகை நதிகளையும, தனது ரதத்திற பூட்டிய மலைகளிற பிறநத சிறநத குதிரைகளைக் கொண்டு தாணடிச் சென்று [2] ஹஸதிபருஷ்டகமெனனும க்ராமஞ் சேரநது அதனருகிலுள்ள குடிகை யெனனும நதியைத தாண்டினன. புருஷ ஸ்ரேஷ்டனுகிய அந்த ராஜகுமாரன அஙகிருநது சென்று லௌஹிதயமெனனும படடணஞ் சேரநது அங்குளள கபீவதி யெனனும நதியைத தாண்டினன அவன ஏகஸால மெனனும் கராமததில ஸதாணுமதி யெனனும நதியைத் தாண்டி அஙகிருநது வினதமெனனும் க்ராமஞ் சேரநது கோமதி யெனனும நதியைத தாணடிக கலிங்கநகரஞ் சென்று அதனருகிலுள்ள ஸாலவனஞ் சேரநது அங்குக குதிரைகள மிகவும இளைபபுறறிருககையால அவை இளைபபாறுமபொருட்டுக கொஞச நேரமே இருநது அபபொழுதே புறபபடடுச சீகரமாகப போயினன். அவன அந்த ஸாலவனததை அந்த ராத்ரியிலேயே கடநது கடநது, அருணோதயமாகையில வைவஸவத மனுவால நிருமிககபபட்ட அயோதயாபுரததைக கண்ட

---

1 இஙகு ஸர்வதீர்த்தமென்பதறகு ஸர்ப்பதீாததமென்று பாடாநதரம.

2 ஹஸ்திபருஷ்டகமெனறுல ஒரு க்ராமத்தின் பேர். அனறியே யானையின் முதுகில் ஏறிக் குடிகாநதியைத் தாணடினு னென்று மஹேஸ்வரதீர்த்தர் கூறுகின்றார்.

ன்ன. புருஷ சிகாமணியாகிய அந்தப் பரதன் சீக்கிரம் போய்ச் சேரவேண்டுமென்கிற த்வரையின் மிகுதியால் ஏழு ராத்ரிகள் வழிநடந்து பிறகு எட்டாவது நாள் தன் கண்முன் புலப்படுகிற அயோத்யையைப் பார்த்து ஸாரதியை நோக்கி இங்ஙனம் மொழிந்தனன்.—'ஸாரதீ! அழகிய உத்யானவனங்களை அமைந்ததும் மிகவும் புகழ் பெற்றதும் வெளுத்த மண்ணுடையதும், பல யாகஞ் செய்தவர்களும் நற்குணங்களெல்லாம் அமைந்தவர்களும் வேதங்களின் கரையறிந்தவர்களும் செல்வம் மிகுந்திருக்கப் பெற்றவர்களுமாகிய ப்ராஹ்மணர்கள் நாற்புறத்திலும் சூழ்ந்திருக்கப் பெற்றதும் ராஜர்ஷிகளால் பரிபாலிக்கப்பட்டதுமாகிய அயோத்யாபுரம் இதோ புலப்படுகின்றது, பார். ஆனால் இந்நகரம் பார்க்கும்பொழுதே முன்போல் ஸந்தோஷத்துடனிருப்பதாகத் தோற்றவில்லை. முன்பு அயோத்யையில் புருஷர்களும் ஸ்த்ரீகளும் நாற்புறத்திலும் கலகலவென்று பேசிக்கொண்டிருக்கையில், இன்னது இனியதென்று தோற்றாமல் பெருங்கோஷமொன்று செவிப்படுக்கொண்டிருக்கும். அதை இப்பொழுது நான் கேட்கப் பெறாதிருக்கின்றனன். [1] முன்பு ஸாயங்காலங்களில் புருஷர்கள் உத்யானங்களுக்கு வந்து விளையாடியிருந்து பிறகு இருட்டுகையில் விளையாடுவதை நிறுத்தி நாற்புறத்திலும் பிரிந்து வேறுவேறாகத் தந்தமது மாளிகைகளுக்குப் போகையில் அவ்வுத்யானங்கள் அப்பொழுது ஓர் அழகுடன்கூடி வேறுவிதமாகவே ப்ரகாசித்துக்கொண்டிருந்தன. இப்

---

1 இதற்கு—'முன்பு ஜனங்கள் ஸாயங்காலம் கடந்த பின்பு ராத்ரிகளில் உத்யானவனங்களுக்கு வந்து விளையாடிவிட்டு உதயமானவுடன் விளையாடலை நிறுத்தி நாற்புறமும் புறப்பட்டுத் தந்தமது மாளிகைகளுக்குப் போகையில், அப்பொழுது அவ்வுத்யானங்கள் மற்றொரு விதமாகப் ப்ரகாசிக்கும்' என்று கோவிந்தராஜர் கூறும்பொருள்.

பொழுது அவைகள் காமுகர்கள் எவரும் வரப்பெறாமல் அழுகற்று அழுபவைபோல் இருக்கின்றன. ஸாரதி! பட்டணம் முழுவதும் அரண்யமாறுற்போல எனக்குப் புலப்படுகின்றது. முன்போல பரமுகர்களாகிய புருஷர்கள் ரதங்களின்மேலும் யானைகளமேலும் குதிரைகளமேலும் ஏறிக்கொண்டு பட்டணத்தினின்று வெளியிற் போகிறவர்களாவது பட்டணத்திற்குள் நுழைகிறவர்களாவது எவரும் புலப்படவில்லை. முன்பு உதயானவனங்கள், பழங்களையும் தளிர்களையும் தேன்களையும் உட்கொண்டு மத்தித்த கிளி குயில் வண்டு முதலிய பக்ஷிகளுடன் பரகாசித்துக்கொண்டும், பாத்திகள் ஏற்படுத்தி ஜலம் பாய்ச்சப்பெற்றுக் களைகளவென்று தளிர்த்து விளங்குகின்ற கொடிசெடிகளோடு கூடியும், ரதிகேலியின்பொருட்டு வரும் ஜனங்கள் கூடுவதற்கு வேண்டிய கொடிமாடம் கடைவாவி முதலிய ஸ்தானங்கள் பொருந்தியும் மிகுந்த குணமுடையனவாகி அழகாயிருந்தன. அப்படிப்பட்ட அந்த லீலோதயானங்களெல்லாம் இப்பொழுது வழிகளில் எங்கும் இலைகள் உதிரப்பெற்று அழுவனபோலிருக்கிற வருக்ஷங்களோடுகூடி நாற்புறமும் ஆநந்தமற்றுப் புலப்படுகின்றன. ஸூர்யோதயம் ஆகவேண்டியிருப்பினும் இன்னுங்கூட கரீடாமருகங்களும் பக்ஷிகளும் யதேஷ்டமான ஆஹாரங்களால் மத்தித்து அழகிய ராகத்துடன் அவ்யக்த மதுரமாகச் செய்யுஞ் சப்தங்களெவையும் செவிப்படாதிருக்கின்றன. முன்போல சந்தநாகருவாஸனைகளுடன் கலந்தும் தூபவாஸனைகள் நிரம்பியும் மணங் கமழ்ந்துகொண்டு மனக்களிப்பை விளைக்கும் மேலான காற்று இப்பொழுது ஏன் வீசாதிருக்கின்றது? முன்பு எப்பொழுதும் கம்பீரமாகக் கிளம்பும்படி கைகளாலும் கோல்களாலும் அடிக்கப்பட்ட துந்துபி

ம்ருதங்கம் வீணை முதலிய வாத்யங்களின் த்வனி ஓயாமற் செவிப்பட்டுக்கொண்டிருக்கும். அது இப்பொழுது ஏன் ஓய்ந்திருக்கின்றது? அனிஷ்ட ஸூசகங்களும் க்ரூரங்களும் பார்த்தபொழுதே மனத்திற்கு மிக்க துக்கத்தை விளைவிப்பவைகளுமாகிய அசுபசகுனங்கள் பலவும் புலப்படுகின்றன. அதனால் என் மனம் மிகவும் வருந்துகின்றது. ஸாரதீ! என் மனத்திற்கு வருத்தம் உண்டாகக் காரணமின்றியிருப்பினும், அது மிகவும் வருந்துகின்றதே! ஆகையால் எப்படியாயினும் எனது பந்துக்களுக்கு க்ஷேமம் உண்டாவது அரிதென்றே தோற்றுகின்றது' என்றனன். இங்ஙனம் பரதன் மனவருத்தமுற்று மனங்கலங்கவும் பயம் மேலெழவும் இந்த்ரியங்கள் நலுங்கவும் பெற்று இக்ஷ்வாகுவம்சத்தரசர்களால் பாதுகாக்கப்பட்டுவருவதாகிய அயோத்யாபுரத்திற்குள் சீக்ரமாகப் ப்ரவேசித்தனன். தூரப் ப்ரயாணமாகையால் மிகவும் வருந்திய குதிரைகளோடு பரதன் [1] வைஜயந்தமென்கிற மேற்கு வாசற்படி வழியாகப் பட்டணத்திற்குள் நுழைந்தனன். அனந்தரம் அங்குள்ள த்வாரபாலகர்கள் திடீரென்றெழுந்திருந்து 'விஜயமா' என்று கேட்டுப் பின்றொடர்ந்துவர, அவர்களுடன் கூடவே போயினன். ரகுகுல குமாரனாகிய அந்தப் பரதன், மனம் ஒன்றிலும் நிலைபெறாமல் வ்யாகுலப்பட்டிருப்பதனால் அந்த த்வாரபாலகர்களை உபசாரத்துடன் திருப்பிவிட்டுத் தன் மனத்திற்கு இனியனும் தூரவழி வந்ததனால் இளைப்புற்றவனுமாகிய

---

1 இதற்கு 'த்வாரேண வைஜயந்தேந ப்ராவிசச் ச்ராந்தவாஹந:' என்று மூலம். இதில் (த்வாரேண) என்ற இடத்திலுள்ள (ரே) என்னும் அக்ஷரத்தினால் காயத்ரியின் ஆறாவதக்ஷரம் க்ரஹிக்கப்பட்டது. இதனால் ஐயாயிரம் க்ரந்தங்கள் கடந்தனவென்றும் ஆறாவதாயிரம் தொடங்கப்பட்டதென்றும் தெரிகின்றது.

அஸ்வபதியின் ஸாரதியைப்பார்த்து அப்பட்டணத்திற்குள் போகும்போது இங்ஙனம் மொழிந்தனன்:— 'குற்றமற்றிருக்கும் ஸ்வபாவமுடையவனே! ஆலோசனை யறிந்தவனே! காரணம் ஒன்றும் இல்லாமல் என்னை வஸிஷ்டர் த்வரையாக வரவழைப்பது ஏனோ' 'யாது அசுபமோ?' என்று மனத்திற் சங்கை உண்டாகின்றது. எனது இயற்கையும் கெட்டு மாறுவதுபோல இருக்கின்றது. ஸாரதி! பூர்வத்தில் அரசர்களுக்கு மரணம் உண்டாகும்பொழுது எவ்வகைக்குறிகள் இருக்குமென்று கேள்விப் பட்டிருக்கிறோமோ, அக்குறிகளெல்லாம் எனக்கு இங்குப் புலப்படுகின்றன. இங்குக் குடிகளின் வீடுகள் விளக்குதலில்லாமையால் க்ரூரமாயிருக்கின்றன. அவைகளின் கதவுகள் மூடப்பட்டிருக்கின்றன அங்கு எங்குப் பார்க்கிலும் அழகு சிறிதுந் தோற்றாதிருக்கின்றது. மேலும் இவைகளில் பூஜாகார்யங்களும் அற்றிருக்கின்றன பின்னும், மணங்கமழும் தூபவாஸனைகளும் இங்குப் புலப் படவில்லை இங்குள்ள ஜனங்கள் எல்லோரும் போஜனங்கூடச் செய்யாமல் ஒளிமழுங்கி மனக்களிப்பற்றிருக்கின்றனர். ஆனதுபற்றியே இந்த வீடுகள் லக்ஷ்மீ விலாஸமற்றிருக்கின்றன. தேவாலயங்களும் த்வாரங்களில் புஷ்பமாலைகள் இடம்பெறாமல் சூன்யமாயிருக்கின்றன. அவைகளின் முற்றங்களும் ஜலந்தெளித்து விளக்கப்பெறாமல் துலக்க மற்றிருக்கின்றன மேலும், பூஜக பரிசாரகர்களில்லாமையால் பாழாகி முன்போல விளக்க மற்றிருக்கின்றன. தேவ பூஜைகளும் ஒழிந்திருக்கின்றன. யஜ்ஞஸபைகளும் அங்ஙனமே ஓய்ந்திருக்கின்றன பூக்கடைகளில் சரக்குகளும் முன்போல புலப்படவில்லை இப்பொழுது இங்கு வர்த்தகர்களும் மனக்கவலையுற்றவராகி க்ரயவிக்ரயாதி வ்யாபாரங்களைத் துறந்து சோகமடைந்திருக்கிறார்களேயன்றி, முன்போல புலப் படவில்லை. தேவாலயங்களிலும் சாற்சந்தி வீதிகளிலும்

உள்ள பறவைக் கூட்டங்களும் அப்படியே மனக்கலிப் பற்றிருக்கின்றன. 'பட்டணத்திலுள்ள ஜனங்கள் ஸ்த்ரீகளும் புருஷர்களும் சரீரம் அழுக்கடையவும் கண்களில் நீர் பெருகவும் பெற்றுத் தீனர்களாகிச் சிந்தையினால் இளைத்துப் ப்ரிய பந்துக்களை இழந்தால் வருத்தமுறுவது போல வருந்தியிருக்கக் காண்கின்றேன்' என்றான். இங்ஙனம் அப்பரதன் அயோத்தியையில் அவ்வனிஷ்ட சகுனங்களைக் கண்டு மனக்கவலையுடன் அந்த ஸாரதியிடம் இந்தப் பிரகாரஞ் சொல்லித் தசரத மஹாராஜனது மாளிகைக்குச் சென்றனன். அமராவதிபோல் விளங்கியிருந்த அந்நகரம் நாற்சந்தி வீதிகளிலும் க்ருஹங்களிலும் ராஜமார்க்கங்களிலும் ஜனஸஞ்சாரம் அறப்பெற்றுப் பாழாகி, விளக்குதல் முதலிய ஸம்ஸ்காரங்களில்லாமையால் வாசற்கதவுகளும் அவைகளின் பிடி முதலியனவும் தூசிபடிந்து சிவக்கப் பெற்றுப் பார்க்கமுடியாதிருப்பதைக் கண்டு அவன் மிகுந்த மனவருத்தமுற்றனன். மிகவும் தைர்யசாலியாகிய அந்தப் பரதன் முன்பு ஒருகாலும் தன் பட்டணத்தில் உண்டாகாதவைகளும் மனத்திற்கு அப்ரியங்களுமாகிய அந்த லக்ஷணங்களும் மற்றும் பல அசுபசகுனங்களும் உண்டாயிருப்பது கண்டு தலைவணக்கமுற்று மனங்கலங்கப் பெற்றுச் சிறிதும் களிப்பின்றித் தந்தையின் க்ருஹத்துள் நுழைந்தனன். எழுபதொன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

கைகேயி, பரதனுக்குத் தசரதன் மரணம்
அடைந்த வருத்தாந்தத்தையும் ராமன்
காட்டுக்குப் போனதையும் தெரி
வித்து ராஜ்யாபிஷேகம் பெறு
வாயென்று கூறுதல்.

அனந்தரம் பரதன் அங்குச் சென்று தந்தையின் க்ருஹத்தில் தந்தையைக் காணாமல் தாயைப் பார்க்கும்



989. பரதன தன தாயாகிய கைகேயியை நமஸ்கரிததல.

பொருட்டு அவனது மாளிகைக்குச் சென்றனன். கைகேயி அப்பொழுது, தேசாந்தரம் போயிருந்த தன் புதல்வன் வருவதைக் கண்டவுடனே ஸந்தோஷாதிசயத்தினால் உட்கார்ந்திருந்த பொன்பீடத்தினின்று திடீரென்று எழுந்தனள். தர்மஸ்வபாவனாகிய அப்பரதன் ஒளிவிளக்கம் மாறியிருக்கிற தன் தாயின் மாளிகைக்குப் போனவுடனே, சுபங்களாகிய தாயின் பாதங்களைப் பிடித்துக்கொண்டு நமஸ்காரஞ் செய்தனன். அவள் மிகுந்த புகழுடையோனாகிய அப்புதல்வனை உச்சி மோந்து ஆலிங்கனஞ் செய்து மடியில் உட்கார வைத்துக்கொண்டு வினவத்தொடங்கினள் —'அப்பா! நீ உனது பாட்டனூரகத்தை விட்டுப் புறப்பட்டு இன்று எத்தனை ராத்திரிகள் ஆயின? ரதத்தின்மீதேறி மிக்க வேகத்துடன் வந்தனையே; உனக்கு மார்க்காயாஸம் இல்லாதிருக்கின்றதா? புதல்வனே! பூஜ்யராகிய உனது மாதாமஹரும் உனது மாமனாகிய யுதாஜித்தும் நன்கு க்ஷேமமாயிருக்கிறார்களா? உனக்கு இங்கிருந்து போனதுமுதல் ஸுகமா? இதையெல்லாம் எனக்குச் சொல்லவேண்டும்' என்றனள். கைகேயி இங்ஙனம் இனிமையாகக் கேட்கையில், ராஜகுமாரனும் தாமரைக் கண்ணனுமாகிய பரதன் தன் தாய்க்கு எல்லாவற்றையும் மொழிந்தனன் —'அம்மா! நான் பாட்டனூரகத்தினின்றும் புறப்பட்டு இன்றைக்கு ஏழு ராத்திரிகள் ஆயின. அம்மாவின் தந்தையும் எனது மாமன் யுதாஜித்தும் க்ஷேமமாயிருக்கின்றனர். பகைவரைத் தபிக்கச் செய்ய வல்லவராகிய கேகயராஜா எனக்குக் கொடுத்த தனங்களும் ரத்னங்களும் அவைகளைக் கொண்டுவரும் வாஹனங்கள் வழி நடந்து வந்த ச்ரமத்தினால் இளைப்புற்றிருப்பது பற்றி வழியிலேயே விட்டு நான் முன்னதாக வந்தனன். ராஜன் சொல்லி

யனுப்பின தூதர்கள் என்னைத் த்வரைப்படுத்தினபடியால் நான் முன்னே வந்துவிட்டேன். அம்மா! நான் எதைக் கேட்க விரும்புகிறேனே, அதை எனக்குச் சொல்ல வேண்டும். ஸ்வர்ணத்தினால் அலங்கரிக்கப்பட்டுப் படுக்கத் தகுந்திருக்கிற உனது மஞ்சம் தந்தையில்லாமல் பாழா யிருக்கின்றது. இக்ஷ்வாகுவம்சத்து மன்னவராகிய தசரதர் ஜனங்கள் ஸந்தோஷமுற்றிருப்பதுபோல எனக்குத் தோற்றவில்லை. மஹாராஜர் இங்கு அம்மாவின் கத்தில் வெகுவாக இருப்பவரென்று நினைத்து அவரைப் பார்க்க விரும்பி இவ்விடம் வந்தேன். இப்பொழுது அவரை இங்குப் பார்க்க நேராதிருக்கின்றேன். அம்மா! தந்தையின் பாதங்களைப் பிடித்து நமஸ்காரஞ் செய்ய விரும்புகின்றேன். அதற்காகக் கேட்கின்றேன். அவர் எங்கே இருக்கின்றார்? அவரை இங்ஙனம் வினவுகிற எனக்குச் சொல்வாய். ஒருகால் என் பெரிய தாயாரான கௌஸல்யையின் அகத்தில் இருக்கிறாரா என்ன?' என்று வினவினன். அனந்தரம் கைகேயி ராஜ்யத்தில் பேராசை யுற்று மதி கெட்டிருப்பதனால் கோரமாகி மிகவும் அப்ரியமுமா யிருக்கிற வருத்தாந்தத்தை ப்ரியமாகப் பாவித்து நடந்த தொன்றுந் தெரியாத அப்பரதனைப் பார்த்து—'மஹானுபாவரும் மஹாதேஜஸ்வியும் யாகஞ் செய்யும் ஸ்வபாவரும் ஸஜ்ஜனங்களுக்கு ஆதரவாயிருப்பவருமாகிய உன் தந்தை மஹாராஜர், ஸமஸ்த ப்ராணிகளும் தப்பாமல் எந்தக் கதியைப் பெறுவார்களோ; அப்படிப்பட்ட கதியைப் பெற்றார்' என்றனள். தர்மஸ்வபாவனும் ஸத்குலத்திற் பிறந்தவனும் பரிசுத்தனுமாகிய பரதன் தந்தை மரணம் அடைந்தாரென்னும் அவ்வார்த்தையைக் கேட்டவுடனே தந்தையைப் பற்றிய துக்காதிசயத்தினால் கலுங்கித் திடீரெனத் கீழே விழுந்தனன். மஹா

பாஹுவும் பராக்ரம நிதியுமாகிய அந்தப்பரதன் 'ஐயோ! பாழாய்விட்டேனே' என்று கேட்போர்க்கு மன இரக்கத்தை விளைப்பதும் தீனமுமாகிய வார்த்தையைச் சொல்லிக் கொண்டே கைகளை உதறித் தரையில் வீழ்ந்தனன் பிறகு மஹாதேஜஸ்வியாகிய பரதன் தந்தையின் மரணத்தைக் கேட்டு வருந்திச் சோகம் மேலெழப்பெற்று ஒரு நிலையில் நில்லாமற் கலங்கின மனமுடையவனாகி இங்ஙனம் புலம்ப ஆரம்பித்து 'சரத்காலத்து ராத்ரியில் நிர்மலமான ஆகாசம் சந்த்ரனுடன் கூடிப் ப்ரகாசிப்பதுபோல, முன்பு என் தந்தை படுக்கிற இந்தப் படுக்கை அம்மஹானுபாவரால் மிகவும் அழகுற்றுப் ப்ரகாசித்துக் கொண்டிருந்தது. அப்படிப்பட்ட இந்தப் படுக்கை இப்பொழுது அப்புத்திமான் இல்லாமையால், சந்த்ரனில்லாத ஆகாசம் போலவும் ஜலம் வற்றின ஸமுத்ரம்போலவும் அழகழியப் பெற்றுப் ப்ரகாசியாதிருக்கின்றதே' என்று கதறினன். ஜயசாலிகளில் மேன்மையுற்றவனாகிய அந்தப் பரதன் பெருங்குரலுடன் இங்ஙனம் கதறிக் கண்ணீர் பெருக்கிப் பளபள வென்னும் ஒளியுடன் விளங்குகின்ற தனது முகத்தை வஸ்த்ரத்தினால் மூடிக்கொண்டு மிகவும் பரிதபித்து மனம் வருந்தப் பெற்றிருந்தனன். தேவதையைப்போல ப்ரகாசிப்பவனும் மதங்கொண்ட யானையை நிகர்த்திருப்பவனும் சந்த்ர ஸூர்யர்களுக்கு ஒப்பானவனுமாகிய அந்தப் பரதன், வருந்தி வனத்தில் கோடாலியால் அறுப்புண்ட ஸாலமரத்தின் அடிப்பாகம்போல தரையில் விழுந்திருக்கக் கண்டு கைகேயி அவனைப் பூமியினின்றும் எழுந்திருக்க எடுத்துச் சோகத்தினால் பீடிக்கப்பட்டிருக்கிற அன்னவனைக்குறித்து இவ்வாறு மொழியவும் மொழிந்தனள் — 'ராஜனே! பெரும்புகழுடையோனே! எழுந்திரு எழுந்திரு. இங்கு ஏன் படுத்திருக்கின்றனை? ஸபையில் மேன்மைப் படுத்துவதற்குரிய உன்னைப்போன்ற ஸத்புருஷர்கள் எவ்வளவும் மனவருத்த முறார்களல்லவா? மிகுந்த மதியுடையவனே! உன்

புத்தி, தானத்திலும் யஜ்ஞத்திலும் ஊக்கமுற்றிருப்பதல்லவா? அன்றியே நன்னடத்தையையும் வேதவாக்யங்களையும் அனுஸரித்திருக்குந் தன்மையுடையது. ஆகையால் அது, மந்தர பர்வதத்தினால் ஸூர்ய காந்தி மிகவும் விளங்குவதுபோல் உன்னிடத்தில் மிகவும் விளக்கமுற்றிருக்குமல்லவா?' என்றனள். அப்பரதன் வெகு நேரம் அழுதுகொண்டே புவியில் புரண்டுருண்டிருந்து பலவகைச் சோகங்கள் மேலெழப்பெறாத தாயைநோக்கி இங்ஙனம் மொழிந்தனன் — 'அரசர் என்னை அழைத்து வரத் தூதர்களை அனுப்பினரே! ராமனுக்கு எதாயினும் பட்டாபிஷேகம் நடத்துவாரா! அல்லது, நான் எதாவது யாகஞ் செய்வாரா?' என்று மனத்தில் நினைத்து ஸந்தோஷப்பட்டுக்கொண்டு ப்ரயாணமாய் வந்தனன். அப்படிப் பட்ட என் நினைவு மற்றொருவிதமாய் விட்டதே! ப்ரதிதினமும் எனக்கு ஸந்தோஷத்தை விளைத்து மேன்மையைச் செய்துகொண்டிருந்த என் தந்தையைக் காணப்பெறாத என் மனம் இருபிளவாகப் பிளந்துபோவதுபோலிருக்கின்றது. அம்மா! நான் வாராதிருக்கும்பொழுது மன்னவர் எந்த வ்யாதியால் மரணம் அடைந்தனர்? பெற்ற தந்தையைத் தாமே கைகளார ஸம்ஸ்காரஞ் செய்யப்பெற்ற ராமன் முதலியவர்களே புண்யஞ் செய்தவர்கள். மிகுந்த புகழுடைய மஹாராஜா, நான் வந்திருக்கிறேனென்பதை அறியார் இது வாஸ்தவம், அறிவாராயின், சீக்ரமாக வந்து என்னை வணக்கி உச்சிமோந்து ஸந்தோஷப்படுவாரல்லவா? துக்கங்களைத் தொலைக்கும்படியான கார்யங்களைச் செய்யுந்தன்மையராகிய என் தந்தை, எந்த ஹஸ்தத்தினால் தூரத்தினின்று வந்து புழுதிபடிந்த மேனியுடனிருக்கிற என்னைத் துடைத்துக் கொடுப்பாரோ ஸுகஸ்பர்சமுடைய அந்த ஹஸ்தம் எங்கே

இருக்கின்றது? எவன் எனக்கு ப்ராதாவும் பிதாவும் பந்துவும் ஆவானோ, மேலும், எவனுக்கு நான் தாஸனாயிருக்கிறேனோ, யாதொரு வருத்தமுமின்றித் தான் முயன்ற கார்யத்தை நிறைவேற்றுந் தன்மையனாகிய அப்படிப்பட்ட ஸ்ரீராமனுக்கு நான் வந்திருப்பதை வேகமாகத் தெரிவிப்பாயாக. பெரியோர்களின் தர்மத்தை அறிந்தவனுக்குத் தமையன் பிதாவே ஆவானல்லவா? ஆகையால் அவனது பாதங்களைப் பிடித்துக்கொண்டு நமஸ்காரஞ் செய்கிறேன். தந்தை காலஞ் சென்ற பின்பு இனி இப்பொழுது அவனே அன்றோ எனக்குக் கதி? தர்மங்களை அறிந்து தர்மங்களிற்றானே என்றும் தவறாது நடக்குந் தன்மையுடையவரும் ஸத்யஸந்தரும் முன்ற நியமத்தைக் கைவிடாதவரும் உண்மையான பராக்ரமமுடையவரும் பூஜிக்கத்தக்கவருமாகிய என் தந்தை மஹாராஜா என்ன சொல்லிப் போயினார்? அவர் மரணஸமயத்தில் கடைசியாக என்னைக் குறித்து என்ன சொல்லிப் போயினரோ, அதை நன்றாகக் கேட்க விரும்புகின்றேன்' என்று வினவினன். இங்ஙனம் அவன் கேட்கையில், கைகேயி நடந்ததை நடந்தபடியே அவனோடு சொல்லத் தொடங்கி 'நல்ல கதி பெற்றவர்களில் உத்தமரும் மஹானுபாவருமாகிய அம் மஹாராஜா 'ராமா! ஐயோ! ஸீதே! லக்ஷ்மணா!' என்று புலம்பிக்கொண்டே பரலோகம் அடைந்தனர். மேலும், உன் தந்தை பாசங்களால் கட்டுண்ட பெரிய மத்தகஜம்போல மரணத்தில் அகப்பட்டுக் கடைசியாக 'எவர் இவ்விடத்திற்கு ஸீதையோடுகூடத் திரும்பி வருகின்ற ராமனையும் மீண்டு வந்த மஹாபாஹுவாகிய லக்ஷ்மணனையும் பார்க்கப் பெறுவார்களோ, அவரே ப்ரயோஜனம் கைகூடப் பெற்றவர்கள்' என்று இந்தச் சொல்லை மாத்ரமே சொன்னார்' என்று மொழிந்தனள். பரதன் அது கேட்டு

ராமன் பட்டணத்தில் இல்லையென்னும் இரண்டாந்துக்க வார்த்தையைச் சொல்லக் கேட்டதனால் முகவொளி மழுங்க மிகவுந் துக்கித்து மீளவும் தாயைப் பார்த்து 'ராமஸ்வபாவனும் கௌஸல்யைக்கு ஸந்தோஷத்தை விளைக்குந் தன்மையனுமாகிய அந்த ராமன் தம்பி லக்ஷ்மணனோடும் ஸீதையோடுங்கூடி இப்பொழுது எவ்விடம் போயிருக்கின்றான்?' என்று வினவினன். அங்ஙனம் அவன் கேட்கையில், கைகேயி மிகவும் அப்ரியமாகிய பெரியதொரு வார்த்தையைப் ப்ரியமாகப் பாவித்து நடந்ததை நடந்தபடியே முழுமையும் சொல்லத் தொடங்கி, 'பிள்ளாய்! அந்த ராஜகுமாரன் லக்ஷ்மணனோடும் ஸீதையோடுங்கூடி மரவுரிகளை உடுத்து மஹாவனமான தண்டகாரண்யம் போனான்' என்றுரைத்தனள். பரதன் அது கேட்டுத் தன் வம்சத்திற்கு ஸதாசாரத்தில் நிலை நின்றிருக்கையாலுண்டான மஹிமையை நினைத்து 'தனது அண்ணன் எது தவறி நடந்தனனோ! இப்படி அரண்யம் போவதற்கு' என்று அவனது நடத்தையைப் பற்றிச் சங்கித்துப் பயந்து மீளவுங் கேட்கத் தொடங்கி 'ராமன் யாராவதொரு ப்ராஹ்மணருடைய தனத்தை அபஹரிக்கவில்லையன்றோ? மேலும், தனிகனையாவது தரித்ரனையாவது எந்தப் பாபமுஞ் செய்யாத எவனையும் ஹிம்ஸிக்கவில்லையன்றோ? அந்த ராஜகுமாரன் பிறர் மடந்தையர் மீது விருப்பமுற்றானல்லவா? ராமன் எந்தப் பாபத்தையும் அறியானே! ஸமஸ்த வேதபாரங்களும் ஸகல சாஸ்த்ரங்களும் உணர்ந்தவனைக் கொன்றவன்போல் ராமன் தண்டகாரண்யத்திற்கு ஏன் துரத்தப்பட்டான்?' என்று வினவினன். பிறகு ராஜ்யத்தில் விருப்பமுள்ளவளாகிய இவன் தாய் கைகேயி முன்பு ராஜனை வரங் கேட்டபொழுது வெளிப்படுத்தின தன் ஸ்த்ரீ ஸ்வபாவத்தையே அனுஸரித்துத் தான் செய்தது நன்றென்று நினைத்து நடந்தபடியே சொல்ல ஆரம்பித்தனள்.

மஹானுபாவனாகிய பரதன இங்ஙனங் கேட்கையில, கைகேயி மதியறறவளாகையால தனனைப பண்டிதையாக நினைத்து 'நாம இவனுககு ஹிதஞசெயதோம' என்னும ஸநதோஷததுடன அவனைக குறிதது 'ராமன எநத பராஹ்மணனுடைய எநத தனததையும அபஹரிககவிலலை மறறும, தனிகனையாவது தரிதரனையாவது பாபஞசெயயாதவனை ஒருவனையும ஹிமஸிககவிலலை அனறியும, ராமன பிற ஸதரீகளைக கண்ணெடுததாயினும பாரககமாடடான புதலவனே! ராமனுககே படடாபிஷேகம நடபபதைக கேடடு நானே உனககு ராஜயங் கொடுககவேண்டுமெனறும ராமனைக காடடுககு அனுபபவேண்டுமெனறும உன தநதையை வேண்டிககொண்டனன. உன தநதை அமமஹாராஜா சொல தவறாமையாகிற தனதாமததைத தவறமுடியாமல நான வேண்டிககொண்டதை அபபடியே நடத்திவிடடனா ராமனை லக்ஷமணனோடும ஸீதையோடும அடவிககுத துரததிவிடடனா பெரும புகழுடையராகிய அமமனனவா, இபபடி ராமன ஆரணயம போகையில அவவனபககுமாரனைக காணபபெறாமல புதரசோகததினால பரிதபிததுக கொண்டே மரணம அடைநதனா. நீ ராஜநீதிகள அறிநதவன, ஆகையால இபபொழுது ராஜயததைக கைபபறறுவாயாக. நான இதையெலலாம உனககாகவேயனறோ இஙஙனஞ செயதனன? எனனபபனே! நீ, 'மனனவா மரணம அடைநதார' எனகிற சோகததையும, 'ராமன காடடுககுப போனான' என்ற மனஸதாபததையும கொளளவேண்டாம தைரயம் பெறுவாயாக. இநநகரமும உபதரவமொனறுமிலலாத இநத ராஜயமும இனி உனனதனறோ? புதலவனே! இஙஙனம இருபபதுபறறிச சாஸதரஙகளை உணாநத வஸிஷடா முதலிய பராஹமணோததமாகளோடுகூடி,

பினவாஙகாத வீரயம பொருநதிய மஹாராஜருககு விதி யினபடி வேகமாக ஸம்ஸகாரஙகு செயது உனககு இபபூ மண்டலததில படடாபிஷேகஞ செயவிததுககொள்வா யாக' எனறனள. எழுபததிரண்டாவது ஸாககம முற் றிறறு.

## பரதன கைகேயியைத தூறறல.

பரதன, தநதை மரணம அடைநததையும அண ணன தமபிகளை அரணயததிறகு அனுபபினதையும கேடடவுடனே துககததினுல மிகவும பரிதபிதது இஙஙன ஞ சொலலததொடஙகி 'தநதையை இழநது தநதை யைபபோனற உடனதோனறலையும பிரிந்து பாழாகி வருநதுகினற எனககு இஙகு ராஜயததினுல செயய வேணடிய காரயம என? ராஜனை மரணம அடையச செயது, ராமனையும தாபஸனுககிவிடடனையே! துக கததினமேல துககததை விளைததனையே! உரிதத புணணினமேல காரததை இடடாயபோலும நீ எங கள குலம ஒனறுமிலலாமல நசிததுபபோகுமபடி பா லயகால ராததிரிபோல வநதனையே! என தநதை நெருப பைக கடடிககொளவதுபோல உனனைக கடடிக்கொண் டனா. உனனை அறியாமறபோயினா. நீ பாபததி லேயே கணவைததவள. ஆகையால மனனவருககு மருத யுவை விளைததனை. குலததைக கெடுகக வநதவளே! அறிவுகெடடு எமது குலததை இககதிபெறச செயது, அதில ஸுகமெனபது சிறிதும இலலாதிருககுமபடி செயதனையே! ஸதயஸநதரும பெருமபுகழுடையவரு மான என தநதை தசரதமனனவா உனனைககைப பறறியனறோ இபபொழுது கொடிய துக்கததினுல மிக வும பரிதபிதது மாணடனா? என தநதை தாமஙகளில

விருப்பமுடையவர்; அம்மஹாராஜரை ஏன் கொன்று விட்டனை? மேலும், எதற்காக ராமனை ஊரைவிட்டுத் துரத்தினை? எதற்காக அவன் அரண்யம் போயினன்? என்று தாயாகிய உன்னைப்பற்றிக் கௌஸல்யையும் ஸுமித்ரையும் புத்ரசோகத்தினால் பீடிக்கப்பட்டிருக்கின்றனர். இனி அவர்கள் பிழைக்கமாட்டார்கள். ஒருகால் பிழைத்திருப்பார்களாயின், அது அவர்களுக்கு மிகவும் கஷ்டமாகவே இருக்கும். பூஜ்யனாகிய ராமனும் பெரியோரிடத்தில் நடக்கவேண்டிய வழிகளெல்லாம் அறிந்தவன், தர்மஸ்வபாவன். ஆகையால் அவன் தன் தாயிடத்தில் நடப்பது போலவே உன்னிடத்திலும் ஒப்பில்லாத சுச்ரூஷையெல்லாம் நடத்துபவனல்லவா? கௌஸல்யை தூரத்தில் வருமவற்றையெல்லாம் முன்பாகவே அறியுந்திறமுடையவள்; ஆகையால் என் பெரிய தாயான அவளும் அப்படியே தர்மத்தில் முயன்று உன்னை உடன் பிறந்தவளைப்போல் பார்த்துக்கொண்டு வருகிறாளல்லவா? அப்படிப்பட்ட தர்மசீலையின் குமாரனை, பாபிஷ்டே! மிகுந்த மதியுடைய ராமனை நார்த்துணி மரவுரி இவைகளை உடுத்து வனவாஸஞ்செய்ய அனுப்பி மனவருத்தமின்றி எப்படி இருக்கின்றனையோ? ராமன் பாபத்தில் கண்வைப்பவனல்லன், சூரன், நல்ல மதியுடையவன்; மிகுந்த புகழ் அமைந்தவன்; அப்படிப்பட்டவனை நீ மரவுரிகளை உடுத்து ஊரைத் துறந்து போகும்படி அனுப்பினையே! இதற்கு யாது காரணம் உனக்குத் தோற்றியது? இதனால் நீ யாது பயனைப் பெற்றனை? நீ பேராசை பிடித்தவள் ஆனதுபற்றியே நான் ராமனிடத்தில் எப்படி இருக்கிறேனோ, அது உனக்குத் தெரியாதென்று நினைக்கிறேன். அப்படி தெரியாமையைப் பற்றியே எனக்கு ராஜ்யம் வரவேண்டுமென்று இப்படிப்பட்ட பெரிய அனர்த்தத்தைக் கொண்டுவக

தன்னை நான் புருஷஸிம்ஹர்களாகிய ராமலக்ஷ்மணர்களைப் பாராமலே எந்தச் சக்திவிசேஷத்தைக் கொண்டு ராஜ்யபரிபாலனஞ் செய்ய வல்லனவேன்? அவ்விருவர்களேயன்றோ என்னது சக்திவிசேஷம்? எனக்குமாத்ரமே அவனை எதிர் பார்க்கவேண்டுமென்பதில்லை. மஹாபலரும் தாமஸ்வபாவ முள்ளவருமான மன்னவருங்கூட, மேருபர்வதம் தன்னது ரக்ஷணத்தின் பொருட்டுத் தன்னைச் சேர்ந்த அரண்யத்தை எதிர்பார்த்திருப்பது போல், எப்பொழுதும் பலவந்தனுகி விளங்கும் ராமனையே எதிர் பார்த்துக்கொண்டிருந்தாரல்லவா? பெரும்பளுவைத் தூக்கவல்ல பெருங்காளைமேல் ஏற்றவேண்டிய பாரத்தை இளங்கன்று பரிக்கமாட்டாததுபோல், மஹாபலராகிய மன்னவர் நிர்வஹித்துவந்த இந்த ராஜ்யபாரத்தைப் பாலனுகிய நான் எந்த அவலம்பத்தைக் கொண்டு பரிக்கவல்லேன்? ஒருகால் ஸாமம் முதலிய உபாயங்களாலாவது தாரணை முதலிய புத்திபலத்தினாலாவது ராஜபுத்ரனுகிய எனக்குப் பரிபாலனஞ் செய்யச் சக்தி உண்டாயினும், பிள்ளையிடத்தில் பேராசையால் இப்படிப்பட்ட அனார்த்தத்தை விளைவித்த உன் கருத்தைமாத்ரம் நான் ஈடேற்றப்போறேன். ராமனுக்குத் தன்தாயிடத்திற்போலவே உன்னிடத்திலும் எப்பொழுதும் பக்தியோடுகூடிய மனக்கருத்து இல்லாதிருக்குமாயின், பாப நிச்சயமுள்ள உன்னைத் துறக்க எனக்கு விருப்பம் உண்டாகாதிராது. உன்னைத் துறக்கவே நிச்சயிப்பேன். அவனுக்கு உன்னிடத்திலுள்ள கௌரவத்தைப் பற்றியே, 'ஏது கோபிப்பானே' என்று உன்னைத் துறக்க முடியாதிருக்கின்றனன். பாபத்திலேயே கண்ணுடையவளே! ஸாதுக்களின் நடத்தையினின்று நழுவினவளே! எமது பூர்வர்கள் அனைவரும் நனக்கு நிந்திக்கும்படியான இந்தத் தூரபுத்தி உனக்கு எப்படி உண்டாயிற்றே? எமது இக

குலத்தில் பூர்விகர்களுக்குள் பெரியவனுக்கு ராஜ்யாபிஷேகஞ் செய்வதே வழக்கமல்லவா? மற்றை உடன்பிறந்தவர்கள் எல்லோரும் அம்மூத்தவனது மனத்தை அநுஸரிப்பதில் மிக்க ஊக்கத்துடன் நடப்பார்கள். க்ரூர ஸ்வபாவமுடையவளே! நீ ராஜ்யதர்மத்தைப் பாராட்டுபவளல்லையென்றும், ராஜாக்களுக்கு அறுதியாகத் தவறமுடியாமல் நடந்துவருகிற ஸதாசாரம் இன்னதென்று தெரியாதவளென்றும் எனக்குத் தோற்றுகின்றது. ராஜாக்களின் நடத்தையைப் பார்க்கையில், எப்பொழுதும் மூத்தவனே ராஜ்யாபிஷேகம் பெறுகிறானென்று தெரிகிறதல்லவா? இந்த ஆசாரம் அரசர்கள் அனைவர்க்கும் ஸமானமேயன்றி அதிலும் ஸதாசாரத்தில் நிலைநின்ற இக்ஷ்வாகு வம்சத்தரசர்களுக்கு அது மேலும் விசேஷித்திருப்பதல்லவா? அவர்கள் தர்மத்தையே தமக்கு ரக்ஷையாகக் கொண்டிருப்பவர், குலபரம்பரையாக வந்த நடத்தையை எப்போதும் கைவிடாமல் அனுஷ்டித்து வருபவர் அப்படிப்பட்டவர்களுக்கு 'எம்மைப்போன்ற ஸதாசாரமுடையோர் இல்லை' என்று தமது சரித்திரத்தைப் பற்றிய கர்வம் நீ வந்து சேர்ந்தபின்பு தொலைந்துவிட்டதே. எமது வம்சத்திலுள்ளவரே யன்று, உன் பிறந்தகத்து அரசர்களும் தம்குலத்தில் மூத்தவனுக்கே பட்டாபிஷேகம் செய்வது வழக்கம். மேலும், அவர்கள் மிகுந்த மேன்மையுற்றவர்கள் அப்படிப்பட்ட வம்சத்திற் பிறந்தும் எதனால் இப்படிப்பட்ட மதிகேடு உனக்கு நேரிட்டதோ? நீ பாபஞ் செய்ய நிச்சயங்கொண்டவள். ஆகையால் உன் விருப்பத்தைமாத்ரம் நான் நடத்த மாட்டேன். நீ என் பிராணனுக்கு முடிவைக் கொடுக்கும்படியான வ்யஸனத்தை ஆரம்பித்தனை. உன்னிஷ்டத்தை நிறைவேற்றாமை மாத்ரமே அன்று, உனக்குக் கஷ்டத்தையுஞ் செய்கிறேன். இதோ

நான உனககு அப்ரியஞ் செயவதறகாக இபபொழுதே சென்று, பாபமற்றவனும பந்துஜனங்களுககு ப்ரியனும் ப்ராதாவுமாகிய ராமனை அரணயததினின்றுந திருபபி அழைததுக்கொண்டு வரபபோகிறேன. இவவளவே அன்று; ராமனை அங்ஙனம திருபபி அழைததுககொண்டு வநது, தேஜஸஸுடன பரகாசிககினற அவனுககு மிகவும நிலைநின்ற மனததுடன *தாஸனுயிருககப போகிறேன்' என்றன்ன மஹானுபாவனுகிய பரதன இப்படி அகைகேயியை மனவருததம விளைககவலல பறபல வாரததைகளால பீடிததது, மீளவும சோகம மிகுநது மேலெழுப பெறறுப பாவதகுஹையிலுளள ஸிமஹம காஜிபபதுபோல பெருதத கண்டதவனியுடன கதறலிட்டனன. எழுபததுமூனறுவது ஸாககம முறறிறறு

{ பரதன கோபததினை மிகுதியால கைகேயியைப பருஷமாகத தூறறுதலும் சோகததினல மூாசிததலும். }

பரதன தனது தாயாகிய அகைகேயியை அங்ஙனம மிருதுவாக நிநதிதது, மீளவும மிகுநத ரோஷமுறறவனுகி அவளை நோககி இஙஙனம மொழிநதனன:— 'கரூரஸவபாவமுடையவளே! துாநடததையுளளவளே! தாமததினுல துறககபபட்டவளே! உன துாபபுததியைக கணடு தாமம உனனைததீணடவுங்கூட மாட்டாமல ஒதுங்கிப போயவிட்டதே. நீ உன தாயைப போலவே ராஜயததினினறுந தொலைநதுபோவாயாக. உனககு நான செததாறபோலவேயாகையால என்னைச செததவனுக நினைதது அழுதுகொண்டிருபபாயாக. மரணம் அடைநத பாததாவைககுறிதது உனககுச சோகிககவேண்டிய அவச்யமேயிலலை. உனக்கு அதைப பறறி மனவருததம இருககுமாயின நீ இபபடி யிருபப

யோ? பர்த்தாவிடத்தில் பார்யை இருக்கவேண்டிய நிலைமையைக் கடந்தனை யாகையால் உனக்கு மன்னவரின் மரணத்தைப் பற்றிச் சோகிக்கவேண்டிய இடமே இல்லை. ஆகையால் மன்னவரின் மரணத்தைப்பற்றிக் கண்ணீர் பெருக்கவேண்டிய வருத்த மின்றி ஸுகமாயிருப்பாயாக. நீ மஹாராஜருக்கு மரணத்தையும் ராமனுக்கு வனவாஸத்தையும் ஒரேகாலத்தில் விளைத்தனையே! அந்த மன்னவராவது பரமதார்மிகனாகிய ராமனாவது உனது குணத்தையோ நடத்தை முதலியவற்றையோ எதைத் தூஷித்தனர்? கைகேயி! இக்குலத்தை நாசஞ் செய்தாயாகையால் உனக்கு இப்பொழுது ப்ரூணஹத்யை செய்தவளவு பாபம் நேரிட்டதே! ஆகையால் நீ நரகத்திற்கே போவாயன்றி உன் பர்த்தா போன லோகத்திற்கு நீ போகமாட்டாய். பயங்கரமான செய்கையால் கொடுகட்டி ராமனை அரண்யத்திற்கு அனுப்பும்படியான பாபத்தைச் செய்து தீர்த்துவிட்டனை. இதனால் ஸமஸ்த லோகங்களுக்கும் ப்ரியனாகிய அந்த ராமனைத் துரத்தி எனக்கு அவனுடைய ஸம்பந்தமில்லாமற்செய்து பயத்தையே விளைத்தாயன்றி ராஜ்யமாகிற நன்மையை விளைத்தவளல்லை. உன்னைப் பற்றி என் தந்தை மரணம் அடைந்தனர். ராமனும் அரண்யஞ் சென்றனன். ஆகையால் 'தாய் மூலமாகத் தந்தையைக் கொன்று அண்ணனை அரண்யத்திற்கு அடித்தோட்டினன்' என்னும் அபகீர்த்தி இந்த ப்ராணி லோகத்தில் எங்கும் எனக்கு நேரிட்டதே! தாயுருபமாக எனக்கு நேரிட்ட சத்ருவே! கொடுந்தன்மை யமைந்தவளே! ராஜ்யத்தில் ஆசை கொண்டவளே! கெடுநடத்தையுடையவளே! பதியைக் கொன்ற பாபிஷ்டே! என்னோடு பேசாதே. கௌஸல்யையும் ஸுமித்ரையும் மற்றுமுள்ள என் தாய்மார்களும், நீ வம்சத்தைப் பாழாக்க முயன்றமையால் மிக்க மனவருத்த முற்றிருக்கின்றனர்.

என்றும் ஸத்யத்தில் மனவூக்க முடைய தார்மிகனான ராமனை அரண்யத்திற்கு அனுப்பினை. அந்தத் துக்கத்தினால் என் தந்தையும் ஸ்வர்க்கம் அடைந்தனர். ஆகையால் இப்படிப்பட்ட நீ, தர்மத்தையே முக்யமாகக் கொண்ட மன்னவரும் சிறந்த புத்தியுடையவருமாகி விளங்கும் கேகயருக்குப் பிறந்தவளல்லை. அந்தத் தந்தையின் குலத்தைத் த்வம்ஸஞ் செய்யும்பொருட்டு அதில் பிறந்த ராக்ஷஸியே ஆவாய் உனக்குப் பாபகார்யமே முக்யம் அதனால் நீ ஸமஸ்த லோகங்களுக்கும் த்வேஷிக்கத் தக்கவளாயிருக்கின்றனை. அப்படிப்பட்ட பாபம் நீ செய்ததற்கு அதன் பலன் எனக்கும் ஸம்பவித்துத் தந்தையை இழந்து அண்ணன் தம்பிகளும் கைவிடப் பெற்று ஸமஸ்த லோகங்களுக்கும் அப்ரியனும் ஆயினன். நீ பாபத்திற்கே முயன்றவள், ஆகையால் நரகத்திற்கே போகவேண்டியவள் தார்மிஷ்டையான கௌஸல்யைக்குப் புத்ர வியோகத்தை விளைவித்த நீ எந்த நரகத்திற்குப் போவாயோ? ஸ்ருஷ்டித்திருக்கிற நரகம் உனக்குப் போதாதே! கௌஸல்யையின் புதல்வனாகிய ராமன் பரிசுத்தனென்றும் பந்துக்களெல்லோர்க்கும் கதியென்றும் மூத்தவனாகையால் எனக்குத் தந்தை போன்றவனென்றும் அறியாயா என்ன? இப்படிப்பட்ட ராமனைப் பந்து காதுகனென்றே நினைத்தனை![1] புத்ரன் தாயினுடைய முகம் கண்டம் முதலிய அங்கத்தினின்றும் கண் மூக்கு முதலிய உபாங்கத்தினின்றும் ஹ்ருதயத்தினின்றும் பிறக்கிறான் ஆகையால் அவன் தாய்க்கு மற்றை யெல்லோரைக் காட்டிலும் மிகுந்த அன்பிற்கிடமாவான் பந்துக்கள் கேவலம் அன்பிற்கிடமாவார்களேயன்றிப் புத்ரனைப்போல் மிகுந்த அன்பிற்கிடமாகமாட்டார்கள். அங்ஙனம் அவன் ப்ரீதிக்கிடமாயிருப்பதனால் தாய்க்கும் மற்றப் பந்து

---

1 இதற்கு 'அங்காதங்காத் ஸம்பவஸி ஹ்ருதயாதபிஜாயஸே' இது முதலான ஸ்ருதி ப்ரமாணம்

வைபோன்றவனல்லன். முன்னம் ஒருகாலத்தில் ஸகல தாமங்களையும் அறிந்து தேவர்களுங் கௌரவிக்கும்படியான மேன்மையுடைய காமதேனு, பாரத்தைச் சுமந்து வருந்தி மூர்ச்சை அடைந்தவைகளும் தன் வம்சத்தில் பிறந்தமையால் தனக்குப் பிள்ளைகளுமாகிய இரண்டு எருதுகளைக் கண்டது. அக்காமதேனு அன்று மத்யாஹ்னம் வரையில் பாரஞ் சுமந்ததனால் இளைப்புற்றிருக்கிற அப்புத்ரர்களைப் பூமியில் கண்டு அவைகளின் துக்கத்தினால் தானும் துயரம் அடைந்து கண்களிரண்டிலும் நீர் ததும்பப் பெற்றுக் கதறலிட்டது. அப்பொழுது அந்தக் காமதேனுவுக்குக் கீழ்ப்புறத்தில் மஹானுபாவனாகிய தேவேந்த்ரன் போய்க்கொண்டிருக்கையில், அதன் கண்ணீர்களின் சிறு துளிகள் நறுமணங்கமழ்ந்து கொண்டு அந்த இந்த்ரனது சரீரத்தின்மேல் வீழ்ந்தன. இந்த்ரனும் கம்மென்னும் வாஸனையுடன் தன்மேல் விழுந்த அக்கண்ணீர்களைக்கண்டு சிறப்புற்ற காமதேனு ரோதனஞ் செய்கிறதென்று நினைத்தனன். இந்த்ரன் பிறகு நாற்புறத்திலுங் கண்விட்டுப் பார்க்கையில், ஆகாயத்தில் துக்கத்தினால் ஒன்றுந் தோன்றாமல் திகைத்து நின்று நினையாகி மிக்க மனவருத்தத்துடன் அழுதுகொண்டிருக்கிற அந்தக் காமதேனு புலப்பட்டது. வஜ்ராயுதந்தரித்தவனும் தேவர்களுக்கரசனுமாகிய அவ்விந்த்ரன், மிகுந்த புகழுடைய காமதேனு சோகத்தினால் பரிதபிப்பது கண்டு 'யாது வருத்தமோ' என்று பயந்து அஞ்சலியுடன் அருகிற்சென்று 'காமதேனுவே! எம்மைச் சேர்ந்தவர்களில் ஒருவராலும் உனக்குப் பெரும்பயம் ஒன்றும் உண்டாகிறதில்லையல்லவா? ஆனால் நீ இங்ஙனஞ் சோகிப்பதற்குக் காரணம் யாது? நீ யாவர்க்கும் மேன்மை விரும்புந் தன்மையள் உனக்கு யாவர் கெடுதி செய்தனர்? சொல்வாய்' என்றனன் புத்திமானாகிய அந்த வானவரதிபதி இங்ஙனம் வினவுகையில், காமதேனுவும் பேச வல்லவனாகிய இந்த்ரனைப் பார்த்துக் கம்பீரமாக 'ஓ தேவராஜனே!

இப்படிப்பட்ட அமங்கலம் எப்போதும் உண்டாகா திருக்குமாக. உன்னைச் சேர்ந்தவர்கள் ஒருவராலும் எனக்குப் பயம் ஒன்றும் இல்லை. தேவேந்திரனே! பயிர் செய்வார் ஒருவன் பிடித்துப் பீடிக்கையில் இளைப்புற்று வருந்தி ஸூர்யகிரணங்கள் பட்டுப் பரிதபிக்கவும் பெற்று இப்படி ஸங்கடத்தில் அகப்பட்டுக்கொண்டிருக்கிற என் பிள்ளைகளான எருதுகளைப் பார்த்துச் சோகிக்கிறேனன்றி மற்றொன்றும் இல்லை. இவை என் தேஹத்தினின்றும் பிறந்தவையல்லவா? ஆகையால் இங்ஙனம் பளுவை இழுக்கமுடியாமல் பீடிக்கப்பட்டு வருந்துவது கண்டு சோகிக்கின்றனன். இது ஓர் ஆச்சர்யம் அன்று உலகத்தில் எங்காயினும் பிள்ளைக்கொப்பான அன்பன் எவனும் அகப்படான்' என்றது காமதேனு, ப்ரபஞ்சம் முழுவதும் நிரம்பும்படி அநேகமாயிரம் பிள்ளைகளைப் பெற்றதாயினும் இரண்டு பிள்ளைகள் கஷ்டப்படுகிறார்களென்று அழுவதுகண்டு, இந்திரன் புத்திரனைக்காட்டிலும் மேற்பட்டது மற்றொன்றும் இல்லையென்று நினைத்தனன் ஒப்பில்லாத நன்னடத்தையுடையதும் மிகுந்த ஒளிவிளங்கப்பெற்றதும் அளவில்லாத நற்குணங்கள் அமைந்ததும் நினைத்தவுடனே வேண்டியவற்றைப் படைக்க வல்லதுமாகிய காமதேனு ஸ்த்ரீபுருஷர்களின் இயற்கையாகிய ஸந்தாநபரம்பரையால் லோக ஸங்கரஹத்தை விரும்பிப் பலவாயிரம் பிள்ளைகளைப் பெற்றதாயினும் இரண்டு பிள்ளைகளின் கஷ்டத்தைப் பார்த்துச் சோகிக்கின்றதே! இனி ராமனொருவனையே பிள்ளையாகப் பெற்ற கௌஸல்யை இவ்வொரு புதல்வனையும் விட்டுப்பிரிந்து சோகிப்பாளென்பது சொல்லவேண்டுமோ? இவள் போயும் வந்தும் ஒரே பிள்ளையைப் பெற்றவள், மேலும் பதிவ்ரதை. இவளைப் பிள்ளையைத் துறக்கும்படி செய்தனை. ஆகையால் நீ இவ்வுலகத்தில் மாத்ரமேயன்றிச் செத்துப் பரலோகம் போனபொழுதும் என்றும் துக்கத்தையே அனுபவிப்பாய். நான் எனது அண்ணனாகிய ராமனையும் என் தந்தையையும் இங்ஙனம் பரிபூர்ண

மாகப பூஜிதது மிகுநத கீர்ததியை விளைவிததுககொள்
கின்றனன. பூஜிககும விதஞ் சொலலுகிறேன; கேள.
கௌஸலயையின குமாரனும மிகுநத பலமுடையோனு
மாகிய ராமனை அழைததுககொண்டு வநது அவனுககுப
பதிலாக நானே முனிகள வஸிககிற அரண்யததிறகுப
போகினறனன. பாபக கருததுடையவளே! பாவீ! இந
தப பட்டணததிலுளள ஜனங்கள கண்டததில கண்ணீர
தடைபடபபெறறு எனனைப பாரததுககொணடிருக
கையில நீ செயயமுயனற இபபாதகததை நான நிறை
வேறற வலலனலலேன நான அரணயததிறகே போ
வேன. அபபடிபபடட மஹாபாபததைச செயத நீ
நெருபபிலாவது விழுவாய, அலலது, நீயே தணட
காரண்யமாவது செலவாய, அலலது கழுததுககு உச
சுருககாவது போடடுககொளவாய உனககு இவை
தவிர மறறொரு கதி இலலை. நானும, ஸதயபராககரமனு
கிய ராமன ராஜயம பெறுகையில, அதனால என பாபத
தைப போககிககொணடு செயயவேண்டிய காரயததைச
செயது முடிததவனுகிறேன' எனறனன. இபபடி பர
தன மிகுநத கோபங்கொணடு ஸாபபமபோல பெருமூச்
செறிநது, அரண்யததில வேடாகளின ஈட்டி மாவெட்டி
இவைகளால அடியுணடு பளளததில விழும யானை
போல தரையில விழுநதனன. பரந்தபனுகிய அநத
ராஜகுமாரன கோபததினால கண்கள சிவககவும ஆடை
அவிழநது விழவும ஆபரணஙகள் சிதறவும் பெறறு,
உதஸவம முடிநதவுடன இநத்ரதவஜம் கீழ் சாயவது
போல கீழே விழுநதனன. எழுபதது நானகாவது
ஸர்க்கம முறறிறறு.

## பரத சத்ருக்னர்கள் கௌஸல்யையிடம் போதலும், பரதன் கௌஸல்யையோடு ராமனை அழைத்துக்கொண்டு வருவதாகப் ப்ரதிஜ்ஞை செய்தலும்

பராக்ரமம் பொருந்திய பரதன் வெகுநேரஞ்சென்ற பின்பு ப்ரஜ்ஞை அடைந்து கண்களில் நீர் நிரம்பப் பெற்றவனாகி, வருந்துகின்ற தன் தாயைப் பார்த்து, அதற்கு முன்பே தான் வந்திருப்பது தெரிந்து அவ்விடம் வந்திருக்கிற ஸுமந்த்ரன் முதலிய மந்த்ரிகளிடையில், அவர்கள் அறியும்பொருட்டு மீளவும் தாயாகிய அவளை நிந்திக்கத் தொடங்கி 'நான் ஒருகாலும் ராஜ்யத்தை விரும்பவில்லை, அப்படி ராஜ்யத்திற்காகத் தாயுடன் கலந்து ஆலோசித்ததும் இல்லை. அரசன் என்னபிஷேகத்தைப்பற்றி ஆலோசித்த விஷயமும் எனக்குச் சிறிதும் தெரியாது. நான் சத்ருக்னனோடுகூட வெகு தூர தேசத்தில் இருந்தது உங்களுக்குத் தெரியும் அல்லவா? மஹானுபாவனாகிய ராமனுக்கு வனவாஸம் ஏற்படுத்தின விஷயமும் எனக்குத் தெரியாது, அன்றியே லக்ஷ்மணனுக்கும் ஸீதைக்கும் வனவாஸம் எப்படி நேர்ந்ததோ, அதையும் நான் அறியேன்' என்றனன். மஹானுபாவனாகிய பரதன் அங்ஙனமே கதறிக்கொண்டிருக்கையில் அந்த சப்தத்தைக் கேட்டுக் கௌஸல்யை ஸுமித்ரையைப் பார்த்து 'கொடுந்தொழிலுக்கு முயன்ற கைகேயியின் புதல்வன் பரதன் வந்திருக்கின்றனன். [1] அவன் வெகுதூரஞ்சென்றறிய வல்ல மதியுடையவன். ஆகையால் அவனைப் பார்க்க விரும்புகின்றேன்' என்றனள். துக்கத்தினால் ஒளி மழுங்கி அழுக்கடைந்து இளைத்திருக்கிற அந்தக் கௌஸல்யை ஸுமித்ரையுடன் இங்

---

1 இதற்கு 'தீர்கதர்ஸிநம்' என்று மூலம். இதனால் பரதனுக்கு ராமனைத் துரத்தினது ஸம்மதமன்றென்று கௌஸல்யைக்குத் தெரியுமென்று தெரிகின்றது

னம் மொழிந்து, உடனே கிடுகிடுவென்று நடுங்கி பரஜ்ஞையற்றுப் பரதனிருக்குமிடத்திற்குப் போகப் புறப்பட்டனள். அப்பொழுது ராமனது தம்பியாகிய பரதனும் சத்ருக்னனோடு கூடக் கௌஸல்யையிருக்குங் க்ருஹத்திற்குப் போயினன். பிறகு பரத சத்ருக்னர்கள் துக்கத்தினால் வருந்தித் தரையில் வீழ்ந்து பரஜ்ஞை யின்றி அழுதுகொண்டிருப்பவளும் மிகுந்த மேன்மை யுடையவளும் கம்பீரமனமுடையவளுமாகிய கௌஸல் யையின் அருகிற் சென்று அவளைப் பார்த்து மனவருத்த முற்றுக் கதறிக்கொண்டே இருவரும் அவளைக் கட்டிக் கொண்டனர். அப்பொழுது கௌஸல்யை மிகவுந் துய ரம் அடைந்து பரதனைப் பார்த்து மொழிந்தனள் — 'ராஜ்யத்தின் பொருட்டு ஆசைப்பட்டுக்கொண்டிருக் கிற உனக்கு இதோ அகண்டகமான ராஜ்யம் கிடைத் தது. ஐயோ! கைகேயி செய்த கொடுஞ் செய்கையால் த்வரையில் உனக்கு ராஜ்யம் ப்ராப்தமாயிற்று கை கேயியின் காரியம் இது. க்ரூரகார்யங்களில் கண்வைத்த கைகேயி என் புதல்வனை மரவுரி உடுத்து வனத்தில் குடி யிருக்கும்படிக்குச் செய்தனளே! அங்ஙனஞ் செய்தத னால் அவளுக்கு லாபம் என்? ராமனை அரண்யத்திற்கு அனுப்பாமலே ராஜ்யம் பெறக்கூடாதா? ஸர்வாதிகார முள்ள கைகேயி, மிகுந்த புகழுடையவனும் ஸுவர்ணம் போல் பளபளவென்று விளங்கும் சரீரமுடையவனுமா கிய என் புதல்வன் ராமன் எங்கே இருக்கின்றானோ, அவ் விடத்திற்கு என்னையும் இனிச் சீக்கிரமாகவே அனுப்பி விடுவாள். அவ்வளவென்? நான் ஸுமித்ரையையுங்கூ டவே அழைத்துக்கொண்டு ஸுகமாகத்[1] தசரதனது

1 அக்னி, ஜ்யேஷ்ட பார்யைக்கு அதீனமாகையாலும், தசரதன், பரதன் ஸம்ஸ்காரஞ் செய்ய வேண்டாமென்று நிஷேதித்தமையாலும் அவ்வக்னியைத் தான் எடுத்துக்கொண்டு போவதாகக் கௌஸல்யை சொல்லினள். இதனால்—கௌஸல்யை பரதனுக்குக் கைகேயி செய்த பாப ஸம்பந்தத்தினால் ராஜஸம்ஸ்காரத்திற்கு அதிகாரமில்லையென்று ஸூசிப்பித்தாளென்று தெரிகின்றது.

அக்னியையும் அவரது சரீரத்தையும் எடுத்துக்கொண்டு
ராமனிருக்கு மிடத்திற்குப் போகின்றனன். புருஷ
ச்ரேஷ்டனாகிய என் புதல்வன் ராமன் எங்கு தவஞ்
செய்துகொண்டிருக்கிறானோ, அவ்விடத்திற்கு நீயாவது
என்னைக் கொண்டுபோய் விட்டு வரத்தகும். 'உன்னைக்
கொண்டு போய்விட எனக்கு யாது சக்தி' என்பாயோ?
அப்படியன்று; மிகுந்த விஸ்தாரமுடையதும் தன
தான்யங்கள் நிறைந்ததும் ரத்தகஜ துரகபதாதிகள் நிரம்
பியதுமாகிய இந்த ராஜ்யத்தையெல்லாம் உனக்குக்
கைகேயி கொடுப்பித்தனள் அன்றோ?' என்றனள். இது
முதலிய க்ரூர வாக்யங்கள் பலவுஞ் சொல்லிக் கௌஸல்
யை தன்னை வையவும், ஒரு பாபத்தையும் அறியாத
பரதன் முன்னமே தந்தையின் மரணம் முதலியவற்றால்
வருந்தி யிருப்பவனாகையால் புண்ணின்மேல் ஊசியால்
குத்தப் பெற்றவன்போல் அவ்வார்த்தைகளைக் கேட்டு
மிக்க மனவருத்தமுற்றனன். அப்பொழுது மனங் கொ
திக்கப்பெற்ற அப்பரதன் கௌஸல்யையின் பாதங்களின்
மேல் விழுந்து மிகவும் ப்ரஜ்ஞை தப்பியிருந்து பலவாறு
கப் புலம்பி அனந்தரம் தெளிவு பெற்றனன். பரதன்
அப்பொழுது பலசோகங்களால் சூழப்பட்டுப் பெரிய பரி
தாபத்துடன் புலம்புகின்ற கௌஸல்யையைப் பார்த்துக்
கைகளைக் குவித்துக்கொண்டு இங்ஙனம் மொழிந்த
னன் :— 'அம்மா! ராமனிடத்தில் எனக்கு மிகவும்
திடமான பேரன்பு உண்டென்று உனக்குத் தெரியுமே
தெரிந்தும், இவ்வபிஷேகாதிகளை எவ்வளவும் அறியா
மல் எந்தப் பாபத்தையுஞ் செய்யாமல் இருக்கிற என்னை
எதுக்காக இங்ஙனம் நிந்திக்கின்றனை ?' [1] எவன் ராமன்
அரண்யம் போக ஸம்மதித்தானோ, அவன் குருமுகச்

1 இது முதலாகப் பரதன், தன்மேல் கௌஸல்யை ஆரோபித்த தோஷத்தைப் பரிஹரிப்பதற்காகச் சபதவாக்யங்களைச் சொல்லுகின்றனன். இச்சபதங்கள் பரதன் பேரால் சொல்லாமல் ஸாமான்யமாகச் சொன்னபோதிலும் பரதனுக்கே ஸம்பந்திக்கின்றன. மேலும் பரத சபதவ்யாஜத்தால் வால்மீகி தாமவிசேஷங்களைத் தெரிவிக்கிறாரென்றும் தெரிகின்றது.

சாஸ்த்ரங்களை அனுஸரித்துக் கற்ற புத்தி ஒருகாலும் சேரப்பெறு திருப்பானாக. எவன் ஸம்மதித்திருக்கையில் ராமன் அரண்யம் போனானோ, அவன், மிகவும் பாபிஷ்டர்களான ஹீனஜாதிகளுக்கு ஊழியஞ் செய்யப் பெறுவானாக. மேலும், ஸூர்யனுக்கு எதிராக நின்று மலமூத்ரங்களை விட்டவனது பாபத்தை அடைவானாக; நித்ரைபோகின்ற பசுவைக் காலால் மிதித்த பாபத்தில் போவானாக. எவன் ஸம்மதித்திருக்க ராமன் காட்டிற்குச் சென்றானோ, அவன், வேலைக்காரனைக் கொண்டு பெருங்காரியமொன்று நிறைவேற்றிக்கொண்டு அவனது ச்ரமத்தை வீண்செய்யும் ப்ரபுவுக்கு நேரும் பாபத்தை அடைவானாக. எவன் ஸம்மதித்திருக்கையில் ராமன் அரண்யஞ் சென்றானோ, அவன், ப்ரஜைகளைத் தன் பிள்ளைகளைப்போல் பரிபாலனஞ் செய்யும் மன்னவனுக்கு த்ரோஹஞ் செய்பவர்களின் பாபத்தைப் பெறுவானாக. எவன் ஸம்மதித்திருக்கையில் ராமன் அரண்யஞ் சென்றானோ, அவனுக்கு, விளைந்தவற்றில் ஆறில் ஒருபாகம் கப்பம் வாங்கிக்கொண்டு ப்ரஜைகளை ரக்ஷியாதிருக்கிற மன்னவனுக்கு நேரும் பாபம் ஸம்பவிக்குமாக. எவன் ஸம்மதித்திருக்கையில் ராமன் அரண்யஞ் சென்றானோ, அவனுக்கு யாகத்தில் வ்ரதோபவாஸ சீலர்களாகி யாகஞ் செய்விக்கும் ப்ராஹ்மணர்களுக்குத் தக்ஷிணை கொடுப்பதாகப் ப்ரதிஜ்ஞை செய்து பிறகு இல்லையென்று சொல்பவனுக்கு நேரும் பாபம் நேருமாக. எவன் ஸம்மதித்திருக்கையில் ராமன் அரண்யஞ் சென்றானோ, வன் ரத கஜ துரக பதாதிகள் நிறைந்த யுத்த மியில் யுத்தஞ் செய்யும்பொழுது நன்மையுள்ள வீரர்களின் தர்மத்தை இழந்து ஓடிப்போகிறவனுக்கு நேரும் பாபத்தை அடைவானாக. எவன் ஸம்மதித்திருக்கையில் ராமன் அரண்யஞ் சென்றானோ, அவனு

புத்தியில் பிறந்த ஆசார்யன் பரலோக ஸாதனங்களாகிய ரஹஸ்யார்த்தங்களோடு வேதாந்த சாஸ்த்ரத்தை யத்னத்துடன் உபதேசிக்கையில், துர்புத்தியஞகி அதை மறந்தவனுக்கு ஸம்பவிக்கும் பாபத்தை அடைவானுக எவனுடைய ஸம்மதியின்படிக்கு ராமன் அரண்யஞ் சென்ருனே, அவனுக்கு, அழகிய புஜங்களுந் தோள்களுமுடையவனும் ஸூர்யனையும் சந்திரனையும் நிகர்த்த ஒளியுடையவனுமாகி ராஜ்யாபிஷேகம் பெற்றுச் சிங்காசனத்தில் வீற்றிருக்கின்ற ராமனைக் கண்டு களிக்கும் பாக்யம் இல்லாதிருக்குமாக. எவனுடைய ஸம்மதியைக்கொண்டு ராமன் அரண்யத்திற்குச் சென்ருனே, அவன், பாயஸத்தையும் எள்ளும் வெல்லமுங்கலந்த பக்ஷ்யத்தையும் மேஷமாம்ஸத்தையும் தேவதைகளுக்கும் பித்ருக்களுக்கும் அதிதிகளுக்கும் அமுது செய்யப்பண்ணுமல் வீணுக்கத் தயையின்றிப் பக்ஷிப்பவனும், தாய் தந்தை முதலிய பெரியோர்களைக் கௌரவிக்காமல் அவமதிப்பவனுமாவானுக. எவன் ஸம்மதித்திருக்கையில் ராமன் அரண்யஞ் சென்ருனே, அவன் பசுவைக் காலால் உதைத்தவனும், தானகவே குருவை நிந்தித்தவனும், ஸ்னேஹிதனுக்கு மிகுந்த அபகாரம் நினைத்தவனும் ஆவானுக எவனுடைய ஸம்மதியின்மேல் ராமன் அரண்யஞ் சென்ருனே, அவன், தன்னேடு ஒரு ஸ்னேஹிதன் நம்பிக்கையால் ரஹஸ்யமாக ஏதேனும் ஓர் அபவாதத்தைச் சொல்ல, அதை மதிகெட்டு வெளியிட்டவனுவானுக. எவன் ஸம்மதித்திருக்கையில் ராமன் அரண்யம் போனுனே, அவன் பரோபகாரஞ் செய்யாதவனும், பிறர் செய்த உபகாரத்தை மறந்தவனும், ஸத்புருஷர்களால் துறக்கப்பட்டவனும், உச்சுளுக்கு முதலியவற்ருல் ப்ராணன்களை விட்டு துர்மரணம் அடைந்தவனும், பாபத்தைச் செய்து ப்ராயச்சித்தத்தையாவது செய்து

கொள்ளாமல் வெட்கமின்றித் திரிபவனுமாகி உலகத்தில் அனைவரும் த்வேஷிக்குந் தன்மையுடையவனும் ஆவானாக. எவன் ஸம்மதித்திருக்கையில் ராமன் அரண்யம் போனானோ, அவன் தன் வீட்டில் பிள்ளைகளும் பார்யைகளும் வேலைக்காரர்களும் சுற்றியிருந்து பார்த்துக் கொண்டிருக்கையில், அவர்களுக்குச் சிறிதும் இடாமல் தான் மாத்ரம் அறுசுவை அமைந்த மேலான ஆஹாரத்தை உட்கொள்பவனுக்கு ஸம்பவிக்கும் பாபத்தை அடைவானாக. எவன் ஸம்மதித்திருக்கையில் ராமன் அரண்யம் போனானோ, அவன் தகுந்த குலத்திற் பிறந்த நல்ல பார்யையைப் பெறாமல் அக்னிஹோத்ரம் முதலிய தர்மகார்யங்களைச் செய்யாமல் ஸந்தானங்கூட உண்டாக நேராமல் இங்ஙனம் இஹலோக ஸுகத்தினின்றும் பரலோகஸுகத்தினின்றும் நழுவி மரணம் அடைவானாக. எவன் ஸம்மதித்திருக்கையில் ராமன் அரண்யம் போனானோ, அவன் பூர்ணாயுஷ்யம் பெறாமல் மனவருத்த முற்றுத் தன்பார்யையிடத்தில் ஸந்தானத்தைக் காண நேராதிருப்பானாக. எவன் ஸம்மதித்திருக்கையில் ராமன் அரண்யம் போனானோ, அவனுக்கு, மன்னவன் மடந்தை இளம்பிள்ளை கிழவன் ஆகிய இவர்களை வதிக்கினும், வேலைக்காரனைப் போஷியாமல் கைவிடினும் எந்தப் பாபம் ஸம்பவிக்குமோ, அந்தப் பாபம் ஸம்பவிக்குமாக. எவன் ஸம்மதித்திருக்கையில் ராமன் அரண்யம் போனானோ, அவன் எப்பொழுதும் அரக்கு மத்ஸ்யம் மாம்ஸம் லோஹம் விஷம் இவை முதலிய நிஷித்தவஸ்துக்களை விக்ரயஞ் செய்து பரிக்கவேண்டிய தாரபுத்ராதி குடும்பபோஷணஞ் செய்வானாக. எவன் ஸம்மதித்திருக்கையில் ராமன் அரண்யம் போனானோ, அவன், சத்ருபக்ஷத்திற்குப் பயங்கரமான யுத்தம் ஸமீபித்து வருகையில் பயந்து பின்வாங்கி ஓடிச்செல்கையில் அடிக்கப் படுவானாக. எவன் ஸம்மதித்திருக்கையில் ராமன் அரண்யம் போனானோ, அவன் கபாலத்தைத்

தரித்து மரவுரி உடுத்துப பித்தம் பிடித்தவனபோல இபபூமி முழுவதும பிசசையெடுததுத திரிவானுக. எவன ஸமமதிததிருககையில ராமன அரணயம போனுனே, அவன எபபொழுதும காமககுரோதஙகளால வருநதபபட்டு எபபொழுதும மதயபானஞ செயதுகொணடு ஸதரீலோலனுயிச சூதுசதுரஙகஙகளில மனமூககமுற்றிருபபானுக எவன ஸமமதிததிருககையில ராமன அரணயம போனுனே, அவன தாமத்தில மனஞசெலலப பெறுமல அதாமததையே செயதுகொணடிருபபானுக; மேலும அவன ஸதபாதரஙகளிற சிறிதும கொடுக்காமல அஸதபாதரஙகளுககே தானஞசெயவானுக. எவன ஸமமதிததிருககையில ராமன அரணயம போனுனே, அவன ஆயிரமாயிரமாக ஸமபாதிதத பலவகைத் தனஙகளையும திருடர் திருடிககொண்டுபோவார்களாக. எவன ஸமமதிததிருககையில ராமன அரணயம போனுனே, அவனுககு, ஸந்தயோதயததிலும ஸந்தயாஸதமயததிலும நிதரை செயபவனுககு நேரும பாபம ஸமபவிககுமாக. எவன ஸமமதிததிருககையில ராமன அரணயம போனுனே, அவன, வீட்டினமேல நெருபபை வைததவனுககும குருபாரயையிடம போனவனுககும மிதரததுரோஹஞ செயதவனுககும உளள பாபஙகளைப பெறுவானுக எவன ஸமமதிததிருககையில ராமன அரணயம போனுனே, அவன தேவதைகளுககும பிதருககளுககும தாயதநதைகளுககும சுசுரூஷை செயயாதவனுககு நேரும பாபததை அடைவானுக. எவன ஸமமதிததிருககையில ராமன அரணயம போனுனே, அவன சீககிரமாக இபபொழுதே ஸதபுருஷககுழாததினினறு நழுவிபபோவானுக, ஸதபுருஷாகள செயயும புகழசசிககுப பாததிரமாகாதிருபபானுக, ஸதபுருஷாகள் செயயுங காமஙகளை இழநதிருபபானுக. எவன ஸம்மதிததிருககையில முழநதாள வரையில நீணட பாஹுதணடஙகளை யுடையவனும அகனறழகிய மாாபமையு

தவனுமாகிய ராமன் அரண்யம் போனானோ, அவன் மாத்ருசுச்ருஷையைத் துறந்து அனார்த்தத்தில் நிலைநின்றிருப்பானாக. எவன் ஸம்மதித்திருக்கையில் ராமன் அரண்யம் போனானோ அவன் பல புதல்வர்களைப் பெற்று தரித்ரனாகி ஜ்வரம் முதலிய ரோகங்களும் உண்டாகப் பெற்று எப்பொழுதும் மனவருந்த முற்றிருப்பானாக. எவன் ஸம்மதித்திருக்கையில் ராமன் அரண்யம் போனானோ, அவன் உயர்ந்த ஆஸனத்தின்மேல் வீற்றிருக்கிற தன்னைக் கண்களை மேலெடுத்துப் பார்த்துப் புகழ்ந்து தீனர்களாகி யாசிப்பவர்களின் ஆசையை வீண் செய்வானாக. எவன் ஸம்மதித்திருக்கையில் ராமன் அரண்யம் போனானோ, அவன் என்றும் அதர்மஸ்வபாவனும் மன இரக்கமற்றவனும் கபடமுடையவனும் தூய்மையற்றவனும் மன்னவனிடம் பயந்தவனுமாகி வஞ்சனை செய்து களித்திருப்பானாக. எவன் ஸம்மதித்திருக்கையில் ராமன் அரண்யம் போனானோ, அவன் பதிவ்ரதையான தன் பார்யை ருதுஸ்நானஞ் செய்து ருதுகால நியமத்தை அனுஸரித்துத் தன்னை அடுத்திருக்கையில் கெடுமதியனாகி அவளை உல்லங்கனஞ் செய்திருப்பானாக. எவன் ஸம்மதித்திருக்கையில் ராமன் அரண்யம் போனானோ, அவன் தர்மத்தில் ஆஸக்தியை இழந்து மூடனாகித் தனது தர்மபத்னியை விட்டுப் பரஸ்த்ரீகமனஞ் செய்வானாக. எவன் ஸம்மதித்திருக்கையில் ராமன் அரண்யம் போனானோ, அவன் ஸந்தானத்தை இழந்த ப்ராஹ்மணனுக்கு நேரும் பாபத்தை அடைவானாக. எவன் ஸம்மதித்திருக்கையில் ராமன் அரண்யம்போனானோ, அவன் அனைவரும் குடிக்கத்தகுந்த ஜலத்தைக் கலக்கிப் பாழ் செய்தால் எந்தப் பாபமோ, எவனுக்காவது விஷத்தைக் கொடுத்தால் எந்தப் பாபமோ, அவ்விரண்டு பாபங்களையும் ஒருவனே அடைவானாக. எவன் ஸம்மதித்திருக்கையில் ராமன் அரண்யம் போனானோ. அவன் இந்த்ரியங்கள் கெட்டு ப்ராஹ்மணனுக்குச்செய்ய நிச்ச

விதித்த பூஜையைக் கெடுத்தவனாவானாக. பின்னும், ஈன்று பத்து தினங்களுஞ் செல்லாத இளங்கன்றுடைய பசுவைப் பால் கறப்பானாக. எவன் ஸம்மதித்திருக்கையில், ராமன் அரண்யம் போனானோ, அவன் தன் வீட்டில் குடிநீர் இருப்பினும் ஜலங்குடிக்க விரும்பினவனுக்கு அதைக் கொடாமல் மோசஞ் செய்பவனுடைய பாபத்தில் போவானாக. எவன் ஸம்மதித்திருக்கையில், ராமன் அரண்யம் போனானோ, அவன் இருவர் விவாதஞ் செய்து கொண்டிருக்கையில், அவர்களில் ஒருவனிடத்தில் ஸ்னேஹத்தினால் அவனுக்கு ஜயோபாயத்தை ஆராய்ந்து பார்த்துச் சொல்லுகிறவனுடைய பாபத்தையும், ஜயோபாயந் தெரிந்தும் ஒருவனிடத்தில் ஸ்னேஹத்தினால் அதைச் சொல்லாமல் வெறுமனே பார்த்துக் கொண்டிருப்பவனுக்கு நேரும் பாபத்தையும் அடைவானாக' என்றன்ன ராஜகுமாரனாகிய அந்த பரதன், பர்த்தாவை இழந்து புத்ரனையும் விட்டுப் பிரிந்திருக்கிற கௌஸல்யைக்கு ஸமாதானம் உண்டாகுமாறு இங்ஙனஞ் சொல்லிக்கொண்டே துக்கத்தினால் வருந்திப் பூமியில் விழுந்தனன். கௌஸல்யை அங்ஙனம் செவி கொடுத்துக் கேட்க முடியாத சபதங்களைச் செய்து பரிதபித்து மூர்ச்சித்துக் கிடக்கிற பரதனைப் பார்த்து, 'பிள்ளாய்! நீ இங்ஙனஞ் சபதஞ்செய்யக் கேட்டு என் மனவருத்தம் மேன்மேலும் வளர்ந்து வருகின்றது. [1] இங்ஙனம் சபதங்களால் சபிக்கிற நீ என் ப்ராணன்களை வருத்துகின்றனை என்னப்பா! பாக்யவசத்தினால் உன்மனம் பெரியோனை அனுவர்த்திக்கையாகிற தர்மத்தினின்றும் தவறாதிருக்கின்றது என்விஷயத்தில் லக்ஷ்மணனைப்போல் நீயும் ப்ரதிஜ்ஞையை தவறாதவனாயிருக்கின்

1 'ப்ராணாநவருணத்ஸிமே' என்று மூலம், ப்ராணன்களைத் தடுக்கிறாயென்று பொருள். ராமவியோகத்தினால் போகின்ற ப்ராணன்களைச் சபதங்களையிட்டுப் போகவொட்டாமல் நிறுத்துகிறாயென்று கருத்து. இங்ஙனம் அர்த்தாந்தரம்.

றனே. ஆகையால் ஸத்புருஷர்கள் பெறும் லோகங்களைப் பெறுவாயாக' என்று மொழிந்து உடன்பிறந்தவனிடத்தில் மிகுந்த ப்ரீதியுடைய மஹாபாஹுவான அப்பரதனை எடுத்துத் துடையின்மேல் உட்காரவைத்துக் கட்டியணைத்து மிகுந்த மனவருத்தத்துடன் கண்ணீர் பெருக்கினன். இங்ஙனம் சபதங்களைச் சொல்லிப் புலம்பிப் பரிதபிக்கின்ற அந்த மஹானுபாவனுடைய மனம் மூர்ச்சையாலும் சோகத்தாலுண்டான ஆயாஸத்தினாலும் மிகவும் கலக்கமுற்றது. அவன் பலவாறாகப் புலம்பி ப்ரஜ்ஞையை இழந்து மதியும் ஒழியப்பெற்றுப் பூமியில் விழுந்து அடிக்கடி உஷ்ணமாகப் பெருமூச்செறிந்து சோகித்துக் கொண்டிருக்கையில், அன்றிரவு கடந்து சென்றது. எழுபத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

## பரதன் தசரதனுக்கு ஸம்ஸ்காரஞ் செய்தல்

பேச அறிந்தவர்களில் மேன்மையுள்ளவரும் மேலான வாக்குடையவருமான வஸிஷ்டமஹர்ஷி இங்ஙனஞ் சோகத்தினால் மிகவும் பரிதபித்துப் புலம்புகின்ற கைகேயியின் புதல்வனாகிய பரதனைப் பார்த்து 'ராஜகுமாரனே! மிகுந்த புகழுடையவனே! துக்கப்பட்டது போதும் நீ துக்கப்படத் தகாது. உனக்கு மங்கலம் உண்டாகுக. தசரத மஹாராஜன் ஸ்வர்க்கம் அடைவதற்குரிய உத்தரக்ரியைகளைச் செய்வாயாக. அதுவன்றோ இந்த ஸமயம் செய்யத் தக்கது' என்றனர். தர்மங்களையறிந்த பரதன் வஸிஷ்டர் சொன்ன வார்த்தையைக் கேட்டு, தைர்யத்துடன் மனத்தை நிலைநிறுத்திக்கொண்டு தந்தைக்குச் செய்யவேண்டிய பரேத கார்யங்களை யெல்லாம் நடத்தினன். தசரதனைத் [1] தைலத்ரோணியினின்றும் எடுத்து எண்ணெயைத்

1. தைலத்ரோணி - எண்ணெய்க் கொப்பரை.

துடைபபதற்காகப பூமியிலிட்டனா. எண்ணெயில ஊறி
யிருபபதால பொனவர்ண முண்டாகபபெறறு அவயவங
கள அழியாமலிருபபதால நிதரை செயகினறவனபோ
லிருககிற அவவரசனது சரீரததைப பலவகை ரத்னங
களால அலஙகரிககபபட்ட மேலான மஞசததில விட்டு,
பிறகு புதரனுகிய பரதன மிகுநத மனவருததஙகொண்டு
இஙஙனம புலமபினன — 'மனனவனே! நான தேசாந
தரஞ் சென்று இவவிடம திருமபி வராதிருககுமபொ
ழுது, தாமங்களை யுணாநத ராமனையும மஹாபலனுன
லக்ஷ்மணனையும அரணயததிறகு அனுபபி நீ இபபொ
ழுது ஸ்வர்க்கம் போக முயறசி கொண்டது ஏனோ?
மஹாராஜனே! அனைவாககும மனக்களிபபை விளைக்
குமபடியான காரயத்தைச செயபவனும நினைதத கார
யங்களை அனாயாஸமாகச செயது முடிககுநதனமையனு
மாகிய ராமனை இழநது வருநதுகினற இநத ஜனததை
உதாஸிதது விட்டு எவவிடமபோகமுயனறனை? தநதை
யே! நீ அரசனனறோ? அஙஙனமிருகக நீ ஸவாககம
போயினையே; ராமனும அரணயஞ் சென்றனே; இனி
உன பட்டணததிறகு யோக க்ஷேமம விசாரிபபவன
யாவன? ராஜனே! நீ இலலாமையால இபபூமி விதவை
யாகி விளகக முறறிருககினறது. மறறும, இநதகரி சந
திரனிலலாத ராததிரிபோல எனககுத தோறறுகினறதே'
எனறிவவாறு புலமபினன அனநதரம வஸிஷ்டமா
முனிவா இஙஙனம மனநதளாநது வருநதுகினற பரத
னைப பாாதது மீளவும 'நீண்ட புஜஙகளுடையவனே!
அரசனுககு இபபொழுது பரேதகாரயஙகள எவை
செயயவேண்டுமோ, அவைகளை மனவூககததுடன பொ
ழுதுபோககாமல ஏமாறுதலினறி எலலாவறறையும
நடததுவாயாக' எனறனா. பரதனும 'அபபடியே'
எனறு வஸிஷடா சொனன வாாததையைப பூஜிதது
ருத்விககுகளையும புரோஹிதாகளையும் ஆசாாயாகளை

யும மற்றுமுள்ள எல்லோரையும 'சீக்ரமாக நடத்துவீர்கள்' என்று த்வரைபபடுத்தினன. ராஜக்ருஹத்தில உள்ளே சவும இருக்கையால வெளியிற்கொண்டு வைக்கபபட்ட காரஹபதயம முதலிய அக்னிகளை, ருத்விக்குகளும புரோஹிதர்களும விதியினபடிகொணடுவந்தனா பிறகு பரிசாரகாகள் மரணமடைந்த மன்னவனைப பல்லக்கில எடுத்துவைத்து மனவருத்தமுற்றுக கண்ணீரால தடைபட்ட கணடங்களுடையவாகளாகித தூக்கிக்கொணடு போயினா அப்பொழுது ஜனங்கள பொன்னுலும வெள்ளியாலுஞ செய்யபபட்ட புஷபங்களையும பலவித வஸ்த்ரங்களையும வழியில இறைததுககொணடு அரசனுககு முனனே சென்றனா. அப்படியே மற்றுஞ சிலா சந்தனபபொடிகளையும அகிலசூரணங்களையும குங்கிலியங்களையும ஸரலமெனனும த்ரவயததையும பதமகமெனனும வாஸனையுள்ள காஷ்டசூரணத்தையும தேவதாருசூரணததையும மற்றுமுள்ள பலவகை வாஸனத்ரவயங்களையும முன்னும இரணடு பககத்திலும பிடித்துககொண்டு வருகிற பொனவெள்ளிமயமான குமட்டிகளில இறைத்துககொணடிருந்தனா அனந்தரம அவவிடம போனபினபு அரசனுடைய ருத்விக்குகள் ராஜசரீரத்தை அந்தப பல்லக்கினினறும எடுத்துச சிதையின்மேல படுக்கவிட்டனா உத்காதா முதலிய ருத்விக்குகள பரதனைககொணடு மனனவனுக்கு அக்னிபரதானஞ செயவிததுப பித்ருமேத்ததிற்குரிய மந்த்ரங்களை ஜபித்தனா. அங்கு ஸாமவேதங்களையறிந்த அந்த ருத்விக்குகள் சாஸ்த்ரந தவறாமல ஸாமகானஞ செய்தனா. அப்பொழுது அம்மன்னவனது பாரயைகள வயது முதிர்ந்த பரிசாரகாகள சூழந்து வரபபெற்றுத் தந்தமக்குரியபடி பல்லக்குமீதும குதிரை முதலிய வாஹனங்களமீதும பட்டணததினினறும புறப்பட்டு அவவி

டம் வந்து சேர்ந்தனர். அப்பொழுது ருத்விக்குகளும் மனவருத்தத்தினால் பரிதபித்துக்கொண்டிருக்கிற கௌஸல்யை முதலிய ஸ்த்ரீகளும் பரதனும் அஶ்வமேதம் முதலான பலயாகங்கள் செய்த அம்மன்னவனுக்கு அப்ரதக்ஷிணமும் ப்ரதக்ஷிணமும் செய்தனர். அங்கு அந்த துக்கஸமயத்தில் ஸ்த்ரீகள் துக்கத்தினால் பீடிக்கப்பட்டவர்களாகி க்ரௌஞ்சப் பறவைகள்போல் மன இரக்க முண்டாகும்படி பலவாறாகப் புலம்பிக் கதறும் கோஷம் செவிப்பட்டது. அனந்தரம் அந்த மடந்தையர் மணிகள் கண்ணீர் பெருக்கிப் பரவசர்களாகி அடிக்கடி கதறிவிட்டு வாஹனங்களில் ஏறிக்கொண்டு ஸரயூ நதியின் கரையில் வந்திறங்கினர் ராஜபார்யைகளும் மந்த்ரிகளும் புரோஹிதர்களும் பரதனுடன் கூடி மன்னவனுக்கு ஜலதர்ப்பணஞ் செய்து பட்டணத்தில் ப்ரவேசித்துக் கண்ணீர் பெருக்கிக் கதறிக்கொண்டே தரையில் படுத்துக்கிடந்தனர். இங்ஙனம் மன வருத்தத்துடன் [1] பத்துநாள் ஆசௌசங் கடத்தினர். எழுபத்தாறாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

1 'ஷோடஶாஹேந பூபாலா:' என்று க்ஷத்ரியனுக்குப் பதினாறு நாள் வரையிலும் தீட்டுண்டாயிருக்கையில், இங்குப் பத்து தினங்களில் தீட்டு கழிந்தமை யெப்படி யென்றால்— 'க்ஷத்ரியஸ்து தஶாஹேந ஸ்வகர்மநிரதஶ்ஶுசி:' (தனக்கு ஏற்பட்ட கர்மங்களைத் தவறாமல் நடத்திய பரிசுத்தனாயிருக்கும் க்ஷத்ரியன் பத்து தினங்களில் தீட்டு கழியப் பெறுவான்) என்னும் விசேஷசாஸ்த்ரத்தைப் பற்றிப் பத்து தினங்களில் தீட்டு கழிந்தமை உசிதமென்று கண்டு கொள்க.

[பரதன் பன்னிரண்டாவது நாள் ஸ்ரீராத்தஞ்செய்தலும், பரத சத்ருக்னர்கள் தந்தையை நினைத்துச் சோகிக்க வஸிஷ்டாதிகள் ஸமாதானப்படுத்தலும்.]

அனந்தரம் பத்து தினங்கள் கடந்துபோகையில் பதினொன்றாவது நாள் ராஜபுத்ரனான பரதன் புண்யாஹவாசனம் முதலியவற்றை நடத்தி ஆசௌசந் தீர்த்துப் பன்னிரண்டாவது நாள் வருகையில் அன்றையதினஞ் செய்யவேண்டிய ஸ்ராத்தகர்மங்களை நிறைவேற்றினன். மேலும், அந்த ராஜகுமாரன் ப்ராஹ்மணர்களுக்கு ரத்னங்களையும் தனத்தையும் புஷ்கலமான அன்னத்தையும் மேலான வஸ்த்ரங்களையும் பலவகை உயர்ந்த வஸ்துக்களையும் தானஞ்செய்தனன். மற்றும் புதல்வனாகிய பரதன் தந்தையாகிய அம்மன்னவனுடைய ஔத்தரக்ரியையை உத்தேசித்து ஆட்டுமந்தைகளையும் மிகுந்த வெள்ளியையும் நூறுநூறாகப் பசுக்களையும் தாஸதாஸீ ஜனங்களையும் வாஹனங்களையும் மிகவும் பெரிய வீடுகளையும் ப்ராஹ்மணர்களுக்குத் தானஞ்செய்தனன். பிறகு பதின்மூன்றாவது நாள் காலையில் பரதன் அஸ்திஸஞ்சயனத்தின்பொருட்டுத் தஹனஞ்செய்த இடத்திற்கு வந்து சோகத்தினால் மனவருத்த முற்றுப் பெருங்குரல் பாய்ச்சி ரோதனஞ் செய்தனன். அங்ஙனம் அவன் பெருந்துயரமுற்றுத் தந்தையின் சிதைக்கருகில் அவனைக் குறித்து 'என்னப்பனே! நீ என்னை எவனிடத்தில் ஒப்புவித்தனையோ' அப்படிப்பட்ட என் தமையனாகிய ராமன் அரண்யஞ்சென்றனனே! திக்கில்லாவிடத்தில் கைவிட்டுப் போயினையே! மன்னவனே! என்னைப் பெற்ற தந்தையே! அநாதையான கௌஸல்யைக்குக் கதியான புதல்வனை அரண்யம்போக அனுப்பினையே! பிள்ளையைப் பிரிந்து திகைத்திருக்கின்ற அன்னையாகிய அந்தக் கௌஸல்யையையுங்கூட விட்டு எங்குப் போயினை' என்று கதறினன். அப்பால் பரதன், தன் தந்தையின் சரீரத்தை யிட்டு தஹனஞ் செய்யப்பெற்றதும்

னருக எரிந்து சிவந்து நீறு பூத்ததும் வெந்துபோன எலும்புகளுடன் கூடியதுமான சிதா மண்டலத்தைக் கண்டு உரக்கக் கதறி வருந்தினன். பரதன் அங்ஙனம் அந்தச் சிதையைக் கண்டவுடனே ரோதனஞ் செய்து மிகவும் தீனனாகி, கயிறுகளால் மேலெடுக்கப்பட்ட இந்த்ர த்வஜம் கயிறறுந்து கீழே விழுவதுபோல பூமியில் விழுந்தனன். அனந்தரம் அவன் அவ்வண்ணம் அவஸ்தைப் படுவது கண்டு ஜ்ஞாதிகள் அனைவரும் புண்யக்ஷயத்தினால் கீழே விழுந்த யயாதியை அவனது தௌஹித்ரர்களான ரிஷிகள் எழுந்திருக்க எடுத்தாற்போல, தூய நெறியுடையோனாகிய அவனை எழுப்பியெடுக்கும்பொருட்டு அருகில் வந்தனர். சத்ருக்னனோ அதுவரையில் தைர்யத்தோடிருப்பினும் பரதன் விழுவதைக்கண்டவுடனே தைர்யமெல்லாம் அழியப்பெற்று மன்னவனை நினைந்து மிகவும் வருந்தி மெய்மறந்து பூமியில் மூர்ச்சித்து விழுந்தனன். அந்த சத்ருக்னன் அந்தந்த ஸமயங்களுக்குரியபடி இஷ்டங்களைக்கொடுத்து உபலாலனஞ் செய்பவைகளான தந்தைக்குள்ள அவ்வோ குணங்களையும் அவனது அவயவங்களையும் நினைந்து மிகவும் வருத்தமுற்று மெய்ம் மறந்து பித்தம் பிடித்தவன்போல பிதற்றத் தொடங்கி 'மந்தரையிடத்தினின்றுண்டானதும் கைகேயியாகிற முதலையோடு கூடியதும் வரதானமாகிற ஜலம் நிரம்பியதும் மிக்க ஆழமுள்ளதும் கலக்கமுடியாததுமான இந்தத் துக்கமென்னும் ஸமுத்ரம் எங்களை மூழ்கச் செய்து விட்டது. என்னப்பா! நீ எப்பொழுதும் ஆதரித்து மேன்மைப்படுத்திவரும் ஸுகுமாரனும் பாலனுமாகிய பரதன் புலம்பிக்கொண்டிருக்கையில், அவனை விட்டு நீ எவ்விடம் போயினையோ? அண்ணா! போஜ்ய பதார்த்தங்களிலும் பானத்ரவ்யங்களிலும் ஆடையாபரணங்களிலும் 'உனக்கு எது இஷ்டமோ அதை எடுத்துக்கொள்' என்று பலாத்காரஞ் செய்து எமக்கு

இஷ்டமானவற்றை நாஙகளே எடுததுக கொள்ளுபபடி செயது எஙகளெல்லோரையும் ஆதரிததுவநதனையே! அபபடி எங்களுககு இனிச செயபவன யாவன? தாமங்களை யுணாநதவனும மஹானுபாவனும சிறநத மனனவனுமாகிய உனனைப பிரிநதும பூமி இரணடுபிளவாகப பிளநது போகவேணடியகாலம நோநதிருபபினும பிளவாதிருககினறதே! ஆகையால இப பூமி பராளயகாலததிலும பிளவாததுபோல தோறறுகினறது. தநதையும ஸவாககம அடைநது ராமனும காட்டுககுப போகையில எனக்குப பிழைததிருககச் சகதி யாதிருககினறது? நெருபபில குதிதது பராணனகளை விடவேணடுமேயனறி வேறிலலை அணணனையும தநதையையும இழநத நான இக்ஷ்வாகு வமசததரசாகளால் பரிபாலிககபபட்ட அயோதயாபுரம இஙஙனம பாழடைநதிருககையில எவவிதததிலும அதில நுழையமாட்டேன தபோவனத்திறகே போவேன' எனறு கணணீா பெருககி அழுதனன. அவவிருவரும அஙஙனம புலமபுவதைக கேட்டு அபபடிபபட்ட அநத வயஸனததையும பாாதது அவாகளைப பினதொடாநது வநதவாகள அனைவரும மிகுநத மனவருததமுறறனா. பிறகு பரதசததருகனாகளிருவரும மனவருததததுடன புலமபிப புலமபி மிகவும ஆயாஸம அடைநது கொமபுகள ஒடியபபெறற வருஷபஙகள போல, தரையில விழுநது புரணடனா. பிறகு சிறநத ஸவபாவ முடையவரும வேதாநதவிதயைகளை யுணாநதவரும இநதப பரதாதிகளின தந்தையான தசரதனுககுப புரோஹிதருமான வஸிஷ்டா தரையில் புரளுகினற பரதனை எழுபபி எடுதது 'ஸாமர்தயமுடையவனே! உன தநதைககு ஸமஸகாரஞ செயது இனறைககுப பதினமூனறாவது நாள. [1] அஸதி ஸஞசயனகாமம இனனும

1. தசாஹமத்தியில செய்யுமபடி சாஸதரஙகளில ஏறபடுததப பட்ட ப்ரதானஸ்தி ஸஞசயனஞ செயது பதினமூனறாவது நாள

நிறைவேறாமலிருக்க, நீ இவ்விஷயத்தில் இங்ஙனம் தாமதிப்பதேன்? பசி தாஹங்களும் சோக மோஹங்களும் ஜராமரணங்களுமாகிய இம்மூன்று [1] த்வந்த்வங்களும் ஸமஸ்த ப்ராணிகளுக்கும் ஸமானமாகவே ஸம்பவிக்கும். இவை உண்டாகப் பெறாத ப்ராணி ஒன்றுமே இல்லை. இவைகளைப் பரிஹரிக்க முடியாதாகையால் இவைகளைப் பற்றி உன்னைப் போன்றவன் மூடனைப் போல் இங்ஙனம் புலம்புவது யுக்தமன்று' என்றனர். தத்வங்களை உணர்ந்த ஸுமந்த்ரனும் சத்ருக்னனை எழுந்திருக்க எடுத்து மனக்கலக்கந் தீர்த்து ஸமஸ்த ப்ராணிகளுக்கும் பிறப்பும் சாவும் ஸ்வாபாவிகங்களாகையால் அவைகளைத் தடுக்கத் தரமன்றென்றும் ஆகையால் அவ்விஷயத்தில் வருந்தலாகாதென்றும் அவனது செவியிற் படுத்திச் சொல்லினன். மிகுந்த புகழுடையோர்களும் புருஷஸிம்ஹங்களுமான பரதசத்ருக்னர்களும் எழுந்திருந்து வெயிலிலும் மழையிலும் அடிபட்ட இந்த்ரத்வஜங்கள்போல் வேறுவேறாகப் ப்ரகாசித்துக் கொண்டிருந்தனர். மந்த்ரிகள், கண்ணீர்களைத் துடைத்துக்கொண்டு அழுததனால் சிவந்த கண்களோடு தீன ஸ்வரமாகப் பேசுகின்ற அந்த ராஜகுமாரர்களை, மற்றை அஸ்திஸஞ்சயனாதி கார்யங்களைச் செய்யும்பொருட்டு த்வரைப்படுத்தினர். எழுபத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

தேசாசாரத்தின்படி செய்யவேண்டிய ஸ்தலசோதனமாத்ரஞ் செய்யப்பட்டதாகையால் பதின்மூன்றாவது நாள் அஸ்திஸஞ்சயனஞ் செய்யவேண்டுமென்னும் ஸ்ம்ருதிக்கு விரோதமில்லை யென்று தெரி-

1. த்வந்த்வம்-இரட்டை. இவ்விரண்டிரண்டு தர்மங்களுக்கு த்வந்த்வங்களென்று பெயர்.

சத்ருக்னன் மந்தரையைச் சிக்ஷித்தலும், கைகேயி மந்தரையை ஸமாதானப் படுத்தலும்

அபரக்ரியைகளை நிறைவேற்றி க்ருஹத்திற்குப் போனபின்பு லக்ஷ்மணனது தம்பியாகிய சத்ருக்னன் சோகத்தினால் வருந்தி ராமனிடம் போக முயன்றிருக்கிற பரதனைப் பார்த்து இங்ஙனம் மொழிந்தனன் — 'மனவருத்த முண்டாகும் பொழுது ஸமஸ்தப்ராணிகளுக்கும் திக்காகிக் காக்கும்படியான ராமன் தனக்கு வருத்த முண்டாகும் பொழுது தனக்குத் தானே திக்காகிக் காத்துக்கொள்வானென்பது சொல்லவேண்டுமோ? அப்படிப்பட்ட ராமன் தானே மிகுந்த பலமுடையவனாயிருந்தும் கடைசியில் ஓர் அபலையால் அரண்யம் போகும்படி துரத்தப்பட்டானே! இதென்ன விசித்ரம்! 'தந்தைக்கு உட்பட்டவனாகையால் ராமன் என்னசெய்வான்?' என்கிறாயோ, ஸரி; மிகுந்த பலமுடையவனும் பராக்ரமத்திற் சிறந்தவனுமாகிய லக்ஷ்மணனென்பானொருவன் இருக்கின்றானல்லவா? அவனாவது தந்தையைத் தடுத்து ராமனை வனவாஸத்தினின்றும் ஏன் விடுவிக்கவில்லை? ஸ்த்ரீக்கு ஸ்வாதீனப்பட்டுத் தகாத வழியிற் செல்கின்ற மன்னவனை, ந்யாயாந்யாயங்களை ஆலோசித்து இப்படிப் பட்ட அனர்த்தம் உண்டாவதற்கு முன்னமே சிக்ஷித்திருக்கவேண்டும்' என்றனன். இங்ஙனம் லக்ஷ்மணனுக்குப் பின்பிறந்தவனாகிய சத்ருக்னன் சொல்லிக் கொண்டிருக்கையில் கூனியாகிய மந்தரை அப்பொழுது தான் விரும்பின பரதாபிஷேகத்தை எதிர்பார்த்துக் கொண்டு ஸமஸ்த ஆபரணங்களையும் அணிந்து தெய்வாதீனமாகப் பரத சத்ருக்னர்களிருக்கிற க்ருஹத்தின் கீழ்வாசற்படியின் அருகில் வந்து சேர்ந்தனள். அவள் அப்பொழுது மேலான கலவைச் சாந்து பூசிக் கைகேயி

கொடுத்த ராஜயோக்யங்களான வஸ்த்ரங்களைத் தரித்துப் பல்வகை ரத்னங்களிழைக்கப்பட்ட அநந்தத் அநேக வித ஆபரணங்களையும் அணிந்து விளங்கி நின்றனள். மேலும், அவள் அற்புதமான அநேக அரைநாண் மாலைகளாலும் மற்றுமுள்ள மேலான பலவகை ஆபரணங்களாலும் அலங்காரஞ் செய்துகொண்டு கயிற்றாற் கட்டுண்ட பெண்வானரம்போல ப்ரகாசித்தனள். அப்பொழுது த்வாரபாலகர்கள், மிகவும் பாபஸ்வபாவமுடையவளும் தயையற்றவளுமான அம்மந்தரையைப் பார்த்து, சத்ருக்னனிடம் ஒப்புவித்து 'எவளுக்காக ராமன் அரண்யஞ் சென்றானோ, எவளால் உங்கள் தந்தை சரீரத்தை இழந்தனரோ, அப்படிப்பட்ட பாபிஷ்டையும் கொடுந்தன்மையுடையவளும் இவளே இவளுக்கு உன் மனம் போனபடி சிக்ஷை செய்வாயாக' என்று மொழிந்தனர். நெறி தவறாத சத்ருக்னனும் அவர்கள் சொன்னது கேட்டு மிகவும் வருந்தி அந்தப்புரத்திலுள்ளவர் எல்லோரையும் பார்த்து 'எவளால் என்னுடன் பிறந்தார்க்கும் தந்தைக்கும் இப்படிப்பட்ட கொடுந்துயரம் உண்டாயிற்றோ, அப்படிப்பட்ட இவள் தன் கொடுஞ்செயலுக்குத் தகுந்த பலனை இப்பொழுது அனுபவிப்பாளாக' என்றனன். அவன் இங்ஙனஞ் சொல்லி, தோழிகள் சூழப்பெற்ற அக்கூனியைப் பலாத்காரமாகப் பிடிக்கையில், அவள் அம்மாளிகை முழுவதும் ப்ரதித்வனி உண்டாகும்படி உரக்கக் கூச்சலிட்டனள். அனந்தரம் அவளுடைய தோழிகள் அனைவரும் சத்ருக்னன் கோபித்திருப்பது கண்டு மிகவும் பரிதபித்துக்கொண்டே மூலைமூலையாகச் சிதறி ஓடிப்போயினர். அங்ஙனம் ஓடிப்போன அவளது ஸமஸ்த ஸகீஜனங்களும் மற்றவர்களும் ஒருவருக்கொருவர் ஏகாந்தமாக 'இவன் ஆரம்பித்த விதங்கண்டால் நம்மெல்லோரையும் மிகுத்துமாட்டான்



1024. சத்ருக்னன் மந்தரையைச் சிக்ஷித்தலும், பரதன் கைகேயியைத் தூறுதலும், கைகேயி மந்தரையை ஸமாதானப் படுத்தலும்

தோற்றுகிறது பெருமை புகழுடைய கௌஸலயாதேவி மிகவும தயையுடையவள், இனிய உரைகளை உரைககுந தனமையள்; மேலும தாமஙகளை உணாநதவள். ஆகையால நாம அவளைச சரணமடைவோம. அவளே நமககுத தகுநத கதியாவாள' என்று பேசிககொண்டனர். அபபொழுது பகைவரைத தபிககசசெயயுந தனமையுடைய அநதச் சதருககனன கோபததினால கணகள் சிவககப பெறறு, கூசசலிடுகினற அககூனியைப பிடிநதுத் தரையில விழததளளி இழுததுககொணடு போயினன. அவன அஙஙனம இழுததுககொணடுபோகையில், அபபொழுது அவளது மேனியிலுளள சிதரவிசிதரங்களான பலவித ஆபரணஙகள ஆஙகாஙகுத தரையில சிதறின. அபபொழுது அபபூஷணங்கள சிதறி இறைநதிருககையால காநதி விளங்கபபெறற அநத ராஜகருஹம முழுவதும சரதகாலததில மாசு மறுவினறி பரகாசிககினற நக்ஷதரஙகளோடு கூடின ஆகாயமபோல மிகவும பரகாசிததது. மிகுநத பலமுடையோனாகிய அநதப புருஷ சிகாமணி மிகவும் கோபமுறறு, பலாதகாரமாக அவளை இழுததுககொண்டு, விடுவிககவநத கைகேயியை அதடடிப பருஷமாகபபேசினன. கைகேயி, மனவருததததை விளையச செயவனவாகிய அநதக கடின வாகயஙகளைக கேட்டு மிகவும வருநதி, ' சதருககனன என்ன செயவானோ' என்னும பயத்தினால நடுநடுககமுறறுத தனபுதலவனாகிய பரதனைச சரணமடைநதனள். பரதன அக கைகேயியின அவஸதையைக கண்டு கோபிததிருககினற சதருககனனை இஙஙனம மொழிநதனன — ' ஸமஸ்த பராணிகளிலும ஸ்த்ரீகளை ஹிம்ஸிககலாகாது. ஆகையால பொறுததுககொள்வாயாக. ராமன தாாமிகனாகையால், நான தாயைக

கொலவேணுயின [1] மாதருகாதகனெனறு எனனை அவன நிநதிபபான. அவன அபபடி நிநதிககமாட்டானுயின, இநதப பாபிஷ்டையாகிய துஷ்ட ஸவபாவையை இக கைகேயியை நானே கொனறுவிடுவேனே! 'மாதரு ஹதயை கூடாதேயனறிக கெடுதிகளுககெலலாம மூலமாகிய இககூனியை ஏன கொலலலாகாது' எனபாயாயின, சொலலுகிறேன, கேள. இககூனியையாயினும் நாம கொனருமெனறு ராமன கேடபானுயின, தாமஸவ பாவனுகையால, அவன 'ஸதரீவதஞ செயதாய' எனறு உனனேடாவது எனனேடாவது எளளளவும பேசமாட்டான. இது நிசசயம' எனறனன. லக்ஷமணனுககுத தமபியான சதருகனன, இபபடி பரதன சொனனது கேட்டு உடனே கோபததினினறும மீணடு அமபநதரையையும விடடுத தொலைததனன. அவனும கைகேயியின பாதததில வீழநது மிகுநத மனவருததததுடன பரிதபிததுப பெருமூசசெறிநதுகொணடு மனஇரக்கமுணடாகுமபடி அழுதனள. சதருகனன பிடிததிழுததனால மூரசசிதது வருநதி, வலையில அகபபடட பெண கரௌஞசப பறவைபோல மிகவும பயநது இனனம எனனவருமோவெனறு நாறபுறமும உறறுபபாரககினற அககூனியைப பாரதது, பரதனுக்குத தாயாகிய கைகேயி மெலல ஸமாதானப படுததினள. எழுபதெட்டாவது ஸாககம முறறிறறு.

பரதன ராஜயபததைக கைககொளளாமல ராமனைத திருமபி அழைததுவரப போகமுயனறு வழியைச செவவைபபடுததுமபடி கட்டளையிடுதல

அனநதரம பதினனகாவது நாள விடியறகாலததில ராஜனுககுபபட்டாபிஷேகம நடததுமதிகாரிகள் அனை

1. மாதருகாதகன்-தாயைக கொனறவன்

வரும வந்து கூடிய பரதனைப் பார்த்து மொழிந்தனர் :— 'நமக்குப பரமகுருவாகிய தசரதமஹாராஜன ஜ்யேஷ்ட குமாரனான ராமனையும மஹாபலனாகிய லக்ஷ்மணனையும அரணயத்திறகனுபபித்தானும ஸ்வாககத்திறகுப போயினன. ராஜகுமாரனே! மிகுந்த புகழுடையவனே! இபபொழுது நீ எங்களுககு ராஜாவாயிருககவேணடும. இந்த ராஜயம இதுவரையில நாதனற்றதாயினும தெய வாதீனமாக இதிலுளள பரஜைகள எவரும ஒருவாக கொருவர தரோஹஞ்செயயாதிருககின்றனர. ராஜகுமாரனே! படடாபிஷேகத்திறகு வேண்டிய பதாாத்தங்களெல்லாவற்றையும எடுததுக கொணடு வந்து மந்தரி முதலானவாகளும படடணத்திலுள்ள ஜனங்களும உனனை எதிர்பார்த்துக கொணடிருககின்றனர. புருஷசிகாமணி! தந்தை பட்டன நாள தொடங்கிப பரமபரையாக வந்திருககிற இந்த ஸதிரமான ராஜயததைப பரிக்ரஹித்து அபிஷேகத்தை நடத்திக்கொணடு எங்களைப பாதுகாபபாயாக' என்றனர. பரதன தனது நியமததைத தவறுதலானமையால படடாபிஷேகத்தின பொருட்டு ஸித்தபபடுத்தபபட்ட பதாாததஙகளெலலாவற்றிறகும பிரதக்ஷிணஞ்செயது ராஜாபிஷேகஞ்செயயு மதிகாரமுடைய அந்தப புருஷாகளெலலோரையும பாாத்து மொழிநதனன'— 'எமது வமசத்தில மூததவன அரசு புரிவதனறோ வழககம? அபபடியிருகக ஸமஸ்தமும தெரிநத ப்ரௌடாகளாகிய நீஙகள என்னைப பாாத்து இபபடிபபடட வார்த்தை சொலவது உசிதமனறு. எங்களுககுப பெரிய தமையனாகிய ராமனே ராஜாவாகவேண்டும. நான அவனுககுப பதிலாகப பதினனகு ஸம்வதஸரஙகள வனவாஸஞ் செயகிறேன. நான வனத்திறகுச் சென்று எனது ஜ்யேஷ்ட பராதாவாகிய ராமனை அழைததுககொணடு வருகிறேன. சதுரஙகங்களோடு கூடிய

பெரும் ஸேனையை ஸித்தப்படுத்துவீர்களாக. அதனுடன் கூடப் போகிறேன். இப்பொழுது பட்டாபிஷேகத்திற்காக ஸித்தப்படுத்தப்பட்ட இந்த த்ரவ்யங்களெல்லாவற்றையும் ராமாபிஷேகத்தின்பொருட்டு முன்னிட்டுக்கொண்டு வனத்திற்குப் போகின்றனன். பூஜ்யனாகிய அந்தப் புருஷ சிகாமணியை ராமனை அவ்வனத்திலேயே அபிஷேகங்கொண்டருளச் செய்து யாகசாலையினின்று [1] த்ரேதாக்னியைக் கொண்டுவருவதுபோல் அவனை வனத்தினின்றும் இவ்விடத்திற்கு அழைத்துக்கொண்டு வருகின்றனன். இவள் எனக்கு ஸ்வந்தமான தாயாரேயாயினும் தாயிருக்கவேண்டிய நிலைமையில் இல்லை; ஆகையால் தாயெனினும் பேர்மாத்ரமுடைய இவளது கருத்தீடேறும்படி நானெள்ளளவுஞ்செய்யமாட்டேன் இவளபிப்ராயத்திற்கு விருத்தமாக நானே புகமுடியாத அரண்யத்தில் வாஸஞ் செய்யப்போகிறேன். ராமனே அரசனாகப் போகிறான். சிற்பிகள் மேடு பள்ளங்களை ஸமமாகச்செய்து வழியைச்சீர்திருத்தும்படி கட்டளையிடுவீர்களாக. மேலும், வழிகளில் துர்க்கஸ்தலங்களைச் சோதித்தறிந்து அங்கு ஜனங்களை நடத்த வல்லவரான [2] ரக்ஷாபுருஷர்களும் பின்தொடர்வார்களாக' என்றனன். இங்ஙனம் ராமனைக்குறித்து நிகரில்லாததும் மேன்மையை விளக்க வல்லதுமான வார்த்தைகளைச் சொல்லுகிற அந்த ராஜகுமாரனைப் பார்த்து ஜனங்களெல்லோரும்

1 தக்ஷிணாக்னி காருஹபத்யாக்னி ஆஹவனீயாக்னி என்று யாகத்தில் வழங்கிவரும் இம்மூன்றக்னிகளே த்ரேதாக்னியென்று சொல்லப்படுகின்றன. யாகசாலையில் தென்புறத்திலிருக்கும் அக்னி தக்ஷிணாக்னி. க்ருஹபதியோடு சேர்ந்திருக்கும் அக்னி காருஹபத்யாக்னி. ஆஹவனஞ் செய்யும் அக்னி ஆஹவனீயாக்னி. ஆஹவனம் ஹவிஸ்ஸைக் கொடுத்தல். "தக்ஷிணாக்னிர் காருஹபத்யாஹவனீயௌ த்ரயோऽக்னய: | அக்னித்ரயமிதம் த்ரேதா' என்று நாமலிங்காநுசாஸனத்திற் சொல்லப்பட்டது. 2. ரக்ஷாபுருஷர்கள் — காப்பாளர்கள், சாகசவல்ல புருஷர்கள்.

'நீ தசரத மன்னவரது குமாரர்களான உங்களுள் மூத்தவனாகிய ராமனுக்கு ராஜ்யங் கொடுக்க விரும்புகின்றனை. இப்படிப்பட்ட உன்னிடத்தில் கையுந் தாமரைப் பூவுமாகி விளங்கும் ஸ்ரீமஹாலக்ஷ்மி நித்யவாஸஞ் செய்வாளாக' என்றனர். ராமனை அழைத்துக்கொண்டு வரவேண்டுமென்னும் ப்ரதிஜ்ஞை விஷயமாக ராஜகுமாரனான பரதன் சொன்ன நிகரில்லாத அவ்வார்த்தையைக் கேட்டவுடனே மேன்மைக் கிடமாகிய ராஜாபிஷேகஞ் செய்யு மதிகாரிகளுக்கு அந்தப் பரதனைப்பற்றிய பரம ஸந்தோஷத்தினால் [1] முகத்திற் கலங்காரமான கண்களினின்றும் ஆநந்த பாஷ்பத்துளிகள் உதிர்ந்தன. அவர்களும் மந்திரிகளும் மற்றுமுள்ள ஸபிகர்களும் பரதன் சொன்னதைக் கேட்டுத் துக்கத்தை விட்டு ஸந்தோஷத்துடன் அவனைப்பார்த்து, 'புருஷசிகாமணீ! உனது கட்டளையின்படி ராஜபக்தியுள்ள ரக்ஷகர்களை மார்க்கத்தைக் காப்பதற்கும் சிற்பிகளை வழி ஏற்படுத்துவதற்கும் இதோ அனுப்பிவிட்டோம்' என்றனர். எழுபத்தொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

**{ அயோத்யைமுதல் கங்கைவரையிலு முள்ள மார்க்கத்தைச் சீர்திருத்தல் }**

பிறகு அந்தந்த பூப்ரதேசங்களின் இயற்கை யறிந்தவர்களும் ஆழமுள்ள நடைவாவி கிணறு முதலியவற்றினின்று ஜலந்தூக்குவதற்கு வேண்டிய ஸூத்ரங்களைச் செய்ய வல்லவர்களும் சேணியர்களும் தமது கார்யமாகிய மார்க்க ரக்ஷணத்தில் வல்லவரான சூரர்களும் பூமியைத் தோண்டி ஸுரங்கம் முதலியவற்றை இயற்றுபவர்களும் பெரிய கால்வாய் முதலான இடங்களைத்

1 'ஆநந்தநேத்ரஸம்பவா:' என்று மூலம் இங்கு ஆநந்தநேத்ர சப்தம் முகத்திற்கு அலங்காரமான கண்களைச் சொல்லுகிறது. பரதனைப் பார்க்க நேர்ந்த கண்களே முகத்திற்கு அலங்காரமான கண்கள் மற்றவை பீலிக்கண்களேயென்று கருத்து

தாண்டுவதற்குக் கோம்பு கொடிகளால் யந்திரங்களைச் செய்பவர்களும் வலைமுதலான யந்திரக்காரர்களும் கூலி வேலைக்காரர்களும் சிற்பிகளும் அதிகாரமுள்ள ராஜபுருஷர்களும் ஓடம் முதலான யந்திரங்களைச் செய்யத்தெரிந்தவர்களும் ரசர்களும் மேடுபள்ளங்களை நிரவி வழியைச் செவ்வைப் படுத்த வுணர்ந்தவர்களும் வழிகளில் குறுக்காகத் தடைசெய்யும் வருக்ஷங்களை வெட்டுகிற வேலைக்காரர்களும் கிணறு வெட்டுபவர்களும் மாடமாளிகை கட்டத் தெரிந்த சுணணாம்பு வேலைக்காரர்களும் மூங்கில்களால் பாய் புட்டிற்கூடை முதலியவற்றை மிடைய வல்லவர்களும் மற்றை வேலைகளில் ஸாமர்த்ய முடையவர்களும் மார்க்கத்தில் பலகால் நடந்து அனுபவமுடையவர்களும் முன்னே புறப்பட்டுச் சென்றனர் அளவில்லாத அப்பட்டணத்து ஜனக்கூட்டமானது ராமனைப் பார்க்கும் குதூஹலத்தினால் அவனிருக்கு மிடத்தைக் குறித்துப் பெரிய வேகத்துடன் போகும்போது பூர்ணிமையின்னாது மிகவும் பெருகின ஸமுத்ரம்போல பரகாசித்தது வழியைச் செவ்வைப்படுத்தவல்ல அந்தவேலைக்காரர்கள் அந்த வ்யாபாரத்தைத் தந்தமக்குரியபடி பங்கிட்டுக்கொண்டு மண்வெட்டி, புட்டில், கோடாலி, வாள், உளி, ரம்பம், முதலான பற்பல கருவிகளை எடுத்துக்கொண்டு முன்னே போயினார். அவர்கள் வழியில் படர்ந்திருக்கிற கிளைகளையும் கொடிகளையும் புதர்களையும் மெட்டையாங்களையும் சிறுசெடிகளையும் கற்களையும் மற்றுமுள்ள பலவகை வருக்ஷங்களையும் வெட்டிப் புகக்கூடாத இடங்களில் மார்க்கத்தை ஏற்படுத்தினார். சிலர் விருக்ஷங்களின்றிப் பாலைவனமான இடங்களில் நிழலுண்டாகும் பொருட்டு வருக்ஷங்களை நாட்டினார். சிலர் ஆங்காங்கு வழிகளில் தடையான செடி கொடி மரங்களைக் கோடாலி கல்லுளி வாள் (அரிவாள்) இவைகளைக் கொண்டு வெட்டி வழிகளைச் சீர்திருத்தினார். மேலும், பலிஷ்டர்களான சிலர் வேருன்றி அறுக்கமுடியாத விலாமிச

சை முதலியவற்றின் புதர்களைக் கொளுத்தினர். நடந்து போகமுடியாமல் மேடுபள்ளமான இடங்களை ஸமமாகப் போகும்படி சமமாகச்செய்தனர். மற்றுஞ் சிலர் வழியில் குறுக்காயிருந்த பாழுங்கிணறுகளையும் பெரிய பள்ளங்களையும் மண்களால் தூர்த்துவிட்டனர். வேறு சிலர் பள்ளங்களை நிரவிச் சமமாக்கினர். இன்னுஞ் சிலர் சேனை தாண்டுவதற்கு அணைகட்டவேண்டிய ஜலப்ரதேசங்களில் அணைகளைக் கட்டினர். சிலர் பொடி செய்யத்தக்க சிறு கற்கள் முதலியவற்றைப் பொடிசெய்தனர். சிலர் பிளக்க வேண்டிய பெருங்கற்களைப் பிளந்தனர். சிலர் ஏரி குளம் முதலிய ஜலம் நிறைந்த அந்தந்த இடங்களை வழியின் ஸௌகர்யத்திற்காக வெட்டிவிட்டனர். சிலர் சீக்கிரகாலத்திலேயே பெருகிவரும் சிறிய ப்ரவாஹங்களைக் கட்டி ஜலம் நிரம்பத் தேக்கிக் கரை ஏற்படுத்தி ஸமுத்ரம் போல் பெரியவைகளும் பல உருவமுடையவைகளுமான பல ஜலாதாரங்களை ஏற்படுத்தினர். சிலர் ஜலமில்லாத இடங்களில் மனிதர்களும் யானை குதிரை முதலியவைகளும் இழிந்து தண்ணீர் குடிக்க ஸௌகர்யமாயிருக்கும் பொருட்டுப் பலவிதமாகச் சிறந்த நடைவாவிகளையும் வெட்டுவித்து அதன் கரைகளில் இளைப்பாறும்படித் திண்ணை முதலிய கட்டடங்களையும் ஏற்படுத்தினர். இவ்வண்ணம் அவர்களால் ஸைன்யம் போகிறதற்காக இயற்றப்பட்ட அவ்வழியானது சுண்ணாம்பிட்டுக் கட்டடஞ் செய்யப்பட்டு மழமழப்பான பூமியையுடையதும் ஜலம் பாய்ச்சுவதால் குளிர்ந்து தளிர்த்துப் பூத்த பல வ்ருக்ஷங்களமைந்ததும் மதமேறிக் கலகலவென்று கூவுகின்ற பறவைகளுடையதும் பதாகைகளால் அலங்காரஞ் செய்யப்பட்டதும் சந்தனத்தண்ணீர் தெளிக்கப்பெற்றுக் குளிர்ந்து அழகான விடுதிகளுடையதும் பலவகைப் புஷ்பங்கள் இறைக்கப் பெற்றதுமாகித் தேவமார்க்கம்போல் மிகவும் ப்ரகாசித்துக்கொண்டிருந்தது. அங்ஙனம் வழி ஏற்படுத்தினபின்பு அவர்களுக்குத் தலைவர்களான அதிகாரிகள் தாமேல்

லோரும ஒனறுகூடி மிகவும ருசியுள்ள பழஙகள நிறைநது சிறநத பரதேசஙகளில மஹானுபாவனுகிய பரதனுககுமனககளிபபை விளைபபவைகளும தாமே அலஙகரிததுக கொணடிருபபவைபோனறவைகளுமாகிய அழகான இடஙகளில தஙகக கலசஙகளை அமைதது மகர தோரணஙகளையும மேறகட்டுககளையும கட்டி தவஜஙகளையும நாட்டி மறறும பலவகை அலஙகாரஙகளும செயது சிஙகாரிததனா. வாஸது சாஸரஙகளை யறிநதவா சிரநத நக்ஷதரஙகளுள்ள சுபமுஹூாததஙகளில மஹானுபாவனுகிய பரதன தஙகுவதறகாகக கூடாரஙகளை அடிததுஸதாபிததனா அநதக கூடாரஙகள முழுமையும நொயய மணலிடபபெறறுச சுறறிலும அகழியால சூழபபெறறு இநதரகீலபாவததை நிகாதது மேலான வீதிகள ஏறபடுததபபெறறுத தேவாலயஙகளாலும மனனவா இழியும விடுதிகளாலும நிறைநது சுணணமபடிதது வெளுதத மதிடசுவருடையனவாகி தவஜஙகளால அலஙகாரஞசெயயபபெறறு செவவைபபடுததின ராஜ வீதிகள அமைநது புராககூடுகள உள்ளவைகளுமமிகவும உயாநதிருககையால ஆகாயததில படாகினறவை போனறவைகளுமான ஏழுநிலைகளுள்ள மெததைத மேடைகளால விளககமுறறு இநதரபட்டணமபோல மிகவும அழகாயிருநதன பல வருக்ஷஙகள நிறைநத காடுகளடாநது, குளிாநது நிாமலமாகிய நனனீா பொருநதிப பெருதத மீனகள நிரமபிப பெருகி வருகினற கஙகாநதியளவும இவவிதமான விடுதிகள ஏற்படுததபபட்டு விளஙகின. அதறகபபுறம அஸாதயமாகையால ஏறபடுததவிலலை. இஙஙனம வலலவரான சிறபிகளால இயறறபபட்ட அழகான அந்த ராஜமாாககமானது இரவில சநதரனோடும நக்ஷதர கணங்களோடும கூடிவிளஙகுகிற ஆகாயமபோல நிாமலமாய பாகாசிததுக கொணடிருநதது. எண்பதாவது ஸாககம முறறிற்று.

{ பரதன் சோகித்ததும், வஸிஷ்டர் ஸுமந்த்ரனைக்கொண்டு பரதசத்ருக்னர் முதலியவர்களை ராஜஸபைக்கு வரவழைத்ததும், அவர்கள் அனைவரும் ஸபைக்கு வருதலும் }

[1]அனந்தரம் ஸ்ரீராமனை அழைத்துக்கொண்டு வருவதன்பொருட்டு வஸிஷ்டர் முதலிய பல முனிவர்களும் அன்றிரவெல்லாம் தூக்கமில்லாமல் மங்கள கார்யங்களைச் செய்தனர். அப்படியே துன்பங்கள் தீரும்படி பல நற்செயல்களையும் இயற்றினர். பிறகு விடியற்காலமானதையில் வாக்கின் விசேஷங்களையுணர்ந்த ஸூதர்களும் மாகதர்களும் வந்து மங்கள சப்தங்களமைந்த நற்கவிகளைப் பாடிப் பரதனைப் புகழ்ந்தனர். ஜாமங்களைத் தெரிவிக்கும் பேரிவாத்யமும் ஸ்வர்ணமயமான தண்டங்களால் அடிக்கப்பட்டுப் பேரொலியுடன் ஒலித்தது. சங்குகளும் பலவாக ஊதப்பட்டன. பலவாறான ஸ்வரங்களையுடைய காஹலி முதலான வாத்யங்களையும் வாசித்தனர். அந்த வாத்யங்களின் த்வனிகள் எல்லாம் ஒன்றாகக் கலந்து ஆகாயமெங்கும் பரந்து பரதனை யெழுப்பிச் சோகத்தினால் வருந்துகின்ற அந்த ராஜகுமாரனை மேலும் பெருஞ்சோகமுற்றுப் பரிதபிக்கச் செய்தன. உடனே பரதன் விழித்து அந்தச் சப்தத்தைக் கேட்டு 'நான் ராஜா அல்லேன். ராஜனைப் புகழ்வதுபோல என்னைப் புகழாதிருப்பீர்களாக' என்று மொழிந்து அதையெல்லாம் நிறுத்தி, சத்ருக்னனை அழைத்து 'சத்ருக்ன! கைகேயி உலகத்திற்குப் பெரிய அபகாரஞ் செய்தனள்; பார். தசரதமஹாராஜா துக்கங்கள் எல்லாவற்றையும்

---

1, '..தோ நாந்தீ முஹூராத்ரீம்' என்று மூலம். இதற்குக் கோவிந்தராஜர் மூன்று விதமாகப் பொருள் கூறுகின்றனர். அவற்றில் முதலிரண்டு வாக்யங்களால் இரண்டு விதம் கூறப்பட்டன. மற்ற விதமாவது பரதனுடைய அபிஷேகத்திற்காக வஸிஷ்டர் மங்கள கார்யங்களைச் செய்தாரென்பதே.

னமேல் போகட்டும் போயினர். மஹானுபாவராகிய அந்த தாமபரபுவினுடைய இந்த ராஜ்யலக்ஷ்மியும் மன்னவனுக்குப் பின்பு மூத்த குமாரனுக்குச் சேருந் தாமத்திலேயே நிலைநின்றிருப்பது, அப்படிப்பட்டது இப்பொழுது ஜலத்தினிடையில் நடத்துகிறவனில்லாத ஓடம் போல அலைகின்றது. எவன் நமமெல்லோருக்கும் மிகவும் பெரிய நாதனே, அப்படிப்பட்ட ராமனையும் இந்த என் தாய் தாமத்தைத் தவிர்ந்து தானாகவே அரணியத்திற்குத் துரத்தினளே!'' என்றனன். இங்ஙனம் புலம்பி பரஜனை தபபின பரதனைப் பார்த்து ஸதரீகள் அனைவரும் மிகக வருததமுறறுப பெருங்குரல் பாயச் சிககதறினர். அந்தப் பரதன் அங்ஙனம் அழுதுகொண்டிருக்கையில், ராஜதாமங்களை அறிந்தவரும் பெருமபுகழுடையவருமான வஸிஷ்டமாமுனிவர் இக்ஷ்வாகு வமசத்தரசர்களில் தலைவரான தசரதமஹாராஜனது ஸபையுள் பரவேசித்தனர். ஸுவர்ணமயமாகி மிகவும் அழகு பெருந்திச சிறந்த ரத்னங்களாலிழைக்கப்பட்டு ஸுதர்மையென்னும் தேவஸபைபோல விளங்குகிற ராஜஸபையில் தாமஸவபாவராகிய அம்மஹாருஷி சிஷ்யகணங்களோடு பரவேசித்தனர். வேதங்களையெல்லாம் முணர்ந்தவராகிய அமமுனிமன்னவர் ஸுகமான பாயபறபபப் பெற்ற ஸ்வர்ணமயமான ஆஸனத்தில் உடகார்ந்து தூதர்களைப் பார்த்து 'தூதர்களே! நீங்கள் விரைவாகச் சென்று அநதணர்களையும் க்ஷத்ரியர்களையும் வைஶ்யர்களையும் மந்திரிகளையும் அந்தந்த இனத்தவர்களில் தலைவரையும் ராஜனுக்கு அந்தரங்கரான வேலைக்காரர்களோடு சத்ருக்னனையும் பெருமபுகழோனாகிய பரதனையும் [1] யுதாஜித்தையும் ஸுமந்தரனையும் மேலும் ராஜ்யத்தின் ஹிதத்தை விரும்புவார் யாவர் உளரோ அவர்களையும் அழைத்துக்கொண்டு வருவீர்களாக. நாம் எல்

---

1 விஜயனென்னும் மந்திரிக்கு யுதாஜித்தென்று மற்றொரு பெயரென்று கோவிந்தராஜர்.

லோருங் கலந்து பராமர்சப்பட்டுச் செய்யவேண்டிய காரியம் ஒன்று உளதல்லவா?' என்று ஆஜ்ஞாபித்தனர். அனந்தரம் அந்த ஆஜ்ஞையின்படி ஜனங்களெல்லோரும் தந்தமது அதிகாரத்திற்குரியபடி ரதங்கள் மேலும் குதிரைகள்மேலும் யானைகள்மேலும் ஏறிவருகையில் அதனால் பெருந்த்வனியொன்று உண்டாயிற்று. பிறகு ஸபைக்கு வருகின்ற பரதனைப்பார்த்து ப்ரஜைகள், தேவதைகள் தேவேந்த்ரனைக் கொண்டாடுவதுபோலும் முன்பு தசரதனைப் புகழுவதுபோலும் அவனைப் புகழ்ந்தனர். அப்பொழுது திமியென்கிற பெரிய மத்ஸ்யத்தோடும் நீர்யானையோடும் கூடிச் சிறிது அசையாத ஜலமுடையதாகி மணி சங்கு மணற்குன்று இவைகளோடு கூடி விளங்குகின்ற ஸமுத்ரத்தைச் சார்ந்த பெருமடுவைப்போல் தசரத குமாரர்களான பரதசத்ருக்னர்களோடும் வஸிஷ்டரோடும் ஸுமந்த்ரன் முதலானோர்களோடும் விளங்குகின்ற அச்சபையானது முன்பு தசரதனிருந்த காலத்திற்போலவே மிகவும் ப்ரகாசித்தது.

எண்பத்தொன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

பரதன் ராஜ்யத்தை அங்கீகரியாமல் பட்டணத்து ஜனங்களோடு ராமனிடம் போகப் புறப்படுதல்.

புத்தியில் மிகுந்தவனாகிய பரதன் வஸிஷ்டர் முதலான பெரியோர்கள் நிறைந்து நியமத்துடன் கூடிய அந்த ஸபையைப், பூர்ணசந்த்ரன் ப்ருஹஸ்பதி முதலான சிறந்த க்ரஹங்களோடு கூடின ராத்ரியைப்போல் ஸந்தோஷத்துடன் கண்டனன். அப்பொழுது மேன்மைப்படுத்துகைக்குரிய ஸப்யர்கள் ஸபையில் ப்ரவேசித்து அவரவர் கௌரவத்துக்குத் தகுந்தபடி ஆஸனங்களின்மேல் உட்கார்ந்திருக்கையில், அவர்களுடைத் ந்த வஸ்த்ரங்களுடையவும் சந்தனம் முதலான பூச்

சுகங்களுடையவும் ஆபரணங்களுடையவும் காந்தியினால் அம்மேலான ஸபைமுழுமையும் விளங்கியது. அப்பொழுது அறிஞராகிய பெரியோர்கள் பரதாபிஷேகத்தைக் குறித்துக் குவியல்குவியலாக அவ்விடம் வந்து நிறைந்திருக்கையில் அந்த ஸபை மிகவும் அழகுபொருந்திச் சரத்காலத்தில் பூர்ணசந்த்ரனுடன் விளங்குமராத்ரிபோல் ப்ரகாசித்தது. தர்மங்களை யறிந்தவராகிய அந்தப் புரோஹிதர் நானாதேசத்தினின்றும் வந்த ராஜாக்களையும் பட்டணத்தில் தலைவரான ப்ரஜைகளையும் [1] பார்த்து மெதுவான வார்த்தையுடன் பரதனை நோக்கி மொழிந்தனர் — 'என்னப்பனே! தசரதமஹாராஜன் ஸத்ய பரிபாலனமென்னும் தர்மத்தைத் தவறாமல் நிறைவேற்ற முயன்று தன் தானங்களால் மிகவும் செழிப்புற்றதாகிய இப்பெரும் பூமியை உனக்குக் கொடுத்துத் தான் ஸ்வர்க்கத்திற்குச் சென்றனன். அம்மன்னவன்போலவே ஸத்யத்தில் ப்ரீதியுடையவனாகிய ராமனும் ஸத்புருஷர்களின் ஆசாரத்தை நினைத்து உதயமான சந்த்ரன் நிலாவை விட்டுப் பிரியாதிருப்பதுபோல் தந்தையின் ஆஜ்ஞையைத் தவறாமல் அரண்யம் போயினன். உன் தந்தையும் உன்ப்ராதாவும் [2] கண்டகங்களைப் போக்கி ஸௌக்யத்தை விளைப்பதாகிய ராஜ்யத்தை உனக்குக் கொடுத்தனர் ஆகையால் மந்த்ரிகள் முதலிய அனைவரும் களிக்கும்படி நீ அதை அனுபவிப்பாயாக. சீக்ரத்தில் அபிஷேகஞ் செய்துகொள்வாய். வடதிசை ராஜாக்களும் மேற்றிசை ராஜாக்களும் கீழ்த்திசை ராஜாக்களும் [3] அபராந்த தேசத்து யவனர்களும் ஸமுத்ரத்தின் தீவிலுள்ள அரசர்களும் உனக்குக் கோடி கோடியாக

---

1. அவர்களைப் பார்த்து அவர்களுடைய அனுமதிக்காக வென்றெண்ணாக

2. கண்டகம்—சத்ரு

3. அபராந்த தேசத்து யவனர்கள்—அபராந்தமென்னும் தேசத்திலுள்ள துலுக்கர்கள்

ரத்னங்களைச் [1] சுலகமாகக் கொண்டுவந்து கொடுப்பார்கள்' என்றனர். [2] பரதனும் வஸிஷ்டரது வாக்யத்தைக் கேட்டுச் சோகத்தில் மூழ்கி தர்மிஷ்டனாகையால் மூத்தவனை அநுவர்த்திக்கவேண்டுமென்னுந் தர்மத்தில் விருப்பமுற்று மனத்தினால் தமையனாகிய ராமனை ஸ்மரித்தனன். [3] ஹம்ஸத்தின் கண்டத்வனிபோன்ற கண்டத்வனியுடைய அப்பரதன் தான் போகத்துக்குரிய யௌவனப் பருவத்திலிருப்பினும் ராஜ்யபோகத்தில் மனஞ்செல்லப் பெறாமல் தர்மத்தையே பாராட்டி ராமனை நினைத்துக் கண்ணீர்களால் வார்த்தை தழுதழுக்கப்பெற்றுப் புலம்

1 சுலகம்—சுங்கம், கப்பம்.

2 இதற்கு 'தச்ச்ருத்வா ராகவே வாக்யம் சோகேநாபிபரிப்லுத: | ஜகாம மநஸா ராமம் தர்மஜ்ஞோ தர்மகாங்க்ஷயா' என்று மூலம் (தத் ச்ருத்வா) தர்மாதர்மங்களின் தாரதம்யங்கள் தெரிந்தவராயினும் வஸிஷ்டர் அங்ஙனஞ் சொன்ன வார்த்தையைக் கேட்டு (தர்மஜ்ஞ:) பெரியோரை அநுவர்த்திக்க வேண்டுமென்கிற தர்மந் தெரிந்த பரதன் (சோகேந-அபிபரிப்லுத:) சோகத்தால் மிகவும் அமிழ்த்தப்பட்டனன். இப்பொழுது ஸர்வஜ்ஞரும் அத்யந்தஹிதருமான குருவும் தர்மமெனும் வ்யாஜத்தினால் அதர்மத்தையே சொன்னாரேயென்னுஞ் சோகத்தினால் நன்கு அமிழ்த்தப்பட்டனன். (தர்மகாங்க்ஷயா) அதர்மமான தன் ராஜ்யாபிஷேகத்தைக் கேட்ட பாபத்திற்கு ப்ராயச்சித்தமென்னும் புத்தியோடு, (மநஸா ராமம் ஜகாம) இப்படி ஆசார்யன் சொன்ன வார்த்தையைக் கேட்ட பாபத்தை நீயே க்ஷமிக்கவேணுமென்று மனத்தினால் ராமனிடத்தில் ப்ரபத்தி செய்தனன். (தர்மகாங்க்ஷயா) ராஜ்யபரிபாலனரூப ஸாமான்ய தர்மத்தைக் காட்டிலும் அதிகமான ராம கைங்கர்யமென்னும் தர்மத்தை ஆசைப்பட்டு இங்ஙனஞ் செய்தானென்று பொருள்.

3. இதற்கு மூலம்—'ஸ பாஷ்பகலயா வாசா கலஹம்ஸஸ்வரோ யுவா | விலலாப ஸபாமத்யே ஜகர்ஹே ச புரோஹிதம்' (பாஷ்பகலயா) அதர்மத்தைச் சொன்னதாலாவது ராமனை நினைத்ததாலாவது கண்ணீருண்டாகப் பெற்றிருக்கை (கலஹம்ஸஸ்வர:) இதனால் அபிநிவேச விசேஷம் தோற்றுகிறது (யுவா) போககாலத்திலும் போகோபகரணமான ராஜ்யத்தை இழப்பதே யென்று ரிஷி வியப்புறுகிறார். (ஸபாமத்யே ஜகர்ஹே) 'நியமாதிக்ரமம் ரஹஸி போதயேத்' என்னும் நியமத்தையும் தவறினன் அதிக்ரூரமான அதர்மத்தைச் சொன்னாரென்ற துக்கத்தில் மெய்ம் மறந்து ஏகாந்தமென்றும்

பிப் புரோஹிதரை நிந்தித்து மேலும் இங்ஙனஞ் சொல்லினன்.— 'ப்ரஹ்மசர்யத்தவறாமல் குருகுலவாஸம் அனுஷ்டித்து வேதாத்யயனஞ் செய்தபின்பு ஸனாதகர்மம்பெற்று வேதார்த்தங்களை யுணர்ந்து அதிற்சொல்லிய தர்மங்களை அனுஷ்டிக்குந் தன்மையனாகிய ராமன்து ராஜ்யத்தை, சாஸ்த்ரத்திற்குட்பட்டு நடக்கவேண்டியவனாகிய என்னைப்போன்றவன் எவன்தான் அபஹரிப்பான்? [1] தசரதரிடத்தினின்று பிறந்தவன் தனது ஜ்யேஷ்டனுக்கு வரவேண்டிய ராஜ்யத்தை அபஹரிப்பானோ? இந்த ராஜ்யம் ராமனுடையது. நானும் ராமனுடையவனே. இவ்விஷயத்தில் நீர் தர்மத்தையே சொல்லவேண்டும். மூத்

---

ஸபை யென்றும் விவேகஞ் செய்யப்பெறாமல் நிந்தித்தான். (புரோஹிதம் ஜகர்ஹே) இந்தக் குலத்திற்கு வரும் ஹிதத்தை நீர் நன்கு ஆலோசித்தீரென்று எடுத்தெறிந்தாற்போல நிந்தித்தானென்றபடி. (ஸபாயாமேவ) பலரும் ஒன்றுகூடி என்னொருவனுடைய ராமபாரதந்த்ர்யத்தை ஏன் அழிக்கப் பார்க்கிறீர்களென்றான்

1 'கதம் தசரதாஜ்ஜாதோ பவேத் ராஜ்யாபஹாரக꞉| ராஜ்யஞ்சாஹஞ்ச ராமஸ்ய தர்மம் வக்துமிஹார்ஹஸி' என்று மூலம். (தசரதாஜ்ஜாத꞉) ராமனைப்பிரிந்த க்ஷணத்திலேயே ப்ராணன்களைத் துறந்த தசரதனது வயிற்றில் பிறந்தவன் (கதம்ராஜ்யாபஹாரகோ பவேத) அவன் துறந்த ராஜ்யத்தை எப்படி அபஹரிப்பான்? ராமனைப் பிரிந்தமாத்ரத்தில் தசரதரைப்போல நான் ப்ராணன்களை விடாமற்போயினும் அப்படிப்பட்ட தசரதரது வயிற்றில் பிறந்தமைக்கு ராமராஜ்யத்தைக் கைப்பற்றுவேனோ? என் ஸ்வரூபத்தை ஆலோசிக்கினும் நான் ராஜ்யத்துக்குரியனல்லேனென்பது வெளியாகுமென்கிறான்—(ராஜ்யஞ்சாஹஞ்ச ராமஸ்ய) சேஷவஸ்துவைச் சேஷியாயிருப்பவன் காப்பாற்றவேண்டுமேயன்றி, அதை மற்றொரு சேஷவஸ்து காப்பாற்றக்கூடுமோ? அப்படி கூடுமாயின் நான் ராஜ்யத்தை ரக்ஷிப்பதுபோல ராஜ்யமும் என்னை ஏன் ரக்ஷிக்கக்கூடாது? ஆகையால் சேஷபூதனான நான் சேஷமான ராஜ்யத்தை ரக்ஷிக்கத்தகாது. (தர்மம்வக்துமிஹார்ஹஸி) உலகத்தில் பெற்ற தந்தைகளையும் நிராகரித்து ராஜ்யஞ்செய்பவர் உளர். அவர்களைப்போல என்னை நினைக்



1038 பரத சத்ருக்னர்கள் ஸபைக்கு வந்து ராமலக்ஷ்ம
ணர்களைக் காட்டுக்கு அனுப்பினதைப்பற்றி வஸி
ஷ்டர் முதலானோரை நிந்தித்தல்

தவனும் மேன்மையுடையவனும் தாமஸ்வபாவனும் திலீப நஹுஷாதி பூர்வ ராஜர்களை நிகர்த்தவனும் இப்படி ஸமஸ்தகுண ஸம்ருத்தியுடையவனும் ககுத்ஸ்தகுலாலங்காரனுமாகிய ராமனே தசரதரைப்போல் ராஜ்யம் பெறுதற்குரியவன். அநிஷ்டங்கள் செய்யத்தகுந்ததும் ஸ்வர்க்கத்திற்கும் பொருந்தாததுமான இப்படிப்பட்ட பாபத்தைச் செய்வேனாயின், நானொருவன் இக்ஷ்வாகுவம்சத்தின் முறையைக் கெடுத்த கொடும்பாவியாவேனன்றோ? என்தாய்செய்த இத்தீச்செய்கை நானுள்ளளவும் அங்கீகரிக்கமாட்டேன். நான் இங்கிருந்தே புகக்கூடாத அரண்யத்திலிருக்கிற ஸ்ரீராகவனைக் கைகுவித்து நமஸ்கரிக்கிறேன். நான் ராமனையே பின்தொடர்ந்து செல்வேன். புருஷஶ்ரேஷ்டனாகிய அந்த ராமனே ராஜாவன்றி மற்றெவரும் அல்லர் ராமன் இந்த ராஜ்யத்திற்கு மாத்ரமே உரியவனென்பதில்லை, மூன்று லோகங்களுக்கும் அவன் ராஜ்யஞ் செய்யவல்லவன். ஆகையால் இந்த ராஜ்யத்திற்கு நான்சிறிதும் உரியவனல்லேன்' என்றனன். இங்ஙனம் பரதன் சொன்ன தார்மிஷ்டமான வார்த்தையைக் கேட்ட ஸபையிலுள்ளவர் யாவரும் மிகவும் ஸந்தோஷித்து ராமனிடத்தில் மனஞ்செல்லப்பெற்று ஆநந்தக்கண்ணீர் பெருக்கினார். மீளவும் பரதன் 'நான் பூஜ்ய

---

க்வேண்டாம். இவ்விஷயத்தில் என் ஸ்வபாவத்தை அறிந்து 'ரக்ஷகனிவன் ரக்ஷ்யவஸ்துவிது' என்னும் தாமத்தைச் சொல்லவேண்டுமேயன்றிச் சேஷவஸ்துவே மற்றொரு சேஷவஸ்துவைக் காப்பாற்றக்கூடுமென்னும் அதாமத்ஸதச் சொல்லவேண்டாம் (யாமம் வகத்மிஹாராஹவி) ராமன் அரண்யம்போகையில் ராஜ்யத்துக்கரசனிவ்வேயே யென்று மிவ்வளவுயாதரமே ஆலோசித்திரன்றி அங்ஙனம் செய்தால் ராமனுக்குச் சேஷப்பட்ட என் ஸ்வரூபம் நசித்துப்போமென்று விசாரிக்காமற் போனீர். ஆகையால் இனி அங்ஙனஞ் சொல்லாமல் ராமகங்காயமென்னும் தாமமே சொல்லவேண்டுமன்றி ராஜ்யபரிபாலனஞ் செய்யச் சொல்லத்தகாது.

ஞகிய ராமனை எவவளவு வேண்டியும அவனை வனததி
னினறும திருபபி அழைததுககொணடுவர வலலனுகே
னுயின, பெருமைபொருநதிய லக்ஷமணனைபபோல நா
னும அவவாணயததிலேயே இருககபபோகிறேன. ஸத
புருஷாகளும குணஙகளில நிலைநினறவாகளுமாகிய இநத
ஸபிகாகளின கணமுனனமே ராமனை வனததினின
றும திருபபி அழைததுககொணடுவர எனனுல கூடிய
வரையில ஸமஸதோபாயஙகளாலும பரயதனஞசெயது
பாாககிறேன. ஆகையாலநீஙகளெலலோரும எனனுடன
கூடவே வரவேணடும. நான, முனனமே வெட்டிககு
வேலைசெய்பவாகளையும கூலிவேலைககாராகளையும வழி
யைச செவவைபபடுததிக காததிருககுமபடி அனுபபி
யிருககிறேன. ஆகையால இபபொழுது நாம பரயாண
மாயப புறபபட்டுபபோகலாமெனறே எனககுத தோறறு
கிறது' எனறனன. தாமஸவபாவனுகிய பரதன பராதா
வினிடம மிகுநத பகதியுடன இஙஙனம வஸிஷடாதி
களைபபாாதது மொழிநது, ஆலோசனைகளில தோநத
ஸுமநதரன அருகிலிருககககணடு 'ஸுமநதரனே! நீ
எனதாஜ்ஞையினபடி எழுநதுசெனறு பரயாணமாயப
புறபபடவேணடுமெனறு ஆஜ்ஞாபிதது ஸைனயததை
அழைததுககொணடுவருவாயாக' எனறனன. ஸுமந
ரனும மஹானுபாவனுகிய பரதன இஙஙனஞ சொலலக
கேடடு மிகுநத ஸநதோஷம அடைநது தன கருததைப
பினசெனறு பரதன அளிதத ஆஜ்ஞையைச சேனையி
லுளளவாககுத தெரிவிததனன. அங்குளள பரஜை
களும ஸேனுதிபதிகளும ராமனை அழைத்துககொணடு
வருவதறகாக பரயாணமாகுமபடி ஸைனயததிறகு ஆஜ
ஞைசெயதானெனறு செவியுறறு மிகுநத ஸநதோஷம
அடைநதனா. பிறகு வீடுகள்தோறும படைவீராகளின

பாரையைகளெலலோரும ராமனிடம போக பரயாணம நேரிட்டதெனறு தெரிநது ஸநதோஷததுடன தநதமது பாததாககளைசூசீகரம புறபபடுஙகளெனறு தவரைபபடுத்தினா. அநத ஸேனுபதிகள, குதிரைகளும வேகமுளள எருதுகள பூட்டின வணடிகளும மிகக வேகமுளள தோகளும காலாடகளும நிறைநத ஸைனயம முழுமையும ஸிததமாகுமபடி ஆஜஞாபிததனா. பரதன ஸைனயமெலலாம ஸிததமாயிருபபது கணடு குருவான வஸிஷடருடைய அனுமதிககாக அவரது ஸநநிதானததில 'ரதததைத வேகமாகக கொணடுவருவாய' எனறு பககததிலிருககிற ஸுமநதிரனுககு ஆஜஞாபிததனன ஸுமநதரனும பரதனது ஆஜஞையைச சிரஸாவஹிததது ஸநதோஷிததுச சிறநத குதிரைகள பூட்டின ரதததைககொணடு வநதனன அபபொழுது, ரகுவமசததிற பிறநதவனும [1] அமோக தைாயமுடையவனும மஹாபரதாபமுடையவனும உறுதியும உணமையுமான பராகரமமுடையவனுமாகிய அபபரதன, மிகவும கமபீரமான வாாததைகளைச சொலலிமஹாரணயததிலிருககிற பெருமபுகழாளனைதமையனை ராமனை அருளபுரியசசெயது அழைததுககொணடு வரமுயனறு ஸுமநதரனைப பாாதது 'ஸுமநதரனே! நீ சீகரமாக எழுநது ஸேனைததலைவரிடஞ சென்று ஸைனயஙகளைச சிததபபடுததச சொலவாயாக நான உலகததின க்ஷேமததைத விருமபி ஆரணயததிலிருககினற அநத ஸ்ரீராமனை அருளபுரியசசெயது அழைததுககொணடு வர ஆவலுறறிருககினறேன' எனறனன பரதன அஙஙனம கமபீரமாக ஆஜஞை செயகையில அநத ஸுமநதிரன தன கருததெலலாம நிறைவேறபபெறறவனுகி பரஜைகளின பரமுகாகளுககும ஸேனுதயக்ஷாகளுககும நணபாகளுககும பரதனது ஆஜஞையைத தெரிவிததனன. பிறகு வீடுகளதோறும பராஹமண க்ஷததிரிய

1. அமோகதைாயம—அமோகமெனறால வீணுகாததான எனறு பொருள. அததகைய தைாயமுடையவனெனக.

வைஶ்ய சூதராகள எலலோரும ஒடடைகளமேலும கோவேறு கழுதைகளமேலும தோகளமேலும யானைகளமேலும சிறநத குதிரைகளமேலும அவரவாககுரிய படி ஏறிககொணடு பரயாணமாயப புறபபடடனா எணபததிரணடாவது ஸாககம முறறிறறு.

{ பரதன ஸைனயஙகளோடு புறபபடடுக கங காநதீ தீரததததில இளைபபாறுதல }

பிறகு பரதன மறறைறநாள விடியறகாலததில எழுநதிருநது சிறநத ரததததினமேல ஏறிககொணடு ராமனைப பாாககுஙகுதூஹலததினால சீகரமாகப போயினன. மநதரிகளும புரோஹிதாகளும அனைவரும குதிரைகள பூடடபபெறறு ஸூாய ரததைத நிகாதத ரதஙகளில ஏறிககொண்டு அபபரதனுககு முனனே நடநதனா பரதனது ஆஜ்ஞையினபடி ஸிததஞ்செயயபபடட ஒனபதினுயிரம யானைகள, இக்ஷ்வாகு குலகுமாரனை பரதன போகையில, அவனைப பினதொடாநதன மிகவும புகழ் பொருநதிய ராஜகுமாரனுகிய பரதன புறபபடடுபபோகையில, அவனைப பினதொடாநது அறுபதினுயிரம தோகளும பல ஆயுதஙகளைத தரிததவாகளும சிறநத விலலாளிகளுமாகிய அறுபதினுயிரம காலாடகளும போயினா. ரகுவமசததிற பிறநதவனும ஸதயஸநதனும ஜிதேநதரியனுமாகிய பரதன புறபபடடுப போகையில நூறுயிரங குதிரைவீராகள அவனைபபினபறறிசசெனறனா கைகேயியும ஸுமிததரையும மிகுநத புகழுடைய கௌஸலயையும ராமனை அழைததுககொணடுவருமஸநதோஷததினுல மனங்குளிரபபெறறு வேறுவேருகச சிறநத வாஹனஙகளில ஏறிககொண்டு போயினா. (அவாகளில கைகேயி தான செயத காாயததிறகுப பஶ்சாததாபம அடைநதவளாகி முக மழுனனம கடநதனள.) பராஹமண க்ஷத

ரிய வைஸ்யர்கள் அனைவரும் குவியல் குவியலாக லக்ஷ்மணனோடு கூடிய ராமனைப் பார்க்கும்பொருட்டு மனக்களிப்புற்றவர்களாகி அந்த ராமனைப்பற்றின கதைகளையே பேசிக்கொண்டு போயினர். [1] 'மேகம்போல கறுத்த நிறமுடையவனும் நீண்ட புஜத்தண்டங்களமைந்தவனும் நிலையான முயற்சியும் திடமான ஆஸ்ரிதரக்ஷண வ்ரதமும் பொருந்தி உலகங்கட்கெல்லாம் சோகத்தைப் போக்குந் தன்மையனுமாகிய ராமனை எப்பொழுது பார்ப்போம்! [2] ராமன் புலப்பட்டால் போதும் தூரத்தில் உதித்த ஸூர்யன் உலகத்திலுள்ள இருட்டையெல்லாம் அழிப்ப

---

1 'மேகஶ்யாமம் மஹாபாஹும் ஸ்திரஸத்த்வம் த்ருடவ்ரதம்| கதா த்ரக்ஷ்யாமஹே ராமம் ஜகதஶ்ஶோகநாஶநம்' என்பது மூலம் (மேகஶ்யாமம்) மேகம்போல தாபஸத்தனாயினும் அவனது ஸௌந்தர்யத்தை அனுபவிக்காமல் உபேக்ஷிக்கத் தக்கவனல்லன் அடிபட்டவனுக்கு மேகம்போல பார்த்தமாத்திரத்திலேயே ஸமஸ்த ஸந்தாபங்களையும் போக்கவல்லவன் (மஹாபாஹும்) விரோதிகளைப் போக்கி ஆஸ்ரிதர்களுக்கு அந்த ஸௌந்தர்யத்தை முற்றூட்டாகக் கொடுக்கவல்லவன் ஆனது பற்றியே 'ராமமிந்தீவரஶ்யாமம்' என்று ஸௌந்தர்யத்தைச் சொல்லி 'ஸர்வஸத்த்வமனோஹரம்' என்று சத்ருநிரஸனஸாமர்த்யம் உடனே சொல்லப்பட்டது. (ஸ்திரஸத்த்வம்) தன் ஆஸ்ரிதர்கள் தனக்கு ப்ரதிகூலராயிருப்பினும் மனக்கலக்கமுறாதவன் (த்ருடவ்ரதம்) அந்தரங்கராலும் அழிக்க முடியாத ஆஸ்ரிதரக்ஷணவ்ரத முடையவன், (ராமங்கதா த்ரக்ஷ்யாமஹே) அவன் முகத்தைப் பார்க்க நேரினும் போதும், கைகேயிவார்த்தைகளைக் கேட்டதனாலுண்டான தாபங்களெல்லாம் நிவ்ருத்தியாகும் (ஜகதஶ்ஶோகநாஶநம்) அவன் ஸமஸ்தலோகங்களுக்கும் சோகத்தைப் போக்குபவனாயிருக்க நமக்குமாத்ரம் சோகம் எங்கிருந்துண்டாயிற்று? அவன் ஸர்வலோகங்களுடையவும் சோகத்தைப் போக்கும் ஸ்வபாவத்திற்கும் நமது சோகத்திற்கும் ஸம்பந்தமில்லையே நமக்கு எப்படி சோகமுண்டாயிற்றென்று கருத்து.

2. 'த்ருஷ்ட ஏவ ஹி நஶ்ஶோகமபநேஷ்யதி ராகவ:' என்றது மூலம் (த்ருஷ்ட ஏவ) பார்த்த மாத்ரத்திலேயே நம்மைப் பார்த்து மந்தஸ

பதுபோல் அவன் புலப்பட்டவுடனே நமது சோகத்தை யெல்லாம் போக்கவல்லவன்' என்று இவ்வாறு அந்நகரத்து ஜனங்கள் ராமனைக்குறித்த அழகான கதைகளைச் சொல்லிக்கொண்டும் மனக்களிப்புற்று ஒருவர்க்கொருவர் ஆலிங்கனஞ் செய்துகொண்டும் சென்றார்கள். மேலும், எவரெவர் ஸ்ரீராமனுக்கு அன்பர்களோ அவர்களெல்லோரும் வர்த்தகர்களும் பட்டணத்து ஜனங்களும் அனைவரும் ராமனைப்பற்றி ஸந்தோஷமுற்றுப் போயினர். பின்னும் பத்மராகம் முதலான ரத்னங்களைச் சாணை பிடிப்பவர்களும் குமவேலைகளில் கைதேர்ந்த குயவர்களும் நெசவுவேலைக்காரர்களும் மயிலிறகினால் குடை விசிறி முதலியன செய்பவர்களும் ரம்பத்தினால் கட்டைகளை அறுத்துப் பிழைப்பவர்களும் தந்தச் சுவர் முதலியவற்றிற்கு மெருகிடுபவர்களும் மாம் மணி முதலியவற்றில் தொளை செய்பவர்களும் தந்த வேலைக்காரர்களும் ஸுண்ணக்காரை வேலை செய்வோர்களும் சந்தனம் முதலான வாஸனாத்ரவ்யங்களை விற்று ஜீவிப்பவர்களும் மிகுந்த புகழுடைய தங்க வேலைக்காரர்களும் கம்பளம் முதலியவற்றைத் தோய்த்து அழுக்கெடுப்பவர்களும் எண்ணெய் தேய்த்து ஸ்நானஞ் செய்விப்பவர்களும் உடம்பைப் பிடித்து நோ

---

மித்தம் பண்ணவேண்டிய அவஸ்யமில்லை நமக்குக் கடைக்கண்களால் கடாக்ஷித்து இனியதொரு பேச்சுப் பேசவேண்டிய அவஸ்யமுமில்லை நாமும் ஒரு ப்ரயத்னஞ் செய்ய வேண்டிய அவஸ்யமில்லை. அவன் தூரத்தில் புலப்படினும் போதும் நமது சோகமெல்லாம் தொலையும். இதற்கு த்ருஷ்டாந்தம்—(தமஸஸ்ஸர்வஸ்ய லோகஸ்ய ஸமுதீயந்நிவ ஹம்ஸகர:) தூரத்திலுதித்த ஸூர்யன் ஸமஸ்தலோகங்களுடையவும் இருட்டைப் போக்குவதுபோல ராமன் தூரத்தில் புலப்பட்ட மாத்ரத்திலேயே நமது சோகாந்தகாரங்களை யெல்லாம் போக்குவானென்று கருத்து

யைத் திரப்பவர்களும் வைத்யர்களும் வீடுகளில் அகில் முதலான வாஸனைப்புகை யிடுபவர்களும் பலவகை மத்யஞ் செய்பவர்களும் துணி வெளுப்பவர்களும் தையற்காரர்களும் கிராமங்களிலும் இடைச்சேரிகளிலும் உள்ள தலைவர்களும் வேஷங்கட்டியாடி ஜீவிப்பவர்களும் வாரஸ்த்ரீகளும் செம்படவர்களும் ராமனைப் பார்க்கும்பொருட்டுப் பரதனைப் பின்சென்று போயினர் யோகநிஷ்டர்களும் வேதவித்துக்களும் ஸதாசாரமுள்ளவர்களுமாகிய ப்ராஹ்மணர்கள் ஆயிரமாயிரமாக மாட்டுவண்டிகளில் ஏறிப் பரதன் போகும்பொழுது பின் சென்றனர். இங்ஙனம் அவர்கள் எல்லோரும் நன்கு அலங்காரஞ் செய்து நிர்மலமான வஸ்த்ரங்களை உடுத்துச் செஞ்சந்தனத்தை மேனிமுழுமையும் பூசிப் பலவகை வாஹனங்களின்மேல் ஏறி மெதுவாகப் பரதனைப் பின்சென்று போயினர். ஸேனையிலுள்ளவர் யாவரும் மயிர்க்கூச்சலுண்டாகும்படி மனக்களிப்புற்றவராகி ப்ராதாவினிடத்தில் ப்ரீதியால் அவனை அழைத்துக்கொண்டுவரப் போகும் கைகேயி குமாரனாகிய பரதனைப் பின் சென்றனர் அவர்கள், தேர் பல்லக்கு குதிரை யானை முதலான வாஹனங்களின்மேல் ஏறி வெகுதூரம் போயினர். அங்ஙனம் போய ராமனது நண்பனும் வீரனுமாகிய குஹன் பந்துஜனங்கள் சூழப்பெற்று மனவூக்கத்துடன் அங்குள்ள தேசத்தைப் பரிபாலித்துக்கொண்டு வாஸஞ் செய்கிற ச்ருங்கிபேரபுரத்தின் ஸமீபத்திலுள்ள கங்காநதியைச் சேர்ந்தனர் பரதனைப் பின் செல்கிற அந்த ஸைன்யமானது சக்ரவாக பக்ஷிகளால் அலங்கரிக்கப்பட்ட கங்கையின் கரையைச் சேர்ந்து அங்கே இழிந்தது பேசவல்லனாகிய பரதன் தன் பின்னே வந்த ஸைன்யத்தையும் அழகிய ஜலத்தோடுகூட விளங்குகிற அகன்

கையையும் பார்த்து மந்திரிகள் எல்லோரையும் நோக்கி ‘அவரவர் அபிப்பிராயத்தின்படி என் ஸைன்யத்தையெல்லாம் அங்கங்கே இறக்குவீர்களாக. இப்பொழுது இங்கு இளைப்பாறி நாளையதினம் இந்நதியைத் தாண்டுவோம். மேலும், நான் நதியுள்ளேயிழிந்து, ஸ்வர்க்கஞ் சென்ற மஹாராஜருக்கு, அவரது ஊர்த்வதேஹ ஸௌக்யத்தின்பொருட்டு ஜலதர்ப்பணஞ்செய்ய விரும்புகின்றேன்’ என்றனன். அவன் அங்ஙனம் சொல்லுகையில் மந்திரிகள் அப்படியேயென்று மனவூக்கமுற்றுத் தந் தமது இஷ்டப்படி வேறு வேறாக அந்த ஸேனைகளுக்கெல்லாம் விடுதிகளை ஏற்படுத்தினர். பரதன் மஹாநதியாகிய கங்கையின் கரையில் அந்தந்த ஜாதிவ்யவஸ்தை முதலிய பலவிதமான ஏற்பாடுகளைச் செய்து டேரா முதலான பரிகரங்களோடு விளங்குமாறு ஸேனையை இறக்கி மஹானுபாவனாகிய ராமனைத் திரும்பி அழைத்துவரும் விஷயத்தை ஆலோசித்துக்கொண்டே அங்கிருந்தனன்.

எண்பத்து மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று

## பரதனுக்கு குஹன் அதிதிபூஜை செய்தல்

அனந்தரம் கங்காநதியின் ஓரத்தில் இழிந்திருக்கிற ஸேனையைப் பார்த்து [1] நிஷாதாதிபதியாகிய குஹன் பரபரப்புற்றுத் தன்பந்துக்களை நோக்கி ‘இங்கு ஸமுத்ரம் போல் மிகவும் பரந்து இப்பெரும் ஸேனை புலப்படுகின்றதே. இதை எவ்வளவு தூரம் பார்த்தபோதிலும் இதன் முடிவு மனத்திலும் நினைக்க முடியாதிருக்கின்றது. துர்ப்புத்தியாகிய பரதன் தன் தாய்செய்தது போதாதென்று தானும் ராமனைப் பாதிக்கவந்தனன்; இது நிச்சயம். ரதத்தில் இக்ஷ்வாகு வம்சத்திற்குப் பரம்பரையாக ஏற்பட்டதும் பெரிய உருவமுடையதுமாகிய கோவிதாரத்வஜம் இதோ புலப்படுகின்றதே.

1. நிஷாதர்—வேடர்

இநதப பரதன நமது செமபடவாகளைப பகதனமாவது செயவான, அலலது நமமெலலோரையும கொனருவது விடுவான அலலது இககைகேயி குமாரன, ராஜாவாகைககுரிபவனாகிய ராமன திருமபி வருவானாயின தனககு ராஜயலக்ஷமி நிலைககாதெனறு நினைததும, அது அவனுககு எவவிதததிலுமபெற அஸாதயமாய்த தனககே முழுமையும நிலைநிறக வேணடுமெனறு விருமபியும், அதறகாக, நகதை ராஜயததினினறும துரததிவிடுகையில ஸஹாயஸமபததியினறித தாபபலனாகித தசரத குமாரனாகையால தனககுத தாயாதியுமான ராமனைக கொலலவேணடுமெனறு வருகினறனன. 'ஆனால உனககு என' எனகிறீரகளோ? தசரத குமாரனாகிய ராமன எனககு பரபுவும நணபவனுமாயிருபபவன. ஆகையால ராமனது பரயோஜனததை விருமபி நீஙகள எலலோரும ஸிததபபடடுக கஙகாதீரததில கெடடியாக நிலைபெறறிருககவேணடும நம செமபடவாகளெலலோரும கஙகாநதியில குறுககாக ஸைனயஙகளோடுகூடி மாமஸஙகளையும காய கிழஙகுகளையும ஆஹாரஞசெயதுகொணடு காததிருபபீரகளாக ஐநநூறு ஓடஙகளை ஸிததபபடுததிககொணடு ஓடம ஒவவொனறுககு யுததஸநநாஹமுறற வயதுளள செமபடவாகள நூறுபேர வீதம காததுககொணடிருபபீரகளாக' எனறு ஆஜஞாபிததனன. மேலும், அநதக குஹன 'பரதன ராமனிடததில கொடுஙகருததிலலாமல மனககளிபபுறறிருபபானாயின, அபபொழுது அவனுடைய இநத ஸைனயமானது ஸுகமாக இககஙகாநதியைத தாணடுமாக. அபபடி இலலையாயின, இவனைக கொலலவேணடும' எனறனன. அநத வேடர தலைவனான குஹன படடுவஸதரம முதலியவறறையும மதஸயஙகளையும மிருக மாமஸஙகளையும தேனகளையும காணிககையாகக கொணடு பரதனை எதிரகொணடு

சென்றனன பிறகு பரதாபசாலியும வணககமுடைய வனுமாகிய ஸுமநதரன, அஙஙனம குஹன வருவது கணடு வணககததுடன பரதனைப பாரதது 'இதோ வருகின்றான பார இவன இஙகுளள வேடாகளுககு பரபு, அனேகமாயிரம பநதுககளால சூழபபடடவன இவன இததணடகாரணய ஸஞசாரததில வலலமையுடையவன, வயதுசென்றவன, உன பராதாவாகிய ராமனுககு நணபனுமாயிருபபவன ககுதஸதகுலாலஙகாரகனே! குஹனென்னும பேருடைய இவ வேடாதலைவன இபபடிபபடடவனாகையால இவன உனனைப பாரககத தகும ஆனதுபறறி இவனுககு நீ தாஸனங கொடுபபாயாக. நமது ராம லக்ஷமணாகள எஙகிருககிறாகளோ அது இவனுககு நிஸஸம்சயமாகத தெரிநதிருககும' என்றனன. ஸுமநதரன சொனன அநத சுபவாாததையைக கேடடுப பரதன 'சீகரமாக எனனைக குஹன பாாககவரலாம' என்றனன குஹன அனுஜ்ஞையை பெறறு ஸநதுஷடனாகிப பநதுககளால சூழபபடடு வநது பரதனைப பாரதது வணஙகி 'இததேசம உன விடடுப புறககடைத தோடடமபோலவே! நீ வருவது தெரியாமையால நாஙகள எலலோரும மோசம போயினம அது எஙகளுககுத தெரிநதிருககுமாயின எதிரகொணடு வருவது முதலிய செயயவேணடிய மாயாதைகளைச செயதிருபபோம நீ உன ஸொநத தாஸாகளான எஙகள விடடில இருநதுபோக வேணடுமென்று நாஙகள எலலோரும வேணடுகின்றனம எமது வேடாகள கிழஙகுகளையும காயகளையும பசசை மாமஸஙகளையும உலாநத மாமஸஙகளையும தினைமுதலான பலவித வனய தானயஙகளையும ஸிததஞ செயதிருககின்றனா இநத ஸைனயம முழுவதும எனது இருபபிடம வநது ஸுகமாகப புசிதது இனறிரவு முழுமையும வஸிததிருககவேணடுமென்று பராாததிககின்றனன ஆகையால நீ விருமபினபடியெலலாம நாஙகள செயய, நானாவித [1] காமஙகளால

---

[1] காமஙகள—விரும்பத தகுநத பதாாத்தஙகள

பூஜிக்கப்பட்டு காலையில் ஸைன்யத்துடன் புறப்பட்டுப் போகலாம்' என்றனன் என்பது நான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

### குஹன் பரதனுக்கு நல்வார்த்தை சொல்லுதல்

வேடர் தலைவனாகிய குஹன் இங்ஙனம் சொல்லுகையில், மிகவும் அறிவுடையோனாகிய பரதன் அந்தக் குஹனைப்பார்த்து, யுக்திகளும் ப்ரயோஜனங்களும் அமைந்திருக்குமாறு மறுமொழி கூறினன் — 'என் ஐயனாகிய ராமனது நண்பனே! நீ ஒருவனே அளவிடக்கூடாத என்னுடைய இவ்வளவு ஸைன்யத்துக்கும் பூஜைகள் செய்ய விரும்புகின்றாயே! அப்படி செய்யவேண்டுமென்று மேன்மேலும் நீ விரும்புவது மாத்ரத்தினாலேயே எனக்கு பூஜைகளெல்லாம் செய்தாற்போலவே ஆயிற்று' என்றனன் மஹாதேஜஸ்வியாகையால் கம்பீரனாகிய அப்பொழுது ஸந்தோஷப் பெருக்கினால் மிக்க ஒளியுடன் விளங்குகின்ற பரதன் வேடர் தலைவனைக் குறித்து அங்ஙனம் மேன்மையான மொழியைக் கூறி, மீளவும் வேடர் தலைவனான அவனைப் பார்த்து 'குஹனே! பரத்வாஜாச்ரமத்திற்கு எவ்வழியால் போவோம்? இந்தத்தேசம் மிகவும் புக அரிதாயிருக்கின்றது. மேலும் கங்கையைச் சேர்ந்த இவ்வோடையைத் தாண்டுவதும் கஷ்டம்' என்றனன் ஆரண்யவாஸியாகையால் ஆரண்ய ஸஞ்சாரத்தில் வல்லவனாகிய குஹனும் சிறந்த அறிவுடையோனான ராஜகுமாரனது வார்த்தையைக் கேட்டுக் கைகளைக் குவித்து 'ராஜகுமாரா! பெரும்புகழுடையவனே! எமது செம்படவர்கள் வில்லைத் தரித்து மிக்க மனவூக்கத்துடன் உன் பின்னே வருகின்றனர். நானும் உன்னைப் பின்பற்றி வருகின்றனன். ஆகையால் மார்க்கத்தைக் குறித்து நீ சிந்திக்கவேண்டாம் நமது ராமன்

எவர்க்கும் துக்கத்தை விளைக்கும்படியான காரியத்தைச் செய்யமாட்டான்; மற்றும், எப்படிப்பட்ட காரியத்தையும் அநாயாஸமாகச்செய்யுந் திறமையுடையவன். அப்படிப்பட்ட ராமனுக்குக் கெடுதியைச் செய்ய நினைத்து நீ போகிறாயல்லவோ! உன்னுடன் வந்திருக்கிற இவ்வளவு பெரும் ஸேனையைப் பார்க்கவும் எனக்குக் கொஞ்சம் ஸந்தேஹம் உண்டாகின்றது. ராமனைப் பார்க்கிறதற்கு மாத்ரமே போவாயாயின், இவ்வளவு ஸேனை வேண்டியதில்லையே' என்றனன். பரதன் ஆகாயம்போல் அழுக்கற்றவனாகையால் இங்ஙனம் மொழிகின்ற குஹனைப் பார்த்து அவன் அங்ஙனம் வினவுதற்குச் சிறிதும் கோபமின்றி, மெதுவான வாக்யத்துடன் 'ராமனுக்குக் கெடுதியை நினைப்பவனென்று உனக்கு ஸந்தேஹமுங்கூட உண்டாக நேர்ந்ததா! நீ சங்கிக்கிற கஷ்டம் எந்தக்காலத்தில் உண்டாகுமோ, அப்படிப்பட்ட கஷ்டகாலம் உண்டாகாதிருக்குமாக. தம்பி தமையனுக்கு த்ரோஹம் செய்யும்படியான கொடுமை உண்டாவது கலிகாலத்தின்றோ? ஆகையால் என்னைக்குறித்து நீ ஸந்தேஹப்படத்தக்கதன்று. ஏனென்றால்—ரகுகுலாலங்காரனாகிய அந்த ராமன் எனக்குப் பெரிய தமையன். ஆகையால் அவன் எனக்குத் தந்தையைப்போலவே பாவிக்கத் தக்கவன் குஹனே! அரண்யத்தில் வஸிக்கின்ற அந்தக் காகுத்தனை ராமனைத் திருப்பி அழைத்துக்கொண்டு வருவதற்காகப் போகின்றனன். ஆகையால் வேறுவிதமாக நீ நினைக்கலாகாது. நான் உனக்கு ஸத்யமாகச் சொல்லுகிறேன்' என்றனன். அந்தக் குஹன் இவ்வண்ணம் பரதன் சொன்ன வார்த்தையைக் கேட்டு முகந்தெளியப்பெற்றுப் பெரும் ஸந்தோஷத்துடன் மீளவும் பரதனைப் பார்த்து ஒரு ப்ரயத்னமுமின்றித் தானாகவே வந்த ராஜ்யத்தையும் துறக்க விரும்புகின்றாயே! நீ எவ்வளவு தர்மஸ்வபாவனோ? உன்னைப் போன்ற தனயனை இப்புவனியில் எங்கும் இதுவரையில் நான் பார்க்கவில்லை. நீ, வ்யஸனத்தில் அகப்பட்ட

ராமனைத் திருப்பிக்கொண்டு வந்து ஸுகமாயிருக்கச் செய்ய விரும்புகிறுயாகையால் உன் கீர்த்தி சாச்வதமாக ஸமஸ்த லோகங்களிலும் வியாபித்து விளங்கும்' என்றனன். அப்பொழுது குஹன் இங்ஙனம் வார்த்தை சொல்லிக் கொண்டிருக்கும் பொழுதே ஸூர்யன் காந்தி குறையப்பெற்று அஸ்தமித்தனன். பிறகு ராத்ரியும் நெருங்கியது. குஹனல் மனக்களிப்புறும்படி மிகவும் புகழ்பெற்ற அந்தச் செல்வக்குமாரனுகிய பரதன் ஸேனையை அந்தந்த இடங்களில் இறக்கிச் சத்ருக்னனும் தானுமாகப் படுக்கையில் படுத்துக்கொண்டனன். பரதன் கபடமற்ற வாய்மையுடையவனுகையால் துக்கத்திற்கு எவ்வளவும் தகாதவன், மஹாமைத்ரியமுடையவன், சோகத்தை விளைக்கும்படியான பாபம் ஏதுஞ் செய்யாத தர்மபுத்தியுடையவன். இப்படிப்பட்டவனுயினும் அவனுக்கு ஸஹிக்கமுடியாததும் வாயாற் சொல்லக் கூடாததும் நெஞ்சால் நினைக்கக்கூடாததுமான ராமனைக் குறித்த சிந்தையாகிற அப்படிப்பட்ட சோகம் ஸம்பவித்ததல்லவா! ஸமீபத்திலுள்ள அரண்யம் நெருப்பு பற்றி எரிகையில் அத்தீயினால் எரிக்கப்பட்ட வருக்ஷத்தை, அதன் பொந்தில் அக்னி மறைவாகப்பற்றி மேன்மேலும் தபிக்கச் செய்வதுபோல், சிந்தையென்னுந் தீயினல் எரிக்கப்பட்டுப் பரிதபிக்கின்ற பரதனைச் சோகாக்னியானது மேன்மேலும் பரிதபித்து வருந்தச்செய்தது. ஸூர்யகிரணங்களால் உருக்கப்பட்ட இமயமலையினின்றும் பனிநீர் பெருகுவதுபோல், பரதனது ஸகலாவயவங்களினின்றும் சோகாக்னியால் புழுக்கநீர் பெருகலாயிற்று. கைகேயியின் மகனுகிய பரதனை அத்துயரமென்னும் பெருமலை அழுத்தி விட்டது. அத்துயர

மென்னும் பாவத்திற்கு இடைவிடாது நடக்கும்[1] ராமசிந்தையே குகைகளில் வெடித்துக் கிடக்கிற கல்குவியல்களும், பெருமூச்சுக்களே பற்பல தாதுக்களும், இந்திரியங்கள் தந்தம் காரியங்களில் செல்லாதிருத்தலே மரக்கூட்டங்களும், மேன்மேலும் வளர்ந்து வருகின்ற சோகமும் ஆயாஸமும் மனோவ்யாதியுமே சிகரங்களும், மதிமயக்கங்களே அளவிறந்த ஜந்துக்களும், ஸந்தாபமே ஓஷதிகளும் மூங்கில்களுமாயின புருஷசிகாமணியாகிய அப்பரதன் மிக்க மனக்கலக்கமுற்றுப் பெருமூச்செறிந்து ப்ரஜ்ஞையுந் தப்பி இங்ஙனம் மிகுந்த ஆபத்தில் ஆழ்ந்து மனக்கவலையால் வருந்தி, கூட்டத்தினின்றும் பிரிந்த வ்ருஷபம்போல் பரிதபிக்கிருந்தானன்றிச் சிறிதும் மனக்கவலை தீரப் பெறவில்லை. மஹானுபாவனாகிய பரதன் பரிவாரங்களோடு ராமனையே சிந்தித்துக்கொண்டிருக்கையில், குஹன் வந்து அவனுடன் கலந்தனன். பிறகு குஹனும் பரதனது நிலைமையைக் கண்டு மிக்க மனவருத்தமுற்று ராமனைக் குறித்த வார்த்தைகளைச் சொல்லி அப்பரதனை ஸமாதானப்படுத்தினன் என்பத்தைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று

1 த்யானங்கள் இடைவிடாதிருக்கையால் உடைந்து சிதறின கல்குவியலாகவும் கைகால் முதலிய அவயவங்கள் தந்தமது வ்யாபாரங்களைச் செய்யாமல் ஓய்ந்திருக்கையால் வ்ருக்ஷங்களாகவும், சோகாதிகள் மேன்மேலும் வளர்ந்து ஸ்திரமாயிருக்கையால் திடமுள்ள சிகரங்களாகவும், மோஹங்கள் ப்ராணபயத்தை விளைக்கையால் க்ரூர ஜந்துக்களாகவும், ஸந்தாபங்கள் புகக்கூடாதிருக்கையால் மூங்கில் புதர்களாகவும், இவற்றோடு கூடிய சோகம் பொறுக்கமுடியாமல் பெரும்பாரமாயிருக்கையால் மஹாபர்வதமாகவும் ரூபிக்கப்பட்டன.

குஹன், ராமனைக் குறித்து லக்ஷ்மணன் துன்புற்றுப் புலம்பினதைப் பரதனிடம் கூறுதல்.

[1] அனந்தரம் வனத்தில் நித்யவாஸஞ் செய்பவனாகிய குஹன், அளவிடவொண்ணாத மஹிமைபொருந்திய பரதனைப் பார்த்து, மஹாநுபாவனாகிய லக்ஷ்மணனுக்குத் தமையனிடத்திலுள்ள பக்தியாகிற நல்லஸ்வபாவத்தைச் சொல்லத் தொடங்கி 'அண்ணனைக் காக்கும்பொருட்டு வில்லையும் பாணத்தையும் தரித்துக் கண் கொட்டாமல் விழித்துக்கொண்டிருந்து குணவந்தனாகிய லக்ஷ்மணனைப் பார்த்து நான் 'ரகுகுலத்திற்கு மனக்களிப்பை விளைக்கும் மஹாநுபாவனே! லக்ஷ்மணா! இதோ உனக்காகப் படுக்கை ஸுகமாக ஏற்படுத்தப்பட்டிருக்கின்றது நீ இதன்மேல் ஸுகமாகப் படுத்துக்கொண்டு ஸ்ரமந்தீரப் பெறுவாயாக தர்மஸ்வபாவனே! இதோ இருக்கின்ற நாங்களெல்லோரும் துக்கத்தை அனுபவிக்கத் தகுந்தவர்களே நீயோ ஸுகத்திற்கே உரியவனாகையால் ஸுகமாகப் படுத்து நித்திரை செய்வாயாக அந்த ராமனைக் காப்பதற்கு நாங்களெல்லோரும் விழித்துக்கொண்டிருக்கின்றனம் இப்புவனியில் ராமனைக்காட்டிலும் இனியவன் எனக்கு எவனும்

[1] 'ஆசசக்ஷேऽத ஸத்பாவம் லக்ஷ்மணஸ்ய மஹாத்மந:। பரதாயாப்ரமேயாய குஹோ கஹநகோசர:' (அ) பரதன் அபிப்ராயந் தெரிந்தபின்பு, அல்லது—பரதனைத் தேற்றின பின்பு (லக்ஷ்மணஸ்ய மஹாத்மந:) ஸமுத்ரத்தைக் கையால் அளக்க முயன்றவன் (ஸத்பாவம்) 'பால்யாத் ப்ரப்ருதி ஸுஸ்நிக்த:' என்று தமையனை அநுவர்த்தித்திருக்கும்மேலான ஸ்வபாவத்தை (ஆசசக்ஷே) சொல்லினன் இதனால்—பகவத்விஷயோபதேசத்திற்குப் புதியவர் பழையவரென்னும் பேதமில்லை சொல்லுவாரெல்லோரும் குருக்களே, ஆதரமுள்ளவரெல்லோரும் ஸ்ரோதாக்களே யென்று தெரிகின்றது (ஆசசக்ஷே) சிறந்து சொல்லினன், லக்ஷ்மணனது ஸத்பா

இலலை ஆகையால நீ ராமனுககாக மனககலககஙகொணடு வருநதி விழிததுககொணடிருககவேணடிய அவஶ்யமிலலை உனனெதிரில நான இது விஷயததில அபத்தம சொலவேனோ? இநத ராமனது அனுகரஹததினுலேயே, நான இவவுலகததில பெருமபுகழையும பரலோக ஸாதனமான தாமததையும மேலும நயாயபபடி நோநத தனுதிகளையும பெற விருமபுகினறேன. ஆனதுபறறி நான விலலேநத தரிததுப பநதுககளெலலாருடன கூடி, ஸீதையுந தானுமாகப படுதது நிததிரை செயகினற என தருமைத தோழனுகிய ராமனைக காததுககொண்டிருககினறேனன. நான எபபோதும அரணயததில திரிபவனுகையால இவவரணயததில எனககுத தெரியாதது ஒனறும இலலை. நாஙகள சதுரஙகஸைனயம வநது போராடினும அதைப பொறுததெதிரககவலலோம' எனறனன. மஹானுபாவனுகிய லக்ஷமணன தாமததிலேயே மனஞ்செனறவனுகையால நாஙகள சொனனதைக கேட்டு எஙகளெலலோரையும நலவாரததை சொலலி ஸமாதானபபடுததி இஙஙனம மொழிநதனன - 'தசரத மஹாராஜா வயிறறில பிறநத ராமன ஸீதையோடு கூட நிலததில படுததிருககையில, என பராணனகளைத தரிததிருபபதே எனககுக கஷடமாயிருககினறது? அனறியே மறறை ஸுகஙகள தானும எபபடி எனககுப பொருநதும? ஆகையால நான எபபடி படுததுறஙகுவேன? குஹனே! எவன தேவாஸுராதி ஸகல பூதஙகளாலும யுததததில எதிரிட வொணணுத

---

வததை வாயால சொலலககூடுமான வரையிலுமே சொனனுனெனறு அசகத்ஞனையால பூர்ணமயும சொலலவிலலை யெனறு பொருள (மூஹோ மஹநமோசரம்)வனததிலுளள வருக்ஷஙகளின தாரதமயஙகளை யாதரமறிநதவன, இவனுடைய பாவத்தை அறிநதிலன அலலது ராமவிரஹத்தால ஒரு புதரில புகுநதிருநதனன, அநத தேசததிலுள்ளவா வரககணடு வெளிபபுறபபட்டு வநதானெனறபடி.

சூரத்தன்மையுடையவனே, அப்படிப்பட்ட மஹாபரா
க்ரமசாலியாகிய ராமன் இப்பொழுது ஸீதையுடன்
கூடப் புறப்படுகையில் படுத்திருக்கின்றனன், பார்.
தசரதர் பெருந்தவங்கள் செய்து பற்பல வ்ரதங்களை
நடத்தி அனேக யாகங்களைப் பண்ணி இங்ஙனம் பற்பல
வருத்தங்களால் இப்பிள்ளையைப் பெற்றனர் இவனொரு
வனே தந்தையைப்போல் ஸமஸ்த லக்ஷணங்களும்
அமைந்தவன் இவன் அரண்யம் வந்த பின்பு, இனி
மஹாராஜர் வெகுகாலம் ஜீவித்திரார். இனிச் சீக்ரத்
திலேயே பூமி விதவையாகப் போகின்றது. இது நிச்ச
யம் அப்பா! இச்சமயம் அந்தப்புர ஸ்த்ரீகள் பெருங்
குரலுடன் புலம்பி அலுப்புற்று ஓய்ந்து போயிருப்பார்
கள் ராஜமாளிகையும் ஒலி ஓய்ந்து நிஶ்ஶப்தமாயிருக்
குமென்று எண்ணுகின்றேன் கௌஸல்யையும் மன்ன
வரும் என் தன்னையும் இன்னும் ஜீவித்திருப்பார்களெ
ன்று நினைக்கவில்லை ஒருகால் ஜீவித்திருப்பார்களா
யின், இன்றிரவு மாத்ரமே ஜீவித்திருப்பார்கள் என்
தாயான ஸுமித்ரை இரண்டாங் குமாரனாகிய சத்ருக்
னனைப் பற்றி ஜீவித்திருப்பினும், இவ்வீரனைப்பெற்ற
மாதாவான கௌஸல்யை மாத்ரம் இவனைப் பிரிந்த
வருத்தத்தினால் நாசமடைவது தவறாது விஞ்சிப்போ
யிற்று விஞ்சிப்போயிற்று எல்லாம் பாழாய் விட்டது.
என் தந்தை தசரத மஹாராஜர் ராஜ்யத்தில் ராமனுக்
குப் பட்டாபிஷேகஞ் செய்யாமையால் தன் கருத்து
ஈடேறப்பெறாமலே நாசமடைகின்றாரே. தந்தை மஹா
ராஜர் மரணமடையும்பொழுது அவருக்கு அந்தந்த
காலங்களில் ஸமஸ்த ஸம்ஸ்காரங்களை நடத்துகிற பரத
சத்ருக்னர்களன்றோ[1] க்ருதார்த்தர்கள் (எம் தந்
தை மரணமடையும்படியான காலம் வரப்பெற்று மரண
மடைகையில், அவருக்குப் பரேத கார்யங்களில் செய்ய
செய்யவேண்டிய ஸம்ஸ்காரங்களைச் செய்பவரன்றோ

---

1 ப்ரயோஜனங் கைகூடப்பெற்றவர்.

கலிவினையராயினர்) எம் தந்தையின் ராஜதானியாகிய அயோத்யையை மிகவும் அழகான நாற்சந்தி வீதிகளும் நன்கு பகுத்து ஏற்படுத்தப்பட்ட ராஜ மார்க்கங்களும் அமைந்து தனிகர்களின் மேடைகளும் தேவாலயங்களும் ராஜாக்களின் உபரிகைகளும் விளங்கப்பெற்று மேலான வஸ்துக்கள் எவ்வெவை உண்டோ அவையெல்லாம் நிறைந்து ரமணீயமாயிருக்கும். மேலும் அதில் யானைகளும் குதிரைகளும் தேர்களும் நிறைந்து வாத்ய த்வனிகளின் ப்ரதித்வனி யெழப்பெற்றிருக்கும் பின்னும் அந்நகரத்தில் ஸமஸ்த மங்கலங்களும் நிரம்பி ஜனங்களெல்லாரும் துஷ்டியும் புஷ்டியும் உண்டாகப்பெற்று நிறைந்து விளங்குவார்கள். அங்குத் தோட்டங்களும் ராஜாக்களின் உத்யானங்களும் எங்கும் நிறைந்திருக்கும். அதில் ஜனங்கள் குவியல்கூடி என்றும் ஓயாமல் பல உத்ஸவங்களை நடத்திக்கொண்டிருப்பார்கள். இப்படிப்பட்ட அந்நகரத்தில் இன்புற்றவர்களானோ வாழ்வார்கள் நாங்கள் இந்தப் பதினான்கு ஸம்வத்ஸரங்களென்னும் கெடுவைக் கடத்தின் பின்பு வனவாஸ ப்ரதிஜ்ஞையைத் தீர்த்து க்ஷேமமாயிருக்கின்ற ராமனோடுகூட ஸுகமாக அயோத்திமாநகரம் போய்ச் சேரும் காலமும் நேருங்கொலோ” என்றுரைத்துப் புலம்பினன். மிகவும் மஹானுபாவனாகிய அந்த ராஜகுமாரன் நின்றுகொண்டே இங்ஙனம் புலம்பிக்கொண்டிருக்கையிற்றானே அவ்விரவு கடந்து சென்றது. அனந்தரம் நன்றாகப் பொழுது விடிந்து ஸூர்யனும் நிர்மலமாகப் புறப்படுகையில் அவ்விருவரும் இக்கங்காநதிக்கரையிலேயே ஜடைகளைத் தரித்துக்கொண்டனர். பிறகு நான் அவர்களை ஸுகமாகக் கங்கையைத் தாண்டுவித்தனன். மிகுந்த பலமுடையவர்களும் மேலான கஜராஜத்தை நிகர்த்தவர்களும் பகைவரைப் புறக்கச் செய்பவர்களுமாகிய அந்த ராம லக்ஷ்மணர்கள் இருவரும் ஜடைகள் தரித்து மரவுரிகளை உடுத்துச் சிறந்த



1057. பரதன 'இஙகுணமரததினகீழ் ஸீதையும ராம லக்ஷமணரகளும படுததுககொணடாரகள' எனறு குஹன சொலலக கேடடு மூரசசை அடைதல.

பாணங்களையும் வில்லையும் கத்தியையும் பிடித்து மிக்க மனஊக்கத்துடன் நாற்புறமும் உற்றுப் பார்த்துக்கொண்டு ஸீதையுடன் கூடிப் போயினர். எண்பத்தாருவது ஸர்க்கம் முற்றிற்று.

---

குஹன் பரதனுக்கு ராமன் ஜலாஹாரஞ் செய்து ஸீதையுடன் இங்குணமரத்தின் கீழ்ப்படுத்திருந்தது முதலான வ்ருத்தாந்தங்களைக் கூறுதல்.

குஹன் 'ராமலக்ஷ்மணர்கள் ஜடைகளைத் தரித்து அரண்யம் போயினர்' என்று மிகவும் அப்ரியமான வார்த்தையைச் சொல்லிக்கொண்டிருக்கையில், பரதன் கேட்டு ராமன் அங்ஙனம் ஜடைகள் தரித்துப் போனது பற்றித் தன் கருத்தின்படி திரும்பி வருவானோ மாட்டானோவென்று அவ்வப்ரியங்கேட்ட அந்த க்ஷணத்திலேயே அந்த இடத்திலேயே பெருஞ் சிந்தையில் ஆழ்ந்தனன். அதிஸுகுமாரனும் மஹாபலமுடையவனும் சிங்கத்தின் தோள்போன்ற தோள்களும் திரண்டுருண்டு நீண்ட புஜதண்டங்களும் செந்தாமரைமலர்போல் அகன்றழகிய கண்களும் விளங்கப்பெற்று இளம்பருவம் பொருந்திய பார்க்க இனியனுமாகிய பரதன் சிறிதுநேரம் தெளிந்திருந்து மனத்தில் வருத்தம் மீதூரப் பெற்றுப் பொறுக்கமுடியாமல் மாவெட்டியால் மிகவும் அடிக்கப்பட்ட யானையைப்போல் திடீரென்று தரையில் வீழ்ந்தனன். அருகிலிருந்த சத்ருக்னன் அவ்வவஸ்தையிலிருக்கிற பரதனை அணைத்துச் சோகத்தினால் பீடிக்கப்பட்டு மதிமயங்கிப் பெருங்குரலுடன் அழத்தொடங்கினன் அனந்தரம் பர்த்தாவை யிழந்த வ்யஸனத்தினால் வருந்தி முகம் வாடி உபவாஸத்தினால் இளைத்திருக்கிற பரதனது தாய்மார்களனைவரும் அவ்விடம் வந்தனர். அவர்களும்

கண்ணீர பெருக்கிககொண்டே, தரையில் வீழ்ந்திருக
கிற பரதனைச சுற்றிககொண்டனர. அவர்களில கௌ
ஸலயைமாதரம மனவருததததுடன பரதனருகிற செ
னறு அவனைக கடடிககொணடனள. கனறினிடததில
மிகுந்த பரீதியுடைய பசு தன கனறுககுடடியைபபோல
வும தமது அருமைக குமாரனைபபோலவும[1] தபஸவினி
யாகிய கௌஸலயை பரதனை அணைததுச சோகததின
மிகுதியால பரிதபிததுக கணணீர பெருககிககொணடே
இவனை நோககி இஙஙனம வினவினள —'மகனே! உன
தேஹததை ராமவிரஹமெனும வயாதி ஈதாயினும
பாதியாதிருககினறதா? இபபொழுது ராஜவமசததி
லுள்ள எமமெலலோருடைய வாழவும உனனதீனமாக
வே யிருககினறது. குழநதாய! ராமன தன தமபியோடு
அரணயம போயினன. தசரதமஹாராஜரும மரணம
அடைநதனர. ஆகையால நீ ஒருவனே எஙகளெல
லோரககும திககு 'உன முகததிலதைனயததைபபாரத
தாயினும ராமன திருமபி வரமாடடானா?' எனனும
ஆசையுடன உனனைப பாரததுப பிழைததிருககினற
னள. மகனே! லக்ஷமணனைக குறிததாவது, போயும
வநதும என வயிற்றில ஒருவனேயாகப பிறநது இபபொ
ழுது பாரயையுந தானுமாக அரணயம போயிருககிற
என குமாரனுகிய ராமனைக குறிததாவது உனககு எவ
ராயினும அபரிய வாரததையைக கேடபிததாரகளா
எனன? என்று வினவினள மஹாயஶஸவியாகிய அப
பரதன முஹூாததகாலஙகழிதது மூாசசை தெளிநது
ரோதனஞ செயதுகொணடே கௌஸலயையைப பார
தது, 'தாயே! நீ சொனனது ஒனறும இலலை' எனறு
ஸமாதானபபடுததிக குஹனைப பாரதது, 'குஹனே!
என பராதாவான ராமன ராததிரி எஙகிருநதனன? ஸீதா
தேவி எஙகிருநதனள? லக்ஷமணன எஙகிருநதனன?
அனறியே எதைபபுசிதது எஙகுப படுததுத நிததிரைபோ

---

1. தபஸவினி-தவமுடைய, அலலது சோகத்தினல வருநதி
ருபபதறபறறி மன இரககததிறகிடமான.

யினார்? இவையெல்லாம் எனக்குச்சொல்வாய்' என்றனன். வேடர் தலைவனாகிய அந்தக் குஹனும் ராமவருத்தாந்தத்தைச் சொல்லும்படியான பாக்யம் நேர்ந்ததேயென்று ஸந்தோஷித்துத் தனக்கு ப்ரியனும் ஹிதனுமாகிய ராமன் தன்னிடத்திற்கு அதிதியாய் வருகையில் அவனுக்குத் தான் எப்படி உபசாராதிகள் செய்தானோ, ராமன் ஏதேது நடந்தானோ அதையெல்லாம் பரதனுக்குச் சொல்லமுயன்று 'நான் ராமபோஜனத்திற்காகப் பலவகை அன்னங்களையும் பக்ஷ்யங்களையும் பலவகைப் பழங்களையும் மேலும் [1] சோஷ்ய லேஹ்யாதிகள் பலவற்றையும் ஸித்தஞ்செய்து கொண்டுபோய் ஸமர்ப்பித்தனன். தானஞ் செய்யவேண்டுமேயன்றிப் பெற்றுக்கொள்ளலாகாதென்னும் க்ஷத்ரிய தர்மத்தை நினைத்து ராமன் அவைகளில் ஒன்றையும் பெற்றுக்கொள்ளவில்லை. ஸத்யபராக்ரமனாகிய அந்த ராமன் அதையெல்லாம் என்னையே எடுத்துக்கொண்டு போகும்படி ஆஜ்ஞை செய்தனன். ராஜனே! அம்மஹானுபாவன் எம்மைநோக்கி 'நண்பனே! க்ஷத்ரியர்களான எமக்கு எப்பொழுதும் [2] ப்ரதிக்ரஹிப்பது கூடாது. எப்பொழுதும் தானம் மாத்ரமே தகும் என்றுரைத்து ஸமாதானப்படுத்தினன். பெரும் புகழனாகிய ராமன் லக்ஷ்மணன் கொண்டுவந்து கொடுத்த ஜலத்தைப் பருகி ஸீதையுந் தானுமாக அன்றிரவு உபவாஸமிருந்தனன். அனந்தரம் அப்போது ராமன் பருகி மிகுந்த ஜலத்தை லக்ஷ்மணனும் பானஞ் செய்தனன். [3] அம்மூவரும் வாக்கு நியமத்துடன் மனவூக்கங்கொண்டு [4] ஸந்த்யாவந்தனஞ் செய்தனர். அதற்குப்

---

1. சோஷ்யம் உறிஞ்சிச் சாப்பிடத் தக்கவை. லேஹ்யம் நக்கிச் சாப்பிடத் தக்கவை.

2. ப்ரதிக்ரஹிப்பது-தானம் வாங்கிக் கொள்வது.

3 மூவருமென்கையால் ஸீதைக்கும் ஸந்த்யா ஸமயத்தில் த்யான ஜபாதிகள் உண்டென்று தெரிகின்றது.

4 முன்பு 'ததஸ்சீரோத்தராஸங்கஸ்ய ஸந்த்யாமந்வாஸ்ய பஸ்சிமாம், ஜலமேவாததே போஜ்யம் லக்ஷ்மணேநாஹ்ருதம் ஸ்வயம்

பிறகு லக்ஷ்மணன் தானே சீக்ரமாகச் சென்று தர்ப்பங்களைக்கொண்டுவந்து நன்றாகப் பரப்பி ராமனுக்காக ஸௌக்யமான படுக்கை ஏற்படுத்தினன். ராமனும் ஸீதையும் அழகியதான அந்தப் படுக்கையில் சயனித்திருந்தனர். லக்ஷ்மணன் ராமனது பாதங்களைத் தானே அலம்பி ஸீதைக்கு ஜலங்கொண்டு வந்து கொடுத்துப் பாதங்களை அலம்பிக்கொள்ளச் செய்து பிறகு அப்புறம் சென்று தூரத்தில் காத்துக்கொண்டிருந்தனன். ராமன் ஸீதை இருவரும் அன்றிரவு படுத்திருந்த அவ்விங்குண மரத்தடி இதுவே. அந்தப்புற படுக்கையும் இதுவே. பரந்தபனாகிய லக்ஷ்மணன் நாண் டிபடாதிருக்கும்பொருட்டு விரல்களுக்கும் உள்ளங்கைக்கும் கவசந்தரித்து, பாணம் நிறைந்திருக்கிற இரண்டு அம்பறாத்தூணிகளையும் தோளின் பின்புறத்தில் கட்டி, ஒரு பெரிய வில்லை நாணேற்றிட்டுக் கையில் பிடித்துக் கண்ணிமை கொட்டாமல் ராமனைச் சுற்றிக் காப்பாகத் திரிந்துகொண்டிருந்தனன். பிறகு நான் அப்பொழுது ராமன் நித்ரை செய்துகொண்டிருக்கையில் லக்ஷ்மணன் என்ன செய்துவிடுவானோவென்று சங்கித்து மேலான பாணங்களையும் வில்லையும் தரித்து லக்ஷ்மணன் போன இடங்களெல்லாம் அடிதோறும் அவனைப் பின்சென்று என்பந்துக்களும் தனுஸ்ஸைப் பிடித்துச் சோம்பலின்றி என்னைச் சூழ்ந்திருக்க,

என்று முதலில் ஸந்த்யாவந்தனஞ் செய்து பிறகு ஜலத்தைப் பானஞ் செய்ததாகச் சொல்லியிருக்க இங்கு மாற்றிச் சொல்லுவதெப்படியெனில்—முன்பு சொன்னதே க்ரமம். இங்கே குஹன் கொணர்ந்த அன்னத்தை ராமன் புஜிக்கவில்லை யென்றபோது மற்றதைப் புஜித்தானென்று ப்ரஸக்தி வருகையில், அதைப்பற்றி முதலில் ஜலபானத்தைச் சொல்லிப் பிறகு ஸந்த்யாவந்தனஞ் சொல்லப்பட்டது. ஆகையால் தோஷமில்லை யென்றறிக.

மஹேந்த்ரனைப்போன்ற ராமனைப் பரிபாலித்துக் கொண்டிருந்தனன். எண்பத்தேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

—————

பரதன் இங்குதீமரத்தினடியில் வீதையினாபரணத்தினின்றும் இறைந்த பொன் பொடிகளையும், அவளது பட்டு வஸ்த்ரங்களின் நூலிழைகளையும் பார்த்துச் சோகித்தலும், ஸ்ரீராமபிரானுக்கு நேர்ந்த துன்பத்தை நினைத்துப் புலம்புதலும்

பரதன் தானும் மந்த்ரிகளுமாகக் குஹன் சொன்ன வார்த்தைகளையெல்லாம் நன்றாகக் கேட்டு அவ்விங்குதீமரத்தினடியிற் சென்று ராமன் சயனித்திருந்த படுக்கையைப் பார்த்துத் தாய்மார்கள் அனைவரையும் பார்த்து மொழிந்தனன் —'இங்கு மஹானுபாவனாகிய ராமன் சயனித்தனன் இவ்விடத்தில் அவன் படுத்திருந்தமையால் கலைந்திருக்கிறது மஹாபாக்யம் பொருந்திய இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்தவரும் மஹாபாக்யசாலியும் புத்தியிற் சிறந்தவருமாகிய தசரத மஹாராஜாது வயிற்றில் பிறந்த ராமன் தரையில் படுத்து நித்ரை செய்யத் தகாதவன். விலையுயர்ந்த வஸ்த்ரங்களை அடியில் விரித்து மேலே சிறந்தமான தோல்களை அமைத்து மெத்தென்ற பஞ்ச சயனங்களில் படுத்திருந்த புருஷஶ்ரேஷ்டனாகிய ராமன் இப்பொழுது பூமியின்மேல் எப்படி படுக்கின்றனன்? விமானங்கள் போன்ற உப்பரிகைகளுடைய மாளிகைகளின் மேற்புறங்களிலும், வலபியென்று சொல்லப்படுகிற மேல்மாளிகைகளிலும், பொன் வெள்ளிகளால் இயற்றப்பட்ட தரையுடையவைகளும் பலவகைப் புஷ்பங்களைத் தூவி அற்புதமாயிருப்பவைகளும் சந்தனாகரு தூபங்களிட்டு நன்கு அலங்காரஞ் செய்யப்பட்டவைகளும் வெளுத்த மேகம்போல் ப்ரகாசித்துக் கொண்டிருப்பவைகளும் குவியல்குவியலாயக் கிளிகள் குலாவுதலால் இனியவைகளும் ஜில்லுஜில்லென்று குளிர்ந்திருப்பவை

களும அததர புனுகு பனனீர குஙகுமபபூ பசசைக கற பூரம முதலான வாஸனையுடையவைகளும பொனனாலெ டுககபபடட சுவருடையவைகளும மேரு பாவதமபோல விளககமுறறவைகளுமான உபபரிகைகளிலும பகைவரை அடககும பராககரமசாலியாகிய அமமஹானுபாவன படுததிருநது, கீதஙகளும அதை அனுஸரிதத வீணாதி வாதயஙகளும முழஙக, இஙகுமஙகும நடநது செலகினற பரிசாரிகைகளின கைவளை தோளவளை தணடை அரைநாண்மாலை முதலான ஆபரணதவனிகள் மேலெழ, மேலான மததளஙகளின ஒலி மீதூர, காலததில ஸூதமாகதவாநதிகள பலரும பெருமைககு உரிய கதய பரபநதஙகளையும துதிகளையும பாடித தொழ, அவைகளைச செவியுறறுத துயிலுணரநத பரநதபனாகிய எமமையன இவவிடததில புல்படுககையில படுததிருநதானெனபது நமபததகுநததனறு. இது எனககு உண்மையாயததோறறவிலலை. எனமனம மயககமுறுகினறதோ? அலலது இதெலலாம ஸவபனமெனறே எனககுத தோறறுகிறது. இலலையாயின ஒருகாலும நேரககூடாததை எபபடி நேருமா? அனறியும, ராமனைபபோனறவனுககு இபபடியும ஸமபவிககுமா? தசரதமஹாராஜரது வயிற றில பிறநத ராமனும வெறுநதரையில படுகக நேரநததே! ஆகையால காலததைககாடடிலும தெயவம சிறநததெனககூடாது காலமே மேலானதெனறு தோறறுகிறது. இது நிஜம. விதேஹராஜன திருமகளும தசரத சகரவாததியின மருமகளும இனிய காடசியுடையவளும ராமனுககு பராணனைககாடடிலும பரியையுமாகிய ஸீதாதேவியும அவவண்ணம தரையில படுததனளே! இதோ எனது ஐயன படுதத படுககை. எமமையன புரண்டு திருமபின இடம இது. இவவிடம் கடினமாயிருககையால சரீரத்தை இபபடியபபடி திருபபும் பொழுது இபபடுககையிலுள்ள தாபபஙகளெலலாம

கலந்திருக்கினறன. [1] மேலான இபபடுககையில ஸீதை வழி நடநதுவநத ஆயாஸததினால ஆபரணங்களைக கழற றுமலே படுத்ததாளெனறு நினைககினறனன ஆனது பறறியே ஆஙகாஙகு அவளது பொனனாபரணஙகளி னினறு இறைநத தஙகததுகளகள பறறியிருககினறன. அபபொழுது ஸீதையின மேல பட்டாடை இஙகு வைத திருநததெனறு ஸபஷடமாகத தெரியவருகினறது. ஆனதுபறறியே ஆஙகாஙகுப படடுநூலிழைகள ஒட டிககொணடு விளஙகுகினறன மன இரககததை விளை விககுந தசையிலிருககினற அநத ஸீதை பாததாலே தெயவமெனறிருபபவளாகையால தான இளமபருவ முடையவளும ஸுகுமாரியுமாயிருநதும இபபடிபபடட புல படுககையில படுதது வருததமறியாதிருககினறனள. இதனால பதிவரதைகளுககுக கணவனுடன படுபபது எபபடிபபடடதாயினும ஸுகமாகவே யிருககுமெனறு நினைககினறேன. ராமன பாரயையோடு கூட அநாதன போல இபபடிபபடட புல படுககையில என நிமிததமா கப படுததானலலவா? ஆ! ஐயோ! நான மன இரகக மிலலாதவனாயிருககினறேன ராமன சகரவாததிகளின வமசததில பிறநதவன; ஸமஸதலோகஙகளாலும கொ ணடாடபபடடவன; ஸமஸதலோகஙகளுககும மனக களிபபை விளைவிபபவன, கருநெயதலபோனற அழகான கருநிறமுடையவன, செநதாமரைபோல சிவநத கண களுடையவன, பாரககப பதினாயிரங கண்கள வேணடும படி இனிய காடசியுடையவன இபபடி ஜனமததினா லுங குணஙகளாலும பரஜைகளை ரஞஜிபபிககுந தன மையாலும ஸாமுதரிக லக்ஷணஙகளாலும ராஜயத திறகு உரியவனாகிய அநத ரகுகுலாலஙகாரன ஸுகத தை அனுபவிககத தகுநதவனேயனறித துககததிறகுச

---

1. புற்படுகையை மேலானபடுககையெனபது எபபடி யெனில பர்த் தாவுடன கலநது படுககும படுககையாகையால புலபடுககையாயினும் அவளுககு அது மேலாகத் தோற்றினமை பற்றிச சொலலுகிறது.

ரிதும தருநதவனலலன. அபபடிபபட்ட ராமன ஸுகத தை விளைவிபபதும ஒபபிலலாததுமான அபபடிபபட்ட ராஜயததைத துறநது வெறுநதரையில எபபடி படுத திருநதனன? மஹானுபாவனும சுப லக்ஷணஙகளமைந தவனுமாகிய லக்ஷமணன தமையனுகிய ராமனை இபப டிபபடட ஸஙகட காலததில கைவிடாமல பின் செலகின றனன; ஆகையால அவனனறே தனயன் ஸீதையும் பாததாவைப பினறொடாநது அரணயஞ சென்றளா கையால அவளும பரயோஜனம கைகூடபபெறறவளா யினள. நாமெலலோரும அமமஹானுபாவனைப பிரிந திருககினறனம. அவன நமமைக கைபபறறுவானே மாட்டானேவென்று ஸநதேஹமாயிருககினறது. தசர தன ஸவாககததிறகுபபோய ராமனும அரணயமபோ கையில, இபபூமி ஓட்டுகிறவனிலலாத ஓடமபோல பர தான நாயகனிலலாமல பாழடைநதாறபோல எனககுத தோறறுகின்றது. இபபடி ராஜயமெலலாம அநாயகமா யிருபபினும எநதப பகைமனனவனும ராமனது புஜ பலததினுல காககபபடடிருககினற இநதப பூமியை அவன அரணயததிலிருநத போதிலும கைபபறறுவ தறகுமனததிலுஙகூட நினைககமாட்டான. இபபொழுது அயோதயைமதிள காபபவரினறிக குலமஸதானஙகளுக கேறற காபபுமிலலாதிருககினறது, இதிலுளள குதிரை களும யானைகளும அவைகளைப பாதுகாககும வேலைக காரரகளெலலோரும ராமனிடததில மனஞ்செனறிருப பதால கட்டுததறியில கட்டுவாரிலலாமல அலைகினறன, பட்டணததது வாசலகளெலலாம கதவு மூடப பெறறிருக கினறன; ஆனதுபறறியே அபபட்டணம தகுநத காப பினறிக கருவிகள குறையபபெறறு பலமெலலாம ராம னைப பிரிநதமையால வருததமுறறு வெளியில காபப வா சுறறிக காததிருககவும பெறுமல தூததததை யடைநதிருபபினும பகை மனனவாகள் ராம பயததி னுல விஷங கலநத பக்ஷயஙகளைபபோல கைபபற்ற ாா. நான இது முதலாக

நித்யமும் காய் கிழங்குகளை ஆஹாரஞ் செய்து ஜடைகள் தரித்து மரவுரி உடுத்து வெறுந்தரையிலோ, அல்லது புற்களைப் பரப்பியோ படுக்கப்போகின்றனன். மேலும், ராமன் செய்த ப்ரதிஜ்ஞையை அவனுக்கில்லாதபடி நான் எடுத்துக்கொண்டு ராமனுக்காக இதுவரையில் சென்றதுபோக இனி அவன் இருக்கவேண்டிய கடைசி காலம் வரையில் ஸுகமாக வனவாஸஞ் செய்யப் போகின்றனன். இப்படி செய்வதனால் ராமனது ப்ரதிஜ்ஞையும் பொய்யாகாது. என் பர்தாவான ராமனுக்காக நான் அரண்ய வாஸஞ் செய்கையில் சத்ருக்னன் என்னை அனுஸரித்துக் கூட இருப்பான். பூஜ்யனாகிய ராமன் லக்ஷ்மணனோடு கூட அயோத்யையைப் பரிபாலித்து வருவானாக. அயோத்யையில் ப்ராஹ்மணர்கள் ராமனுக்கு அபிஷேகம் நடத்துவார்களாக. எனது இஷ்ட தேவதைகள் நான் விரும்பின இவ்விருப்பங்களை நிறைவேற்றுவார்களா? நான் தலைவணங்கி நமஸ்காரஞ்செய்து பற்பல விதங்களால் அருள்புரியச் செய்யினும் அருள்புரியானாயின், அப்பொழுது நான் ராமனிருக்கும் காலம் முழுமையும் வனத்தில் வஸித்து அவனை அனுஸரித்தேயிருக்கப் போகின்றனன். தம்பியும் தாஸனுமாகிய என்னை இந்த [1] அனுஸரணமாத்ரத்திற்காவது ராமன் உபேக்ஷிக்கமாட்டான்' என்று புலம்பலுற்று வருந்தினன். எண்பத்தெட்டாவது ஸர்க்கம் முற்றிற்று.

## பரதன் கங்காநதியைத் தாண்டிப் பரத்வாஜாஸ்ரமத்திற்குப் போதல்

ரகுகுலகுமாரனாகிய பரதன் அன்றிரவெல்லாம் அந்த கங்கையின் கரையிலேயே இருந்து விடியற்காலத்தில் எழுந்திருந்து சத்ருக்னனைப் பார்த்து 'சத்ருக்னா! எழுந்திரு. இன்னும் படுத்திருக்கிறாயென்? சீக்ரமாக வேடா

1. அனுஸரணம்—தொடர்தல்.

தலைவனான குஹனை அழைத்து வருவாயாக. உனக்கு நன்மை உண்டாகுமாக. அவன் நம் ஸைன்யத்தை இந் நதியைக் கடக்கச் செய்வான்' என்றனன். அவனால் இங்ஙனம் எழுப்பப்பட்ட தம்பியாகிய சத்ருக்னனும் [1] 'நான் நீ நினைத்துக் கொண்டிருக்கிற அப்பெரியோனை யே சிந்தித்து விழித்துக்கொண்டே யிருக்கின்றனன், தூங்கவில்லை' என்றனன். அந்தப் புருஷஶ்ரேஷ்டர்க ளிருவரும் இவ்வாறு பேசிக்கொண்டிருக்கும் பொழுதே குஹன் பரதனைப் பார்க்கத் தகுந்த வேளை அறிந்து உள்ளே புகுந்து அவனைப் பார்த்துக் கைகளைக்குவித்து 'ககுத்ஸ்த குலாலங்காரனே! இன்றிரவு [2] நதீதீரத்தில் ஸுகமாக வஸித்திருந்தாயல்லவா? உனக்கும் உன் ஸைன்யத்திற்கும் முழுவதும் ஆரோக்யமா?' என்று வினவினன். ராமனிடத்தில் மனஞ்சென்ற பரதன், குஹன் ஸ்நேஹத்துடன் சொன்ன அவ்வார்த்தையைக் கேட்டு அவனைப் பார்த்து 'வேடர் தலைவனே! எங்களுக்கு ராத்ரி ஸுகமாகவே இருந்தது. இதுவேயன்றி வேண்டிய பூஜைகளெல்லாம் உன்னால் நன்கு நடந்தன. உனது செம்படவர்கள் ஓடங்கள் பலவற்றைக் கொண்டுவந்து நாங்கள் இக்கங்கா நதியைத் தாண்டும்படி செய்யவேண்டும்' என்றனன். அனந்தரம் குஹன், பரதன் த்வரையுடன் செய்த ஆஜ்ஞையைக் கேட்டு மீளவும் தன்பட்டணத்தில் புகுந்து தன்பந்துக்களைப் பார்த்து 'விழித்துக்கொள்ளுங்கள். எழுந்திருங்கள். உங்களுக்கு எப்போதும் சுபம் உண்டாகுமாக. ஓடங்களை இழுத்

1. இங்கு அப்பெரியோனென்கிறது ராமனை. இதனால் சரமபாவ நிஷ்டனாயிருப்பவனுக்கு ப்ரதமபாவத்தில் அபிநிவேசம் தனது சேஷியின் த்ருப்திக்காகவேயென்று தெரிகின்றது. சரமபர்வநிஷ்டை— பாகவதாபிமானத்திலொதுங்குகை. ப்ரதம பர்வம்—பகவத்விஷயம்.

2 நதிக்கரையில்.

துக்கொண்டு வாருங்கள். பரதாதிகளை ஆற்றைத் தாண்டுவிப்போம்' என்றனன். அவன் அங்ஙனஞ் சொல்ல, ராஜாஜ்ஞையாகையால் அவர்கள் எழுந்து வேகமாகச் சென்று நாற்புறங்களில் எல்லாத் துறைகளினின்றும் ஐந்நூறு ஓடங்களைக் கொண்டு வந்தனர். அவ்வோடங்களேயன்றி ஸ்வஸ்திகமென்னப்படுகிற ராஜார்ஹமான ஓடங்களையும் இழுத்துக்கொண்டு வந்தனர். இந்த ஸ்வஸ்திக ஓடங்களில் நான்கு மூலைகளிலும் பெருமணிகள் கட்டியிருக்கும். இவைகளில் பலகைகளால் சுவர்களும் அவற்றில் உரியபடிச் சாளரங்களும் ஏற்பட்டிருக்கையால் வேண்டிய அளவு காற்று வீசிக்கொண்டிருக்கும் மேலும், அவை இரும்பாணிகளிட்டுத் திடமாக நிருமிக்கப் பட்டிருப்பவை. மற்றும், அவை பதாகைகளால் பிரகாசித்துக்கொண்டிருக்கும். பிறகு ஸ்வஸ்திகமென்னப்படும் அவ்வோடங்களில் மிகவும் அழகாய விளங்குகின்ற ஓர் ஓடத்தைக் குஹன் கொண்டுவந்தனன். அதில் கீழெல்லாம் வெள்ளைக்கம்பளிகள் பரப்பப்பட்டிருந்தன. மணி முதலியவற்றால் அது களிப்புண்டாகும்படி கணகணவென்று த்வனிசெய்து கொண்டிருந்தது. அவ்வோடத்தின்மேல் பரதனும் மஹாபலமுடையவனாகிய சத்ருக்னனும் ஏறிக்கொண்டனர் கௌஸல்யையையும் ஸுமித்ரையையும் மற்றுமுள்ள ராஜமடந்தையர்களும் ஏறிக்கொண்டனர். புரோஹிதரான வஸிஷ்டரும் பின்னும் பெரியோரான ப்ராஹ்மணர்களும் அதன்மேல் முதலில் ஏறினர். பிறகு ராஜபத்னிகளான கௌஸல்யாதிகள் ஆரோஹித்தனர். பிறகு வண்டிகளும் கடைச்சரக்குகளும் ஏற்றப்பட்டன. இப்படி ஓடமேறிப் புறப்படுகையில் [1] தாம் இறங்கியிருந்த விடுதிகளில் தீயிட்டுப் பட்படவென்று எரிப்பவர்களின் சப்தமும், ஓடமேறுவதற்கு நான் நானென்று முற்படுத் துறைக்கு

1 ராஜபடர்கள் தாம் மற்றோரிடத்திற்குப் போகும்பொழுது முன்பிருந்த இடத்தில் செல்வப் பெருக்கின் பொருட்டு நெருப்பிடுவது வழக்கமென்று தெரிகிறது

வருபவர்களின் கூக்குரலும், கங்காதீர்த்தத்தில் நீராடுபவர்களின் அலையொலியும், தந்தம் உபகரணங்களை என்னுடையது என்னுடையதென்று அவஸரப்பட்டு எடுப்பவர்களின் கலகல சப்தமும் சேர்ந்து பெருந்தவனியாகி ஸ்வர்க்கத்தை அளாவியது. அப்பொழுது, ஓடங்களுக்குக் காற்றில் வேகத்துடன் போவதற்காக த்வஜங்கள் கட்டப்பட்டிருக்கையால், அவை செம்படவர்கள் ஏறின மாத்ரத்தில் அவர்களின் ப்ரயத்னமொன்றையும் எதிர்பாராமல் அதிவேகத்துடன் ஏறின ஜனங்களெல்லோரையும் இழுத்துக்கொண்டு போயின. அவைகளில் சில ஓடங்கள் ஸ்த்ரீகளே நிறைந்திருந்தன. சிலவற்றில் குதிரைகள் நிறைந்திருந்தன. மற்றுஞ் சிலவற்றில் மிகுந்த விலையுள்ள தேர்களும் வண்டி முதலியவைகளும் அவைகளிற் கட்டும் கோவேறுகழுதைகளும் எருதுகளும் நிரம்பியிருந்தன. அனந்தரம் அவ்வோடங்கள் அக்கரை சேர்ந்து ஏறின ஜனங்களை இறக்கித் திரும்பி வரும் பொழுது குஹனது பந்துக்களான செம்படவர்கள் பாரமின்றி லகுவாயிருக்கையால் அவ்வோடங்களை ஜலப்ரவாஹத்தில் வேடிக்கைக்காக விசித்ரமாகச் செல்லும்படி திருப்பினர். [1] க்ருஹங்களோடு கூடிய யானைகள் யானைப்பாகர்களால் தூண்டப்பட்டு ஜலத்தில் இழிந்து நதியைக் கடந்து செல்லுகையில், நடந்துசெல்லும் பர்வதங்கள்போல விளங்கின. சிலர் ஓடங்களை ஏறித் தாண்டி

---

1 'ஸவைஜயந்தாஸ்து மஹாஜா:' என்று மூலம். அரசர்கள் யானைகளின் முதுகில் க்ருஹத்தை நிர்மாணஞ்செய்து அதிலிருந்து ப்ரயாணஞ் செய்யப் போவதுண்டாகையால் 'ஸவைஜயந்தா மஹாஜா:' என்பதற்கு க்ருஹங்களோடு கூடிய யானைகளென்று பொருள் கூறப்பட்டது. இதற்கனுகுணமாகவே 'ஸபக்ஷா இவ பர்வதா:' என்று த்ருஷ்டாந்த வாக்யத்தில் 'ஸபக்ஷ மஹீதள' என்னுந் தாதுவைப்பற்றி நடக்கும் பர்வதங்கள் போலென்று பொருள் செய்யப்பட்டது அன்றியே

னர் சிலா தெபபஙகளால் தாண்டினா. சிலா சிறிய வாயுள்ளவைகளாகிக குமபமெனபபடுகிற குடஙகளால நீநதிக்கடநதனா. சிலா கைகளால நீநதிச சென றனா. கஙகா ஸ்நானஞ்செயது பரிசுததமாகிய அந்த ஸைனயம செமபடவாகள தாணடுவிககஅநநதியைத் தாணடி மைத்ர மென்னும முஹூாத்ததநதில மேனமையுளள பரயாகவனம போயசசோநதது. மஹானுபாவனுகிய பர தன ஸைனயததையெலலாம ஸமாதானப படுததி அவ ரவாககு வேணடிய ஸதானஙகளில ஸுகமாக இறஙகும படி விடுதிகளேறபடுததி மிகவும வயதுசென றரிஷிநில கராகிய பரதவாஜரைக கணடு நமஸகாரஞசெயய வஸிஷ டா முதலான ருதவிககுகளால சூழபபடடுக கால நடை யாகவே சென றனன அபபரதன நானகு வேதஙகளை யெலலா மோதினவரும மஹானுபாவரும பருஹஸபதி குமாரராகையால் தேவதைகளுககுப புரோஹிதரும பராஹமணோததமருமாகிய ப ர த வ ா ஜ மஹாரிஷியின ஆஸ்ரமததிறகுச் சென று அஙகு அழகான பாணசாலை களும வருக்ஷஸமூஹஙகளும அமைநது விளஙகுகின றதும பெரிதாயிருககையால தனஸேனை இறஙகத தகுநத தும அமமஹாரிஷியினுடையதுமான ஒரு பெரிய வனத தைக கண்டனன எண்பததொனபதாவது ஸாககம முறறிற்று.

---

{ பரதன பரதவாஜரைக காணுதலும, ஒருவாககொருவா 1 குசல பரஸ்னமும }.

புருஷஸ்ரேஷடனும தாமஙகளை அறிநதவனுமாகிய அநதப பரதன கூபபிடு தூரததிலேயே பரதவாஜாஸ்ர மததைக கண்டு ஸைனயத்தையெல்லாம நிறுததி விடடு

---

த்வஜத்தோடு கூடிய யானைகள மாவெட்டியால தூணடப்பட்டு ஜலத திலிருநது நதியைத தாணடுமபோது தவஜததுடன கூடிய பாவதஙக ளை போல் பரகாசித்தனவெனறு பொருள கொளக.

1. குசலபரஸ்னம்-க்ஷேமம விசாரித்தல

ஆயுதங்களையும் ஆபரணங்களையும் கழற்றிப் போகட்டு, வஸ்த்ரங்களையெல்லாம் அவிழ்த்து வைத்து. [1] மேலும் அரையிலும் இரண்டு பட்டுவஸ்த்ரங்களை உடுத்துப் புரோஹிதராகிய வஸிஷ்டரை முன்னிட்டுக்கொண்டு மந்திரிகளோடு கூடிக் கால்நடையாகவே ஆச்ரமத்திற்குப் போயினன். பரத்வாஜாச்ரமம் தூரத்தில் புலப்படும்பொழுதே ரகுவம்சவ்ருத்தாந்தங்களை அறிந்த அப்பரதன் மந்திரிகளை நிறுத்திப் புரோஹிதரை முன்னிட்டுக்கொண்டு பரத்வாஜரைப் பார்க்கப் போயினன். பிறகு மஹா தபஸ்வியாகிய பரத்வாஜரும் வஸிஷ்டரைப் பார்த்தவுடனே சிஷ்யர்களைப்பார்த்து 'அர்க்யங் கொண்டு வாருங்கள்' என்று சொல்லிக்கொண்டே சீக்ரமாக ஆஸனத்தினின்றும் எழுந்திருந்தனர். மஹாதேஜஸ்வியாகிய பரத்வாஜர், வஸிஷ்டருடன் கூடிவந்து பரதன் அபிவாதனஞ் செய்கையில் வஸிஷ்டருடைய ஸந்நிதானத்தினால் அவனைத் தசரத குமாரனென்று அறிந்தனர். பிறகு தர்மங்களை யறிந்த அந்தப் பரத்வாஜர் க்ரமமாக வஸிஷ்டருக்கும் பரதனுக்கும் அர்க்யங்களைக் கொடுத்து உடனே பழங்களைக் கொடுத்து, பிறகு 'க்ருஹத்தில் எல்லோரும் க்ஷேமமா?' என்று வினவி, பின்பு 'அயோத்யை க்ஷேமமா? ஸைன்யமும் பொக்கிஷமும் பத்ரமா? ஸ்நேஹிதர்களும் மந்திரிகளும் க்ஷேமமாயிருக்கிறார்களா?' என்று விசாரித்தனர். ஆனால் தசரத மஹாராஜன் மரணமடைந்தானென்றறிந்தவராகையால் ராஜ விஷயமே எடுக்கவில்லை வஸிஷ்டரும் பரதனும் பரத்

---

1 முன்பு பரதன் மரவுரி உடுத்துக்கொண்டதாகச் சொல்லியிருக்க இங்குப் பட்டு வஸ்த்ரந் தரித்தானென்பது எப்படி யென்றால் முன்பு மரவுரி உடுத்துவதாக ப்ரதிஜ்ஞை மாத்ரஞ் செய்தானாகையால் பரத்வாஜாச்ரமத்திற்கு வந்தபின்பே அதை அனுஷ்டித்தானென்று தெரிகின்றது.



1070, பரதன வஸிஷடா முதலானவர்களோடு பரதவா
ஜாஶரமததில பரவேசிதது பரதவாஜ மஹாஷி
யைக காணுதல.

வாஜரைப் பார்த்து [1] 'உமது சரீரத்தில் ஆரோக்யமா? அக்னி கார்யங்கள் நன்கு நடக்கின்றனவா? வ்ருக்ஷங்கள் நன்றாயிருக்கின்றனவா? சிஷ்யர்கள் க்ஷேமமா? வனத்திலுள்ள ம்ருகங்களும் பக்ஷிகளும் க்ஷேமமா?' என்று வினவினர். மஹா தபஸ்வியாகிய பரத்வாஜர் அவ்விருவரையும் பார்த்து 'எல்லாம் க்ஷேமமே' என்றுரைத்து உடனே ராமனிடத்திலுள்ள ஸ்னேஹானுபந்தத்தினால் பரதனைப்பார்த்து 'நீ ராஜ்யபரிபாலனம் பண்ணும் ஸமயத்தில் அதைவிட்டு இப்பொழுது இங்கேன் வந்தனை? எனக்கெல்லாவற்றையும் விசதப்படுத்திச்சொல்வாயாக. காரணந்தெரியாமையால் என்மனம் தெளிவற்றிருக்கின்றது. பகைவரைப் பறந்தோடச் செய்பவனும் ஸமஸ்த ப்ராணிகளுக்கும் மனக்களிப்பை விளைவிப்பவனுமாகிய எவனைக் கௌஸல்யாதேவி பெற்றனளோ; எவன் தம்பியோடும் பார்யையோடும் வெகுகாலம் அரண்யவாஸஞ் செய்யும்படி துரத்தப்பட்டனனோ; மேலும் தந்தையாகிய தசரதன் ஒரு பெண்பிள்ளைக்குட்பட்டுப் 'பதினான்கு ஸம்வத்ஸரங்கள் அரண்யத்தில் இருப்பாய்' என்று எந்தப் பெரும்புகழோனை ஆஜ்ஞாபித்தனனோ; ஒரு பாபத்தையும் அறியாத அந்த ஸ்ரீராமனுக்கும் அவன் தம்பியாகிய லக்ஷ்மணனுக்கும், நீ ராஜ்யத்தைப் பெற்று அகண்டகமாக அதை அனுபவிக்கவேண்டுமென்னும் நினைவால் பாபகார்யமேதுஞ் செய்ய விரும்பாயல்லவா?' என்று வினவினர். பரத்வாஜர் இங்ஙனம் கேட்கையில், பரதன் கண்ணுங் கண்ணீருமாகி மனவருத்தத்தினால் வார்த்தை தழுதழுக்கப் பெற்று அம்முனிவரை நோக்கி

1. ஸமான வயஸ்ஸைப்பற்றி வஸிஷ்டர் நமஸ்காரஞ் செய்யவில்லை யென்றுணர்க

[2] 'பூத பவிஷ்யத் வர்த்தமானங்களை அறிந்தவரும் மஹா
மஹிமையுடையவருமாகிய நீருங்கூட என்னை இங்ஙனம்
நினைப்பீராயின், நான் பாழாய்விட்டனன். என்னால் தோ
ஷமேதேனும் உண்டாகுமோ வென்கிற ஸந்தேஹமும்
எனக்கில்லை. ஆகையால் நீர் இப்படி கர்ணகடோரமாக
என்னை அருளிச்செய்யலாகாது. என் தாயே இவ்வளவும்
செய்யினும், நான் இல்லாதபோது அவள் சொல்லிச்
செய்த இக்காரியம் நான் ஸம்மதித்ததன்று. இதனால்
நான் ஸந்தோஷம் அடைபவனுமல்லேன். அவள் வார்த்
தையை நான் அங்கீகரிக்கவும் இல்லை. நான் புருஷஶ்ரே
ஷ்டனாகிய அந்த ராமனை அருள்புரியச் செய்து அயோ
த்யைக்கு அழைத்துக்கொண்டுபோய் அவன் பாதங்
களுக்கு நமஸ்காரஞ் செய்து கொண்டிருப்பதற்காக
வந்தவன். நீர், நான் இப்படிப்பட்ட நினைவோடு இவ்வி
டம் வந்ததாக நினைந்து என்மீது அருள்புரியவேண்டும்.
மஹானுபாவரே! மஹீபதியாகிய ராமன் இப்பொழுது
எங்கிருக்கின்றனன்? எனக்குச் சொல்லவேண்டும்' என்று
வினவினன் வஸிஷ்டர் முதலான ருத்விக்குகளும் 'பரத
னிடத்தில் அருள்புரியவேண்டும்' என்று பிரார்த்திக்
கையில், பிறகு பகவானாகிய பரத்வாஜர் மனந்தெளிந்து
பரதனைப் பார்த்து, 'புருஷஶ்ரேஷ்டனே! தமையனுக்
குத் தொண்டு பூண்டிருத்தலும் இந்த்ரியங்களை அடக்கிப்
பெண்ணாசை பொருளாசை மண்ணாசைகளைத் துறந்தி
ருப்பதும், பெரியோர்களை அநுஸரித்து அவர் சொற்படி
நடப்பதும் ஆகிய இவையெல்லாம் ரகுவம்சத்திற் பிறந்த
உனக்குத் தகுந்தவையே. நான் யோகமஹிமையால் உன்
மனத்திலுள்ள இவ்விஷயத்தைத் தெரிந்துகொண்டே
இருக்கின்றனன். ஆயினும் அது மாறாமல் நிலைநிற்க
வேண்டுமெனவும் உனக்குப் பெரியோனை அநுஸரிப்பதா

2. பூதம்—இறந்தகாலம், பவிஷ்யத்-வருங்காலம், வர்த்தமானம்—நிகழ்காலம்.

லுண்டான சீதத்தினால் நறுமணமும் வளரவேண்டுமென்றும், இவ்வாறு வினவினன். தாமரைகளையறிந்த ராமனும் ஸீதையும், லக்ஷ்மணனும் எங்கிருக்கின்றார்களோ அது எனக்குத் தெரியும். உனது அண்ணனாகிய ராமன் சித்ரகூடமென்னும் மஹாபர்வதத்தில் இருக்கின்றனன். அவ்விடத்திற்கு நாளையதினம் போகலாம். இன்றைய தினம் நீ உன் மந்திரிகளோடுகூட இங்கிருப்பாயாக. நீ எல்லாம் ஙனகறிந்தவன், விரும்பியவற்றைக் கொடுப்பதில் வல்லவன். ஆகையால் நான் விரும்பினபடி செய்வாயாக' என்றனர். ராஜகுமாரனும் பெரும்புகழுடையோனுமாகிய பரதனும் மிகவும் கம்பீரமான புத்தியுடையவனாகையால் மஹாஷி சொன்னதற்கு நிரம்பவும் ஸந்தோஷித்து 'அப்படியே செய்கிறேன்' என்று சொல்லி அப்படியே அன்றிரவு அம்முனிவரது ஆஸ்ரமத்திலிருக்க மனங்கொண்டனன் தொண்ணூறாவது ஸர்க்கம் முற்றிற்று.

{ பரத்வாஜர் பரதனுக்கும் அவனது ஸைன்யத்திற்கும் ஆதித்யஞ் செய்தல் }

அப்பொழுது அவ்வாஸ்ரமத்திலேயே இறங்கும்படி மனத்தில் நிச்சயித்திருக்கிற கைகேயியின் புதல்வனான பரதனைப் பார்த்து பரத்வாஜமுனிவர் 'போஜனமீறுன அதிதிஸத்காரம் பெறவேண்டு' மென்று பிரார்த்தித்தனர். பரதனும் அவரைப் பார்த்து 'முனிவர்களாகிய தமக்கு அரண்யத்தில் கிடைக்குமளவு அர்க்யத்தையும் பாத்யத்தையும் காய் கிழங்குகளையும் கொடுத்தது எமக்கு [1] ஆதித்யஞ் செய்யப்பட்டதே. இன்னும் என்?' என்றனன். பிறகு பரத்வாஜர் மனத்தில் நகைத்து அந்நகையை வெளியிடும் முகவிகாஸத்துடன் பரதனைப் பார்த்து 'என்னிடத்தில் உனக்கு ப்ரீதி உளதென்று எனக்குத் தெரியும். ஏதாவதொரு உபசாரத்தைப் பெற்று நீ ஸந்தோஷிப்பாய் ஆயினும், புருஷ திலகனே!

1. ஆதித்யம்-அதிதி ஸத்காரம், விருந்து.

உனனுடன வந்திருக்கிற இந்த ஸைனயங்களுக்கெல்லாம விருநது செயய விரும்புகின்றனன. என பரீதி எபபடிப படடதோ, அதறகுத தகுநதபடி நீ அனுமதி செயவதே யுகதம. [1] புருஷஸலாமனே! ஸைனயததை யெலலாம தூரததில ஏன நிறுததிவிடடு நீ மாததிரம இவவிடம வநதனை? ஸைனயததுடன ஏன வரவிலலை?' எனறு வினவினார. பரதன கைகூபபித தவததையே தனமாக வுடைய அம முனிவரைப பாரதது 'மிகுநத மதியுடைய வரே! நீர கோபிபபீரெனனும பயததினால ஸைனயத துடனகூட வரவிலலை. மஹானுபாவரே! ராஜராவது ராஜகுமாரனாவது ஸைனயஙகளோடு பரயாணஞ்செய யுங காலததில தமது தேசஙகளில தாபஸாகளிருககும இடஙகளைத தவிாதது அவாகளுக்கு அநத ஸைனயஙகளால பாதை உணடாகாதபடி வேறு வழியில நடநது செலல வேணடும. மிகுநத பராபாவமுடையவரே! இமமஹா ஸைனயம மேலான குதிரைகளும காலாட்களும வெறறு மனிதாகளும மதிததுச சிறநத யானைகளும நிரமபப பெறறு மிகவும விஸதாரமுளள பூமியைப படாநது என னுடன வருகினறது அவையெலலாம இவவிடம வநது ஆஶ்ரமஙகளிலுளள வருக்ஷஙகளையும குளங்களையும நிலஙகளையும பாணசாலைகளையும பாழ செயயாதிருகக வேணடுமெனனும இககாரணததைபபறறியே நானொரு வனே வநதேன' எனறனன அமமஹாஷி 'இவவிடம ஸைனயததை வரவழைபபாய' எனறு ஆஜஞாபிககை யில, உடனே பரதன ஸேனையை அவவாஶ்ரமததிறகு வரசசெயதனன. பிறகு பரதவாஜா பரிசுததமான அகனிஹோதர கருஹததிறகுள் சென்று மூனறுதரம ஆசமனஞசெயது இரணடு தடவை வாயைத துடைதது, [2] ஆதிதயம ஸிததபபடுததுமபொருடடு [3] ஆஹவான மநதரததைச சொலலி விஶவகாமாவை இங்ஙனம்

---

1 புருஷஶ்ரேஷ்டனே.

2 ஆதிதயம—அதிதி ஸதகாரம, விருநது.

3 அழைபபதறகு உரிய மநத்ரம.

அழைத்தனர் [1]'நான ஸர்வ சில்ப கர்த்தாவான விஸ்வ காமாவையும கருஹாதிகளை உடனேநிருமிக்குமபடி.யான த்வஷ்டாவையும அழைக்கினறேன. பரதனுககும அவனது ஸைனயத்திறகும ஆதிதயஞசெயய விருமபுகினறனன. அவவிஷயததில விஸவகாமா இதறகு வேணடிய கருஹம முதலியவறறை ஸிததபபடுததுவாராக அபபடியேயம வருண குபேரர்கள மூனறு திகபாலகாகளையும தேவேநதரன முதலான தேவதைகளையும அழைககினறனன ஆதிதயஞ செயய விருமபு கினறேன, அவவிஷயததில அவரவாகள வநது ஸிததபபடுததுகிற அனனபானாதிகளைக காததிருககவேணடும். பூமியிலும ஆகாயததிலும கிழககுமுகமாகவும மேறகு முகமாகவும பாயகிற நதிகளனைவரும ஒரே ஸமயததில இவவிடம வருவாராகளாக. அவாகளில சிலா காஜூராதிகளால செயயபபட்ட மைரேயமெனனும மதயததைப பெருககுவாராகளாக. சிலா நனகு பககுவமாகச செயயபபட்ட கெளடி, பைஷடி, மாதவி எனறு மூனறுவிதமான மதயததைக கொடுபபாராகளாக. மறறுஞ சிலா கருமபுரஸமபோல மதுரமான குளிாநத ஜலததைப பெருககுவாராகளாக. மேலும், நானஞ செயவதறகாக [2]தேவ கநதாவ ஜாதியிற பிறநத விஸவாவஸுவையும ஹாஹா ஹூஹூ எனபவாகளையும அபபடியே தேவஜாதியாகளான அபஸரஸத்ரீகளையும கநதாவ ஜாதியாகளான

1. 'ஆஹ்வயே விஸ்வகாமாண மஹாந தவஷடாரமேவச' எனறு மூலம விஸ்வகாமாவெனறும தவஷடாவெனறும வேறெனறு வயாகயானஞ செயது பிறகு 'இருவரும ஒருவனே, தவஷடாவுககு விஸ்வகாமாவெனபது விசேஷணம விஸ்வகாம சபதம தொழிலைச சொலலுகிறது தவஷடாவெனறு பெயா. இதனால அஸுர விஸ்வகாமாவான மயனை அழைககவிலலை, தேவ விஸ்வகாமாவான தவஷடாவையே அழைககிறேனெனறு பொருள இதறகாகவே ஏவ சப்தம சேர்ககப்பட்டிருககிறதெனறு மறறொரு விதமாக வயாகயானஞ செயதிருககிறா கோவிநதராஜா

2. மனுஷய கநதாவாகளதேவகநதாவாகளெனறு இருவகை யுண்டாகையால இஙகு தேவகநதாவ ஜாதியெனறு கூறபபட்டது

அப்ஸரஸ்த்ரீகளையும் அழைக்கின்றனன். மேலும், நாட்யத்திற்காக க்ருதாசி விஸ்வாசி மிஸ்ரகேசி அலம்புஸை நாகதந்தை ஹேமை ஹிமை அத்ரிகருத்தஸ்தலை ஆகிய இவர்களை அழைக்கின்றனன். தேவேந்த்ரனை அடுத்திருக்கும் அப்ஸரஸ்த்ரீகளையும், ப்ரஹ்மாவினிடமிருக்கும் அப்ஸரஸ்த்ரீகளையும், அவர்து கூத்துப் பாட்டுக்குரிய உபகரணங்களுடன் காருசாரியரான தும்புருவையும் வர வேண்டுமென்று அழைக்கின்றனன். உயர்ந்த ஆடையாபரணங்களை இலைகளாகவும் சிறந்த மடந்தையர்களைப் பழங்களாகவு முடையதும் உத்தர குருதேசத்தில் தேவாராஹமாகி விளங்குவதுமான சைத்ரரத மென்னும் குபேரனது உத்யானம் இங்கு வருமாக. மிகுந்த மஹிமைபொருந்திய சந்த்ரன் இவ்விடத்தில் எனக்காக பக்ஷ்ய போஜ்ய சோஷ்ய லேஹ்யங்களென்று நான்கு வகைப்பட்ட அன்னங்களையும் அவற்றில் ஒவ்வொன்றும் பலவிதமாகவும் அளவின்றியுமிருக்கும்படி திருப்பாராக. மேலும், அந்த சந்த்ரன் ஓஷதிகளுக்கு ப்ரபுவாகையால், செடிகளினின்றும் அப்போது நழுவின விசித்ரமான பூமாலைகளையும் ஸுரை முதலான பானத்ரவ்யங்களையும் பலவகைப்பட்ட மாம்ஸங்களையும் கொடுப்பாராக' என்று ஆஹ்வான மந்த்ரங்களை ஜபித்தனர். யோக ப்ரபாவத்தோடும் ஜ்ஞானத்தோடும் வ்ரத உபவாஸாதிரூபமான தவத்தோடும் அமைந்தபடி வராத பக்ஷத்தில் தணிக்கும்படியான ஒப்பில்லாத மஹிமையோடும் கூடி அம்முனிவர் சிக்ஷா சாஸ்த்ரத்தின்படி ஸ்வரங்களை ஸ்பஷ்டமாகவும் தவறுதலின்றியும் உச்சரித்து இம்மந்த்ர வாக்யங்களை ஜபித்தனர். அம்முனிவர் இங்ஙனம் கிழக்குமுகமாகக் கைகூப்பி மனத்தில் த்யானித்துக் கொண்டிருக்கும்பொழுதே அந்தத் தேவதைகள் அனைவரும் வேறுவேறாக அவ்வாச்ரமத்திற்கு வந்து சேர்ந்தனர். பிறகு காற்றானது மலய தாத்ர

பாவதங்களில் திரிந்து புழுககதகைதப போககுந தனமை யுடன நலல வாஸனை அமைநது ஸமஸத பராணிகளுக குமஸுகமாகவும மங்கலமாகவும் வீசிககொணடிருந தது. பிறகு ஆகாயததினினறும் இடைவெளியினறி ஓயாமல் மலா மழைகள பொழிநதன. நாறறிசையிலும் தேவதுநதுபி வாதயகோஷம செவிபபடடது. காறறுக கள மிகவும இனிதாக வீசின அபஸரஸதரீகள் ஆடினா தேவ கநதாவாகள பாடினா வீணை முதலிய வாதயஙகளும ஒலிககலாயின இஙஙனம வீணை தி வாதயஙகளாலுணடான அநதச சபதமானது ஸவரங களில ஏறறககுறைவிலலாமலும ஸருதியோடொததும லயத்தோடு கூடியதுமாகி ஆகாயததிலும பூமியிலு முளள ஸமஸத பராணிகளுடையவும செவியிற புலபபட டது மனிதாகளனைவாககும செவிககினிதாகிய அநத திவய கானதவனி நினறவுடன பரதனது ஸைனயததி லுளளவா விஸவகாமாவுடைய நிாமாணததைதக கணட னா. நாறபுறததிலும ஐநதுயோஜனை தூரம பூமி மேடு பளளமிலலாமல ஸமமாகி நீலமபோலும வைடூரயமபோ லும விளஙகுகினற இளம புறகள நிறைநது திகழந தது. அவவிடததில விலவம விளா பலா மாதுளை நெலலி மா முதலிய மரஙகள காயததுப பழுததுமிக வும அழகாய விளஙகின. உததர குருதேசததினின றும ஸவாககததிலுளளவாகளின அனுபவததிறகுத தகுநததைசதராதமெனனும உதயானம வநது சோநதது. திவய நதிகளும [1] தீரஙகளில பல வருக்ஷஙகள விளங கபபெறறு அவவிடம வநது பெருகின. நாறபுறமும தாழவாரங்கட்டிய வெளுதத நிலமுளள பெரிய மாளிகை களும யானை கடடததகுநத கொடடாரஙகளும குதிரை லாயஙகளும மேடைகளும உபபரிகைகளும அழகிய புஷ் பாதி தோரணங்களும அஙகுத தோனறின மேலும

---

1. தீரம-கரை

அழகிய தோரணஙகள நாடடப பெறறு வெண்மேகங் களை நிகாத்து திவயமான கறபக மாலைகளால அலங்கா ரஞ செயயபபெறறு திவய சநதன ஜலஙகள தெளிககப பெறறு நாற்சதுரமாகி நெருககமிலலாமல விசாலமுமாகி அழகான ராஜகருஹமும ஒனறுண்டாயிறறு. அம மாளிகையில பலவகைப படுக்கைகளும ஆஸனஙகளும வாஹனஙகளும நிரமபியிருநதன. அதில திவயமான சாககரை முதலிய ரஸஙகளும திவயமான நலலுணவு களும திவய வஸதரஙகளும விளஙகின. பினனும், அதில எலலாவகை அனனங்களும அபபம முதலான பலவகைப பக்ஷயவகளும ஸிததமாயிருநதன. பாதரங கள நனகு துலககபபெறறு நிகுநிகெனறு பரகாசிததன. இவவளவேயனறி அதில போஜன ஸஞுஞுகி ஆஸனங களும வேறுவேறாக அமைககபபட்டிருநதன மேலான துபபடடி பரபபபபெறறு நிதரை போவதறகுறிய சிறநத படுககையும அதில விளஙகியது. மஹானுபாவனாகிய அநதக கைகேயியின பிளளை பரதன மஹாஷியிடம அனு மதி பெறறுப பலவகை உததம தரவயஙகள நிறைநதி ருககிற அமமாளிகையுட பரவேசிததனன. புரோஹிதா களும மநதரிகளும அப பரதனுடன அதனுள புகுநத னா. அவாகள் அநத கருஹம நிருமிததிருககிற நோமை யைப பாாதது மிகவும ஆநநதிததனா. இவவளவே யனறி அஙகு திவயமான ராஜ ஸிமஹாஸனமொனறும விசிறியும சாமரமும குடையும அமைததிருநதன. பர தன அவறறைக கணடு மநதரிகளுடன வலஞசெய்த னன மறறும, அவன அவவாஸனததை ராஜனைப போல பூஜிதது அதில ராமன உடகாநதிருபபதாகப பாவிதது அவனுககு நமஸகாரஞசெயது தான வெண் சாமரததைப பிடிததுககொண்டு அதனகீழ மநதரிகள உட்காரத தகுநத ஒராஸனததில உட்காாநதனன. மந

த்ரிகளும் புரோஹிதர்களும் க்ரமப்படி உட்கார்ந்தனர். பிறகு தண்டநாயகனென்கிற ஸேனாதிபதியும் அவனுக்குப் பிறகு [1] சிபிரநியந்தாவான ப்ரசாஸ்தாவும் உட்கார்ந்தனர். பிறகு அவ்விடத்தில் ஒரு முஹூர்த்த காலத்தில் பரத்வாஜ முனிவரின் ஆஜ்ஞையின்படி பாயஸங்களைச் சேறுகவுடைய ஆறுகள் பரதனது முன்னிலையில் பெருகின. அந்நதிகளின் இரண்டு கரைகளிலும் அம்மஹர்ஷியின் அனுக்ரஹத்தினால் வெள்ளை பூசப்பெற்று மிகவும் அழகாகிச் சிறந்த மாளிகைகள் தோன்றின. அம்முஹூர்த்தத்தில் தானே ப்ரஹ்மாவினால் அனுப்பப்பட்டவர்களும் திவ்யாபரண பூஷிதர்களுமான இருபதினாயிரம் அப்ஸரஸ்த்ரீகள் வந்தனர். பிறகு ஸ்வர்ணாபரணங்களையும் ரத்னாபரணங்களையும் முத்து மாலைகளையும் பவழ மாலைகளையும் அணிந்து விளக்கமுற்ற இருபதினாயிரம் பெண்கள் குபேரனால் அனுப்பப்பட்டு அவ்விடம் வந்து சேர்ந்தனர். புருஷன் எவனாயினும் தம்மை ஆலிங்கனம் பண்ணினமாத்ரத்தில் காதலுற்று மதிமயங்கும்படியான அழகு பொருந்திய இருபதினாயிரம் அப்ஸரஸ்த்ரீகள், தேவேந்த்ரனால் அனுப்பப்பட்டுக் கூட்டங் கூட்டமாக நந்தவனத்தினின்று வந்தனர். நாரதர் தும்புரு கோபர் என்னும் இம்மூன்று கந்தர்வ ராஜர்களும் ஸூர்யன்போல் பளபளவென்று விளக்கமுற்றுப் பரதன் முன்னே வந்து பாடினர் பிறகு பரத்வாஜரின் ஆஜ்ஞைப்படி அலம்புஸை மிச்ரகேசி புண்டரீகை வாமனை என்னும் அப்ஸரமடந்தையர் பரதனுக்கு முன்னே வந்து நாட்யஞ் செய்தனர் தேவ உத்யானமாகிய நந்தனத்திலும் குபேரனது சைத்ரரதமென்னும் உத்யானத்திலும் எந்தெந்தப் புஷ்பமாலை

---

1 சிபிரம் சேனைகள் இறங்குவதற்காக வஸ்த்ரங்களால் இயற்றப்பட்ட இடங்கள் டேராவென்று வழங்கிவருபவை அவற்றை இயற்றி மேல் விசாரணை செய்கிறவன் சிபிரநியந்தா இவனே பரசாஸ்தாவென்று சொல்லப்படுவான். ப்ரசாஸ்தா—நியாமகன், இதை இப்படி செய்யவேண்டுமென்று வேலைக்காரர்களுக்கு நியமிக்கிறவன்.

கள் உண்டோ, அவையெல்லாம் பரத்வாஜரது ப்ரபாவத்தினால் ப்ரயாகக்ஷேத்ரத்திலுள்ள அவரது ஆஶ்ரம வ்ருக்ஷங்களில் புலப்பட்டன. இதுவரையிலும் பரதனுக்கு உபசாரமாகையில், இனி ஸைனிகர்களுக்காகவும் பரத்வாஜரின் கட்டளைப்படி வில்வமரங்கள் மத்தளம் வாசித்தன, தானிமரங்கள் தாளம் போட்டன; அரசமரங்கள் நாட்யமாடின. பிறகு முனிவரது மஹிமையால் தேவதாரு பனை மஞ்சாடி புங்கை முதலிய மரங்கள் மகிழ்ச்சிகொண்ட குள்ளர்களும் குறளர்களுமாகித் திரிந்தன. சிம்சுபை நெல்லி நாவல் இவைகளும், மற்றும் கானகத்தில் எந்தெந்த விருக்ஷங்கள் உள்ளனவோ அவைகளும், மல்லிகை மாலதி ஜாதி இவைகளும் மற்றும் கானகத்தில் எந்தெந்த பூங்கொடிகள் உள்ளனவோ அவைகளும் பெண்ணுருவம் தரித்துப் பரத்வாஜரது ஆஶ்ரமத்தில் விருந்துண்ணும் பரதனது ஸேனா ஜனங்களைப் பார்த்து 'மஹா ஜனங்களே! மத்யம் வேண்டியவர் மத்யத்தைப் பானஞ் செய்வீர்களாக. பசியுடையவர் பாயஸம் உண்பீர்களாக. மாம்ஸம் வேண்டியவர் பரிசுத்தமான மாம்ஸத்தைப் புசித்து மகிழ்வீர்களாக. ஒன்றிலும் குறை செய்யவேண்டாம். எவ்வளவு வேண்டுமோ அவ்வளவும் புசிக்கலாகும்' என்றுரை செய்தன. ஒவ்வொரு மனிதனுக்கும் ஏழெட்டுப் பெண்கள் வீதம் வந்து சூழ்ந்துகொண்டு அழகான நதிக் கரைகளில் எண்ணெய் தடவி உடம்பைப் பிடித்து ஸ்நானஞ் செய்வித்தனர். அழகான கண்களையுடைய சில மடந்தையர் பாதங்களைப் பிடித்து ஸ்நானஞ் செய்தவர்களின் உடம்பிலீரத்தைத் துடைத்து அலங்கரித்து ஏகாந்தத்தில் மத்யபானஞ் செய்வித்தனர். பரத்வாஜரது மஹிமையினால் ஏற்பட்ட சில வேலைக்காரர்கள் யானைகள் குதிரைகள் கோவேறு கழுதைகள் ஒட்டைகள் காளைகள் முதலான வாஹனங்களைக் காப்பவராகிக் க்ரமப்படி அவ்வவைகளுக்கு வேண்டிய ஆஹாரங்களைக் கொடுத்தனர். மிகுந்த பலமுள்ள அந்த வாஹன பாலர்

கள் இக்ஷ்வாகு குல திலகனாகிய பரதனது படை வீரர்களின் யானை முதலான வாஹனங்களைத் தின்னும்படி தூண்டி, அவைகளுக்குக் கரும்புகளையும் தேன்கலந்த பொரிகளையும் ஆஹாரமாக அளித்தனர் குதிரைக்காரன் தன் குதிரை இன்னதென்று அறிந்திலன். யானைக்காரன் தன் யானை இதுவென்று தோன்றப்பெறாதிருந்தனன். அந்த ஸேனையிலுள்ளவர் எல்லோரும் மதகரமான த்ரவ்யங்களால் மதித்து மத்ய பானத்தினால் மெய்ம்மறந்து புஷ்ப சந்தனாதிகளால் மனக்களிப்புற்று விளங்கினர். அவர்கள் விரும்பின பதார்த்தங்களை யெல்லாம் இஷ்டப்படி அனுபவித்து மிகவும் திருப்தியடைந்து செஞ்சந்தனம் பூசி ஒவ்வொருவனும் பல அப்ஸர மடந்தையருடன் கூடி மஹாநந்தமடைந்து 'நாம் அயோத்யைக்கும் போகோம். தண்ட காரண்யத்திற்கும் போகோம். இங்கேயே இருப்போம். பரதன் க்ஷேமமாயிருப்பானாக. ராமனும் அப்படியே ஸுகமாயிருப்பானாக' என்றனர். காலாட்களும் படை வீரர்களும் யானைக்காரர்களும் குதிரைக்காரர்களும் யானை குதிரைகட்டும் வேலைக்காரர்களும், அம்முனிவர் செய்த ஸத்காரத்தினால் மதித்துத் தமக்கு நாதரில்லையென்றே நினைத்து ஸ்வதந்த்ரர்களாகி இங்ஙனம் உரைசெய்தனர். பரதன் பின்னோடுவந்த ஸேனாஜனங்கள் ஆங்காங்கு ஆயிரமாயிரமாக மனக்களிப்புற்றுக் கூச்சலிட்டுக் கொண்டு 'இதுவே ஸ்வர்க்கம் மற்றொன்றும் அன்று' என்றனர் அந்த ஸைன்ய ஜனங்களெல்லோரும் பூமாலைகள் சூடி ஆயிரமாயிரமாகக் கும்பல் கூடி ஆடுதல் பாடுதல் சிரித்தல் நாற்புறமும் ஓடித் திரிதல் முதலிய பல சேஷ்டைகளைச் செய்தனர் அனந்தரம் அவர்கள் அம்ருதம் போன்ற அன்னங்களை யதேஷ்டமாகப் புசித்தும் த்ருப்தியடையாமல் அங்கு மிகுந்துள்ள திவ்ய பக்ஷ்யங்களைப் பார்த்து மேன்மேலும் புசிக்க நினைத்தனர். அந்த ஸேனையிலுள்ள பரிசாரகர்களும் தாஸிகளும் படை வீரர்களது பார்யைகளும் மற்றும் அங்குள்ள ஸ்த்ரீக

ளும் அனேகமாயிரங் கணக்குள்ள அனைவரும் புதிய வஸ்த்ரங்களை உடுத்து மிகவும் கொழுத்திருந்தனர். அங்கு யானைகளும் கழுதைகளும் ஒட்டைகளும் பசுக்களும் குதிரைகளும், விளையாட்டின்பொருட்டு ஸேனாஜனங்கள் கொண்டுவந்த மருகங்களும் பக்ஷிகளும் பரத்வாஜ மஹிமையாலுண்டான பக்ஷ்யாதிகளை உட்கொண்டு மிகவும் புஷ்டியடைந்தன. அதில் எவனும் வேறே ஆஹாரம் எதையாயினும் தின்னவில்லை. அங்கு ஒரு மனிதனும் வெளுத்த வஸ்த்ரந் தரிக்காதவனாவது பசித்தவனாவது அழுக்கடைந்த சரீரமுடையவனாவது தலையில் தூள் படிந்தவனாவது புலப்படவில்லை. எல்லோரும் வெளுத்த வஸ்த்ரங்களை உடுத்துப் பசியென்பதறியாமல் எண்ணெய் தேய்த்து ஸ்னானஞ்செய்து பரிசுத்தமாக விளங்கினர். மேலும், ஆட்டுமாம்ஸங்களையும் பன்றிமாம்ஸங்களையும் சிறந்த வ்யஞ்ஜன ஸமூஹங்களையும் நன்றாகப் பழுத்த பழங்களையிட்டுச் சாக்கரையுடன் காய்ச்சின ரஸாயனங்களையும் நன்கு சமைக்கப்பெற்று வாஸனையும் ருசியுமுள்ள பருப்பு வகைகளையும் வெளுத்த அன்னராசிகளையும் இட்டு நிறைக்கப்பட்டுப் புஷ்பங்களால் விசித்ரமாக அலங்காரஞ் செய்யப்பெற்று நாற்புறமும் நிரம்பின அனேகமாயிரம் ஸுவர்ண பாத்ரங்களைப் பார்த்து அந்த ஸேனாஜனங்கள் மிக்க ஆஸ்சர்யம் அடைந்தனர். அப்பொழுது அரண்யத்திலுள்ள கிணறுகள் அனைத்தும் பரமான்னமாகிற சேறுகளால் நிறைந்திருந்தன. அங்கு முன்னம் திரிந்துகொண்டிருந்த பசுக்களும் எவ்வளவு வேண்டுமோ அவ்வளவு பாலைச் சுரந்தன. அங்குள்ள வருக்ஷங்களெல்லாம் தேன்களைப் பெருக்கிக் கொண்டிருந்தன. அவ்விடத்து நடைவாவிகளெல்லாம் மைரேய மென்னும் மத்யங்களால் நிறைந்திருந்தன. அதைச் சுற்றி நாற்புறங்களிலும் பாத்ரங்களில் நன்கு

பசனஞசெயத மான மயில கோழி முதலியவற்றின மாம ஸஙகள விளங்கின ஆயிரமாயிரமாக அன்னக்குடங்களும வயஞ்ஜன மிடபபெற்ற அனேக லக்ஷம குடஙகளும கோடிகோடியாகப பொன்மயமான போஜன பாத்ரஙகளும, சுககு முதலிய ஸமபாரஙகள சோதது நன்கு மணஞ சேரககபபெற்ற தயிர நிறைநத பெரிய குடஙகளும சிறிய குடஙகளும வாணாகளும அஙகுப புலபபட்டன. அநதப பாத்ரஙகளெலலாம நன்கு சுத்தஞ செயயபபட்டு விளககமுற்றிருநதன. அஙகுச சில மடுககள மிகப பழையதும புதியதுமலலாமல விளாஙகனியின பரிமளமுளள வெளுத்த மேலான கபித்தமென்னும மோர நிறைநதிருநதன. சில மடுககள சுககு திபபிலி மிளகுகளும ஏலம லவஙகம தககோலம நாகபுஷபஙகளும சாககரை இஞசி சீரகஙகளும சோதது மணமிடபபெற்ற ரஸாலமென்னும மோர நிறைநதிருநதன சில மடுககள வெளுபபான தயிர நிறைநதிருநதன, சில மடுககள பாயஸம நிரமபியிருநதன இவைகளுககு வயஞ்ஜனமாகச சாககரைக குவியலகளும சாககரை கலநத யவ கோதுமை அபபஙகளின ராசிகளும புலபபட்டன அநத ஸேனைஜனஙகள நதித்துறைகளில பாத்ரஙகளில அரைதது வைககபபட்ட சீககாய நெலலிககாய முதலியவைகளையும உளுத்தமா முதலிய உடமபுப பொடிகளையும காயசசின சீககாய முதலிய கஷாயஙகளையும எணணெய வெநநீர முதலிய நானாவகை ஸநானத்ரவயஙகளையும கண்டனா. மேலும், வெளுத்துக கூரசசஙகளோடு கூடின தநத காஷடஙகளும கிணணஙகளிலிடபபட்ட வெளுத்த சநதனக குழமபுகளும நன்றாகத துடைககபபட்டுப பளபளவென்று விளங்குகின்ற கண்ணாடிகளும சிறநத வஸ்த்ரஙகளும அனேக மாயிரம பாதுகை ஜதைகளும பாதரக்ஷை ஜதைகளும மைசசிமிழகளும சீபபுககளும மீசை முதலியவற்றைச் சரிபபடுத்தும சிறிய கூரசசஙகளும அலஙகாரத்தின பொருட்டு வைககப

பட்ட கத்தி முதலான ஆயுதங்களும் தனுஸ்ஸுக்களும் கவசங்களும் விசித்ரமான படுக்கைகளும் அற்புதமான ஆஸனங்களும் ராசிராசியாக விளங்கக் கண்டனர். கழுதைகளும் ஒட்டைகளும் யானைகளும் குதிரைகளும் ஆஹாரம் தின்றபின் ஜீர்ணமாகும்பொருட்டுத் தண்ணீர் குடிப்பதற்காக நீர் நிறைந்த மடுக்களும், இழிந்து ஸ்நானஞ் செய்வதற்குரிய துறைகள் பொருந்திக் கருநெய்தலும் தாமரையும் நிறைந்து ஆகாசம்போல நிர்மலமான ஜலங்கள் பொருந்தி ஸுகமாக ஸ்நானஞ் செய்யத்தகுந்த குளங்களும் நீலமும் வைடூர்யமும் போன்று பசுக்களின்பொருட்டு ஸித்தஞ் செய்யப்பட்ட இளம்புல் கட்டுக்களும் புலப்பட்டன. அந்தப் படையிலுள்ளவர் இதுவரையில் எங்கும் காணாததும் கேளாததும் யாது பாயத்தனமுமின்றி ஸித்தித்ததும் அற்புதமாயிருப்பதால் ஸ்வப்னத்தை நிகர்த்ததும் இப்படி யிப்படியென்று சொல்லக்கூடாததுமாக அங்ஙனம் பரதனுக்காக மஹர்ஷி ஏற்படுத்தின அவ்விருந்தைக் கண்டு மிகவும் ஆச்சர்யம் அடைந்தனர். நந்தனவனத்தில் தேவதைகள் விளையாடுவதுபோல பரத்வாஜாச்ரமத்தில் இவ்வண்ணம் அவர்கள் நானாவித விளையாட்டுக்களைச் செய்துகொண்டிருக்கையில் அன்றிரவு கடந்தது. அனந்தரம் அந்நதிகளும் தேவகந்தர்வர்களும் அவ்வுத்தம ஸ்த்ரீகளும் பரத்வாஜ முனிவரிடம் அனுமதி பெற்று வந்த வழியே தத்தமிடத்திற்குப் போயினர். பொழுதுவிடிந்தபின்பும் மனிதர்கள் அவ்வண்ணமே மதத்தால் மிகவும் மதங்கொண்டு அப்படியே திவ்யாகுருசந்தனப் பூச்சுக்களுடன் பரிகசித்துக்கொண்டிருந்தனர். [1] திவ்யங்களான பலவகை நறு பூமாலைகள் மனிதர்களால் படுக்கையில் துவக்கப்பட்டு வாடி மலர்கள் உதிர்ந்து தனித்

---

1. இதனால் இது இந்த்ரஜாலம்போலன்று, உண்மையான பதார்த்தமே யென்று தெரிகின்றது.

தனியே சிந்தியிருநதன. தொண்ணூறறொனறாவது ஸாககம

பரத்வாஜா பரதனுககுச சிதரகூடம போம வழியைக கூறுதலும, பரதன பரத்வாஜருக குக் கௌஸலயாதிகளை அறிவிததலும, சிதரகூடம போகபபுறபபடுதலும, இடை யில யமுனாநதிக கரையிலுள்ள வனத்தில ஸேனை நிவேசனஞ செயதலும

பிறகு பரதன பரிவாரததுடன ஆதிதயம பெறறு அனறிரவெல்லாம இருநது ராமனைப பாாகக மன விருபபஙகொண்டு பரதவாஜரிடம போயினன. பரதவாஜ மஹாஷியும அகனி காயந தீாநதவுடன தனனிடம வநது கைகூபபி நிறகினற புருஷஸ்ரேஷ்டனுகிய அநதப பரதனைப பாாதது,'பாமறறவனே! உனககு எமதாஸ்ரம ததில ராததிரி ஸுகமாகக கடநததனறு? நான நடததின ஆதிதயததிறகு உனது ஜனஙகளெலலோரும தருப பதி அடைநதாாகளா? எனககு இதைச சொலவாய' எனறு வினவினா மிகுநத ஒளியுடன விளககமுறறுந தான புறபபடுமபொழுதே தனனைப பாாககுமபொருடடு ஆஸ்ரமததினினறும புறபபடடு வருகினற அமமஹாஷி யைப பாாததுப பரதன கைகூபபி நமஸகரிதது 'மஹானு பாவரே! நானும என மநதரிகளும எனது ஸேனாஜனங் களும குதிரை முதலான வாஹனஙகளும ஆகிய அனைவ ரும ஸமஸதமான [2] வாஞசித பதாாததஙகளையும பெறறு

1. பரதவாஜமஹாஷி பரதனது மனஸஸைப பரீக்ஷிகக இஙஙனம விருநது செயதனா பரதனுககு ராமனிடததில அனபிலலையா யின இநதப போகததில மூழகியிருபபானெனறு ரிஷியின அபிப ராயம பரதன அஙஙனம அதில கால தாழாமல ராமனைப பாாக்கப் புறநதானெனறு தெரிகினறது

2. வாஞ்சிதம-விருமபபபடட.

தருபதி அடைந்திருக்கின்றனம். எமது பரிசாரகர்கள் முதலாக நாங்களெல்லோரும் இளைப்பாறி தேஹஸந்தாபமும் தீர்ந்து ஸம்ருத்தமான அன்னபானங்களையும் உட்கொண்டு அழகான க்ருஹங்களில் மிக்க ஸுகமாக வஸித்திருந்தனம் ரிஷிதிலகரே! உம்மிடத்தில இஷ்டப்படி போய்வர அனுமதி வேண்டுகின்றனன். எனது ஐயனிடத்திற்குப் போகின்றனன். என்னை ஸ்னேஹம் பொருந்திய கண்ணால் கடாக்ஷிப்பீராக. நீர் யோகமஹிமையால் எல்லாவற்றையும் அறிந்தவர். ஆகையால் பித்ருவசன பரிபாலனமென்னும் தர்மத்தை ஆசரிக்கின்ற அம்மஹாத்மனது ஆஸ்ரமம் எதுவோ சொல்ல வேண்டும். அதற்குப் போகும் வழியாது? அது இவ்விடத்திற்கு எவ்வளவு தூரம்? இதையெல்லாம் எனக்கு ஸவிஸ்தாரமாகச் சொல்லவேண்டும்' என்றனன் பரதன் அங்ஙனம் வினவுகையில், மஹாதேஜஸ்வியும் மஹா தபஸ்வியுமாகிய பரத்வாஜர் அண்ணனைப் பார்க்க விரும்புகின்ற பரதனைப் பார்த்து, 'பரதா! இங்கிருந்து இரண்டரையோஜனை தூரம் நடந்து போகையில், முனிவர் தவிர மற்றை எவரும் புலப்படாத ஆரண்யத்தில் அழகிய தாழ்வரைகளும் காடுகளும் அமைந்த சித்ரகூடமென்னும் பர்வதம் இருக்கின்றது அதன் வடபாகத்தில் மந்தாகினியென்னும் நதி பெருகி வருகின்றது அதன்கரையில் வ்ருக்ஷங்கள் புஷ்பித்து நன்கடர்ந்து விளங்குகின்றன. நிரம்பப்பூத்த அழகான அரண்யங்களும் அங்கிருக்கின்றன. அப்பா! அந்நதியின் பக்கத்திலேயே சித்ரகூடபர்வதம் இருக்கின்றது. அதில் அந்த ராமலக்ஷ்மணர்களின் பர்ணசாலை உளது. அதில் அவர்கள் வாஸஞ் செய்கின்றனர். இது நிச்சயம். ஸேனைகளுக்குத் தலைவனே! மஹாபாக்யமுடையவனே! இவ்விடத்திற்குத் தென்புறமாகப் போகும் மார்க்கத்

தில் கொஞ்ச தூரம் ரத கஜ துரகங்கள் நிறைந்த ஸைன்யத்தைக் கொண்டு போய் அதற்குப் பின் தென் மேற்காகச் செல்லும் கிளைவழியைப்பற்றி நடப்பாராக. அரண்யங்களில் வழி ஸூக்ஷ்மமாயிருக்குமாகையால் அதற்கு வலப் பக்கத்திலாவது இடப்பக்கத்திலாவது விஸ்தாரமாயிருக்கும் ப்ரதேசத்தில் ஸேனையை நடத்திக் கொண்டு செல்வாராக பிறகு ராமனைப் பார்ப்பாய்' என்றனர். ப்ரயாணமென்று கேள்விப்பட்டு ராஜாதிராஜனாகிய தசரதனது பார்யைகள் கௌஸல்யை முதலானவர்கள் வாஸஸ்தானத்தை விட்டு வெளியே வரத்தகாதவராயினும் வாஹனங்களை விட்டு வந்தனஞ் செய்வதற்காக பரத்வாஜமஹர்ஷியைச் சுற்றிக்கொண்டனர். அவர்களில்[1] வார்த்தகத்தினாலும் ரிஷி தர்சனத்தினாலும் நடுக்கமுற்றுப் புத்ரசோகத்தால் இளைத்து தீனையாயிருக்கும் கௌஸல்யாதேவி ஸுமித்ரையுடன் கூட அம்முனிவரது பாதங்களைத் தனது ஹஸ்தங்களால் பிடித்துக்கொண்டு நமஸ்காரஞ் செய்தனள் பிறகு தன் மனோரதம் ஈடேறப் பெறுமல் யாவரும் இகழ்வதற்குமாத்ரம் இடமாக நின்ற கைகேயி நாணத்துடன் வந்து அம்முனிவரைப் பணிந்தனள் அவள் அப்பொழுது மனம் புண்பட்டவளாகிக் கௌஸல்யாதிகளைப்போல அம்மாமுனிவர் எதிரில் நிற்க முகமில்லாமல் அம்மஹானுபாவரை வலஞ்செய்யும் வ்யாஜத்தினால் அவ்விடமிருந்து சென்று பரதனது அருகில் போய் நின்றனள் பின்பு வ்ரதங்களில் மனந் திடமாயிருக்கப்பெற்ற பரத்வாஜர் பரதனைப் பார்த்து 'ரகுகுலதிலகனே![2] உன் தாய்மார்களில் அவரவர்களின் பேர் முதலியவற்றைத் தெரிந்துகொள்ள விரும்புகின்றேன்;

1 வார்த்தகம் - கிழத்தனம்

2 ஸர்வஜ்ஞரான மஹர்ஷிக்கு கௌஸல்யாதிகள் தெரிந்திருந்தும் பரதன் மூலமாகக் கைகேயியின் தோஷத்தை வெளிப்படுத்த வினவினார்.

சொலவாய' என்று வினவினர. உண்மை பேசுகை யாகிற தாமததில நிலைநினறிருபபவனாகிய பரதன வார்ததை சொலலுவதில நிபுணனாகையால பரதவாஜர சொனன வார்ததையைக கேட்டுக கைகூபபிககொணடு 'மஹாநுபாவரே! இதோ தீனையாகிச சோகததாலும உபவாஸததாலும இளைதது தர்மதேவதைபோல புலப படுகினறாளே, இவள என தநதைககுப பட்டமஹிஷி. இவள கௌஸலயையெனனும பேருடையவள. அதிதி விஷ்ணு தேவனைப பெறறாறபோல இவளே புருஷஸ ரேஷ்டனும ஸிமஹமபோல கமபீரமாக நடபபவனுமா கிய ராமனைப பெறறவள. மனவருததமுறறு அரணயத தில புஷபஙகளை உதிர்தத காணிகாரச செடியின கிளை போல நடுககமுறறுக கௌஸலயையின வலப புஜததை அணைதது நிறகினறாளே, இவள ஸுமிதரை. வீரர்க ளும உணமையான பராக்ரமமுடையவர்களும அஸவினி தேவதைகளபோல விளஙகும குமாரர்களுமாகிய லக்ஷமண சத்ருகனர்களிருவரும இவளது புதலவர்களே. எவளுககாகப புருஷஸரேஷ்டர்களான ராம லக்ஷமணர கள ராக்ஷஸர நிறைநத தணடகாரணயததிறகுத துரத தபபட்டு ஜீவநாசமடைநதவர்களாகி இவவரணயம வநது சேர்நதார்களோ, எவளுககாக தசரதர பிளளைகளைப பிரிநது ஸவர்ககம அடைநதனரோ, அபபடிப பட்ட கோபிஷ்டையும நறபுததியிலலாதவளும கட்டழகியென னுஞ செருககுடையவளும தாமததை விட்டுக கேவலம பொருளாசையுறறவளும மிகக கொடியவளும நலலவள போல மேலுககுப புலபபடுகினறவளும பாபததையே திடமாகக கைபபறறினவளுமாகிய என தாய கைகேயி யெனபவள இவளே இவளாலதான நான இமமஹாவய ஸனததை அநுபவிககிறேன' எனறனன. அநதப புருஷ சிகாமணி கணணீரால வார்ததை தழுதழுககபபெறறு

1 ஜீவநாசம–பிழைததிருநதே கணகாணாமல மறைதல.

இங்ஙனம் சொல்லிக் கண்கள் சிவக்கப்பெற்று, சினந்த ஸர்ப்பம்போல் பெருமூச்செறிந்துகொண்டிருந்தனன். புத்தியில் சிறந்தவராகையால் வரப்போகிற விஷயங்களை யெல்லாம் அறியவல்லராகிய பரத்வாஜமஹரிஷியும் அங்ஙனம் மொழிகின்ற பரதனைப் பார்த்து ப்ரயோஜனம் அமைந்திருக்குமாறு 'பரதா! நீ[1] கைகேயியிடத்தில் தோஷம் உளதென்று நினைக்கலாகாது. ராமனைக் காட்டுக்கு அனுப்பின இது ஸுகத்தையே மேல்விளையும் பலனாக வுடையதாகப் போகின்றது. (இதனால் ஸுகமே விளையப்போகின்றதன்றிக் கெடுதியொன்றும் இல்லை) ராமனை ஆரண்யத்திற்கு அனுப்பினதால் இவ்வுலகில் தேவதைகளுக்கும் தானவர்களுக்கும் ஆத்மவித்துக்களான ரிஷிகளுக்கும் ஹிதமே உண்டாகப் போகின்றது' என்றனர். பரதன் மஹரிஷிக்கு நமஸ்காரஞ்செய்து அவரிடம் ஆசீர்வாதம் பெற்று அவர்க்கு ப்ரதக்ஷிணஞ்செய்து ஸைன்யத்தை அழைத்து ப்ரயாணத்திற்கு ஸந்நாஹம் நடத்தும்படி ஆஜ்ஞாபித்தனன். அனந்தரம் ஸைன்யத்திலுள்ள ஜனங்கள் பலவகைப்பட்டவர்களாகையால் தந்தமக்குத் தகுந்தபடி ஸ்வர்ணத்தினால் அலங்கரிக்கப்பெற்று ஸித்தமாயிருக்கின்ற திவ்யமான பலவகைக் குதிரைகள் மேலும் பலவகைத் தேர்கள்மேலும் ஏறிக்கொண்டனர். பிறகு பெண்யானைகளும் ஆண்யானைகளும் ஸ்வர்ணமயமான கயிறுகளும் த்வஜங்களுமுடையனவாகி வர்ஷாகாலத்தில் கர்ஜனை செய்கின்ற மேகங்கள்போல் கழுத்தில் கட்டிய மணியோசையுடன் புறப்பட்டன. பெரியனவும் சிறியனவுமாகி மிகுந்த விலையுள்ள பலவகை மேலான வாஹனங்கள் மனிதர்களால் தூக்கப்பட்டுப் புறப்பட்டன. காலாட்கள் கால்நடையாகவே கூடப் போயினர். அனந்தரம் அப்பொழுதே கௌஸல்யை முதலிய ஸதீகள்

---

1 கைகேயி தேவப்ரேரணத்தால் அங்ஙனஞ் செய்ததையும் ராவணவதாதிகளால் உலகங்களுக்கு ஸுகம் விளைவதையும் ஸர்வஜ்ஞரான மஹரிஷி அறிந்து இவ்வண்ணம் மொழிந்தாரென்றுணர்க.

ராமனைப பாரககவேணடுமெனனும விருபபததுடன ஸநதோஷமுறறுச சிறநத வாஹனஙகளமேல ஏறிப போயினர ஸ்ரீமானுகிய பரதன, சநதரஸூரயாகள போல நிரமப ஒளியுறறதும வஸிஷடாதிகளால ஆஜ்ஞை செயயபபெறறதும அழகுளளதுமாகிய பலலககின மேல ஏறிப பரிவாரஙகள சூழபபெறறுப போயினன. ரத கஜ துரகஙகள நிறைநது, அவவிடததில தெறகு முகமாகப பெருகிசசெலகினற கஙகாநதியின மேலண டைககரையில இழிநதிருநத அமமஹாசேனையானது மருகஙகளும பக்ஷிகளும நிரமபின பல வனஙகளைத தாணடி ஆஙகாஙகுப பரவதஙகளிலும நதிகளிலும இளைபபாறி, மேறகிளமபின மேகமபோல தெனதிசை முழுமையும பரநது பரயாணமாயப போயிறறு. அப பொழுது யானைகளும குதிரைகளும படைவீரரகளும மிகுநத ஸநதோஷததுடன விளஙகபபெறற அநதப பரதஸைனயம அமமஹாரணயததில பரவேசிததது அங குளள மருக பக்ஷி ஸமூஹஙகளைப பயமுறுததிககொ ணடு மிகவும பரகாசிததது தொணணூறறிரணடா வது ஸாககம முறறிறறு.

{ பரதன சிதரகூடததின தாழவரையிலுளள வனஙகளில புகுதலும, வனவாணனமும, ராமாஸிரமததைத தேடுதலும, புகையைப பிடிதது ஆஸிரமததை அறிநது ஸைனயத }
தை அவவிடத்திலேயே நிறுததுவதும

அமமஹாஸைனயம போயககொண்டிருககையில, அரணயததிலுள்ள யானை முதலியவறறின கூடடங்க ளில தலைமையுளள அநதநத ஜநதுககள அநத ஸேனை யைககணடு அசசங்கொணடு தநதமதுகூடடஙகளோடு நெடுநதூரம ஓடிபபோயின. காடடுவரிசைகளிலும மலை களிலும நதிகளிலும கரடி புளளிமான கலைமான முத லிய மருகங்கள கூடடஙகூடடமாக நாறபுறஙகளிலுங் ஆஙகாங்குத திகைதது நினறமையால ஸைனயஜனம

களுககுப புலபபடடன. தாமஸ்வபாவனுகிய அந்தத் தசரதகுமாரன மனககளிபபுறறுச [1]சதுரஙகமுளள தனது பெருமபடைஸனயம ரதகோஷஙகளாலும குதிரைக கனைபபு முதலியவறறுலும பேரொலி செயதுகொணடு பரநது வருகையில பரயாணமாயப போயினன மஹானுபாவனுகிய பரதனது ஸைனயம ஸமுதரபரவாஹம் போல அதிவிஸ்தாரமுடையதாகி, வாஷாகாலததில் மேகம ஆகாயததைக கவாவதுபோல பூமி முழுவதும மறைததது அசசமயததில பூமியானது மிகுநத வேகமுளள குதிரைககூடடஙகளாலும யானைகளாலும சூழபபெறறு நெடுநேரம கணணுககுத தோறறுமலேயிருநதது ஸ்ரீமானுகிய அநதப பரதன வெகுதூரம அஙஙனம சென்று வாஹனஙகள (மி)கவும இளைபபுறறிருபபது கணடு ஆலோசனைகளில ஸமாததாகிய வஸிஷடரை நோககி 'இததேசம எஙஙனம புலபபடுகிறதோ அதை ஆலோசிததுப பாாததால, பரதவாஜரிடம நான எபபடி கேடடேனே, அபபடியே இதோ புலபபடுகினறது ஆகையால பரதவாஜா சொனன இடததிறகு ஸபஷடமாக நாம வநது சேரநதனம இதோ இநதப பாவதமே சிதரகூடம இநதியே மநதாகினி இதோ தூரததில கருமுகிலபோல கறுதத வனம விளஙகுகினறது மேகமபோல புலபபடுகினறனது யானைகள இபபொழுது அழகான சிதரகூட பாவதததின தாழவரைகளைக கொறறிக குளமபரிககினறன. வாஷாகாலததில ஜலததை முகநது கறுததிருககும மேகஙகள மழை பெயவது போல, தாழவரையிலுள்ள வருக்ஷங்கள புஷபஙகளைப பொழிகினறன, காணபீர' என்றுரைததுப பிறகு தமபியைப பாாதது 'சதருகனு! முதலைகள் நிறைநத மஹாஸமுதரமபோல நாறபுறஙகளிலும மிருகங்களா நிரமபியதாகிக கினனராகளா ஸ[illegible]ககும தேசமாகிய இநதப பாவதததைக

---

1. சதுரஙகம்-தோ யானை குதிரை காலாடகளெனகிற நானகு அஙகஙகள.

காண்பாய சரதகாலததில மழையைப பெயது வெளுத திருககும மேகஙகள காறறால ஏவுணடு ஆகாயததில மிகக வேகததுடன உலாவுவதுபோல, இமமானகளின கூடடஙகள நமது சைனயஙகளால துரததபபடடு விரைவாய ஓடுகின்றன, பார தெனனாடடு மனிதாகள மேகமபோல கறுதது விளஙகுகின்ற தலைமயிாகளை ஒரு விதமாக உயர எடுததுக கடடி அவறறில பூமாலைகளைச சூடுவதுபோல, இநத வருக்ஷஙகளும மேகம போல கறுத்திருககும தமது சிரஸசுககளில நிரமபப பூததிருககிற புஷபஙகளைச சிரோபூஷணமாகத தரித திருககின்றன பயஙகரமாகப புலபபடுகின்ற இவவரணயம முனபு மனிதாகளின ஸஞசாரமேயின்றி நிஶஶபதமாயிருநதது, இபபொழுது நமது சைனயததிலுளள ஜனஙகள நிரமபப பெறறு ஜனங்கள நிறைநத அயோதயாபுரமபோலவே எனககுப புலபபடுகின்றது குதிரை முதலியவறறின குளமபுகளால கிளமபின தூள ஆகாயம முழுவதும மறைதது நிறகின்றது இதனால எனககு ராமாஶரமமிருககு மிடததைக கணடுபிடிப பது அஸாதயமாகையால காறறு எனககு பரியஞ செயய விருமபியதுபோல சீகரமாக அநதத தூளை அபபுறம அடிததுககொணடுபோய விடுகின்றது. சதருககுன! சிறநத ஸாரதிகள ராமனைப பாரககவேணடு மெனனுங குதூஹலததினால அரணயததில குதிரைகள பூடடின ரதஙகளின மீதேறி அவைகளைச சீகரமாகவும நனறாகவும ஓடடுகின்றனர, பார அழகான தோகைகள அமையப பெறறுப பாரகக மிகவும இனியவைகளாகிய இமமயிலகள ரதம முதலியவறறின சபதத ததைக கேடடுப பயநது சீகரமாக இதோ தததமது இருபபிடமாகிய இபபாவததைச சேருகின்றன, பார.

இநத பரதேசம மிகவும அழகாயிருககையால எனககு இது ஸவாககமாககமோ எனனுமபடி தோறறுகினறது ஆகையால இது ரிஷிகளின வாஸஸதானமெனபது நிசசயம அடவியில புளளிமானகள பல பெண்மானகளோடு கூடிச சரீரம முழுமையும புஷபஙகளால சிததிரஞசெயயபபடடவைபோல அழகிய உருவஙகளுடன புலபபடுகினறன நலலது, புருஷஸரேஷ்டாகளாகிய ராமலக்ஷமணாகளைக கணடுபிடிபபதறகாக ஸைனயத்திலுளளவா ஆஙகாஙகுச சென்று ஆரணயம முழுவதும தேடுவாாகளாக' எனறனன. பரதன சொனன வாாததையைக கேடடுச சூராகளான புருஷாகள சிலர் ஆயுதஙகளைக கையிலேநதி அவவரணயததில பரவேசிதது அதில கொஞச தூரததில புகையெழுமபக கண்டனா அதைக கணடவுடன அவாகள திருமபிப பரதனிடம வநது 'மனிதாகளிலலாத இடததில அகனியிருகக நேராது ஆகையால இஙகேயே ராமலக்ஷமணாகளிருபபது நிசசயம ஒருகால பரநதபாகளும புருஷசிகாமணிகளுமாகிய அநத ராஜகுமாராகள இஙகிலலாமற போயினும, இஙகு ராமனை நிகாதத உததம தாபஸாகளாவது இருககவேணடும. இதறகு ஸநதேஹமிலலையென்று நினைககிறேம' எனறனா பகைவாது பலததைப பாழ செயய வலலவனுகிய பரதன, நயாயமுணாநதவாகள கொணடாடுமபடி அவாகள உரைதத அவவுரையைக கேடடு ஸேனுஜனஙகளெலலோரையும் பாாதது 'நீஙகள இஙகுச சபதஞசெயயாமலிருபபீர்களாக. இதறகுமேல நீஙகள தாணடி வர வேண்டாம். ராஜாககளில நானெருவனும, மநதிரிகளில ஸுமநதிரனும ருதவிககுகளில குருவாகிய வஸிஷ்டரும் ஆகிய இம்மூவா மாத்ரமே போகினறனம' என்று ஆஜ்

ஞாபித்தனன். இங்ஙனம் ஆஜ்ஞாபிக்கையில் அந்த ஸைன்யத்திலுள்ளவர் அனைவரும் அங்கேயே நிலைநின்றிருந்தனர். பரதன் அந்தப் புகையின் நுனி புலப்பட்ட இடத்தில் கண்ணை நிலை நிறுத்திக்கொண்டு சென்றனன். அப்போது பரதன் நிறுத்திப்போன ஸேனாஜனங்கள் எதிரில் புகையின் நுனியைக் கண்ட மாத்ரத்தில் இனிச் சீக்ரத்திலேயே ப்ரியனாகிய ராமனைப் பார்க்க நேரலாமென்றறிந்து ஸந்தோஷமடைந்திருந்தனர்.

தொண்ணூற்று மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று


ராமன் ஸீதைக்குச் சித்ரகூடத்திலுள்ள விசேஷங்களைக் காண்பித்தல்

அனந்தரம் அவ்விடத்தில் தேவதைபோன்ற ஸ்ரீ ராகவன் பர்வதங்களிலும் அரண்யங்களிலும் ப்ரீதியுடையவனாகையால் அந்தச் சித்ரகூட பர்வதத்தில் மாஸம் வஸித்திருந்து பரதன் வருமன்று ஸந்தோஷஞ் செய்ய விரும்பியும் தன் மனத்தைக் கொஞ்சம் விநோதப்படுத்த முயன்றும் தேவேந்த்ரன் சசீதேவிக்குச் சொல்லுவதுபோல் தன் பத்னிக்குச் சித்ரங்களான சித்ரகூட பர்வதத்திலுள்ள விசேஷங்களைக் காண்பித்துக்கொண்டு இங்ஙனம் மொழிந்தனன்—

1 'கல்யாணி! ரமணீயமான இந்தச் சித்ரகூட பர்வதத்தைப் பார்த்துக்கொண்டிருப்பதனால் ராஜ்யங் கை சோர்ந்ததாவது நண்பர்களைப் பிரிந்திருந்ததாவது என் மனத்திற்கு எள்ளளவாயினும் வருத்தம் விளைக்கவில்லை. மங்கலஸ்வபாவமுடையவளே! இப்பர்வதம் பலவகைப் பக்ஷிகணங்களோடு கூடிக் கைரிகதாதுக்கள் நிறைந்து ஆகாயத்தில் உறைவனபோல் மிகவுமுயர்ந்த சிகரங்களால் அலங்கரிக்கப்பட்டு விளங்குகின்றது, இதைக் காண்பாயாக. பர்வதங்களிற் சிறந்த இந்தச் சித்ர

1 மங்கலஸ்வபாவமுடையவளே!

கூடம் பலவகைத் தாதுக்கள் நிறைந்திருக்கையால் இதில் சில ப்ரதேசங்கள் வெள்ளியைப்போல் மிக்க வெண்மை நிறமுடையவைகளும், சில ரக்தம்போல் சிவப்பு நிறமுடையவைகளும், சில பொன்வர்ணமுடையவைகளும், சில மஞ்ஜிஷ்டை வர்ணமுடையவைகளும், சில இந்த்ரநீலவர்ணமுடையவைகளும், சில புஷ்யராக வர்ணமுடையவைகளும், சில ஸ்படிகவர்ணமுடையவைகளும், சில தாழம்பூவர்ணமுடையவைகளும், சில நக்ஷத்ரவர்ணமுடையவைகளும், சில பாதரஸவர்ணமுடையவைகளுமாகி மிகவும் ப்ரகாசிக்கின்றன. இந்தச் சித்ரகூடபர்வதம் முனிவர்களின் ஸந்நிதானத்தால் கொடுமையும் பகையும் நீங்கி மிகவும் சாந்தகுணம் பொருந்திய பலவகை மான்களும் பெரும் புலிகளும் சிறுத்தைகளும் கரடிகளும் பலவிதப் பறவைகளும் கூட்டங்கூட்டமாய் நிறைந்து மிகவும் விளங்குகின்றது. மேலும் இதில் மா நாவல் வேங்கை வெள்ளலத்தி முள்ளம் பலா கொன்றை அழிஞ்சில் பவயம் திணிசல் பில்வம் திந்துகம் மூங்கில் குமிழம் வேம்பு மாவிலங்கம் இருப்பை மஞ்சாடி இலந்தை நெல்லி கடம்பு பரம்பு இந்திரம் மாதுளை முதலிய மரங்கள் புஷ்பித்தும் பழுத்தும் நிழல் நிறைந்தும் தழைத்தும் அழகாயிருப்பதால் இம்மலை மிகவும் அழகுபெற்றிருக்கின்றது. நல்லொழுக்கமுடையவளே! அழகான இம்மலையின் தாழ்வரைகளில், பார்த்தவுடனே மயிர்க்கூச்சலை விளைக்கின்ற கின்னரர்கள் தம்பதிகளாய்க்கூடி ஒருவர்க்கொருவர் மனம்பொருந்தி [1] விஹாரஞ் செய்வதைக் கண்ணுறுவாய். வித்யாதரர்கள் மரக்கிளைகளில் வாள் முதலிய படைக்கலங்களையும் சிறந்த வஸ்த்ரங்களையும் தொங்கவிட்டிருப்பதைக் காண்பாய். வித்யாதர ஸ்த்ரீகள் க்ரீடை செய்யும் அழகான இடங்களையும் இதோ பாராய். சில இடங்களில் மேலிருந்து விழுகிற அருவிகளும் சில இடங்களில் பூமியைப்பிளந்து மேல்கிளம்பி வருகிற அருவிகளும் சில இடங்களில்

1 விஹாரம்-விளையாடுதல்

ஸாதாரணமாயப பெருகிவரும நீருற்றுககளும பெருகப பெற்ற இபபாவதம பலவாறு மதஜலததைப பெருககுகின்ற மதயானைபோல திகழகின்றது குஹையினினறு வீசுகின்ற இககாற்றானது பலவகைப புஷபஙகளின வாஸனையமைநது காரணேநதரியததிறகு மிக இனிய பைக கொடுககினறதே! இது எவனைததான ஸநதோஷபபடுததாது? ஸாவாங்கஸுநதரி! இஙகு உனனோடும லக்ஷமணனோடும கூடிப பலலாணடுகள இருபபேனாயினும, அயோததியை விட்டுபபிரிநத சோகம எளளளவும எனனைப பாதிககாது. அழகிய கோபமுடையவளே! பலவகைப புஷ்பஙகளும பழஙகளும நிறைநது பலவகைப பக்ஷி ஸமூஹஙகளுமடாநது அறபுதமான சிகரஙகளுமமைநது அழகியதுமாகி ஐமபுலனகளுககும ஆநநதம விளைககினற இபபாவததகில எனககு நிரமபவும பரீதி உணடாயிருககினறது இநத வனவாஸததினால தாமததில தநதையின கடனைத தீாததலும பரதனுககு பரியஞ செயகையுமாகிய இரணடு பலனகள எனககு நேரிட்டன விதேஹராஜன திருமகளே! இநதச சிதரகூடததில மனோவாககாயஙகளெனனும மூனறு கரணஙகளையும தமவசமாககுகினற பலவகை விநோதஙகளையும கண்டு எனனோடுகூட நீயும மனககளிபபுறுகினறனையலலவா? ராஜ குமாரததியே! என முபபாட்டனமார முதலிய மூனபுளள ராஜாஷிகள, இநத வனவாஸம இமமையில இனபஙதருவது மாததரமேயனறி மறுமையிலும இது வானுலகததைக கொடுககுமெனறு மொழிநதனர இமமலையில சிலைகள இருபுறமும நிரமபிக கறுபபு மஞசள வெளுபபு சிவபபு ஆகிய பறபல வாணஙகள பொருநதி அகனறு நூறுநூறாக விளஙகுகினறன இநதப பாவதத்தில இரவில தமது காநதியின மிகுதியால விளஙகுகினற அநேகமாயிரம ஓஷதிகள அகனிஜவாலை

களைப்போல் ப்ரகாசிக்கின்றன. அழகிய கோபமுடையவளே! இம்மலையில் சில இடங்கள் குகைகள் நிறைந்திருக்கையால் க்ருஹங்கள் போலவும், சில இடங்கள் செடிகளும் கொடிகளும் அமைந்திருக்கையால் உத்யானவனங்களைப்போலவும், சில இடங்கள் ஒரே பாறையாகவும் ப்ரகாசிக்கின்றன. இந்த சித்ரகூடபர்வதம் பூமியைப் பிளந்து மேலெழுந்ததுபோல் துலங்குகின்றது. இந்த சித்ரகூடத்தினுடைய இந்த சிகரமானது எல்லாவற்றிலும் அழகாயப் புலப்படுகின்றது. கோஷ்ட புஷ்பங்களும் புன்னாக புஷ்பங்களும் தகர புஷ்பங்களும் பூர்ஜபத்ரங்களும் மேலில் பரப்பப்பெற்றுள்ள தாமரை யிதழ்களோடுகூடிய காமுகர்களின் அழகான படுக்கைகளைப் பார். மாதரசே! காமுகரால் மோந்து எறியப்பட்டு வாடியிருக்கின்ற தாமரைப்பூமாலைகளும் அவர்கள் சாப்பிட்டெறிந்த பலவகைப் பழங்களும் புலப்படுகின்றன, பார். இந்த சித்ரகூடம் வேர்களும், காய்களும் ஜலமும் மிகுந்திருக்கப்பெற்று அலகாபுரியையும் மானஸமென்னும் ஸௌகந்திக் ஸரஸ்ஸையும் உத்தரகுருதேசங்களையும் அதிக்ரமித்துச் சிறந்து விளங்குகின்றது. பெண்மணியே! ஸீதே! நான் உன்னோடும் லக்ஷ்மணனோடும் கூடி முன்னோர் சென்ற வழியில் நின்று சிறந்த நியமங்களைக் கைப்பற்றி இந்தப் பதினான்கு ஸம்வத்ஸர காலத்தையும் விளையாடிக் கடத்திப் பிறகு குலதர்மமாகிய ப்ரஜாபாலனத்தை வளர்த்திக்கொண்டு ராஜஸௌக்யத்தை அனுபவிக்கப் போகிறேன்' என்றான்.

தொண்ணூற்றுநான்காவது ஸர்க்கம் முற்றிற்று.

{ ராமன் மந்தாகினியென்னும் நதியின் அழகைக்காட்டி ஸீதையை மகிழ்வித்தல். }

ராமன் அங்ஙனம் மைதிலிக்குச் சித்ரகூடத்திலுள்ள விசித்ரங்களைக் காட்டி அனந்தரம் அப்பர்வதத்தினின்றும் வெளிப்புறப்பட்டுச்சென்று அங்கு மிகவும் அழகிய ப்ரவாஹத்துடன் பெருகி வருகின்ற ரமணீயமான மந்தாகினியென்னும் நதியைக் காட்டினன். சிறந்த பின்புறமுடையவளும் பர்வதத்தைப் பார்க்கும் ஸந்தோஷத்தினால் மலர்ந்து மாசுமறுவற்ற சந்த்ரனைப்போல் அழகான முகமுடையவளும் விதேஹராஜன் திருமகளுமான ஸீதையைப் பார்த்து ராமன் ஸந்தோஷத்தினால் கண்களிரண்டும் தாமரையிதழ்போல் மலரப்பெற்று இங்ஙனம் மொழிந்தனன் — 'மிகவும் அற்புதமான மணற்குன்றுகள் அமைந்து ஹம்ஸங்களும் ஸாரஸங்களும் நிரம்பப் பெற்றுத் தாமரைப் புஷ்பங்கள் நிறைந்து அழகாயிருக்கின்ற இம்மந்தாகினி நதியைப் பாராய்! இந்நதி இரண்டு [1] தீரங்களிலும் பலவகைப் புஷ்ப வ்ருக்ஷங்களும் [2] பலவ்ருக்ஷங்களும் முளைக்கப்பெற்று எங்கும் விளங்குகின்ற குபேரனது மானஸமென்னும் தாமரை யோடைபோல் முழுவதும் விளங்குகின்றது. ம்ருகங்கள் குவியல் குவியலாக வந்து ஜலங்குடிக்கையால் கலக்கமுற்றுக் குங்குமக் குழம்புபோல் அழகான ஜலமுடைய இந்நதியின் துறைகள் எனக்கு இதில் ஸ்நானஞ்செய்யவேண்டுமென்னும் ப்ரீதியை விளைக்கின்றன. அன்பிற்கிடமாயிருப்பவளே! ஜடைகளையும் க்ருஷ்ணாஜினத்தையும் தரித்து மரவுரியை உத்தரீயமாக உடுத்தின ரிஷிகள் தகுந்த காலத்தில் இம்மந்தாகினியில் நீராடுகின்றனர், காண்பாய் [3] விசாலாக்ஷி! இதோ கடுமையான வ்ரதங்களுடைய சில முனிவர்கள் நியமத்துடன் கைகளை உயர்த்திக் கதிரவனை நோக்கித் தவஞ் செய்கின்றனர். இந்நதியின் இருபுறங்களிலுமுள்ள வ்ருக்ஷங்கள் காற்றினால்

1. தீரம்—கரை 2 பலவ்ருக்ஷம்—பலன்கள் நிறைந்த வ்ருக்ஷம்.
3 அகன்ற கண்களையுடையவளே!

அசைக்கப்பட்ட சிகரங்களை யுடையனவாகி இலைகளையும் புஷ்பங்களையும் உதிர்க்கையில் இப்பர்வதம் புஷ்பாஞ்சலி நிறைந்த கைகளை அசைக்கிக்கொண்டு ந்ருத்யஞ்செய்ய முயன்றவன்போல் புலப்படுகின்றது. இந்நதி சில இடங்களில் முத்துப்போல் தெளிந்த நீருடையதும் சில இடங்களில் மணற்குன்றினை யுடையதும் சில இடங்களில் ஸ்நானத்தின்பொருட்டு இறங்கின ஸித்தஜனங்கள் நிறைந்ததுமாகி விளங்குகின்றது, பார், காற்றினால் உதிர்க்கப்பட்ட புஷ்பங்கள் சில கரையில் விழுந்து நிறைந்திருக்கின்றன, மற்றுஞ் சில புஷ்பங்கள் ஜலப்ரவாஹத்தின் மத்தியில் வீழ்ந்து மிதக்கின்றன, பார். மங்கல ஸ்வபாவமுடையவளே! சக்ரவாகப் பறவைகள் ஸம்போகத்திற்காக ஒன்றுக்கொன்று இனியகுரலுடன் அழைத்து ஸம்போக காலத்திலுண்டாகும் அழகிய ஒலிகளை ஒலித்துக்கொண்டு ரதியின் பொருட்டு அந்தப் புஷ்பராசியின் மீதேறுகின்றன, அழகுடையவளே! இந்த சித்ரகூடம் மிகவும் ஏகாந்தமான போகஸ்தானமா யிருக்கையால் இதைப்பார்த்துக்கொண்டு இதில் வஸித்திருப்பது அயோத்யையில் வஸிப்பதைக்காட்டிலும் அதிக ஸுகமாக எனக்குத் தோற்றுகின்றது. இந்நதி காமத்தை மிகவும் விளைக்கின்றமையால் இதைப் பார்த்திருப்பது உன்னைப் பார்ப்பதைவிட அதிக ஸுகமா யிருக்கிறதென்று நான் நினைக்கிறேன் [1] தவமும் தமமும் சமமும் பொருந்தி அதனால் பாபங்களை யெல்லாம் போக்கின ஸித்தர்கள் நித்யமும் ஸ்நானஞ்செய்கையால் இதன் ஜலம் கலங்கி அவர்களது பாதம் படுவதால் புனிதமா யிருக்கின்றது. இதில் நீ என்னுடன் இழிந்து நீராடுவாயாக. மடந்தையர் மணியே! நீ உன் ஸகிகளுடன்கூடி க்ரீடிப்பதுபோல என்னுடன் இம்மந்தாகினியில் இழிந்து இதிலுள்ள செந்தாமரைகளும் வெண்தா

1 தவமாவது-சாஸ்த்ரங்களில் சொல்லிய உபவாஸாதிகளால் சரீரத்தைச் சோஷிக்கச் செய்தல். தமம்-வெளியிந்த்ரியங்களை அடக்கிக்கொண்டிருத்தல். சமம்-உள்ளிந்த்ரியமான மனத்தை அடக்கிக் கொண்டிருத்தல்.

மரைகளும் நீரில் முழுகி மறையுமாறு ஜலக்ரீடைசெய்வா யாக. மாதுசிரோமணியே! நீ இவ்வனத்திலுள்ள ஜந்துக்களைப் பட்டணத்து ஜனங்களைப்போலவும் இப்பர்வ தத்தை அயோத்யையைப்போலவும் இந்நதியை ஸரயூந தியைப்போலவும் ப்ரீதியுடன் பாவித்திருப்பாயாக. லக்ஷ் மணன் தர்மஸ்வபாவனாகி என் ஆஜ்ஞையைத் தவறாமல் நடத்துகின்றனன். நீயும் எனக்கு அனுகூலையாகி நடக் கின்றனை நீங்களிருவரும் எனக்கு மிகவும் களிப்பை விளைவிக்கின்றீர்கள். இப்படிப்பட்ட தம்பியையும் பார் யையையும் பெற்றிருப்பதைவிட ஸுகந்தருவது யாது? இங்ஙனம் மூன்று ஸந்திகளிலும் ஸ்நானஞ்செய்து தேன் வேர் பழம் இலைகளை ஆஹாரஞ்செய்து உன்னு டன் கூடி இப்பொழுது அயோத்யையையாவது ராஜ் யத்தையாவது நினைக்கமாட்டேன். இம்மந்தாகினி மரு க்ஸமூஹங்கள் நிரம்பப்பெற்று மிகவும் அழகாயிருக் கின்றது. மேலும், இதில் ஆஸ்ரம மஹிமையால் யானை களும் ஸிம்ஹங்களும் வானரங்களும் ஒன்றுக்கொன்று வைரத்தைவிட்டு ஜலங்குடிக்கையால் இது பாபத்தைப் போக்கவல்லதாயிருக்கின்றது பின்னும், இங்குள்ள வ்ரு க்ஷங்கள் நன்கு புஷ்பித்திருக்கையால் இது காமத்தை விளைக்கவற்று. இப்படிப்பட்ட இம் மந்தாகினியில் நீரா டியும் இளைப்புத் தீரந்து ஸுகப்படாதவன் எவனும் இருக்கமாட்டான்' என்றனன். ரகுவம்சத்தை வளரச் செய்யுந் தன்மையனாகிய ராமன் காதலியுடன் இங்ஙனம் அந்நதியைப்பற்றிப் பொருந்துமபடி பலவாறு மொழி ந்து கண்மைபோல கறுத்து விளங்கும் அழகான அச் சித்ரகூடத்தில் உலாவிக்கொண்டிருந்தனன். தொண் ணூற்றைந்தாவது ஸர்க்கம் முற்றிற்று.

ராமனும் ஸீதையும் மாம்ஸாஹாரஞ்செய்
கையில் வனத்திலுள்ள ம்ருகங்கள்
கலக்கமுற்றது கண்டு அதன் காரணந்
தெரிவதற்காக லக்ஷ்மணனை அனுப்ப,
அவன் வ்ருக்ஷத்தின்மேலேறிப் பரதன்
ஸைன்யத்துடன் வரக்கண்டு சங்கித்தல்

ராமன் அங்ஙனம் ஸீதைக்குச் சித்ரகூடபர்வதத்தில் விளங்கும் அம்மந்தாகினி நதியின் அதிசயத்தைக் காட்டினபிறகு அம்மலையின் தாழ்வரையில் உட்கார்ந்து மாம்ஸத்தை ஊட்டி அவளை மனக்களிப்புறச் செய்ய முயன்று வீற்றிருந்தனன் 'இது பரிசுத்தமானது, இது ரஸமுடையது, இது அக்னியில் நன்கு பக்வமாயிருக்கின்றது' என்று இனிய உரைகளை மொழிந்துகொண்டு தர்மஸ்வபாவனாகிய அந்த ராகவன் அவளுடன்கூடி இங்ஙனம் வீற்றிருந்தனன். அங்ஙனம் அம்மலைச்சாரலில் ராமன் உட்கார்ந்திருக்கையில் அருகில் வருகின்ற பரதனுடைய ஸேனைகளின் தூளும் சப்தமும் மேலெழுந்து ஆகாயமெங்கும் பரம்பிப் புலப்பட்டன. இச்சமயத்தில் அந்தப் பெரும் சப்தத்தைக் கேட்டுப் பயமுற்றுக் கலங்கி அந்தந்த இனங்களில் தலைமையுள்ள ம்ருகங்கள் தத்தம் இனங்களோடு மூலைக்குமூலை திரள் திரளாக ஓடின. அந்த ராமனும் ஸைன்யத்தாலுண்டான அந்தத் த்வனியைக் கேட்டனன், இனங்களில் தலைமையுள்ள ம்ருகங்களெல்லாம் அதற்குப் பயந்து நாற்புறமும் ஓடுவதையும் கண்டனன். ராமன் பயந்தோடுகின்ற அந்த ம்ருகங்களைப் பார்த்தும் அந்தப் பெருஞ் சப்தத்தைக் கேட்டும் தேஜஸ்வியாகிய ஸுமித்ராபுத்ரனான லக்ஷ்மணனைப் பார்த்து 'ஆ! லக்ஷ்மணா! இது என்ன? இதைக் காண்பாய். உன்னால் ஸுமித்ரை நல்ல பிள்ளையுடையவளாயினள். அப்படி ஸுமித்ரையின் வயிறு குளிரப் பிறந்த ஸத்புத்ரனே! பயங்கரமான மேககர்ஜனைபோல் கம்பீரமாய் இன்னது இனியதென்று

தோன்றாமல் பெரும் த்வனி ஒன்று செவிப்படுகின்றது. காட்டில் யானைக்கூட்டங்களோ, அல்லது பெருங்கானகத்திலுள்ள எருமைக் கடாக்களோ, அல்லது மற்றை ம்ருகங்களோ ஸிம்ஹங்களால் துரத்தப்பட்டுப் பயந்தோடுகின்றன. எவனேனும் ஓர் அரசனோ, அல்லது அரசனைப்போன்ற மற்றவனோ, எவனேனும் ஒருவன் அரண்யத்தில் வேட்டையாடுகின்றானோ? அல்லது எதாயினும் ஒரு கொடிய ஜந்து வனத்தில் திரிகின்றதோ? லக்ஷ்மணா! இதைக் கண்டறிய வேண்டும். லக்ஷ்மணா! பக்ஷிகளுக்குங்கூட இப்பர்வதம் ஸஞ்சரிக்க அரிதாயிருப்பது கீழ்ச்சொன்னவை யெல்லாவற்றிலுங் காரணம் எதுவோ, அதை உள்ளதுள்ளபடி சீக்ரம் தெரிந்து கொள்வாயாக' என்றனன். அந்த லக்ஷ்மணனும் அதைக் கேட்டு மிகுந்த த்வரையுடன் நன்கு புஷ்பித்திருக்கின்ற ஒரு ஸாலமரத்தின்மேலேறி நாற்றிசையும் பார்க்கத் தொடங்கிக் கீழ்த்திசையில் கண் வைத்தனன். உடனே வடதிசையை நோக்கிப் பார்க்கையில் ரதங்களும் குதிரைகளும் யானைகளும் நிறைந்து ஸந்நத்தர்களான காலாட்களும் அமைந்து வருகின்ற ஒரு மஹாஸேனையும் புலப்பட்டது. அஸ்வங்களும் கஜங்களும் சூழப்பெற்று த்வஜங்களால் அலங்கரிக்கப்பட்ட ரதங்கள் நிறைந்த ஒரு ஸேனை வருகின்றதென்று ராமனுக்குத் தெரிவித்து மீளவும் ராமனைப் பார்த்து 'இனி அக்னியை அணைப்பாயாக. ஸீதை குஹைக்குள் புகுவாளாக. வில்லெடுத்து நாணேற்றி வைப்பாயாக. பாணங்களையும் கவசங்களையும் எடுத்துக்கொள்வாயாக' என்று மொழிந்தனன். புருஷசிகாமணியாகிய ராமன் அவனைப் பார்த்து 'ஓ லக்ஷ்மணா! நன்றாகப் பார். இந்த ஸேனை யாருடையதாக உனக்குத் தோற்றுகின்றது' என்று வினவினன். இப்படி ராமன் கேட்கையில் லக்ஷ்மணன் கோபத்தினால்



1103 ராமனும ஸிதையும மாமஸாஹாரஞ செயகையில
வனததிலுளள மருகஙகள கலஙகமுறுவது கணடு
அதன காரணம தெரிவதறகாக லக்ஷமணன
வருக்ஷததின மேலேறிப பரதன ஸைன
யததுடன வரககண்டு சஙகிததல

அக்னிபோல் ஜ்வலித்து அந்த ஸேனையை எரிப்பவன்
போல் சுருசுருவென்று கண்ணுற்று, ராமனை நோக்கி
'கைகேயியின் பிள்ளை பரதன் தாயின் வரத்தின்படி
ராஜ்யாபிஷேகம் பெற்று அவ்வளவில் த்ருப்தி அடை
யாமல் ராஜ்யத்தையெல்லாம் நிஷ்கண்டகமாகப் பெற
விரும்பித் தாயாதிகளாகையால் அதற்குக் [1] கண்டகமா
கிய நம்மைக் கொல்ல எதிர்த்து வருகின்றனன் இது
வெளிச்சம் இதோ மிகப்பெரியதும் காந்தி விளங்கப்
பெற்றதுமாகிய வ்ருக்ஷம் த்வஜத்தில் புலப்படுகின்றது
உயர்ந்த அடிபாகத்தையுடைய மலயத்திருமத்தின்
த்வஜம் தேரின்மேல் ப்ரகாசிக்கின்றது (பருத்த அடி
பாகத்தையுடையதும் கிளைகள் நிறைந்ததுமாகிய இந்த
மலயத்திருமத்தின் த்வஜம் மஹாஸைன்யத்தில் தேரின்
மீது ப்ரகாசிக்கின்றது) இந்தக் குதிரைக்காரர்களும்வே
கமுள்ள குதிரைகளின் மீதேறி இஷ்டப்படி இவ்விடம்
வருகின்றனர். இந்த யானைப்பாகர்களும் யானைகளின்
மேலேறி மகிழ்ந்து விளங்குகின்றனர் வீரனே! ஆகை
யால் நாம் வில்லைப் பிடித்து மலையின்மேல் ஏறி நிற்
போம் அல்லது படைக்கலங்களைச் சித்தஞ்செய்து
கொண்டு இங்கேயாயினும் நிற்போம் [2] கோவிதாரத்
வஜமுடையவன் யுத்தத்தில் நம் கையில் அகப்படுவானோ?
பரதனைக் கண்ணுறுவேனோ? ராகவனே! இவனாலன்றோ
ஸீதையும் நீயும் நானும் இம்மஹாவ்யஸனத்தை அனுப
விக்கின்றனம் ராகவனே! எவன் நிமித்தமாக நீ அழி
வில்லாத ராஜ்யங் கைசோரப்பெற்றனையோ, அப்படிப்
பட்ட சத்ருவாகிய பரதன் இதோ வந்திருக்கின்றனன்
வீரனே! நான் இவனைக் கொன்றே தீருவேன் ராகவா!
பரதனைக் கொல்வதில் தோஷமொன்றும் எனக்குத்
தோற்றவில்லை. முதலில் அபகாரஞ் செய்தவனைக்

1. கண்டகம்—சத்ரு   2. கோவிதாரம் - மலயத்திருமம்.

கொல்வது அதர்மமென்று சாஸ்த்ரம் விதிக்கவில்லை யன்றோ? ராகவ! பரதன் நமக்கு முன்பு அபகாரஞ் செய்தவன் மனவூக்கந்தவறி அந்யாயஞ் செய்தானல்லன்; தர்மத்தைக் கைவிட்டே அந்யாயஞ் செய்தனன். இவனைக் கொன்ற பின்பு பூமியை முழுவதும் பாதுகாப்பாயாக. ராஜ்யத்தில் பேராசையுள்ள கைகேயி, இப்பொழுது யானையால் முறிக்கப்பட்ட வ்ருக்ஷம்போல் யுத்தத்தில் என்னால் அடிக்கப்பட்ட பிள்ளையை மிக்க மனவருத்தத்துடன் கண்ணுறுவாளாக. கைகேயியை மந்தரை முதலிய அவளைச் சேர்ந்தவர்களோடும் மற்றுமுள்ள அவளது பந்துக்களோடும் கொன்றுவிடுகின்றனன். இன்றையதினம் பூமி கைகேயியென்னும் மஹாபாபத்தினால் விடுபட்டுப் பரிசுத்தியைப் பெறுமாக. ராம! நீ மானத்தைக் காப்பாற்றுந் தன்மையன், இத்தனை காலமாக உள்ளே அடக்கிக்கொண்டிருந்த இந்தக் கோபத்தையும் அவமானத்தையும் இப்பொழுது பாணங்களின் வ்யாஜத்தால் உலர்ந்த புதர்களில் நெருப்பை யிடுவதுபோல் சத்ருஸைன்யங்களின்மீது விடுகின்றனன். இப்பொழுது கூரான பாணங்களால் பகைவரது சரீரங்களைப் பிளந்து இந்தச் சித்ரகூடத்தின் அடவிகளையெல்லாம் குருதியால் நனைத்துவிடுகின்றனன் எனது பாணங்களால் மார்பில் அடிபட்டு விழுந்த யானைகளையும் குதிரைகளையும் என்னால் அடியுண்ட காலாட்களையும் இங்குள்ள புலி முதலிய கொடிய மருகங்கள் இழுத்துக்கொண்டுபோமாக. நான் இது வரையில் பல யுத்தங்களில் எனது பாணங்களுக்கும் வில்லுக்கும் வேண்டிய சத்ரு சரீரங்களை ஆஹாரமாகக் கொடுத்து அவைகளின் கடனைத் தீர்த்தேயிருக்கின்றனன் இப்பொழுதும் மஹா யுத்தஞ் செய்து பரதனையும் அவனது ஸைன்யங்களையும் அடித்து பாணங்களின் கடனைத் தீர்க்கின்றனன். இதற்கு ஸந்தேஹம் இல்லை' என்று மொழிந்தனன்

தொண்ணூற்றாறாவது ஸர்க்கம் முற்றிற்று

{ ராமன் கோபித்துக்கொண்டிருக்கிற லக்ஷ்மணனை ஸமாதானப் படுத்துதல் }

பிறகு ராமனோவென்றால் அங்ஙனம் மிகவும் சினந்து பரபரப்புற்றிருக்கின்ற லக்ஷ்மணனை ஸமாதானப்படுத்தி, அவனை நோக்கி இவ்வசனத்தையும் மொழிந்தனன்:— 'லக்ஷ்மணா! பரதன் பெரிய வில்லாளி, மேலும், எல்லா முணர்ந்தவன். ஆகையால் அவன் மற்றொருவர் தூண்டு கோலின்றித் தானே வில்லும் கையுமாய் நம்மிடம் வரும்போது நமக்கு தனுஸ்ஸினாலாவது கத்தியாலாவது கேடயத்தினாலாவது காரியமென்? லக்ஷ்மணா! பிதாவிடத்தில் உம்மிஷ்டப்படி வனவாஸஞ் செய்கிறேனென்று ஸத்யமாக ப்ரதிஜ்ஞை செய்து, என்னிடம் வந்த பரதனைக் கொல்லுவேனாயின், 'அங்ஙனம் தந்தை பரதனுக்கு ராஜ்யங் கொடுக்கையில் ராமன் அவனைக் கொன்று ராஜ்யத்தை அபஹரித்தான்' என்று ஜனங்களால் நிந்திக்கப்படுவேனல்லவா? அப்படிப்பட்ட ராஜ்யத்தைக் கொண்டு நான் என்ன செய்யப்போகிறேன்? பந்துக்களாவது நண்பர்களாவது நாசமடைகையில் எந்த த்ரவ்யம் நேருமோ அதை விஷங் கலந்து செய்யப்பட்ட பக்ஷ்யங்களைப்போல் நான் எள்ளளவும் விரும்பமாட்டேன் லக்ஷ்மணா! தர்மத்தையும் ரத்னம் முதலிய அர்த்தத்தையும் காமத்தையும் பூமியையும் உங்களுக்காக நான் விரும்புகிறேனன்றி வேறில்லை உனக்கு இதில் நம்பிக்கை இல்லாத பக்ஷத்தில் அப்படி ப்ரதிஜ்ஞை செய்கிறேன். ராஜ்யம் பல அநர்த்தங்களுடையதாயினும், ஸஹோதரர்களுக்குப் பொருள் சேர்ப்பதற்காகவும் அவர்களுடைய ஸுகத்தின் பொருட்டும் அதை விரும்புகிறேனன்றி எனக்காக அன்று. இது விஷயத்தில் ஸத்யமாக ஆயுதத்தைப் பிடித்துச் சபதஞ் செய்கிறேன். நல்லியற்கையுடையவனே! கடல் சூழ்ந்த இம்மண்ணுலகம் முழுவதையும் பெறுவது எனக்கரிதன்று லக்ஷ்மணா! ஆயினும் அதர்மத்தினால் வருமாயின் இந்த்ர

பட்டத்தையும் வேண்டேன். சத்ருக்களது கர்வத்தைப் போக்கும் தன்மையனே! பரதனுக்கும் உனக்கும் சத்ருக்னனுக்கும் இல்லாத ஸுகம் எனக்கு எது உண்டாகுமோ அதை அக்னி பஸ்மஞ் செய்யுமாக. அது எப்படிப்பட்டதாயினும் நான் விரும்பமாட்டேன் எனக்கு ப்ராணன்களைக் காட்டிலும் ப்ரியனும் ப்ராதாக்களிடத்தில் மிகுந்த ப்ரீதியுடையவனுமாகிய பரதன் மாமாவின கத்தினின்றும் அயோத்யைக்கு வந்திருப்பான் வீரா! புருஷஸ்ரேஷ்டனே! அங்ஙனம் வந்து, நான் தந்தையின் ஆஜ்ஞையின்படி ஜடாவல்கலங்களைத் தரித்து உன்னோடும் ஸீதையோடுங்கூடி அரண்யம் வந்ததைக் கேட்டு ஜ்யேஷ்ட புத்ரனே ராஜ்யத்திற்குரியவனென்கிற குலதர்மத்தை நினைத்து என்னிடத்திலுள்ள ஸ்னேஹத்தால் மனம் பொறுமல் சோகத்தினால் புலன்கள் கலங்கப்பெற்று நம்மைப்பார்க்க வந்தானன்றி வேறில்லையென்றே எனக்குத் தோற்றுகின்றது. அச்செல்வக் குமாரன் மிகவுஞ் சினந்து தாயான கைகேயியைப் பருஷமான அப்ரியங்களைப் பேசித் தந்தையையும் ஸமாதானப்படுத்தி எனக்கு ராஜ்யங் கொடுப்பதற்காகவே இங்கு வருகின்றனன் இப்பரதன் இப்போது நம்மைப் பார்க்க விரும்புவது உசிதமாகவேயிருக்கின்றது இவன் மனத்திலுங்கூட நமக்கு அபகாரத்தை நினைக்கமாட்டான் இதற்கு முன்பு எப்போதாயினும் பரதன் உனக்கு அபகாரஞ் செய்திருக்கிறானா? அல்லது இப்படிப்பட்ட பாபத்தை விளைக்கும் வார்த்தையாவது மொழிந்ததுண்டா? ஏன் பரதனிடத்தில் இவ்வாறு சங்கைப்படுகின்றனை? நீ பரதனைப் பார்த்து எள்ளளவும் பருஷமாவது அப்ரியமாவது மொழியலாகாது. [1] அவனை அப்ரியமாகப் பேசினால் அது என்னைச் சொன்னதேயாகும். லக்ஷ்மணா! ஏதேனும் ஓர் ஆபத்து நேருமாயின் அதற்

---

1 தன்னைப் பற்றினார் விஷயத்தில் பண்ணுகிற அபசாரம் தன்னிடத்தில் பண்ணின அபசாரமேயாமென்று பகவான் அபிப்ராயப்படுவதாக இதனால் ஏற்படுகின்றது.

காக்கப் பிள்ளைகள் தமக்குப் பிராணன்போன்ற தந்தையையாவது, அண்ணன் தம்பிகள் தமக்குப் பிராண ஸதான மாகிய உடன்பிறந்தவர்களையாவது எப்படி ஹிம்ஸிக்கக்கூடும்? நீ ராஜ்யம் வேண்டுமென்னும் விருப்பத்தினால் பரதனை இங்ஙனஞ் சொல்வாயாயின், பரதன் வந்தவுடனே அவனைப் பார்த்து 'பரத! ராஜ்யத்தை லக்ஷ்மணனுக்குக் கொடுத்துவிடுவாய்' என்று சொல்லுகிறேன். லக்ஷ்மணா! நான் பரதனுடன் 'ராஜ்யத்தை இவனுக்குக் கொடு' என்று மனமின்றி வாய் மாத்திரத்தினால் மொழிவேனாயினும், அவன் நிஜமாக 'அப்படியே கொடுக்கிறேன்' என்றுரைப்பானன்றி மற்றொன்றும் உரையான்" என்றனன். தர்மஸ்வபாவனாகிய தமையனால் அங்ஙனம் மொழியப்பட்ட லக்ஷ்மணன் அந்த ராமனது ஹிதத்திலேயே மனவூக்கமுடையவனாகையால் அவனுக்கு என்ன விளையுமோ என்று பயந்து முன்பின் பாராமல் மொழியினும் மனத்தில் அப்படிப்பட்ட கெட்ட எண்ணமில்லாதவனாகையால் அங்ஙனஞ் சொன்னதற்கு மிகவும் வெட்கித்துத் தனது அவயவங்களில் தான் புகுந்தானோ வென்னும்படி அங்கங்களையெல்லாம் ஒடுக்கிக்கொண்டு தலைவணங்கப் பெற்றிருந்தனன். லக்ஷ்மணன் அவ்வார்த்தையைக் கேட்டு வெட்கித்து அவனைப் பார்த்து 'நம் தந்தை தசரதர் தாமே உன்னைப் பார்க்க வந்தாரென்று எனக்குத் தோற்றுகிறது' என்று மறுமொழி கூறினன். அங்ஙனம் லக்ஷ்மணன் மற்றொரு ப்ரஸ்தாவஞ் செய்கையில் தர்மஸ்வபாவனாகிய ராமனும் அவன் நாணமுற்றிருப்பது கண்டு அதைப் போக்குவதற்காக அதே ப்ரஸ்தாவத்தைப் பற்றி, 'மஹாபாஹு-வாகிய இந்தத் தசரதர் நம்மைப் பார்க்க இங்கு வந்தாரென்றே நானும் நினைக்கிறேன். அல்லது, அவர், நாம ஸுகத்திற்கே உரியவர்களென்றும் நமக்கு வனவாஸ கஷ்டமென்றும் சிந்தித்து நம்மை வீட்டிற்கு அழைத்

துக்கொண்டு போவாரென்று நினைக்கிறேன். இதுவே நிஜம். அல்லது ஸ்ரீமானாகிய நம் தந்தை தசரதர் மிகவும் ஸுகத்தையே அனுபவித்த இந்த ஸீதையையாவது அடவியினின்று வீட்டிற்கு அழைத்துக்கொண்டு போவார். வீரோத்தமா! நல்லகுலத்தில் பிறந்தவைகளும் மனத்துக்கினியவைகளும் வேகத்தில் வாயுவைப் போன்றவைகளும் ராஜாக்கள் ஏறத்தகுந்தவைகளுமான அச்சிறந்த குதிரைகள் இதோ ப்ரகாசிக்கின்றன. சிறந்த மதியுடையராகிய நம் தந்தையாரது பட்டத்து யானையும் பெரிய சரீரமுடையதும் மிக்க உயர்வுடையதுமாகிய சத்ருஞ்ஜயமென்னும் அம்மஹாகஜம் இதோ ஸேனாமுகத்தில் ஆடி அசங்கிக்கொண்டு வருகின்றது. மஹாபாஹோவே! உலகமெங்கும் புகழ்பெற்றதும் திவ்யமுமாகிய நம் தந்தையது வெண்கொற்றக்குடைமாத்ரம் புலப்படவில்லை. ஆகையால் இவ்விஷயத்தில் எனக்கு ஸந்தேஹமாயிருக்கின்றது. லக்ஷ்மணா! நீ மரத்தினுச்சியிலிருந்து கீழ் இழிந்து வருவாயாக. நான் சொன்னபடி செய்வாய்' என்று லக்ஷ்மணனுக்குச் சொல்லினன். யுத்தங்களில் வெற்றிபெறுந்தன்மையனாகிய அந்த லக்ஷ்மணன் பிறகு மரத்தினின்றும் கீழே இழிந்து கைகூப்பித் தமையனுக்குத் திடீரென்று என்ன பயம் நேருமோ வென்னுஞ் சங்கையால் அவனது பார்ச்வத்தில் வந்து நின்றனன். ராமாச்ரமத்திற்கு ஸேனையால் உபத்ரவம் கூடாதென்று பரதன் ஆஜ்ஞாபித்தமையால் அவனது ஸைன்யம் சித்ரகூடத்தின் நாற்புறத்திலும் மண்டலாகாரமாக வஸித்திருந்தது. யானைகளும் குதிரைகளும் தேர்களும் நிறைந்திருக்கும் அவ்விக்ஷ்வாகு வம்சத்தரசனாகிய பரதனது ஸைன்யமானது ஒன்றரை யோஜனை தூரம் அந்தப் பர்வதத்தின் தாழ்வரையைச் சுற்றிப் பரம்பி நின்றது. ஸைன்யங்களை இறக்கி ஆச்ரமங்களுக்குக் கெடுதி செய்யலாகாதென்னும் நீதி

யை அறிந்தவனும் ராஜாவினிடம் வணக்கமமைந்த
வேஷத்துடன் போகவேண்டுமென்னும் தர்மத்தை
முன்னிட்டுக் காவத்தைத் துறந்து விளங்குகின்றவனு
மாகிய பரதன் ராமனை அருள்புரியச் செய்யும்பொருட்டு
அழைத்துக்கொண்டுவந்த அச்சேனையானது சித்ரகூ
டத்தின் அருகில் இறங்கி மிகவும் ப்ரகாசித்தது. தொண்
ணூற்றேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

பரதன் சத்ருக்னனோடும் குஹாதிகளோடுங்
கூடப் பாதசாரியாய் ராமாஸ்ரமத்தைத் தே
டுதலும், அதற்கடையாளமான புகையைக்
கண்டபின் மற்றவரை நிறுத்தித்தான் குஹ
சத்ருக்னர்களோடு நடந்து செல்லுதலும்

பரமதார்மிகனாகிய ராமனிடம் நடந்துசெல்லும்
பாக்யம் தன் பாதங்களுக்கு நேருகையால் பாதமுடைய
வர்களில் சிறந்தவனும் ப்ரபுவுமாகிய பரதன் ஸேனையை
இறக்கித், தந்தையின் ஆஜ்ஞையை அனுஸரித்திருப்பவ
னாகிய ராமனிடம் பாதங்களால் நடந்துசெல்ல விரும்பி
னன். தான் உத்தேசித்தபடி அந்தந்த இடங்களில்
ஸைன்யம் இறங்கினவுடனே, பரதன் தாமஸஞ் செய்யா
மல் விநயம்பொருந்திய வேஷம்பூண்டு தம்பியாகிய சத்
ருக்னனை அழைத்து 'ஸௌம்யா! இப்போது இக்கா
லாள் கூட்டங்களோடும் ஒருவரோடொருவர் கலந்திருக்
கிற இவ்வேடர்களோடுங்கூடிச் சீக்ரமாக இவ்வனத்
தில் நாற்புறத்திலும் தேடவேண்டும். குஹன் பாணம்
வில் கத்திகளைத் தரித்த பந்துக்கள் பலருடன் கூடித்
தானே ககுத்ஸ்தகுலாலங்காரர்களாகிய ராமலக்ஷ்மணர்
களைத் தேடுவானாக. மந்த்ரிகளும் பட்டணத்து ஜனங்
களும் [1] குருக்களான ப்ராஹ்மணர்களும் சூழ்ந்து வரப்
பெற்று நானும் இவ்வனம் முழுவதும் பாதசாரியாய்த்

---

1 குருக்கள்-பெரியோர்கள்

திரிகினறனன ராமனையாவது மஹாபலனுகிய லக்ஷம ணனையாவது மஹாபாகயவதியாகிய ஸீதையையாவது பாாககும்வரையில எனககு துககசாநதி உணடாகாது. சநதரனபோல விளஙகுவதும தாமரையிதழபோனற கணகளுடையதும அழகியதுமாகிய ராமனது முகத தைப பாராதிருககுமவரையில எனககு துககசாநதி உண்டாகாது [1] வஜரதவஜாஙகுச கலசாரவிநதாதி ராஜ லக்ஷணஙகள பொருநதிய ராமனது பாதஙகளை சிரஸில தரிககாதிருககுமவரையில எனககு துககசாநதி உண டாகாது. ராஜயததிறகுரியனுகிய ராமன அபிஷேக ஜல ததில நனைநது தமபபன பாடடன பரமபரையாக வநத ராஜயததில நிலைபெருதவரையில எனககு துககசாநதி உணடாகாது அழுககறற சநதரனபோல விளஙகுவ தும தாமரையிதழபோனற கணகளுடையதும மிகுநத ஒளியுடையதுமான ராமனது முகததைப பாாககப பெறற லக்ஷமணனனறே [2] ஸிததாாததன. ஸமுததரம முடிவான பூமணடலம முழுமைககும பாததாவாகிய ராமனைப பினசெனறுபோகும மஹாபாகயமுடைய விதேஹராஜன திருமகளான ஸீதாதேவியனறே நலவி னையினள. குபேரன நநதனவனததில வஸிபபதுபோல ராமன இபபாவதததில வாஸஞ்செயகினறனன, ஆகை யால [3] இநதச சிதரகூடம ஹிமவதபாவதமபோனறதும சிறநத பாகயம பெறறதுமாயிருககினறது. மிகுநத ஒளி யுடன விளஙகுபவனும ஆயுதம பிடிததவாகளில சிறநத

---

1. வஜரம-வஜராயுதமபோனற ரேகை தவஜம-த்வஜமபோ னற ரேகை அஙகுசம-அஙகுசம்போனற ரேகை அஙகுசம மா வெட்டி கலசம-கலசமபோனற ரேகை. கலசம-குடம அரவிநதம- தாமரைமலாபோனற ரேகை இதைப பதமரேகையெனபர்

2 ஸித்தாாத்தன-பாயோஜனம கைகூடப் பெறறவன

3 'கிரிராஜோபமः' எனறமூலம கிரிராஜமெனறதறகு ஹிமவ தபா்வதமெனறு வியாகியானம செய்து, அலலது ஸ்ரீநிவாஸனுடைய ஸாநநிதயம பெறற வேஙகடாசலத்தைசசொலலுகிறதெனறு கோவிந் தராஜர் வியாக்கியானித்திருக்கிறுர்.

வனுமாகிய ராமன் வாஸஞ் செய்கையால், கருமருக்கன்கள் நிறைந்ததும் புக்ககூடாததுமான இவ்வரண்யமும் நலவினையுற்றது' என்றனன். மஹாதேஜஸ்வியும் மஹாபாஹுவும் புருஷசிகாமணியுமாகிய பரதன் இங்ஙனம் சத்ருக்னனுக்குச் சொல்லி உடனே பாதசாரியாகவே அம்மஹாரண்யத்தில் பரவேசித்தனன். பரதன் பேச வல்லவனாகையால் ராமனிடம் விண்ணப்பஞ்செய்ய வேண்டியதைச் சிந்தித்துக்கொண்டே, அம்மலையின் தாழ்வரைகளில் மூளைத்துப் புஷ்பித்த நுனிகளையுடைய வருக்ஷங்களின் நடுவில் போயினன் அவன் அங்ஙனஞ் சென்று அந்தச் சித்ரகூட பர்வதத்தில் புஷ்பித்திருக்கிற ஒரு வருக்ஷத்தின் கீழ்ச் சேர்ந்து அங்கு ராமாஸ்ரமத்தினின்றும் புகை யெழும்பிச் செல்வதைக் கண்டனன் பரதன் அதைக் கண்டவுடன் ஸந்தோஷத்தினால் ஒளியுடன் பரகாசித்து ராமன் அங்கிருக்கிறனென்றறிந்து ஆநந்தத்தின் மிகுதியால் மெய்ம்மறந்தனன். அப்பொழுது பரதன் ஸமுத்ரத்தின் கரை சேர்ந்தார் போல் புலப்பட்டனன். அம்மஹானுபாவன் சித்ரகூடத்தில் ஸத்புருஷர்கள் நிறைந்த ராமாஸ்ரமத்தைக் கண்டு ராமனைத் தேடும்பொருட்டுத் தன்னுடன் வந்த ஸேனாஜனங்களையும் நிறுத்திக் குஹனுடன் வேகமாகப் போயினன் தொண்ணூற்றெட்டாவது ஸர்க்கம் முற்

——●●——◆—— { பரதன் ஸேனை இறங்கின இடத்திலுள்ள தாய்மார்களை அழைத்துவர வஸிஷ்டரை அனுப்பித் தானும் குஹனும் மந்திரிகளுடன் சென்று ராமாஸ்ரமஞ் சேருதல்

அங்ஙனம் ஸைன்யத்தை நிறுத்தினபின்பு தான் அங்கு க்ஷணமிருந்து பரதன் ராமனைப் பார்க்கவேண்டு

மெனனும குதூஹலததுடன சதருகனனுககு ராமா
ஸ்ரமததினது அடையாளஙகளைக காடடிககொணடே
பாாககபபோயினன. தமையனிடததில மிகுநத பரீதி
யுடையவனுகிய பரதன வஸிஷடமஹாஷியைப பாாதது
'நீா எமது தாயமாாகளை வேகமாக அழைததுககொணடு
வருவீா' எனறு சொலலி அனுபபித தான முனபு சீகர
மாகச் சென றனன. ஸுமநதரனும சதருகனனுககு அரு
கில பின சென றனன. ராமனைப பாாககவேணடுமென
னும விருபபம பரதனுககுபபோல சதருகனனுககும ஸு
மநதரனுககும உணடாயிருநதது. ஸ்ரீமானுகிய பரதன
கொஞசதூரம போனபினபு தாபஸாகளின ஆஸ்ரமம
போல தீாததுக கடடபபடடதும அகனிஹோதரகரு
ஹமுமாகிய பாணசாலையையும, அதறகு முனனிலையில
பாாகக வநதவாகளோடு ஸுகமாக உடகாரும பொருடடு
ஏறபடுததபபடட பாணசாலையையும கணடனன மற
றும, அவன அநதப பாணசாலைககு முனபு ராததிரியில
வெளிசசததின பொருடடு எரிபபதறகாக வெடடிப போ
கடடிருககிற கடடைகளையும, பூஜையின பொருடடு ஸித
தபபடுததின புஷபஙகளையும, ராமனும லக்ஷமணனும
நீராடுவதறகாக மநதாகினிககுப போயவரும வழியில
அடையாளமாக இடையிடையே வருக்ஷஙகளில தாப
பஙகளாலும மரவுரிகளாலும செயயபபடட குறிகளை
யும, குளிா காயவதனபொருடடுக குவைகுவையாக ாட
டபபடட ஆடுமாடுகளின எருமுடடைகளையும கணட
னன. அபபொழுது மஹாபாஹுவான பரதன மிகுநத
ஒளியுடன அவைகளையெலலாம பாாதது ஸநதோஷம
டைநது சதருகனனையும மறறுமுளள மநதிரிகளையும
பாாதது 'பரதவாஜாசொனன இடததிறகுவநது சோந
தோமெனறு நினைககிறேன மநதாகினீநதியும அருகிலி
ருபபதாகவே தோறறுகினறது. இஙகு வருக்ஷஙகளின

றுணிகளில் மரவுரிகள் கட்டப்பட்டிருக்கின்றன. இது லக்ஷ்மணனா! ஸாயங்காலம் முதலிய அகாலங்களில் காய் கிழங்கு ஜலம் முதலியன கொண்டு வரப் போய் வரும் போது வழி நன்கு தெரிவதற்காக அடையாளஞ் செய்யப்பட்டிருக்கின்றது. ஆகையால் இவ்வழியாகவே போவோம். இம்மலையோரத்தில் மிகுந்த வேகமுள்ள யானைகள் தமது நீண்ட தந்தங்களுடன் ஒன்றுக்கொன்று பகைகொண்டு கர்ஜித்துப் போர்செய்ததாகத் தெரிகின்றது. [1] ஆரண்யங்களில் ரிஷிகள் காலை மாலைகளில் ஹோமஞ்செய்வதற்காக எப்போதும் காப்பாற்றி வருகிற அக்னியினின்று புகை கனமாகக் கிளம்புகின்றது. இவ்வாஶ்ரமத்தில் மந்த்ரோபதேசம் முதலிய மேலான ஸம்ஸ்காரங்களைச் செய்பவனும் மஹாருஷிகளைப்போல விளங்குகின்றவனும் புருஷஶ்ரேஷ்டனும் பூஜ்யனுமாகிய

---

1 'யமேவாதாதுமிச்சந்தி தாபஸாஸ் ஸததம் வநே| தஸ்யாஸௌ த்ருஶ்யதே தூமஸ் ஸங்குல: க்ருஷ்ணவர்த்மந:' இங்கு தூமத்துக்கு 'ஸங்குல:' என்னும் இவ்விசேஷணம் புகை ஓயாமல் கனமாய்க் கிளம்புவதைக் காட்டும். இதனால் இவ்வக்னி பசனாக்னியிலும் ஹோமாக்னியிலும் வேறுபட்டு அணையாதிருக்கும்படியான கார்ஹபத்யாக்னியென்று தெரிகின்றது. பசனத்திற்கு வேண்டுவது ஜ்வாலைகளும் ஹோமத்திற்கு வேண்டுவது தணல்களுமாகையால் அவைகளில் புகைக்கு ப்ரஸக்தியில்லை. இதனால் 'ராமன் அக்ன்யாதானஞ் செய்யாமையால் (அக்ன்யாதானம் - அக்னியைச் சுத்தஞ் செய்து அணையவொட்டாமல் காத்துக்கொள்ளல்) இங்குச் சொன்ன அக்னி ஶ்ரௌதாக்னி அன்று அப்பொழுது ஏற்படுத்திக்கொண்ட ஸ்மார்த்தாக்னியே ராமனுக்கு ஶ்ரௌதாக்னி உள்ளதாயின், அப்போது 'ராம: கமலபத்ராக்ஷ: புரோயஸ்யாப்ரவீத் | அக்னிஹோத்ரம் வ்ரஜத்வக்ரே ஸர்ப்பிர்ஜ்வலித பாவகம்' என்று சரயூதரையில் அக்னிஹோத்ரத்தை முன்னிட்டதாகச் சொல்லுகையால் வனம்போகும் போதும் அங்ஙனம் சொல்ல வேண்டிவரும், அதில்லை பின்சென்ற

ராமனை மீண்டும் ஸந்தோஷத்துடன் பார்க்கப்போகி
றேன்' என்றனன். பிறகு அப்பரதன் ஒரு முஹூர்த்த

---

பட்டணத்து வந்தார்களும் அக்னியோடு வந்ததாகவே சொல்லப்பட்டது ராமனுக்கும் அதுள்ளதாயின் அங்ஙனமே சொல்ல நேரும் ஆகையால் ஸ்ரௌதாக்னி இல்லையென்றே தெரிய வருகின்றது மேலும், 'தீக்ஷிதம் வ்ரதஸம்பந்நம் வராஜிநயுதம் ஶுசிம்। குரங்கஶ்ருங்கபாணிஞ்ச பஶ்யந்தீ த்வாம் பஜாம்யஹம்' என்று ஸீதை யாகதீக்ஷையை ஆசைப்பட்டதாகச் சொல்லுகையால் ராஜ்யாபிஷேகத்திற்கு முன்பு அவன் யாகஞ்செய்ததில்லையென்று தெரிகிறது ஆகையால் இவ்வக்னி க்ருஹ்யாக்னியே அதைக் கொண்டு வந்ததாகவும் முன்பு சொல்லவில்லையே யென்னவேண்டாம் அதை ஆத்மஸமாரோபணஞ்செய்து எடுத்துக்கொண்டு வரலாமல்லவா? ஆயினும் காலை மாலைகளில் ஹோமஞ்செய்யவேண்டுமல்லவா? அது சொல்லவில்லையே மேலும், தமஸாதீரத்திலும் கங்கைக்கரையிலும் மரத்தடியிலும் யமுனைக்கரையிலும் ஸந்த்யாவந்தனம் மாத்ரமே சொல்லப்பட்டது பின்னும் இந்த ஸ்லோகத்திலுள்ள தாபஸசப்தத்தினாலும் வனசப்தத்தினாலும் காட்டில் ரிஷிகள் குளிர் காய்வதற்காகவும் இருட்டில் வெளிச்சத்திற்காகவும் காய்கிழங்குகள் பசனஞ்செய்வதற்காகவும் விதத்தைச் செய்து வைத்துக் கொள்ளுகிற அக்னியே இது வென்று சொல்லக் கூடும் அப்போது 'ஆயாதம்' என்றால் விதிப்படுத்துவதற்கென்று பொருள். ஆகையால் இவ்வக்னி பசனாதிகளுக்காக ஏற்படுத்தப்பட்ட அக்னியென்றி ஆத்மஸமாரோபணஞ்செய்த ஸமார்த்தாக்னியும் அன்று' என்னலாகாது ஏனென்றால்—'ப்ராகுதக்ப்ரவணாம் வேதிம் விஶாலாம் தீப்தபாவகாம்' என்று மேல் சொல்லப்படுகின்றது ஸம்ஸ்காரமில்லாத அக்னிக்கு வேதிஸம்பந்தம் ப்ரஸக்தமன்று 'ப்ராகுதக்ப்ரவணாம்' என்றித்யாதி லக்ஷணங்கள் வேதிக்குச் சொல்லுகையால் வேதியிலுள்ள அக்னியும் ஸம்ஸ்க்ருதமானதென்றே தெரியவருகின்றது இப்படி ஸம்ஸ்க்ருதமான அக்னியை க்ருஹ்யாக்னியென்பது விருத்தம் லௌகிகாக்னியென்பது சிறிதும் சேராது ஆனால் காலைமாலைகளில் ஹோமஞ்செய்ததாக ஏன் சொல்லவில்லையென்றால். கேட்பாரில்லாமையால் மனம்போனபடி செல்லும் ஸ்வபாவரான மஹர்ஷி இச்சையும் பலனுமில்லாவிடின் ஒன்றைப் பலகாலுஞ்

காமம் அந்தச் சித்ரகூடபர்வதத்தில் நடந்து மந்தா கினிக்குச் சென்று தன்னுடன் வந்த ஜனத்தைப் பார்த்து 'புருஷஸ்ரேஷ்டனும் ஜநபதியுமாகிய ராமன் ஜன ஸஞ்சாரமில்லாத காட்டுக்குச் சென்று வெறுந்தரையில் வீராஸனத்தில் உட்கார்ந்திருக்கின்றனன் இனி என் ஜன்மமும் என் பிழைப்பும் சீ! ஏதுக்கு? ராமன் ஸமஸ்த லோகங்களுக்கும் நாதன், மிகுந்த ஒளியுடையவன், இப்படிப்பட்டவன், கைகேயி என்கிற காக்கைச் செய்த காரியத்தினால் ராஜ்யத்தைத் துறந்து பெரும் வ்யஸனத்திலாழ்ந்து

---

சொல்லவேண்டிய அவச்யமில்லையன்றோ? இதை பேலில் ஸுதீக்ஷ்ணாச்ரமத்தில் 'அயம்தேச: ஸ்ரீமாந் ஸுராம்ச்சைவ வைதேஹீ ராம லக்ஷ்மணௌ। காலயம் விமலஹீயாசய தபஸ்விஜரணோ வசே। உதயந்தம் திநகரம் த்ருஷ்ட்வா விகதகல்மஷா:। ஸுதீக்ஷ்ண மஹிமமயை ஸமிதம் வசநமப்ருவந்' என்று சொல்லவும் போகிறார் இங்கு ஹோமஞ் சொல்லவில்லையே யென்னவேண்டாம் உதயத்திற்கு முன்பு அக்னிகார்யஞ் செய்ததாகச் சொல்லுகையாலும் 'அக்நிம்' என்ற ஒருமையாலும் ஔபாஸனம் நன்கு சொல்லப்பட்டதென்றுணர்க இங்ஙனமே எல்லாவிடத்திலும் நடந்ததாக ஊஹிக்கவேண்டும் பின்னும் இங்கு அக்னிகார்யத்தில் ராமன் ப்ரதான கர்த்தாவாகவும், ஸீதை கூட இருந்து நெருப்பு விசிறுவது முதலியன செய்வதாலும், லக்ஷ்மணன் ஸமித்து முதலியவற்றைக் கொண்டுவருவதனாலும் அன்வயித்ததாகத் தெரியவருகின்றது 'தபஸ்விஜரணோ வசே' என்பதால் ரிஷிகள் நெருங்கி இடமில்லாத ஸங்கட ப்ரதேசங்களிலும் தவறாமல் அனுஷ்டிக்கையால் ச்ரத்தையின் மிகுதி தோற்றுகின்றது ஆகப் பதினான்கு ஸம்வத்ஸரங்களில் ராவணன் ஸீதையைக்கொண்டு போகுமளவும் சித்ரகூடம் முதலாகப் பஞ்சவடி யீறாகவுள்ள ப்ரதேசங்களில் எங்கு மாஸக்கணக்கிலும் ஸம்வத்ஸரக் கணக்கிலும் வெகுகாலம் வஸித்திருந்தாரோ அவ்விடங்களில் வெளியில் ஸமாரத்தாக்னியை நியமமாகத் தரித்திருத்தலும் மற்றை யிடங்களில் ஆத்மாவிலோ அல்லது ஸமித்திலோ ஆரோபணஞ் செய்து ஹோமகாலங்களில் அவரோபணஞ் செய்து காலைமாலைகளில் ஹோமஞ் செய்தலுந் தெரிய வருகின்றது

ஸமஸ்த போகங்களையுமிழந்து அரண்யத்திலிருக்கின்றனே! இங்ஙனம் பலவிதமாகவே லோகங்களால் அபவாதப்படுகின்ற ராமனை அருள்புரியச் செய்யும் பொருட்டு அவன் பாதங்களில் விழப்போகிறேன், ஸீதையின் பாதாரவிந்தங்களிலும் விழப்போகிறேன்; அவ்விருவரும் அருள்புரியாராயின் லக்ஷ்மணனது பாதங்களிலும் விழப்போகிறேன்' என்று இங்ஙனம் புலம்பிக் கொண்டே சென்று தசரதகுமாரனாகிய பரதன் அவ்வனத்தில் மிக விசாலமுற்றதும் பரிசுத்தமும் அழகுள்ளதுமாகிய ராமனது பர்ணசாலையைக் கண்டனன். அது ஸாலம் பனை அஸ்வகர்ணம் முதலிய மரங்களின் தழைகளால் நிறைக்கப்பட்டதும் விசாலமுமாகி யாகவேதிகைபோல் மெத்தென்ற தர்ப்பங்கள் பரப்பப்பட்டதும் இந்திர தநுஸ்ஸுக்கள் போன்று மிகச் சிறந்த யுத்தகார்யங்களை ஸாதிப்பனவாகிப் பொன்பிடிகளிடப்பெற்று மிகுந்த வலியுற்றுப் பகைவரைப் பீடிக்கவல்ல பல தநுஸ்ஸுக்கள் திகழப் பெற்றதும், அம்பறாத்தூணிகளில் ஸூர்ய கிரணங்கள்போல் தகதகவென்று மின்னும் முகமுடைய பயங்கரமான பாணங்கள் நிறைந்து ஸர்ப்பங்கள் சூழ்ந்த போகவதியென்னும் ஸர்ப்பநகரம் போல் விளங்குவதும், ஸ்வர்ணத்தால் செய்யப்பட்ட உறையுடைய கத்திகளாலும் அழகுக்காக இடையிடையில் பொற்புள்ளிகள் நிருமிக்கப்பெற்ற விசித்ரமான கேடயங்களாலும் உடும்புத் தோலால் செய்யப்படுத் தங்கத்தால் அலங்கரிக்கப்பட்டு விசித்ரமாகி ஓரிடத்தில் வைக்கப்பட்டிருக்கிற கை விரல்களின் கவசங்களாலும் ப்ரகாசிப்பதும் இந்த்ர மருத்கணங்களுக்கு ஸிம்ஹத்தின் குஹைபோல் சத்ருக்களுக்கு ப்ரவேசிக்க முடியாததுமாயிருந்தது. பரதன் அந்த ராமனது பர்ணசாலையில் விசாலமுற்றதும் அக்னி எரியப்பெற்றதும் பரிசுத்தமுமாகிய அக்னிவேதிகையைக் கண்டனன். அது வடகிழக்கு பாகத்தில் முறையே



1117. பரதசதருகனர்கள ராமனுடைய பா
வநது ஸீதா ராமலக்ஷமணாகளைக கண்டு நமஸகரிததல.

தாழ்ந்திருந்தது; பர்ணசாலையில் ஜடாமண்டலந் தரித்து அக்னிபோல் நாற்புறமும் துலங்கும்படி ஜ்வலித்துக்கொண்டு உட்கார்ந்திருக்கின்ற ராமனைப் பரதன் ஜடைகள் தரித்திருப்பதைப்பற்றி ராமனோ அன்றோ என்று ஒருமுஹூர்த்தகாலம் உற்றுப்பார்த்துப் பின்பு தனது அண்ணனே யிவனென்று தெரிந்துகொண்டனன். சிங்கத்தினது தோள்களை நிகர்த்த தோள்களும் நீண்ட புஜதண்டங்களும் செந்தாமரைமலர்போன்ற கண்களும் அமைந்து மஹாசக்ரவர்த்தி லக்ஷணங்கள் பொருந்திக் கடல்சூழ்ந்த இவ்வுலக மனைத்திற்கும் நாதனாயிருந்தும் தர்மாசரணத்தின்பொருட்டு க்ருஷ்ணாஜினத்தை உத்தரீயமாகப் போட்டுக்கொண்டு நார்த்துணியையும் மரவுரியையும் அரையில் உடுத்துத் தபோவிசேஷத்தினால் ஜ்வலிக்கின்ற அக்னிபோல் நாற்புறத்திலும் பேரொளியுடன் ப்ரகாசித்துக்கொண்டு தர்ப்பம் பரப்பின தரையின்மேல் ஸீதையோடும் லக்ஷ்மணனோடுங்கூட ஸாக்ஷாத்ப்ரஹ்மதேவன்போல் உட்கார்ந்திருக்கின்ற ஸ்ரீராமனைப் பரதன் கண்டனன். தர்மஸ்வபாவனும் ஒளி விளங்கப் பெற்றவனுமாகிய கைகேயியின் பிள்ளை பரதன் அங்ஙனமிருக்கின்ற ராமனைக் கண்டு துக்கமும் சோகமும் மேலெழப்பெற்று அருகில் வந்தனன். அவன் ராமனைப் பார்த்தவுடனே மிக்க மனவருத்தமுற்றுக் கண்டத்தில் கண்ணீர்வந்து தடுக்கையால் பேச்சுக்கள் இன்னவையென்று பிரியாமல் தழுதழுக்கவும் பெற்று மனவருத்தம் பொறுக்கமுடியாமல் புலம்பிப் பிறகு தைர்யத்தை அவலம்பித்து மேல்வருமாறு கூறினன்—'எவன் ஸபையில் மந்த்ரிகள் முதலிய ஸபிகர்களால் சூழ்ந்திருந்தவனோ, அப்படிப்பட்ட இந்த எனது ஐயன் இப்போது ஆரண்ய ம்ருகங்களால் சூழப்பட்டிருக்கின்றனன். எந்த மஹானுபாவன் பலவாயிரம் விலையுள்ள மேலான வஸ்த்ரங்களை உடுத்திருந்தனனோ, அப்படிப்பட்ட இவன் இப்பொழுது தர்மத்தை ஆசரிக்க முயன்று க்ருஷ்ணாஜினங்களை உடுத்

திருக்கின்றனன். எவன் முன்பு விசித்ரமான பலவகைப் புஷ்பங்களைச் சிரஸில் முடித்துக்கொண்டிருந்தனனோ, அப்படிப்பட்ட இவன் இப்பொழுது சடைமுடியை எப்படி வஹிக்கலாயினன்? அனேக யாகங்களை விதிமுறைப்படி நடத்தித் தர்மத்தை ஸம்பாதிக்கத் தகுந்த ராமன் இப்போது வானப்ரஸ்தரைப்போல் சரீரஶ்ரமப்பட்டு ஸம்பாதிக்கவேண்டிய தர்மத்தைத் தேடுகின்றனன். எவனது சரீரம் மிக்கச்சிறந்த சந்தனத்தினால் முன்பு பூசப்பட்டிருந்ததோ, அப்படிப்பட்ட இம்மஹானுபாவனது சரீரம் இப்பொழுது புழுதிபடிந்து மலினமாயிருக்கின்றதே! ஸுகத்திற்கே தகுந்த ராமன் என்னிமித்தமாக இப்படிப்பட்ட மஹா துக்கத்தை அனுபவிக்கின்றனன். இப்படி கொடியனாகிய என்னுடைய உலக நிந்தைக்கிடமான பிழைப்பு சீ! ஏதுக்கு?" என்று புலம்பினன். பரதன் தீனனாகித் தாமரைமலர்போன்ற முகம் வியர்த்து வாட்டப்பெற்று இங்ஙனம் புலம்பிக்கொண்டே ராமனது பாதங்களில் விழச்சென்று கண்ணீர் மறைக்கையால் ஒன்றும் தோற்றாமல் பாதங்களில் விழப்பெறாமலே கத்றிக்கொண்டு தரையில் வீழ்ந்தனன். மஹாபலனாகிய அந்த ராஜகுமாரன் பரதன் துக்கத்தினால் பரிதபித்து 'எம்மையனே!' என்று மன இரக்கத்திற்கிடமாயிருக்குமாறு ஒருதரம் முறைத்துப் பிறகு ஒன்றும் கூறாதிருந்தனன். அப்பொழுது பரதன் பெரும்புகழனாகிய ராமனைப் பார்த்து 'ஐயனே!' என்று ஒருதரம் உரக்கக் கூவிப்பிறகு கண்டத்தில் கண்ணீர் நிரம்பப் பெற்று ஒன்றுஞ் சொல்ல முடியாமல் திகைத்து நின்றனன். சத்ருக்னனும் கண்ணீர் பெருக்கிக்கொண்டே ராமனது பாதாரவிந்தங்களில் வந்தனஞ் செய்தனன். அந்த ராகவனும், அப்பரத சத்ருக்னர்களிருவரையும் வாரி அணைத்துக் கண்ணீர்களைப் பெருக்கினன் பிறகு அவ்வரண்யத்தில் அந்த ராமலக்ஷ்மணர்களிருவரும் சந்த்ர ஸூர்யர்கள் ப்ருஹஸ

பதியோடும் சுக்ரனோடும் சேருவதுபோல ஸுமந்த்ர
னோடும் குஹனோடும் சேர்ந்தனர். கூட்டத்தில் தலைமை
யுள்ள யானைகள்போல விளங்குகிற அந்த ராஜகுமாரர்
கள் அம்மஹாரண்யத்தில் ஒருவர்க்கொருவர் கலந்தி
ருப்பதைக்கண்டு அரண்யவாஸிகளான அந்த ரிஷிக
ளனைவரும் மனக்களிப்பின்றிக் கண்ணீர் பெருக்கினர்.
தொண்ணூற்றொன்பதாவது ஸர்க்கம் முற்றிற்று.

{ ராமன் பரதனைக் குசலப்ரச்னம் பண்ணு
தலும், அதன் மூலமாக ராமன் ராஜநீதியை
உபதே }

ஜடைகளைத் தரித்து மரவுரி உடுத்துக் கைகூப்பித் த
ரையில் வீழ்ந்து ப்ரளயகாலத்து ஸூர்யன்போலக் கண்
கொண்டு காணமுடியாதிருக்கின்ற பரதனை ராமன் கண்
டனன். பிறகு ராமன், முகவொளி மழுங்கி இளைத்திருப்
பதுபற்றிப் பரதனைக் கண்டவுடனே தெரிந்துகொள்ள
முடியாமல் சிறிது நேரம் கழித்துக் கஷ்டப்பட்டறிந்து
கைகளால் வாரி யெடுத்துக்கொண்டனன். ரகுகுலாலங்
காரனாகிய அந்த ராமன் அப்பரதனை உச்சி மோந்து
கட்டியணைத்து மடியில் உட்காரவைத்து மனவூக்கத்
துடன் இங்ஙனம் வினவினன் — 'என்னப்பனே! நீ
அரண்யத்திற்கு வந்தனையே! உன் தந்தை எங்குப் போ
யினர்? அவர் பிழைத்திருக்கையில் நீ அரண்யம் வரக்
கூடாதல்லவா? நெடுநாள் கழித்து இவ்வரண்யத்திற்கு
வெகு தூரத்திலுள்ள கேகய நகரத்தினின்றும் பரதன்
வரக்கண்டனன், ஸந்தோஷம் தேஹம் மிகவும் ஒளி
மாறியிருக்கையால் அடையாளந்தெரியாதிருக்கின்றது.
என்னப்பனே! நீ ஏன் வனத்திற்கு வந்தனை? அப்பா!
மன்னவர் பிழைத்திருப்பாராயின் நீ இவ்விடம் வரப்

பொறுக்கமாட்டாரே; நீ இவ்விடம் வந்ததனால் ஸந்தே
ஹமாயிருக்கின்றது இப்பொழுது அவர் பிழைத்திருக்
கிறாரல்லவா? ராஜா துக்கத்தினால் வருந்தித் திடீ
ரென்று லோகாந்தரஞ் செல்லாதிருக்கின்றாரா? அழகிய
ஸ்வபாவமுடையவனே! பாலனாகிய உனக்குச் சாச்வத
மான ராஜ்யம் கைசோராதிருக்கின்றதா! (நீ பாலனாகை
யால் வல்லமையின்றிச் சாச்வதமான ராஜ்யத்தை இழக்
காதிருக்கின்றாயா?) உண்மையான பராக்ரமமுடைய
தந்தைக்குச் சுச்ரூஷை செய்கின்றாயா? தசரதமஹா
ராஜர் சொன்ன வார்த்தை தவறாதவர்; பல ராஜஸூயங்
களும் பல அச்வமேதங்களுஞ் செய்தவர், தர்மத்தில்
திடமான மனவூக்கமுடையவர், அப்படிப்பட்ட அம்
மன்னவர் க்ஷேமமா? அப்பா! ப்ராஹ்மணர்களில் தலை
வரும் எல்லாமுணர்ந்தவரும் தர்மத்தில் நிலைநின்றவரும்
மிகுந்த ப்ரஹ்மதேஜஸ்ஸுடையவரும் இக்ஷ்வாகு வம்
சத்தரசர்களுக்குக் குலகுருவுமாகிய வஸிஷ்டமாமுனி
யை முன்போல் முறை தவறாமல் பூஜித்து வருகின்
றாயா? அப்பனே! முன்பு துக்கித்திருந்த கௌஸல்யை
க்ஷேமமா? நற்பிள்ளையைப் பெற்ற ஸுமித்ரையும் ஸுக
மா? பூஜ்யையான கைகேயி தேவியும் ராஜ்யம் பெற்று
ஸந்தோஷமுற்றிருக்கிறாளல்லவா? வணக்கமுடையவ
ரும் நற்குலத்தில் பிறந்தவரும் பலபேரிடத்தில் பல
விசேஷார்த்தங்களைக் கேட்டவரும் அஸூயையற்ற
வரும் வஸிஷ்டர் உபதேசித்த அர்த்தங்களை நன்கு
ணர்ந்தவருமாகிய உன் புரோஹிதரை (அல்லது ஸுயஜ்
ஞரை) நன்கு பூஜித்து வருகின்றாயா? சாஸ்த்ரங்களை
யுணர்ந்தவரும் மிகுந்த மதியமைந்தவரும் கபடமறி
யாதவரும் அக்னிஹோத்ர கார்யங்களில் ஏற்பட்டவரு
மாகிய உன் புரோஹிதர் அந்தந்த காலங்களில் நடத்
தின ஹோமத்தையும் நடத்தவேண்டிய ஹோமத்தை

எபபோதும உனக்குத தெரிவிககிறாரா? அபபா! நீ
தேவதைகளையும தாய தநதையரகளையும ஆசாரயரகளை
யும தநதையைபபோனற பநதுககளையும மூபபினரகளை
யும பணடிதரகளையும பராஹமணரகளையும அவரவரக
குரியபடி நடநது பூஜிதது வருகிறாயலலவா? அபபா!
மநதரமிலலாத உயரநத பாணஙகளும மநதரததுடன
கூடிய திவயாஸதரஙகளும நீதிசாஸதரததில வலலமை
யும அமைநத ஸுதநவரெனனும உபாதயாயரையும
வெகுமானிககிறாயா? உனககு நிகரானவரகளும சூரர
களும நூலகளை யுணரநதவரகளும புலனகளை வெனற
வரகளும நறகுலததில பிறநதவரகளும முகததைபபாரத
தவுடனே மனககருததை யறியுநதிறமுடையவரகளு
மான புருஷரகளை மநதரிகளாக வைததுககொணடிருக
கிறாயா? ரகுகுலகுமாரனே! நீதிசாஸதரததில வலலவர
களும ஆலோசிதத விஷயததை வெளிவிடாமல மறைக
குநதனமையுடையவரகளுமான மநதரிகளுடன ஏகாந
ததில செயயபபடடதும நனகு மறைககபபடடதுமான
ஆலோசனையே அரசரகளுககு வெறறியைக கொடுபப
தலலவா? நிதரைககுடபடாதிருககிறாயா? தககுநத
காலததில விழிததுககொளகிறாயா? மேலும், அரதத
ராதரிகளில ஏகாநதமாகப பொருள ஸமபாதிககு முபா
யங்களை ஆலோசிககினறனையா? நீ தனியே ஆலோசனை
செயயாமலும பலருடன கலநது ஆலோசனை செயயாம
லும தகக மநதரிகளுடன மாதரங கலநது ஆலோசனை
செயகினறனையா? நீ ஆலோசனை செயத விஷயம ராஜய
மெஙகும பரமபி எலலோரககும தெரியாமல வெளிபபடா
திருககினறதா? ரகுகுலகுமாரனே! அறபமுயறசியால
ஸிததிககத தககதும மிகக பொருள விளையததககது
மாகிய ஒரு காரயததைச செயய நிசசயிதது தாமஸிக

காமல் சீக்ரமாகவே அதைச் செய்து முடிக்கத் தொடங்குகின்றாயா? உன் பகை மன்னவர்களுக்கு நீ ஆலோசித்த காரியங்களெல்லாம், அவை நன்றாக முடிந்து நிறைவேறின பின்பாவது ஏறக்குறைய முடிந்து பயன்பெறும் ஸமயத்திலாவது மாத்ரமேயன்றிச் செய்து முடிப்பதற்கு முன்பே எள்ளளவும் தெரியாதிருக்கின்றனவா? அப்பனே! நீயாவது உன் மந்த்ரிகளாவது ஆலோசித்த காரியங்களைப் பிறர் ஊஹத்தாலாவது யுக்தியாலாவது இங்கிதம் முதலிய மற்ற காரணங்களாலாவது சிறிதும் அறியாதிருக்கிறார்களா? நீ மூர்க்கர்கள் ஆயிரம்பேர்களைத் துறந்தாயினும் நன்கு ஆலோசித்துச் செய்யும் பண்டிதனொருவனையே விரும்புகின்றனையா? கார்யஸங்கடங்களில் பண்டிதனன்றோ நன்கு காரியத்து பெருநலம் விளையுமாறு செய்வான். அரசன் மூர்க்கர்களை ஆயிரம் பேர்களையாவது பதினாயிரம் பேர்களையாவது அடுத்திருப்பானாயினும் அவர்களால் அவனுக்கு மந்த்ரோபாயங்களில் ஸஹாயம் சிறிதும் உண்டாகாது. பிறர் சொன்ன அர்த்தங்களை உடனே அறியுந்திறமுடையவனும் நிலைநின்ற புத்தியுடையவனும் விசாரத்தில் ஸமர்த்தனும் நீதிசாஸ்த்ரங்களில் தீர்ந்தவனுமாகிய மந்த்ரி ஒருவனாயினும் உள்ளனாயின் ராஜனுக்காவது ராஜனைப் போன்றவனுக்காவது மிகுந்த ஐச்வர்யத்தை விளைவிப்பான். சிறந்த பருத்தியார்களைச் சமையல் முதலிய சிறந்த காரியங்களிலும், நடுத்தரமானவர்களைப் படுக்கைபோடுவது முதலிய நடுத்தரமான காரியங்களிலும், கடையானவர்களைக் காலலம்புவது முதலிய கடையாயுள்ள காரியங்களிலும் நன்கு பரீக்ஷிக்கப்பட்டவர்களும் கபடமற்றவர்களும் தகப்பன் பாட்டன் பரம்பரையில் வந்தவர்களும் பரிசுத்தர்களும் சிறந்தவர்களுமான மந்த்ரிகளை

யே சிறநத காரயங்களில ஏவுகினறனையா? கைகேயியின
குமாரனே! நீ பரஜைகளுககு உகரமான தணடனை
களைச செயது ராஜ்யததைப பிடிபபாயாயின, உன மநத்
ரிகள அதறகு ஸம்மதிககாமல உனனைத தடுககினறூா
களா? தூததானஙகளை வாஙகிப பணம ஸமபாதிதது
யாகஞசெயய விருமபுகினற பதிதனை ருததவிககுகள நிந
திபபதுபோலவும, பலாதகாரஞ செயது அனுபவிகக
விருமபுங காமுகனை ஸதரீகள தூஷிபபதுபோலவும,
கரூரமான காரயஙகளை விதிததுப பணம ஸமபாதிககிறூ
னிவனெனறு உனனை பரஜைகள அவமதியாதிருககிறூர
களா? ஸாமம முதலான உபாயஙகளில ஸமாததனும
குடிலநீதிகளை நனகறிநதவனும அநதரஙக பருதயாகள்
மேல இலலாத தோஷஙகளைச சொலலி அவாகளைத
தொலைபபதில ஊககமுறறவனும ராஜதணடனைககும
பயபபடாத சூரனும அரசனது பரபுதவததையே அப
ஹரிகக விருமபுகினறவனுமாகிய புருஷனை அரசன
கொலலாதிருபபானுயின அவன அரசனைத தபபாமல
கொனறு விடுவான. அபபடிபபடடவன உனனிடததில
இலலையனறூ? ராஜன செயத ஸதகாரயஙகளால ஸநதோ
ஷிபபவனும வயவஹாரங்களில கைதீரநத சூரனும அந
தநத ஸமயஙகளுககுத தகுநதபடி தன ஸைனயஙகளைச
சேரககவும பிறா ஸைனயஙகளைப பிரிககவும போது
மான புததியுடையவனும ஆபதகாலஙகளில தைரயம
மிகுநதிருககப பெறறவனும உளளும வெளியு மொககப
பரிசுததனுயிருபபவனும தன ஸவாமியிடததில நமபிக
கை யுடையவனும நறகுலததில பிறநதவனும ஸவாமியி
டததில மிகுநத பரீதியுடையவனும காரயததில வலலவ
னுமான புருஷனை ஸேனுபதியாகச செயதிருககினறனை
யா? மிகுநத பலசாலிகளும யுத்ததில பலமுறை வெறறி

கொண்டவர்களும் யாவர்க்கும் பரத்யக்ஷமான பௌரு ஷச் செய்கையுடையவர்களும் சூரர்களுமான முக்ய புரு ஷர்களுக்கு உரிய வெகுமதிகளால் மர்யாதை செய்கின் றனையா? ஸேனைஜனங்களுக்கு அந்தந்த காலங்களில் கொடுக்கவேண்டிய உணவையும் சம்பளத்தையும் காலந் தவறாமல் அவரவர்க்குத் தகுந்தபடி கொடுக்கின்றனை யா? படர்கள், நம் கொடுக்குமுணவுகளையும் சம்பளத் தையும் கொண்டு ஜீவிப்பவர்களாகையால் கொடுக்க வேண்டிய காலத்தை அதிக்ரமிக்கும்பக்ஷத்தில் பரபு வின்மேல் கோபங்கொண்டு கெடுதியைச் செய்ய முயல் வார்கள் அதைப் பெரிய அனர்த்தமாகப் பெரியோர் கள் கூறுகின்றனர் பரதானமான க்ஷத்ரிய குலத்தில் பிறந்தவர்கள் அனைவரும் உன்னிடத்தில் மிகுந்த ப்ரீதி யோடிருக்கின்றார்களா? அவர்கள் மனப்பூர்வமாக உன் டியத்தில் தமது பராணன்களையாயினும் துறந்து உதவிசெய்ய ஸித்தமாயிருக்கிறார்களா? பரத! உன் தேசத்திலேயே பிறந்தவனும் பிறர்து அபிப்ராயங்களை அறியுந்திறமுடையவனும் ஸமர்த்தனும் அப்பொழு தைக்கப்பொழுது மேன்மேலும் புதிதுபுதிதாகத் தோற் றங்கொள்கின்ற புத்தியுடையவனும் தன்னிடஞ் சொன் னவற்றைச் சிறிதுந் தவறாமல் செய்து நிர்வஹிப் பவனும் யுக்தாயுக்தங்களை யறிந்து சொல்லத் தெரிந் தவனுமாகிய புருஷனைத் தூதனாக வைத்துக்கொண் டிருக்கின்றனையா? நீ உனது சத்ருபக்ஷத்திலுள்ள மந்த்ரி முதலிய [1] பதினெட்டுத் தீர்த்தங்களையும் ஒவ

---

1 பதினெட்டுத் தீர்த்தங்களாவன—மந்த்ரி, புரோஹிதன், யுவ ராஜன், ஸேனாபதி, அந்தப்புரத் த்வாரசகாப்பவன், அந்தப்புரத் தூக் கார்யங்களை நிர்வஹிப்பவன், சிறைச்சாலைக்கதிபதி; பொக்கிஷங் காப்பவன், அரசனது ஆஜ்ஞையை வெளியில் விளங்கச் செய்யுங்கார யஸ்யோஜகன்; வ்யவஹாரங்களை விசாரிக்கும் பராட்விவாகன், ஸே

வொருவாககும மும்மூனறு சாராகளாக ஒருவாக்கொருவா முகமறியாதவாகளை அனுபபி அவரது ரஹஸயஙகளைத தெரிநது கொளகினறனையா? அபபடியே உனபக்ஷததிலும எபபொழுதும உனனெதிரிலேயேயிருககிற மநதரி புரோஹித யுவராஜாகளெனனும மூவரைத தவிர மறறைப பதினைநது தீாததஙகளையும அபபடியே மும்மூனறு முகமறியாத சாராகளை வைதது அவரது ரஹஸயஙகளை அறிகினறனையா? சதருககளைத தொலைப

---

னைகளுககுப் படியும சமபளமும கொடுககும ஸேனாநாயகன, ராததிரிகளில நகரசோதனைசெயதுகொணடு பட்டணததுவாசறபடிகளையும கோட்டை முதலியவறறையும ரக்ஷிககுஙகாலத்தை விதிககும நகராத்யக்ஷன, ஸேனையில சேராமல தனியே வேலைசெயது தீாநததவுடனே சமபளம வாஙகிககொளளும மறறை வேலைககாராகளனைவாககும சமபளததை ராஜனிடததினினறும தான ஒரேமொத்தமாக வாஙகிககொணடு அவாககு வேறுவேறாகப பஙகிடடுககொடுககும அதிகாரியாகிய காமாநதிகன, பரதிதினம ஸபையை அலஙகரிததல, ராஜன மநதரி முதலானவாககுத தகுநத ஆஸனஙகளை ஏறபடுததல, ஸபிகாகளை அழைததுககொணடு வருதல, அஸபயாகளை வரவொடடாமல தடுததல, அவரவாகளுககுத தகுநத இடஙகளை ஏறபடுததல, ஸபையில சபதமிலலாதபடி செயதல, ஸபையைக காததல முதலிய காரியஙகளைச செயபவாகளுககு நிவாஹகனுகியஸப்யன, தாயபாகம (பஙகு பிரிததல) முதலிய விவாதஙகளில விவாத விஷயஙகளை நனகு சோதித்து தாமசாஸதரததினபடி தீாபபு செயயுந தாமாதயக்ஷன, பிறா சொததைத திருடுதல முதலிய அபராதஙகளைச செயதவாகளுக்கு ராஜாஜ்ஞையினபடி கைகால வெடடுவது முதலிய தணடனைகளைச செய்யும ஜனஙகளுககு நிவாஹகனுன தணடபாலன, தனது ராஜயத்தின எலலைகளில எலலாததிசைகளிலும சதருராஜாகள வநது ஆககிரமித்தல முதலியவை உணடாகாதபடி ரக்ஷிககும ஜனஙகளுககு நிவாஹகனுன ராஷடராநதபாலன ஆகிய இநதப பதினெணமருமே பதினெட்டுத தீாததஙகளெனபபடுவாாகள். தீாததம துறை ஸ்வபக்ஷததில மநத்ரி புரோஹிதயுவராஜாகள் மூவரும தன்னெதிரிலேயே இருககையால் அவரது நடததை

பவனே! உனனால துரததபபடட சதருககள சிலகாலங கழிததுத திருமபி வருமபொழுது துாபபலாகளெனறு அவாகளை லக்ஷயஞ் செயயாமலிருபபது கவிரநது எபபொழுதும அவாகளிடததில மனஊககததுடனிருககினறனையா? அபபா! நாஸதிகரான பராஹமணாகளை அருகில சேரவொடடாமல உபேக்ஷை செயகினறனையா? இவாகள மூாககாகளாயினும தமமைப பணடிதாகளாககத தாமே நினைததுககொணடிருபபவா, ஆகையால துாபபோதனை செயது தாமலோபம அதாமாசரணம முதலிய பல அனாததஙகளை விளைபபதில வலலவா. துாபபுததிகளான அநநாஸதிகாகள் ஸாததவிகாகளாகிய மஹாஷிகள செயதவைகளும ஸஜஜனஙகள ஆதரிககையால முககியஙகளுமான தாமஶாஸதரஙகள இருககையில அவைகளை விடடு நிலையிலலாத கேவல தாகக யுகதிகளைக கொண்டு பயன சிறிதுமினறிப பலவாகப பேசுவாாகள. எனனபபா! அயோததியை பராககிரமசாலிகளான நமபூாவாகள வஸிததிருநத நகரம ஆகையால உணமையான பேருடன சதருககளுககுச சிறிதும புககக் கூடாதது, அதன வெளிபபுறதது வாசறபடிகள மிகவும திடமாயிருபபவை மேலும, அது ரத கஜ துரகஙகள நிறைநதிருககப பெறறது, எபபொழுதும தத்தமது காமங்களில மனஊககமுறறவாகளும ஜிதேநதரியாகளும மிகுநத உதஸாஹமுடையவாகளும பூஜயாகளுமாகிய பராஹமணாகளும க்ஷததரியாகளும வைஶ்யாகளும சூத்ராகளும பலவாயிரம பேர வாஸஞ்செய்யபபெறறது; நானுவித உபபரிகைகளால சூழபபடடது; விதவஜஜனஙகளால விளககமுறறது, மனககளிபபுறற ஜனஙகளுடையது, ஸகல ஸமபதஸமருததியும நிரமபப பெறறது, அவவயோததியாபுரததைப பததிரமாகப பரிபாலிதது வருகினறனையா? நமது தேசம அஶ்வமேதம முதலிய மஹாயாகம்

---

யைத தானே விசாரித்துக் கொளளகையால அவாகளை விடடு மற்றப் பதினைநதுபேர்களை மாத்ரம சாராகளை வைததது அவரது நடததையைத தெரிநதுகொள்ளவேண்டும.

நடத்தின பரதேசங்களோடு கூடியதும் நல்ல அரசாட்சி மழை ஆரோக்யம் முதலிய குணங்களைப்பற்றித் தேசாந்தரத்தை நெஞ்சிலும் நினைக்க நேராத ஜனங்கள் நிரம்பியதும் தேவாலயங்களும் தண்ணீர்ப்பந்தல்களும் தடாகங்களும் விளங்கப்பெற்றதும் என்றும் ஸந்தோஷமுற்ற ஸ்த்ரீ புருஷர்களையுடையதும் ஜனங்கள் கூட்டங்கூடி நடத்துகிற உத்ஸவங்களால் ப்ரகாசிப்பதும் நன்கு உழப்பட்ட நிலங்கள் பொருந்தியதும் மிக்க பசுநிரையுடையதும் [1] ஹிம்ஸைகளென்பது சிறிதுமில்லாததும் மழையை எதிர்பாராதே ஆகவேண்டிய நீர்ப்பந்தமின்றி ஆற்று நீர்ப்பாய்ச்சலுடையதும் தோட்டம் முதலியவற்றால் அழகாயிருப்பதும் [2] வ்யாக்ரம் முதலிய கொடிய ஜந்துக்களற்றதும் தண்ணீர் சுற்றி நாற்புறத்திலுங்கூடத் திருடு முதலிய ஸகல பயங்களும் நீங்கியதும் ஸ்வர்ணம் ரத்னம் முதலியன விளையுமிடங்கள் நிறைந்ததும் பாபிஷ்ட ஜனங்களில்லாததும் நமது பூர்விகர்களால் பாதுகாக்கப்பட்டதுமாகிப் ப்ரகாசித்துக்கொண்டிருக்கும் அப்படிப்பட்ட அத்தேசம் முழுவதும் ஸம்பத் ஸம்ருத்தியுடன் அந்நிலைமைகள் சிறிதும் மாறாமல் ஸுகமாயிருக்கின்றதா? அப்பனே! பயிர் செய்தல் பசுஸம்ரக்ஷணம் முதலியவற்றால் ஜீவிப்பவர்களாகிய வைஶ்யர்கள் அனைவரும் உன்னிஷ்டப்படி நடக்கின்றார்களா! வ்யாபாரம் நன்கு வளர்ந்து வருமாயின், உன்னைப்பற்றின ஜனங்களுக்கு ஸுகம் மேன்மேலும் பெருகிவரும். நீ அந்த வைஶ்யர்களுக்கு அபீஷ்டங்களைக் கொடுத்துக்

---

1 ஹிம்ஸைகளாவன—ஈதிபாதைகள் அவையாவன 'அதிவ்ருஷ்டிரநாவ்ருஷ்டிர் மூஷிகாஶ் ஶலபா: ஶுகா:। அத்யாஸந்நாஶ்ச ராஜாந ஷடேதா ஈதய: ஸ்ம்ருதா:' என்று சொல்லப்பட்ட ஆறு விதமான ஈதிபாதைகள் (அதிவ்ருஷ்டி:) பெருமழை (அநாவ்ருஷ்டி:) முதலே மழைபெய்யாமை. (மூஷிகா:) எலிகள். (ஶலபா:) விட்டில்கள். (ஶுகா:) பக்ஷிகள் (அத்யாஸந்நாஶ்ச ராஜாந:) அரசர்கள் மிகவும் ஸமீபித்திருத்தல் (ஏதா: ஷட்) இந்த ஆறும் (ஈதய:) ஈதிபாதைகளென்று (ஸ்ம்ருதா:) நினைக்கப்பட்டன

2 வ்யாக்ரம்—புலி.

காததும அரிஷடஙகளைப போககியும அவாகளைப போ
ஷிதது வருகினருயா? அரசன தாமததில நிலைகினறு
தன தேசதது ஜனஙகளெலலோரையும தபபாமல காகக
வேணடுமலலவா? நீ உன மனைவிகளை நலவாாததைக
ளால மனககளிபபுறச செயது அவாககு அனுகூலமா
யிருககினறனையா? அவாகளுககுப பர புருஷ ஸமபாஷ
ணைதிகள் நோாதபடி மிகவும பதரமாக அவாகளைக காக
கினறனையா? அவாகளிடம நமபிககையிலலாமல ரஹஸ
யஙகளைச சொலலாதிருககினறனையா? யானைகளுககு
உதபததிஸதானமாகிய வனததை நனகு ரக்ஷிககினற
னையா? காடடு யானைகளை வசபபடுததிப பிடிககவலல
பெணயானைகள உனனிட மிருககினறனவா? பினனும
பெணயானைகளையும குதிரைகளையும யானைகளையும ஸங
கரஹிபபதில இது போதுமெனனும தருபதி உண்
டாகப பெறறிருககினறனையா? ராஜகுமாரனே! நீ பரதி
தினமும விடியறகாலததில எழுநதிருநது அலஙகாரஞ
செயதுகொணடு ஸபையில ஜனஙகளுககு தாசனங
கொடுககினறனையா? வேலைககாராகளெலலோரும பய
மினறி உன எதிரில வாராதிருககினறனாகளா?
ஆனால அவாகளுககு அடியோடு தாசனங கொடாதி
ராமலும அடிககடி தாசனம கொடுககாமலும அவா
கள காாயததை விசாரிககுமளவே தாசனஞ கொடுதது
மாயாதை குனறாமல பெருமதிபபுட னிருககினறனையா?
நடுததரமாயிருபபதே காாயஸிததியை விளைகக வல
லது. உனது கோடடைகளெலலாம தனதானயஙக
ளாலும பலவகை ஆயுதங்களாலும ஜலததினாலும
யநதரஙகளாலும ஸமபூாணமாகிச சிறபிகளும விலலாளி
களும நிறையபபெறறிருககினறனவா? ரகுகுலகுமாரனே!
உனககு வரவு அதிகமாகவும செலவு மிககக் குறைவாகவு
மிருககினறதா? ராகவா! [1] நடா விடா காயகா முத
லிய அபாதரஙகளில உன பொககிஷம போயச சோா

---

1 நடா—கூததாடிகள, விடா—ஸதரீலோலாகள, காயகா—பாட்டுப
யா

இருக்கின்றதா? உன் செலவு தேவதைகள் பித்ருக்கள்
ப்ராஹ்மணர்கள் அதிதிகள் படர்கள் [1] மித்ர வர்க்கங்
கள் ஆகிய இவர்கள் விஷயத்தில் உபயோகப்பட்டு வரு
கின்றதா? பரிசுத்தமான ஸ்வபாவமுடையவனும் மனோ
வாக்காயங்களென்னும் மூன்று கரணங்களும் சுத்தமா
யிருக்கப்பெற்றவனும் பூஜ்யனுமாகிய புருஷன் தெய்வா
தீனமாய்க் களவு செய்ததாகக் குற்றம் சாத்தப்பட்டு
எதிரில் கொண்டு வரப்படுவானாயின், அவனை நீதிசாஸ்
த்ரங்களுணர்ந்த பண்டிதர்களைக்கொண்டு கேட்பித்து
நன்கு விசாரணை செய்யாமல் பொருளாசையால் தண்
டனை செய்யாதிருக்கின்றனையா? புருஷஸ்ரேஷ்டனே!
ஒருவன் திருடிவிட்டு ஓடிப்போவானாயினும் தகுந்த
காலத்தில் பார்த்துத் திருடின வஸ்துவுடன் பிடித்துப்
பண்டிதர்களால் விசாரிக்கப்பட்டுத் திருடனே இவ
னென்று நிச்சயிக்கப்பட்டவனையும் அவனிடம் பணம்
வாங்கிக்கொண்டு பணத்தாசையால் அவனை விட்டு
விடாமல் தண்டனை செய்கின்றனையா? ரகுவம்சத்திற்
பிறந்தவனே! மிகவும் அறிஞர்களாகிய உன் மந்திரிகள்
பணக்காரனுக்கும் ஏழைக்கும் விவாதம் வருகையில்
பணத்திலாசையில்லாமல் அவர்களது வ்யவஹாரத்
தைப் பக்ஷபாதமின்றிப் பரீக்ஷிக்கின்றார்களா? ராகவா!
ஒருவன் தனது போகபாக்யங்களை மேலாக எண்ணி
வ்யவஹாரங்களை நன்கு விசாரணை செய்யாமல் ஒருவ
னிடம் பொய்யான குற்றம் சாத்தித் தண்டனை விதிப்
பானாயின், அவ்வாறு தண்டனைக்குட்பட்டவன் மன
வருத்தமுற்றுப் பெருக்கும் கண்ணீர் தண்டித்தவனது
புத்ரன் பசு முதலிய எல்லாவற்றையும் அழித்துவிடும்.
ரகுகுலத்திற் பிறந்தவனே! மூப்பினர்களையும் பாலர்களை
யும் பண்டித சிகாமணிகளையும் தஞதிகளைக் கொடுப்
பது நடையைக் காட்டுவது நல்வார்த்தைகளைச் சொல்லு

1. மித்ரவர்க்கம்—நண்பர்களின்

வது ஆகிய இமமூனறு உபாயஙகளாலும வசபபடுதது
கினறனேயா? ஆசாரயாகளேயும வயது செனறவாகளேயும
தாபஸாகளேயும தேவதைகளேயும அதிதிகளேயும நாற
சநதி வீதிகளில தெயவஙகளுககிருபபிடமான எலலா
மஹாவருக்ஷஙகளேயும யோகாபயாஸம முதலியவறறுல
கருதாாததாகளான பராஹமணாகளேயும வணஙகுகின
றனேயா? பொருளாசை கொணடு தாமததையும தாமத
திலாசை கொணடு பொருளேயும, ஸுகததிலும காமத
திலும ஆசை கொணடு தாமாாததஙகளிரணடையும
அழிவுறச செயயாதிருககினறனேயா? ஜயசீலாகளில
தலைவனே! அநதநத காலஙகளே அறிநதவனே! வேண
டினவாகளின விருபபஙகளை அளிபபவனே! தாமாாதத
காமஙகள மூனறையும பிரிதது அவவவறறுககுத
தகுநத காலததில தவறுமல காமமாய அனுஷடிதது
வருகினறனேயா? எலலாமுணாநதவனே! ஸகல சாஸத
ரஙகளின பொருளகளேயும நிநத பராஹமணாகளும பட
டணதது ஜனஙகளும பளளிபபடடு ஜனஙகளும உன
ஸுகததை விருமபுகினறுாகளா? தெயவமும பாலோ
கமுமிலலையெனறிருககை, பொயபேசுகை, மிககசினன
முறுகை, மனஆககமறறிருககை, ஆலஸயங கொணடு
காாயஙகளே நிறைவேறருமை, அறிஞரான பெரியோா
களேத தாசனஞ செயயாமல இறுமாநதிருககை, மதயம
முதலியவறறைக குடிதது மதமபிடிததுத திரிகை,
ஐமபுலனகளேயும அடககாமல அவறறின வழியே செலலு
கை, மநதிரிகள வேணடாமெனறு தானெருவனே
காாயாலோசனே செயகை, நனமையுணராத மூடா
களோடாராயகை, ஆலோசிதது நிச்சயஞ செயத
விஷயததைச செயயாமல தாமஸஞ செயகை, தாம
செயத ஆலோசனேயை மறைககாமல வெளிபபடுத
துகை, விடியறகாலததில கணணுடியைப பாாததல
முதலிய மஙகல பரயோகங்களைச் செய்யாதிருக்கை,

ஒரே காலத்தில் ஸகல சத்ருக்களோடும் யுத்தஞ்செய்யப் போகை ஆகிய இப்பதினான்கு ராஜதோஷங்களையும் நீ கைவிட்டிருக்கின்றனையா? மிகுந்த மதியுடையவனே! [1] தசவர்க்கம் பஞ்சவர்க்கம் சதுர்வர்க்கம் ஸப்தவர்க்கம் அஷ்டவர்க்கம் த்ரிவர்க்கம் மூன்று வித்யைகள், இந்த்ரியவசீகரணம், ஆறு குணங்கள், தெய்வத்தால் வரும் துன்பங்கள் மனுஷ்யர்களால் வரும் துன்பங்கள், பேதஞ்செய்தல், விம்சதிவர்க்கம், ப்ரக்ருதி மண்டலம், தண்டயாத்ரை, தண்டவிதானம், இருவகைப்பட்ட ஸந்திவிக்ரஹங்கள் ஆகிய இவைகளை விதிப்படி நன்

1 தசவர்க்கமாவது—'ம்ருகயாக்ஷோ திவாஸ்வாப: பரிவாத: ஸ்த்ரியோ மத:। தௌர்யத்ரிகம் வ்ருதாட்யா ச காமஜோ தசகோ கண:' என்று சொல்லப்பட்ட வேட்டை சூது பகல்தூக்கம் நிந்தித்தல் ஸ்த்ரீஸேவை மத்யபானம் கூத்து பாட்டு வாத்யம் வீணாய்த்திரிதல் என்று காமத்தாலுண்டாகும் குணங்களாகிய இந்தப்பத்துமே தசவர்க்கமெனப்படும். பஞ்சவர்க்கமாவது- 'ஔதகம் பார்வதம் வார்க்ஷம் ஐரிணம் தான்வநம் ததா' என்று ஜலதுர்க்கம் பர்வத துர்க்கம் வ்ருக்ஷதுர்க்கம் இரிணதுர்க்கம் (இரிணம்-களர்பூமி) மருதுர்க்கம் (மரு-ஜலமில்லாத பூமி) ஆகிய இவ்வைந்து துர்க்கங்களும் பஞ்சவர்க்கமெனப்படும். சதுர்வர்க்கமாவது- 'ஸாம தானம் ச பேதச்ச தண்டச்சேதி சதுர்விதம்' ஸாம தான பேத தண்டங்களென்கிற இந்நான்கு உபாயங்களே. ஸாமம்-நல்வார்த்தை தானம்-கொடுத்தல் பேதம்-ஒருவர்க்கொருவர் மனம் பொருந்தாதபடி த்வேஷத்தை விளைத்தல் தண்டம்-தண்டனை செய்தல். ஸப்தவர்க்கமாவது- 'ஸ்வாம்யமாத்யாச்ச ராஷ்ட்ரஞ்ச துர்க்கம் கோசோ பலம் ஸுஹ்ருத்। பரஸ்பரோபகாரீதம் ராஜ்யம் ஸப்தாங்கம் உச்யதே' அரசன் மந்த்ரி தேசம் துர்க்கம் பொக்கிஷம் ஸேனை நண்பர் என்னும் இவ்வேழு ராஜ்யாங்கங்களே. அஷ்டவர்க்கமாவது-'க்ருஷிர்வாணிஜ்யதுர்க்காணி ஸேது: குஞ்ஜரபந்தநம்। கந்யாகர: கராதாநம் சூந்யாநாஞ்ச நிவேசநம்। அஷ்டவர்க்கமிதம் ஸாது: ஸ்வவ்ருத்தோ நலோபயேத்' பயிர்செய்தல் வர்த்தகம் துர்க்கம் அணைகட்டுதல் யானை பிடித்தல் பொன் வெள்ளி முதலியன விளையுமிடங்களை ஸங்க்ரஹித்தல் கப்பம் வாங்குதல் சூன்யமான இடங்களில் இருப்பிடமேற்படுத்தல் ஆகிய இவ்வெட்டுமே. த்ரிவர்க்கமாவது-தர்மம் அர்த்தம் காமம்

காரரயக்து விடவேண்டியவற்றை விட்டும் அனுஷ்டிக்க வேண்டியவற்றை அனுஷ்டித்தும் வருகின்றனையா? சாஸ்திரங்களில் சொல்லிய லக்ஷணங்கள் பொருந்திய மந்திரிகள் மூவரையாவது நால்வரையாவது ஏற்படுத்திக் கொண்டு ரஹஸ்யமாக ஒவ்வொருத்தரோடு தனித்தனியே கலந்து பிறகு அவர்களெல்லோரையும் உடகார வைத்துக்கொண்டு ஆலோசனை செய்கின்றனையா?

---

என்னும் இம்மூன்று புருஷார்த்தங்களே மூன்று வித்யைகளாவன—வேதம், க்ருஷிகோரக்ஷவாணிஜ்யங்கள், நீதிசாஸ்த்ரம் ஆகிய இம்மூன்று வித்யைகள். க்ருஷி பயிர். கோரக்ஷ—பசுக்களை பார்த்தல் வாணிஜ்யம் -- வர்த்தகம். விமசதிவர்க்கமாவது—'பாலோ வ்ருத்தோ தீர்க்கரோகீ ததா ஜ்ஞாதிபஹிஷ்க்ருத:। பீரு கோ பீருஜநகோ லுப்தோ லுப்தஜநஸ்ததா। விரக்தப்ரக்ருதிஸ் சைவ விஷயேஷ்வதிஸக்திமாந்। அநேகசித்தமந்த்ரஸ் ச தேவப்ராஹ்மண நிந்தக:। தைவோபஹதகஸ் சைவ தைவசிந்தகஏவ ச। துர்பிக்ஷ வ்யஸநோபேதோ பலவ்யஸநஸங்குல:। அதேசஸ்தோ பஹுரிபு யுக்தோ காலேநயஸ் ச ய:। ஸத்யதர்மவ்யபேதஸ் ச விம்சதி: புருஷா அமீ। ஏதைஸ்ஸந்திந குர்வீத விக்ருஹ்ணீயாத்து கேவலம்' பாலன், கிழவன், தீர்க்கரோகமுடையவன், பந்துக்களால் பஹிஷ்காரஞ் செய்யப்பட்டவன், பயந்த பன் பயந்த மந்த்ரி முதலான ஜனங்களுடையவன், வைராக்யஸ்வபாவன், விஷய லோலன், ஒரு நிலையான மனத்தோடு ஆலோசனை செய்யாதவன், தேவதைகளையும் ப்ராஹ்மணர்களையும் நிந்திப்பவன், தெய்வத்தால் அடிக்கப்பட்டவன்—அதாவது ஸாபாதிகளால் அடியுண்டவன், தெய்வத்தையே நம்பிப் புருஷப்ரயத்னஞ் செய்யாதவன் க்ஷாமபிக்ஷத்தால் பீடிக்கப்பட்டவன், ஸைன்யம் அழிந்து பலக்கவலை யுற்றவன், தேசாந்தரத்திலிருப்பவன், பல சத்ருக்களுடையவன், அகாலத்தோடு கூடினவன் அதாவது—கொடிய க்ரஹாதிகளுடையவன், ஸத்யமும் தர்மமும் இல்லாதவன் ஆகிய இவ்விருபது புருஷர்களே இவர்களோடு ஸந்தி செய்யலாகாது, யுத்தமே செய்யவேண்டும் இவைகளில் ஒவ்வொன்றையும் பலவிதமாகக் கூறுவர். விஸ்தரபயத்தால் எழுதுகிறிலோம்

நீ ஓதியுணர்ந்த வேதங்கள், அக்னிஹோத்ரம் முதலிய அநுஷ்டானங்களால் பயன் பெற்றிருக்கின்றனவா? நீ ஸம்பாதித்த பணங்கள் தானபோகங்களால் ஸபலம் செய்யப்படுகின்றனவா? உன் மனைவியர்கள் ஸம்போக ஸுகத்தைக் கொடுப்பதனாலும் நற்பிள்ளையைப் பெறுவதனாலும் பயன் படைத்திருக்கின்றனர்களா? நீ கேட்ட சாஸ்த்ரங்கள் உனக்கு நல்வழியைக் காட்டிப் பயன் பெறுகின்றனவா? பரதா! வளர்ந்த வாழ்நாளைக் கொடுப்பதும் சிறந்த கீர்த்தியை விளைப்பதும் தர்மார்த்த காமங்களை அளிப்பதுமாகிய புத்தியை இப்பொழுது நான் சொல்லினன்; அது எனக்கு எப்படியோ அப்படியே உனக்கும் இருக்கின்றதா? நம் தந்தை தசரதர் எவ்வண்ணம் நடக்கின்றாரோ, நமது முன்னோர்களான பாட்டன்மார்களும் எவ்வண்ணம் நடந்தனர்களோ, எது ஸன்மார்க்கத்துக்கிணங்கியும் நிந்தைக்கிடமன்றியுமிருக்குமோ, அப்படிப்பட்ட நீதியைத் துறக்காமல் நீயும் நடந்து வருகின்றனையா? ரகுவம்சத்திற் பிறந்தவனே! அறுசுவையும் பொருந்தி நன்கு அமைக்கப்பட்ட நல்லுணவை நீயொருவனே உண்ணாமல் மித்ரர்களுக்கும் கொடுக்கின்றனையா? நண்பர்கட்கு அவர்கள் வேண்டிய தனம் முதலியவற்றைக் கொடுக்கின்றனையா? அரசனாயிருப்பவன் இவ்வாறு மிகுந்த மதியுடன் தர்மந் தவறாமல் உரிய தண்டனை செலுத்திப் ப்ரஜைகளைப் பரிபாலனஞ் செய்வானாயின், அவன் இம்மையில் ஸமஸ்த பூமண்டலத்திற்கும் அதிபதியாகி மிகவும் ஆனந்தத்திலிருந்து சரீராத்மஜ்ஞானம் பெற்றுக் கடைசியில் இந்த லோகத்தை விட்டுப் பூர்விக ராஜர்களைப்போல் ஸ்வர்க்கஞ் செல்வான்.

நூறாவது ஸர்க்கம் முற்றிற்று.

பரதன ராமனுக்குத தசரதன் மரண மடைநத வருத்தாநதத்தைக கூறுதல.

பரதன, இவவாறு ராமன மொழிநத வார்த்தை யைக் கேட்டு அவனைப பார்த்து 'உனக்குப பணிசெய் கையாகிற பரம தர்மத்தை இழநத எனக்கு ராஜய பரி பாலன தர்மம என்ன செய்யபபோகினறது? புருஷ ஶ்ரேஷ்டனே! ராஜனே! மூத்தவனிருக்க இளையவன அர சனுயிருபபதிலலை. அனாதியாக நடநது வருகிற இந்த தர்மம நங்குலத்து மன்னவரிடத்தில எபபோதும நிலை நினறிருபபது. ரகுகுலாலங்காரனே! நீ மூத்தவனுகை யால என்னுடன கூட ஸகல ஸம்பத்தும நிறைநத அயோ தயாபுரத்திறகு வநது நம வம்சத்திறகு க்ஷேமம உண டாகுமபடி நீ அபிஷேகஞ செயதுகொள்வாயாக ராஜ னுயிருபபது கேவலமனறு, ராஜாவை மனுஷயனாக அறி விலாமூடர சொலலுவார்கள். தர்மார்த்தஙகளை விளை ககவலல மன்னவனசெயல் அதிமானுஷமாயிருபப தெனறு பெரியோர்கள் சொலவதுபறறி அரசன தேவ னெனபதே எனக்கு ஸம்மதமாயிருக்கினறது என்னப பனே! நான கேகயநாட்டிறகுப போயிருக்கையில நீயும அரண்யத்திறகு வருகையில யாகஞ செயயுந தனமைய ரும ஸதபுருஷர்களால கொண்டாடபபட்டவரும மேன மைப படுத்துகைக்கு உரியவருமாகிய மஹாராஜா ஸவர்க்கம அடைநதனர நீ வநதபினபு அவர வெகுநாள இருக்கவிலலை. நீ ஸீதையோடும் லக்ஷமணனோடும கூ டிப புறபபட்டமாத்திரத்திலேயே, மஹாராஜா துக்க சோகஙகளால பீடிக்கபபட்டு ஸவர்க்கலோகஞ சென்ற னர. ஆண சிஙகமே! எழுநதிரு. சீக்கிரமாகத தந தைக்கு ஜலதர்ப்பணம முதலிய செயலகளை நடத்துவா யாக. நானும இநதச சத்ருக்னனும முனபே ஜலதர்பப

ணஞசெயது முடிததனம 'நீஙகள் செயதிருகக நானும செயயவேணடுமோ' எனனவேணடாம். ரகுகுல குமாரனே! தநதைககு பரியனுயிருககும புதலவன கொடுககிற ஜலதாபபஞ்ஞலிகளே பிதருலோகததில எனறும பாழாகாமல மிகக பயனை விளைபபவையாமெனறு பெரியோாகள கூறுகினறனா. நீயே நநதநதைககு பரிய குமாரன. ஆகையால நீ அரசனுககு அபாகரியைக ளைச செயயவேண்டும உன தநதை மஹாராஜா உன னைப பிரிநது உனனைபபறறியே பலவாறு புலமபி உன னையே பாாகக விருமபி உனனிடததில பறறின மனத தைத திருபபிக கொளள நோாமல உனனுடைய சோ கததினுல மிகவும துககிதது உனனையே நினைததுக கொணடு லோகாநதரஞ செனறனா. நூறறிரணடாவது ஸாககம முறறிறறு.

[ ராமன தசரதன தாஞசினைதைக கேடடுப புலமபுதலும, மநதாகினியில ஜலதாபபணஞ செயதலும, மீளவும ஆஸிரமததில புகுநது வருநதுவதும, அயோதயா ஜனங கள ராமனேடு சேருதலும ]

ராமன இவவாறு பரதன மொழிநத பிதருமரண வருததாநதததைக கேடடு மிகவும துககததை விளைப பதாகிய அதை எளளளவும பொறுகக முடியாமல மூாசசையை யடைநதனன. பகைவரை அடககவலல அம மஹா வீரன யுததததில இநதரன பரயோகிதத வஜரா யுதமபோல சிறிதும பொறுககமுடியாத பரதன சொன ன கடின வருததாநதததைக கேட்டுக கைகளை உயர எழுபபி, அரணயததில புஷபிததிருககிற வருக்ஷத தைக கோடாலியால வெடடுகையில அது திடீரெனறு தரையில வீழவதுபோல மெயமமறநது கீழே விழுநத

ன்ன. கரையைக் குத்தி விளையாடி வருந்திப் படுத்து நித்திரைபோகின்ற[1] குஞ்சரம்போல் மூர்ச்சித்துக் கீழே விழுந்திருக்கிற ஜகதீசனும் மஹாவீரனுமாகிய ராமனைக் கண்டு ப்ராதாக்களான அந்தப் பரத லக்ஷ்மண சத்ருக்னர்களும் ஸீதையும் கதறிக்கொண்டு சோகத்தினால் வருந்தி அவனை மூர்ச்சையினின்று தெளிவிக்கும் பொருட்டு அவயவங்கள் முழுதும் கண்ணீர் தெளித்தனர். ராமனும் சிறிதுநேரம் கழித்து மூர்ச்சைதெளிந்து கண்களிரண்டிலும் நீர் பெருகி மிகவும் தீனமாகிய பல வாக்யங்களைச் சொல்லத் தொடங்கினன். தர்மஸ்வபாவனாகிய ராமன் மஹாராஜனாகிய தந்தை மரணம் அடைவது கேட்டுப் பரதனைப் பார்த்து, தாம் அமைந்திருக்குமாறு இங்ஙனம் மொழிந்தனன் — 'ஐயோ! என்னப்பன் காலகதி அடைந்தனனே! என் செய்வேன்? இனி அயோத்யையில் எனக்கு என்ன கார்யம்? இனி அப்படிப்பட்ட ராஜாதிராஜனைப் பிரிந்த அயோத்யையை எவன் பாதுகாக்கப் போகின்றனன்! அம்மஹானுபாவன் என்னைப் பிரிந்த சோகத்தினாலேயே மரணம் அடைந்தனன். நானும் அவர்க்கு ஸம்ஸ்காரஞ் செய்யப் பெற்றிலன். அம்மஹானுபாவருக்கு, இகழ்ந்த குந்த பிறப்பினையுடைய இப்படிப்பட்ட அஸத்புத்ரனாகிய என்னால் என்ன ப்ரயோஜனம்? பரதா! நீ காலத்தில் தந்தைக்கு ஸம்ஸ்காரஞ் செய்யப்பெற்ற பாபந் தொலைந்தவன். நீயும் சத்ருக்னனும் காலத்தில் ராஜாவுக்கு ப்ரேத கார்யங்கள் செய்யப்பெற்றீர்களாகையால் நல்வினையுடையரானீர்கள். மஹாராஜா மரணமடைகையால் ப்ரதானனில்லாமல் கலக்கமுற்றதும் மனக்களிப்பற்றதுமாகிய அயோத்யைக்கு நான் வனவாஸந் தீர்ந்தபின்னும் போக விரும்புகின்றிலேன். பகைவரைப் புறந்தோட்டச்செய்யும் பராக்ரமசாலியே! என்னப்பன் மரணம் அடைந்தனனே! இனி நான் அரண்யத்தில் பதினான்கு ஸம்வத

1 குஞ்சரம்—யானை

ஸாஙகள கடநதி அயோதயைககுபபோனபினபு அஙகு
எனனைக காரயஙகளில இது நனறு இது தீதெனறு
சிகஷிபபவா யாவா? முனபு எனனபபன, நான அவரது
ஆஜ்ஞையினபடி தவறுமல நடககும நடததைககு ஸந
தோஷிதது எனனை மனககளிபபுறச செயயுமபொருட
டுச செவிககினிய செஞசொறகளைக கூறுவாா இனி
அபபடிபபடட வாாததைகளை எனககு எவா சொலலப
போகினறனா? யாரிடததில கேடகபபோகினறனன?'
எனறிவவணணம புலமபினன ராமன அஙஙனம பரத
னுடன சொலலிப பூரணசநதரனபோனற முகமுடைய
ஸீதையைப பாாததுச சோகததிஞல வருநதி 'ஸீதே!
உன மாமனாா மரணம அடைநதனரே? லக்ஷமணா! நீ
தநதையிலலாதவனுயினையே. பரதன மனனவா வின
ஞுலகடைநதாரெனனும துககவாாததையைச சொல
லுகினறுனே' எனறனன ராமன அஙஙனஞ சொலலிக
கொணடிருககையில மிகவும புகழபெறற அநதக குமா
ராகள அனைவாககும கணகளில பலமடஙகதிகமாக நீா
பெருகததுணடாயிறறு பிறகு அநத அணணன தமபி
கள அனைவரும ராமனைப பலவாறு ஸமாதானபபடுததி
லோகநாதனுகிய தநதைககுத தாபபணஞ செயயுமபடி
உரைததனா அநத ஸீதையும மாமனாாகிய மஹா
ராஜா ஸவாககலோகஞ சென்றது கேடடுக கணணில
நீா ததுமபப பெறறுக கணவனைப பாாககநேராதிருநத
னள. ராமன அஙஙனம கணணீா பெருககுகினற ஜனக
ராஜன புதலவியாகிய ஸீதையைத தேறறி மனவருதத
முறறிருககினற லக்ஷமணனைப பாாதது மிக வருததத
துடன 'லக்ஷமணா! தபஸவிகளுககு யோககியமாகிய இங
குதபிணணாககைக கொணடுவருவாயாக ஸஞனத
தினபொருடடு அரையில உடுததுககொளள வேணடிய
நாாததுணியையும மேலுததரீயததையும எடுததுக
கொடுபபாயாக. மஹானுபாவராகிய என தநதைக

குத தாபபணஞ செயயபபோகிறேன. ஸீதை முனனம நடநது செலவாளாக. அவளுககுப பின நீ நடபபாயாக. நான உனனைப பினறொடாநது வருகிறறனன. மிகவும ஸஹிகக முடியாத துககததின நிமிததமாகப போகுமபோது ஸதரீகளையும பாலாகளையும இவவணணம முனனிடடுககொணடு போகவேணடுமலலவா?" என றனன அனநதாம, அவாகளைக குலகரமமாக அனுஸரிபபவனும ஆதமஸவருபந தெரிநதவனும மிகுநத புததியுடையவனும மருதுஸவபாவனும உளளிநதரியமான மனததையும வெளியிநதரியமான ஐமபுலனகளையும அடககி வெனறவனும ராமனிடததில திடமான பகதியுடையவனுமாகிய ஸுமநதரன ராமனையும மறறும அநத ராஜகுமாராகளையும ஸமாதானபபடுததி அவாகளைப பிடிதது அழகியதான மநதாகினியின துறைககு மெலல மெலல அழைததுககொணடு செனறனன பெரும புகழாளரான அநத ஸீதா ராம லக்ஷமணாகள அழகிய துறைகளுடையதும ரமணீயமாகப புலபபடுவதும கரைகளில எனறும புஷபிதத அரணயஙகளுடையதும வேகமாகப பெருகி வருகினற பரவாஹமும பொருநதியதுமாகிய அமமநதாகினி நதிககு மனவருததததுடன செனறு ஸநானஞ செயது அஙகுச சேறிலலாத ஓா அழகிய துறையிலிருநது 'எனனபபனே! இநத ஜலம உனனைச சேருமாக' எனறு மொழிநதுகொணடே மஹாராஜனுககு ஜலதாபபணஞ செயதனா. ராமன இருகை நிரமப ஜலமெடுததுககொணடு தெனதிசை முகமாகத திருமபிக கணணீா பெருககிககொணடே மனனவனைக குறிதது 'ராஜஸிமஹனே! பிதருலோகஞசோநத உமககு நானிபபொழுது கொடுககும அழுககறற ஜலம அக்ஷயமாகி உமககுச சேருமாக' எனறு மொழிநது ஜலததை விடடனன அனநதாம தேஜஸவியா



1138. ராமலக்ஷ்மணர்களிருவரும் மந்தாகினி நதியில் தகப்பனாருக்கு ஜல தர்ப்பணஞ்செய்தல்.

கிய ராமன அமமந்தாகினீ தீரத்தினினறும அக்கரைக்குச சென்று அங்குத் தந்தைக்குப பிண்ட ப்ரதானஞ்செய்தனன. ராமன இங்குணபபிண்ணாக்கை இலந்தம பழங்களுடன கலந்து உருண்டைகள செய்து தாபபங்களைப பரபபி அவைகளின மேலிட்டு மனவருத்தத்தினால பரிதபித்துக் கண்ணீர பெருக்கிக்கொண்டு, 'மஹாராஜனே! எமக்கு இந்த இங்குணபபிண்ணாக்கே ஆஹாரமாகையால இதையே இபபொழுது ஸமாப்பித்தனம. ஆகையால இதை ப்ரீதியுடன அமுது செய்தருள வேணும. புருஷன, தான எதை ஆஹாரமாகக்கொளகினறுனோ, அதையே அவன தன தேவதைகளுக்கும ஸமாபபிக்கவேண்டும' என்று மொழிந்தனன. பிறகு அந்தப புருஷஸிமஹன அவவழியாகவே அவவாற்றின கரையினினறும புறபபட்டு அதைத் தாண்டித் திருமபிவந்து, அழகிய தாழவாரங்களையுடைய சித்ரகூட பாவதத்தினமேல ஏறினன. பிறகு மஹாபாலனாகிய அந்த ராமன பர்ணசாலையின வாசறபடியில சேர்ந்தவுடனே பரத லக்ஷ்மணர்களிருவரையும கைகளால அழுந்தக் கட்டிக்கொண்டனன. அவவண்ணன தமபிகள ஸீதையுடன ஸிமஹங்கள கர்ஜிபபதுபோல புலமபிக்கொண்டிருக்கையில அதனாலுண்டாகும த்வனியால அப பாவதத்தில ப்ரதித்வனி உண்டாயிற்று. மஹாபலிஷ்டர்களாகிய அந்த ராமாதிகள தந்தைக்குத் தாபபணஞ்செய்து மனவருத்தத்துடன புலமபுகையில அபபெருங்கோஷத்தைக் கேட்டுப பரதனுடைய ஸேனாஜனங்கள பயமுறறனா. அவாகள 'பரதன ராமனோடு கலந்தனன. இது நிஜம. அவாகளெலலோரும கலந்து மரணமடைந்த தந்தையைக் குறித்து மனவருந்தபபடுகினறனா. ஆகையால இதோ புலபபடுகினற இபபெருந் த்வனி அவாகளுடையதே ஆகவேணும' என்று ஒருவாக்கொரு

வர் சொல்லிக்கொண்டனர். பிறகு அந்த ஸேனா ஜனங்
களெல்லோரும் தமது வாஸஸ்தானங்களை விட்டு ஒரு
மனத்துடன் அந்தத் த்வனியுண்டாகுந் திசையைப் பிடித்து
மிக்க வேகத்துடன் அந்த இடத்தைக்குறித்து எதிர்த்
தேடிப் போயினர். அரண்யத்தில் வருந்துகின்ற
ஸ்ரீராகவனைப் பார்க்க நடந்தே செல்லவேணுமாயினும்
அவர்கள் நடக்கமுடியாத ஸுகுமாரர்களாகையால்
நடப்பதரிதென்று அவர்களில் சிலர் குதிரைகளின்மே
லும் சிலர் யானைகளின்மேலும் சிலர் நன்கு அலங்கரிக்
கப்பட்ட தேர்களின்மேலும் ஏறிக்கொண்டு சென்றனர்.
மற்றுஞ் சிலர் கால்நடையாகவே சென்றனர். அந்த
ஜனங்களெல்லோரும், ராமன் அரண்யஞ்சென்று கொஞ்ச
காலமே ஆயிருப்பினும் வெகுகாலமாகத் தம்மைப் பி
ரிந்துசென்றாற்போல் நினைத்து அவனைப் பார்க்க மிக்க
மனவிருப்பங்கொண்டு அதிவேகத்துடன் அவ்வாச்ர
மத்திற்குப் போயினர். அவர்கள் அங்கு அவ்வண்
ணம் தம்பிகள் சேருவதைக் காண விரும்பிப் பலவகை
வாஹனங்களின்மேல் ஏறிக் குளம்புகளுடையவும் சக்கரக்
கட்டுக்களுடையவும் சப்தங்கள் பரம்ப, த்வரையுடன்
போயினர். அங்ஙனம் நடந்துசெல்கின்ற யானை குதி
ரை முதலியவற்றின் குளம்புகளாலும் தேர் முதலிய
வற்றின் சக்கரக்கட்டுக்களாலும் உறைக்கப்பட்ட பூமி
யானது வர்ஷாகாலத்தில் மேகங்களால் ஆகாயம் ஒலிப்
பதுபோல் பெரிதும் ஒலித்தது. அப்பொழுது அவ்வ
னத்திலுள்ள யானைகள் அந்த த்வனிக்குப் பயந்து
பெண் யானைகளால் சூழப்பட்டு மதஜலத்தினால் முழுவ
தும் பரிமளம் உண்டாகும்படி செய்துகொண்டு அவ்வ
னத்தினின்றும் மற்றொருவனம் போயின (அப்பொழுது
அவை போயினும் அவைகளின் மதஜல வாஸனையால்
அவ்வனம் முழுவதும் பரிமளித்துக்கொண்டிருந்தது)
பன்றிகளும் செந்நாய்களும் எருமைக்கடாக்களும் ஸர்ப்
பங்களும் குரங்குகளும் புலிகளும் கோகர்ணமென்கிற

மானகளும கவய மெனபபடுகிற ம்ருகவிசேஷங்களும் புளளிமானகளும கூட்டங கூட்டமாயப பயநதோடின. சகரவாகஙகளும நீரமானகளும ஹமஸஙகளும நீரககாகஙகளும பெருங கொககுகளும ஆணகுயிலகளும கரௌஞச பக்ஷிகளும பயததால பரஜஞையறறு நாறபுறமும பறநதோடின. அநத தவனியைக கேட்டுப பயநதோடும பறவைக கூட்டஙகளால ஆகாயம நிரமபியிருநதது பரதனது ஸேனாஜனஙகளால பூமியும் நிரமபியிருநதது. ஆகையால அவவிரண்டும் நனகு பரகாசிததன. பிறகு அநத ஸேனாஜனஙகள அஙஙனம வேகமாகச சென்று பாணசாலையில பெருமபுகழும பகைவரை அடக்கும பராககரமமும பொருநதின புருஷஶ்ரேஷ்டனாகிய ராமன தரையில உடகாரநதிருககக கண்டனர அவாகளெலலோரும ஒன்றுகூடிக கைகேயியையும மநதரையையும தூறிககொணடே ராமனருகிற் சென்று முகம முழுவதும கணணீர நிரமபப பெறறு அவனெதிரே நினறிருநதனர அனநதரம தாமஙகளை உணாநதவனாகிய அநத ராமன மிகவும மனவருததமுறறுக கணணீர நிறைநத கணகளையுடைய அநத ஜனஙகளைக கணடு பிளளைகளைத தகபபனபோலவும பெண்களைத தாயபோலவும பெருமையுடன அணைததுக கடடிககொணடனன அபபொழுது ராமன சிலரைக கட்டிககொணடனன சிலா ஸ்ரீராமனை நமஸகாரஞ செய்தனர. அநத ராஜகுமாரன ஸனேஹிதாகளையும பநதுககளையும எலலோரையும அருகிறசென்று அவரவாககுத் தகுநதபடி ஸமமானிததனன. அவவிடததில மஹாநுபாவாகளாகிய அநத ராமாதிகளின ரோதன தவனி பூமியிலும ஆகாயததிலும பாவதகுஹைகளிலும திசைகளிலும பரதிதவனியுணடாகப பெறறு மருதஙக கோஷம் போல கமபீரமாகச செவிபபடடுககொணடிருநதது.

நூறறிரணடாவது ஸாககம முறறிறறு

கௌஸல்யை முதலியவர் நதிக்கரையில் ராமன் தர்ப்பணஞ்செய்த இடத்தைப் பார்த்து வருந்துதலும், ராமன் தாய்மார்களோடும் வஸிஷ்டர் மந்திரிகள் முதலானவர்களோடும் கலத்தலும்.

வஸிஷ்டர் தசரதனது பார்யைகளை முன்னிட்டுக் கொண்டு ராமனைப் பார்க்கவேண்டுமென்னும் மனவிருப்பம் மிகப்பெற்று ராமாதிகளிருக்கிற அந்த இடத்தைக் குறித்துப் போயினர். கௌஸல்யை முதலிய ராஜபார்யைகள் மெல்லமெல்ல மந்தாகினீநதிக்குப் போய்க்கொண்டிருக்கையில் ராமலக்ஷ்மணர்கள் இழிந்த அத்துறையைக் கண்டனர் அதைக் கண்ட கௌஸல்யை முகம் வாடி வருந்திக் கண்ணீர் நிரம்பப் பெற்று மிக்க மனவருத்தத்துடன் ஸுமித்திரையையும் மற்றுமுள்ள ராஜ பார்யைகளையும் பார்த்து 'எவர் பிறர்க்கு மன வருத்தத்தை விளைக்குங் கார்யங்களைச் செய்யாதவர்களாயினும் தேசத்தினின்று துரத்தப்பட்டனர்களோ, அந்த அநாதர்களாகிய ஸீதா ராம லக்ஷ்மணர்கள் இழிந்து ஸ்நாநஞ் செய்த துறை இது, நிச்சயம் ஆகையால்தான் இது கலங்கியிருக்கின்றது ஸுமித்ரே! உன்பிள்ளை லக்ஷ்மணன் என் புதல்வன் நிமித்தமாகச் சோம்பலின்றி எப்பொழுதும் இவ்விடத்தினின்று தானே ஜலங்கொண்டு போவதாகத் தெரிகின்றது உன் பிள்ளை இப்படிப்பட்ட இழிவான கார்யத்தைச் செய்யினும் எள்ளளவும் நிந்தைக்கிடமாகான், தமையன் தந்தையைப்போன்றவனாகையால் அவனுக்கு ப்ரயோஜனகரமாக எந்தக் கார்யஞ் செய்யினும் அது அவ்வளவுங் குணமேயாகும். இனிப் பரதனது வேண்டுகோளுக்குட்பட்டு ராமன் ராஜ்யம் பெற்ற பின்பு, இப்படிப்பட்ட கஷ்டங்களுக்குத் தகாத உன் பிள்ளையும், இழிவானதும் கஷ்டத்தைக் கொடுப்பதுமாகிய நடவடிக்கை

யுடன் கூடிய இச் செய்கை இனியாவது செய்ய நேராமல் ஸுகமுற்றிருப்பானாக' என்றனள். பிறகு நீண்டழகிய கண்களையுடைய அக் கௌஸல்யை அந்தப் பூமியின்மேல் தெற்கு நுனியாகப் பரப்பின தர்ப்பங்களின்மேல் தந்தையின்பொருட்டு ராமன் பக்தியோடிட்ட பிண்டத்தைக் கண்டனள். ராமன் மனவருத்தத்துடன் பூமியின் மேல் பிதாவின் நிமித்தமாக வைத்த அந்தப் பிண்டத்தைக் கண்டு கௌஸல்யாதேவி மற்றுமுள்ள தசரத பத்நிகளெல்லோரையும் நோக்கி 'இதோ இக்ஷ்வாகு வம்சத்திற்கு ப்ரபுவும் மஹானுபாவரும் தன் தந்தையுமாகிய தசரதருக்கு ராமன் சாஸ்த்ரங்களில் சொல்லியபடி கொடுத்த பிண்டத்தைப் பாருங்கள். தேவேந்த்ரனை நிகர்த்து ஸமஸ்த போகங்களையும் அநுபவித்த மஹானுபாவராகிய அம்மஹாராஜருக்கு இவ்விங்குணப் பிண்ணாக்கு எவ்வளவும் ஆஹாரமாகக் கூடுமென்று நான் நினைக்கவில்லை. நான்கு ஸமுத்ரங்களினிடையிலுள்ள ஸமஸ்த பூமண்டலத்தையும் ஆண்டநுபவித்து தேவேந்த்ரனைப்போல் விளங்கும் ப்ரபுவாகிய அம்மஹீபாலன் இவ்விங்குணப் பிண்ணாக்கை எங்ஙனந் தின்று மகிழ்வான்? பெரிய ஐஸ்வர்யத்துடன் கூடிய ராமன் தந்தைக்கு இங்குணப்பிண்ணாக்கைப் பிண்டமிட வேண்டி வந்ததே! இதைக்காட்டிலும் உலகத்தில் துக்கமென்பது மற்றொன்றும் எனக்குத் தோற்றவில்லை. ராமன் ஸ்ராத்தத்தில் இங்குணப் பிண்ணாக்கிடுவது கண்டும் என் மனம் துயர்முற்று ஆயிரம் சுக்கலாய்ப் பிளவாதிருக்கின்றதே? 'புருஷன் தான் எதை ஆஹாரமாகக் கொள்வானோ, அதுவே அவனது தேவதைகளுக்கும் ஆஹாரமாம்' என்று உலகத்தில் வழங்கிவருகின்ற இந்தப் பழமொழி எனக்கு உண்மையாகத் தோற்றுகின்றது' என்றனள். அந்தத் தசரதனது பார்யைகளனைவரும் அங்ஙனம் மனவருத்தமுற்றுக் கதறுகின்ற கௌஸல்யையை நல்வார்த்தைகளால் தேறச் செய்து அவளை அழைத்துக் கொண்டுபோய் ஆஸ்ரமத்தில் ஸ்வர்க்கத்

திவினின்றும் வந்த தேவதைபோல விளங்குகின்ற ஸ்ரீராம னைக் கண்டனர். கௌஸல்யை முதலிய தாயமார்கள் ராமன் ஸமஸ்த போகங்களையுந் துறந்து அரண்யத்தி லிருப்பதைக் கண்டு மிகவும் வருந்திப் பெருங் குரலுடன் புலம்பிக்கொண்டு கண்ணீர் பெருக்கினர். ஸத்யப்ரதிஜ் ஞனாகிய அந்தப் புருஷஸிம்ஹன் ராமன் எழுந்து தாய மார்கள் அனைவருடையவும் சுபமான பாதாரவிந்தங் களைப் பிடித்துக்கொண்டு நமஸ்காரஞ் செய்தனன். நீண்ட கண்களையுடைய அந்தக் கௌஸல்யாதிகளும் தமக்கு ஸாஷ்டாங்கமாக நமஸ்கரித்த ஸ்ரீராமனது முதுகிலிருக்குந் தூசிகளை, மெதுவான விரல்களையுடைய வைகளும் ஸ்பர்சம் ஸுகமாயிருக்கப் பெற்றவைகளுமா கிய தமது கைகளால் துடைத்தனர். லக்ஷ்மணனும் அந்தத் தாயமார்களெல்லோரையும் பார்த்து மிகுந்த மன வருத்தங்கொண்டு ராமன் வணங்கின பின்பு தா னும் வரிசையாக அவர்களெல்லோர்க்கும் நமஸ்காரஞ் செய்தனன். அந்த ராஜஸ்த்ரீகளெல்லோரும் சுபலக்ஷ ணங்கள் பொருந்திய தசரத குமாரன் லக்ஷ்மணனிடத் தில் ராமனிடத்திற்போலவே ப்ரீதியுடன் நடந்துகொண் டனர். ஸீதையும் மனவருத்தமுற்றுக் கண்களில் நிரம்ப நீர் தளும்பப் பெற்று மாமியார்களது பாதங்களைப் பிடித்துக்கொண்டு நமஸ்கரித்து அவர்கள் முன்பு நின் றிருந்தனள். கௌஸல்யை வனவாஸத்தினால் இளைத்து மனக்களிப்பற்று வருந்துகின்ற அந்த ஸீதையைத் தாய் தன் புதல்வியை அணைத்துக் கட்டிக்கொள்வதுபோல், அணைத்துக்கொண்டு 'ஜனகமஹாராஜரது வயிற்றில் பிறந்து தசரத சக்ரவர்த்தியின் மாட்டுப் பெண்ணாகி ராமனுக்குப் பத்னியுமாகிய ஸீதை ஜனஸஞ்சாரமில்லாத வனத்தில் எப்படி துக்கமுற்றிருக்கின்றனள்? ஸீதே! வெயிலில் வதங்கின தாமரைபோலவும் வாடிவதங்கின

கருநெய்தல்போலவும், அழுக்கடைந்த பொன்போலவும், மேகங்களால் மறைக்கப்பட்ட சந்த்ரன் போலவும் காந்தி குறையப் பெற்றிருக்கிற உன் முகத்தைப் பார்க்கையில், அக்னி தனக்காச்ரயமான காஷ்டங்களைக் கொளுத்துவது போல், மனத்தில் வ்யஸனமென்னும் அரணியினின்றுண்டான சோகாக்னியானது என்னை மிகவும் தஹிக்கின்றதே' என்றனள். இங்ஙனம் தாயான கௌஸல்யை துக்கத்தால் பரிதபித்துச் சொல்லிக்கொண்டிருக்கையில் பரதனுக்குத் தமையனாகிய ராமன் அப்படியே வஸிஷ்டருடைய அருகிற்சென்று அவருடைய பாதங்களைப் பிடித்துக்கொண்டு நமஸ்காரஞ் செய்தனன். அப்பொழுது ராமன், தேவேந்த்ரன் ப்ருஹஸ்பதியை வணங்குவதுபோல், அக்னிபோல் மிகுந்த ஒளியுடன் விளங்குகின்ற புரோஹிதராகிய வஸிஷ்டரை வணங்கி அவரோடு கூடவே உட்கார்ந்தனன். அங்ஙனம் அவ்விருவரும் உட்கார்ந்த பின்பு தார்மிகனாகிய பரதன், மந்த்ரிகளோடும் பட்டணத்திலுள்ள ப்ரமுகர்களோடும் ஸேனாஜனங்களோடும் மிகவும் தார்மிஷ்டர்களான மற்றை ஜனங்களோடுங்கூட ராமனது அருகில் உட்கார்ந்தனன். அப்பொழுது வீர்யவந்தனாகிய அப்பரதன் ராமனது ஸமீபத்தில் உட்கார்ந்து தாபஸவேஷந்தரித்து மிகுந்த காந்தியுடன் ப்ரகாசிக்கின்ற ராமனைப் பார்த்துக்கொண்டு பரிசுத்தனாகி ப்ரஹ்மதேவனது எதிரில் மஹேந்த்ரன்போல் கைகூப்பிக்கொண்டிருந்தனன். அப்பொழுது அங்குள்ள பூஜ்யர்களான ஜனங்களெல்லோர்க்கும் 'இப்பொழுது இந்தப்பரதன் ராமனை நமஸ்கரித்து ஸத்காரஞ்செய்து நன்றாகப் பேசுவானோ?' என்று மிகுந்த குதூஹலம் வாஸ்தவமாகவே உண்டாயிருந்தது. பெருந் தைர்யசாலியாகிய ராமன் மஹானுபாவனாகிய

லக்ஷ்மணன் தாமிஷ்டனாகிய பரதன் ஆகிய மூவரும் ஸேனாஹிதர்களால் சூழப்பட்டு யாகத்தில் ஸதஸ்யர்களால் சூழப்பட்ட கார்ஹபத்யம் முதலிய மூன்றக்னிகளைப்போல் மிகவும் ப்ரகாசித்தனர். நூற்றுமூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

---

*பரதன் ராமனை ராஜ்யத்தை அங்கீகரிக்கும்படி வேண்டுதலும், ராமன் பிதாவின் ஆஜ்ஞையைத் தாண்டலாகாதென்று ஸமாதானஞ் சொல்லுதலும்.*

ராமன் தன்னைப்போல் ராஜ்யத்தைத் துறந்து ஜடா[1] வல்கலங்களைத் தரித்துவந்த பரதனைக் குருவான தன்னிடத்தில் ப்ரீதியுடையவனென்றறிந்து பார்த்தரான லக்ஷ்மணனும் தானுமாக அவனை வினவத்தொடங்கினன்—'நீ ஜடைகளைத் தரித்து மரவுரிகளை உடுத்து க்ருஷ்ணாஜினத்தைப் போட்டுக்கொண்டு இவ்வரண்யப்ரதேசத்திற்கு வந்தனையே! இதற்குக் காரணம் யாது? நீயே இதைச் சொல்லக் கேட்க விரும்புகின்றனன், சொல்லுவாய்' என்று வினவி, அவன் சோகத்தால் ஒன்றும் தோன்றாதிருந்தமையில், மீளவும் மஹாநுபாவனாகிய ராமன் பரதனைப் பலாத்காரமாகப் பிடித்துக் கட்டிக்கொண்டு 'நீ ராஜ்யத்தைத் துறந்து க்ருஷ்ணாஜினத்தையும் ஜடைகளையும் தரித்து இந்தேசத்திற்கு எந்தக் காரணத்தைப்பற்றி வந்தனையோ, அதையெல்லாம் சொல்ல உரியவனாயிருக்கின்றனை' என்று வினவுகையில் பரதன் கைகூப்பிக்கொண்டு இங்ஙனம் மொழிந்தனன்—'மஹாபாஹுவாகிய நம் தந்தை மூத்தவனுக்கு உரியதாகிய ராஜ்யத்தை இளையவனுக்குக் கொடுத்துச் செய்யத்தகாத காரியத்தைச் செய்து உன்னைக் காட்டுக்குப் போகவிட்டுப் பின்பு புத்ரசோகத்தால் மிகவும் பீடிக்கப்பட்டு ஸ்வர்க்கம் அடைந்தனர். பரந்தபனே! கேவலம் பெண் பிள்ளையாகிய என் தாய் கைகேயி தூண்டின மாத்ரத்திலேயே மஹாராஜன் தன் கீர்த்தியெல்லாம் பாழாகும்படியான இம்மஹாகோர பாபத்தைச் செய்

தன்ன. இப்படிப்பட்ட மஹாபாபகார்யத்திற்கு முயன்ற
என் தாயாகிய அப்பெண்பிள்ளை, தான் விரும்பின ராஜ்
யத்தைப் பெறுமலே விதவையாகிச் சோகத்தால் இளை
த்து மஹாகோரமான நரகத்தில் விழப்போகின்றனள்
அவளது வயிற்றில் பிறந்து வீணான அபவாதத்திற்கா
ளாயிருக்கின்ற உன் தாஸனாகிய என்னிடத்தில் அனுக்ர
ஹஞ்செய்ய வேண்டும் இப்பொழுதே நீ தேவேந்த்ரன்
போல் அரசாட்சியின் நிமித்தமாக அபிஷேகங்கொண்
டருள்வாயாக இந்த ப்ரஜைகளும் விதவையான தாய
மார்களும் எல்லோரும் உன்னிடம் வந்திருக்கின்றனர்,
ஆகையால் அனுக்ரஹிக்க உரியவனாயிருக்கின்றனை ரா
மா! நீ நமது வம்சத்தின் பெருமையைக் காப்பாற்று
பவன் ஆகையால் ஜ்யேஷ்ட க்ரமமாக வருவதுபற்றி
யும் உனக்கே தகுந்திருப்பதுபற்றியும் இந்த ராஜ்யத்
தைத் தாமதத்தின்படி கைப்பற்றுவாயாக. அங்ஙனங்
கைப்பற்றி நண்பர்களெல்லாருடையவும் விருப்பத்தை
நாட்டேற்றுவாயாக. நிர்மலனான சந்த்ரன்போன்ற பர்த்
தாவாகிய உன்னால் சரத்காலத்து ராத்ரிபோல் விளங்கு
கின்ற இந்தப்புவனி முழுவதும் [1] வைதவ்யம் நீங்கிருக்
குமாக இம்மந்த்ரிகளெல்லாரோடும் கூட நான் தலை
யால் வணங்கி யாசிக்கின்றனன், தம்பியும் சிஷ்யனும்
தாஸனுமாகிய என்னிடத்தில் அனுக்ரஹஞ் செய்ய
உரியவனாயிருக்கின்றனை. புருஷதிலகனே! நமது பட்ட
ணத்தில் பரம்பரையாய் வந்தவர்களும் தந்தைபாட்டன்
மார்களை ஸம்பந்தித்தவர்களும் பூஜைக்குரியவர்களுமா
கிய திரள்திரளாக இதோ வந்திருக்கின்ற இம்மந்த்ரி
முதலானவர்களெல்லோரும் ஒன்றாகச் சேர்ந்து சொல்லு
கிற வார்த்தையை உல்லங்கனஞ் செய்யலாகாது' என்ற
னன் கைகேயியின் புதல்வனாகிய பரதன் இங்ஙனஞ்
சொல்லி நீண்ட பாஹுதண்டங்களை நீட்டிக் கண்ணீர்
பெருக ராமபாதங்களைத் தலைசாய்த்து விசிப்படி பிடித்
துக்கொண்டு நமஸ்காரஞ் செய்தனன். மதித்த யானை

1 வைதவ்யம்-விதவையாயிருத்தல்

வன், மிகவும் பெரும் புகழ் பெற்றவன்; உன் தந்தை ஸுகமாயிருக்க விரும்புவாயாயின், ராமன் சொன்னபடி நடத்தவேண்டும் ராமன் எப்பொழுதும் தந்தைக்குக் கடன்பட்டிருக்கவேண்டுமென்று எங்கள் விருப்பம். தசரதன் கைகேயியினிடத்தினின்று தீர்த்துக்கொள்வதனால் ஸ்வர்க்கம் பெற்றனன் நீங்கள், அவ்வரசன் கைகேயிக்குக் கொடுத்த வார்த்தை அபத்தஞ் செய்வீர்களாயின், அவன் ஸ்வர்க்கம் போகப்பெறுன்' என்றனர். இப்படி மஹாரிஷிகளும் கந்தர்வர்களும் ராஜரிஷிகளும் பரதனுக்கு இதமிட்டுச் சொல்லி அப்பொழுதே எல்லோரும் தத்தமதிருப்பிடங்களுக்குப் போயினர். அழகிய காட்சியுடையோனாகிய ராமன் அவர்களது சுபவார்த்தையைக் கேட்டு மிகவும் மனக்களிப்புற்று முகத்தில் ஸந்தோஷம் நன்கு விளங்கப்பெற்று அந்த ரிஷிகளெல்லோரையும் பூஜித்தனன். பிறகு அபராதனேனென்றால் தன் விருப்பம் கொண்சமாயினும் ரடேறு திருப்பது கண்டு அவயவங்களெல்லாம் விலவிலத்துப்போகவும் வார்த்தைகள் தழுதழுக்கவும் பெற்றுக் கைகூப்பிக்கொண்டு மீளவும் ராமனைப் பார்த்து மொழிந்தனன் —'அரசர்களுக்கு ராஜ்யபரிபாலனஞ் செய்கையே தர்மம்; மூத்தவன் பட்டாபிஷேகம் பெறுவது எமது குலத்தில் இடைவிடாமல் நடந்து வருந்தர்மம், இவ்விரண்டு தர்மங்களையும் ஆலோசித்து, என் தாயவேண்டுகோளையும் பார்த்து அநுக்ரஹம் செய்ய உரியவனாயிருக்கின்றனை. மிகவும் பெரிதான இந்த ராஜ்யத்தை ரக்ஷிக்கவாவது, உன்னிடத்தில் பரீதியுடைய [1] பௌர ஜானபதர்களை மேன்மேலும் பரீதியுறச் செய்யவாவது நானொருவன் வல்லனல்லேன். நம் பந்துக்களும் ஸேனாதிபதிகளும் நண்பர்களும் நம்மிடத்தில் நல்ல மனமுடைய மற்றவர்களும், உழுது ஜீவிக்குங் குடிகள் மேகத்தை எதிர்பார்ப்பதுபோல், உன்னையே அரசனாகும்படி எதிர்பார்க்கின்ற

1 பௌரா-பட்டணத்து ஜனங்கள். ஜானபதர்-ஜனபதத்து ஜனங்கள் - ஜனபதம் - தேசம் - நாட்டுப்புறத்து ஜனங்களெனக.

னர் மிகுந்த அறிவுடையவனே! நீ அப்படிப்பட்ட இந்த ராஜ்யத்தைக் கைப்பற்றி நிலைநிறுத்துவாயாக. இந்தக் கோஸல ராஜ்யத்தை மாத்ரமே அன்று; காகுத்ஸ்தனே! நீ இந்த லோகத்தையெல்லாம் பரிபாலிக்க வல்லவன்' என்றுரைத்துத் தான் ப்ரக்கச்செய்த உபாயங்களெல்லாம் வீணாகையில், [1] கதியந்தரமில்லாமையால் இனிமையுடன் மொழிய வல்லனாகிய அப்பரதன் அப்பொழுது ப்ராதாவாகிய ராமனது பாதங்களில் வீழ்ந்து பலவாறு ப்ரார்த்தித்தனன். கறுத்த சரீரகாந்தியுடையவனும் தாமரையிதழ்போன்ற கண்களுடையவனும் மதித்த ஹம்ஸத்தின் கண்டஸ்வரம் போன்ற கண்டஸ்வரமுடையவனுமாகிய அந்தப்பரதனை ராமன் தானே எடுத்து மடிமேலிட்டுக்கொண்டு 'உனக்கு ஸஹஜமான புத்தியும் குருசிக்ஷையாலுண்டாகும் புத்தியும் இதற்கு முன்னமே ஸித்தமாயிருக்கின்றன, அப்பனே! ஆகையால் நீ இப்பூமண்டலத்தையெல்லாம் பரிபாலிப்பதற்கு மிகவும் வல்லனாகின்றனை. நீ ப்ரதான மந்த்ரிகளோடும் ஸ்னேஹிதர்களோடும் புத்தியிற் சிறந்த உபமந்த்ரிகளோடும் கூடி ஸர்வகார்யங்களையும் நன்காலோசித்து எப்படிப்பட்ட பெரிய கார்யங்களாயினும் நடத்துவாயாக. காந்தி சந்த்ரனை விட்டொழிந்தாலும் ஒழியும்; ஹிமவத்பர்வதம் பனிகளை இழந்தாலும் இழக்கும், ஸமுத்ரம் தன் கரையை மீறினும் மீறும்; அவ்வளவேயன்றி நான் மாத்ரம் தந்தைக்குச் செய்த ப்ரதிஜ்ஞையை உல்லங்கனஞ் செய்யமாட்டேன். என்னப்பனே! '_ _ பெண்பிள்ளையின் பேராசையால் நேரிட்ட ப்ரதிஜ்ஞையைத் தவறுவது யுக்தமே' என்கிறாயோ? விஷயங்களிலுள்ள காமத்தினாலோ, ராஜ்யஞ் செலுத்தவேண்டு

1. வேறுகதி.

மென்னும் பேராசையாலோ, உன் தாய் உனக்காக இந்தக் காரியஞ் செய்தனள்; அதை நீ மனத்தில் வைக்கலாகாது. நீ அவளைத் தாயைப்போலவே பார்த்து நடக்கவேண்டும்' என்று மொழிந்தனன். தேஜஸ்ஸினால் ஸூர்யன்போன்றவனும் எதிரில்லாத தேஜஸ்ஸுடன் விளங்கி மேன்மேலும் வளர்ந்து வருந்தன்மையினால் ப்ரதமையினின்று சந்த்ரனோடொத்த காட்சியுடையவனும் அனைவராலும் பூஜிக்கத் தகுந்தவனுமாகிய ராமன் இங்ஙனஞ் சொல்லுவதைக் கண்டு பரதன் அவனை நோக்கி 'ஐயனே! ஸ்வர்ணமயமாகி விளங்குகின்ற இப்பாதுகைகளின்மேல் உனது பாதங்களையிட்டு ஏறுவாயாக. இவையே ஸமஸ்த லோகங்களுக்கும் யோகக்ஷேமங்களை நடத்தவல்லவை' என்றனன். மஹாதேஜஸ்வியாகிய அந்தப் புருஷஸ்ரேஷ்டனும் அந்தப் பாதுகைகளின் மேலேறி மீளவும் இறங்கி மஹானுபாவனாகிய பரதனுக்குக் கொடுத்தனன். அனந்தரம் பரதன் அந்தப் பாதுகைகளை நமஸ்கரித்து ராமனைப் பார்த்து மொழிந்தனன் —'வீரோத்தமா! ரகுகுலகுமாரனே! நான் பதினாலு ஸம்வத்ஸரங்கள் ஜடைகளைத் தரித்து மரவுரிகளை உடுத்துக் காய் கிழங்குகளை ஆஹாரமாக உட்கொண்டு பரந்தபனாகிய உன் பாதுகைகளின்மேல் ராஜ்ய தந்த்ரங்களை யிட்டுப் பட்டணத்திற்கு வெளியில் வாஸஞ் செய்து உன்னை யெதிர்பார்த்துக் கொண்டிருப்பேன். ரகூத்தமனே! பதினாலு ஸம்வத்ஸரங்கள் நிரம்பிப் பதினைந்தாவது ஸம்வத்ஸரத்தின் முதனாள் உன்னைப் பாரேனாயின் தப்பாமல் அக்னியில் குதித்து விடுவேன்' என்றனன். ராமன் 'அப்படியே ஆகட்டும்' என்றொப்புக்கொண்டு அந்தப் பரதனை ப்ரீதியுடன் கட்டிக்கொண்டு சத்ருக்னனையும் அணைத்துக் கட்டிப் பரதனைப் பார்த்து 'ரகுமன்னவர்களில் மேன்மையுற்றவனே! தாயாகிய கைகேயியைப் பாதுகாப்பாயாக. அவள்மேல் கோபஞ்

செய்யாதே. இப்படிக்கு என்மீதும் ஸீதைமீதும் ஆணை யிட்டுச் சொல்லுகிறேன்' என்றிங்ஙனஞ் சொல்லிக் கண் களிரண்டிலும் நீர் திரும்பப் பெற்றுத் தம்பியாகிய பரதனை விடைகொடுத்தனுப்பினன். பரதாபசாலியும் தா மங்களை யறிந்தவனுமாகிய அப்பரதன் நன்கலங்கரிக்கப் பட்ட அந்தப் பாதுகைகளை விசேஷமாகப் பூஜித்து ராமனைப் பிரதக்ஷிணஞ் செய்து அவைகளை ராஜாக்களுக் குரிய உத்தமகஜமான சத்ருஞ்ஜயத்தின் சிரஸில் வைத் தனன். பிறகு ராமன் ஹிமவத்பர்வதம்போல ஸ்வதா மத்தில் சலியாமல் ஸ்திரமாயிருப்பவனுகையாலும் ரகு வம்சத்தை வளர்ச் செய்பவனாகையாலும் எவர் தூண்டி னாலும் அசையாமல் குருக்களையும் மந்திரிகளையும் அந்த ஜனங்களையும் தம்பிகளாகிய பரத சத்ருக்னர்களையும் அவரவர்க்குத் தகுந்தபடி க்ரமந்தவறாமல் பூஜித்து எல்லோரையும் விடை கொடுத்தனுப்பினன் தாய்மார் கள் கண்ணீர் கண்டத்தில் வந்தடைக்கப் பெற்று மன வருத்தத்தினால் ராமனைப் பார்த்துப் போய்வருகிறோ மென்று விடை பெற்றுக் கொள்ள வல்லமையற்றிருந்த னர். அந்த ராமன் தானே தாய்மார்களெல்லார்க்கும் நமஸ்காரஞ் செய்து கண்ணீர் பெருக்கிக் கொண்டே தன் பர்ணசாலையுள் ப்ரவேசித்தனன் நூற்றுப்பன்னிரண்டா வது ஸர்க்கம் முற்றிற்று.

பரதன் அயோத்யையுள் ப்ரவேசித்தல்

பிறகு பரதன் அப்பொழுது சத்ருஞ்ஜயத்தின் சிரஸிலிருக்கின்ற ராமபாதுகைகளைத் தன்சிரஸிலிட்டுக் கொண்டு பரம ஸந்தோஷத்துடன் சத்ருக்னனும் தானு மாக ரதத்தின் மேலேறினன். வஸிஷ்டரும் வாமதேவ ரும் திடமான வ்ரதமுடைய ஜாபாலியும்[1] மந்த்ராலோசனை

1. மந்த்ரம்-ஆலோசனை.



1188 பரதன ஸ்ரீராம பாதுகைகளைச சிரஸில தரித்து வஸிஷடாதிகளை முனனிட்டுககொணடு சிதரகூடத்தி லிருநது அயோதயைககுப போதல.

களில் வல்லராகையால் பூஜிக்கப்பட்ட ஸமஸ்த மந்த்ரிகளும் முன்னே போயினர். அப்பொழுது அவர்கள் ராமனது வாஸஸ்தானமாகையால் மஹாபாவநமான சித்ரகூடத்திற்கு ப்ரதக்ஷிணமாகக் கிழக்கு திசையைப் பிடித்து ஸீதாராமர்களின் ஜலக்ரீடைகளால் ரமணீயமான மந்தாகினீ நதியைச் சேர்ந்தனர். அப்பொழுது பரதன் ஸைன்யங்களோடுகூடப் பலவகையுடன் அழகாகப் புலப்படுகின்ற அநேகமாயிரங்கணக்குள்ள கைரிகதாதுக்களைப் பார்த்துக் கொண்டே அப்பர்வதத்தின் பக்கத்து வழியாகப் போயினன். அப்பொழுது பரதன் சித்ரகூடபர்வதத்தின் ஸமீபத்தில் பரத்வாஜமுனிவர் வாஸஞ் செய்கின்ற ஆஸ்ரமத்தைக் கண்டனன். அப்பரதன் சிறந்த மதியுடையவனாகையால் அப்பொழுது அந்தப் பரத்வாஜாஸ்ரமத்திற்குச் சென்று ரதத்தினின்று இறங்கி அம்முனிவரது பாதங்களில் வந்தனஞ் செய்தனன். பிறகு பரத்வாஜரும் அவனது வரவுக்கு மிகவும் ஸந்தோஷமடைந்து. அப்பரதனை நோக்கி [1] 'என்னப்பா! நீ போனகார்யம் ஆயிற்று? ராமனைப் பார்த்தாயா?' என்று வினவினர் புத்திசாலியாகிய பரத்வாஜர் இங்ஙனங் கேட்கையில், பிறகு உடன்பிறந்தவனிடத்தில் மிகுந்த ப்ரீதியுடைய பரதன் அவரை நோக்கி 'ராமன் பராக்ரமம் திடமாயிருக்கப் பெற்றவனன்றோ? ஆகையால் நானும் [illegible]கிய வஸிஷ்டரும் ராஜ்யத்தைக் கைப்பற்ற வர வேண்டுமென்று வேண்டுகையில், அவன் மிகவும் ஸந்தோஷித்து வஸிஷ்டரைப் பார்த்து 'தந்தை கைகேயிக்காகப் பதினான்கு ஸம்வத்ஸரங்கள் நான் அரண்யத்திலிருக்கும்படிக்குச் செய்த ப்ரதிஜ்ஞையை யதார்த்தமாகப் பரிபாலனஞ் செய்வேனன்றி விடமாட்டேன்'

---

1. 'அபிக்ருத்யம் க்ருதந்தாத ராமேண ச ஸமாகதம்' என்று மூலம். (உன் கார்யம் ராமனால் செய்யப்பட்டதா? நீ ராமனோடு கலந்தனையா?) என்று பதத்தின்மேல் பொருள் இதன் தாத்பர்யத்தை உட்கொண்டு (ராமனைப் பார்த்தாயா? நீ போனகார்யம் ஆயிற்று?) என்று கூறப்பட்டதென்றுணர்க.

என்றனன். அவன் இப்படி உரைக்கையில், மஹாப்ராஜ்ஞரும் வாக்யங்களை யறிந்தவருமாகிய வஸிஷ்டர் வாயாரப் பேசவல்லனாகிய ராமனைப் பார்த்து மிகுந்த பொருளமைந்திருக்கும்படி 'ராமா! நீ சிறந்த அறிவுடையவன்; ஆகையால் ஸுவர்ணத்தால் அலங்கரிக்கப்பட்டு உனக்காகக் கொண்டுவரப்பட்ட இந்தப் பாதுகைகளை நீ உன் பாதங்களில் சாத்திக்கொண்டு கொடுப்பாயாக. இவையே அயோத்தையில் நின்று எமது யோகக்ஷேமங்களை நடத்தவல்லவை' என்றனர். வஸிஷ்டர் இங்ஙனஞ் சொல்லக் கேட்ட ராமன் கிழக்கு முகமாக நின்று அந்தப் பாதுகைகளின்மேல் அடிகளை வைத்து எனக்கு ராஜ்ய ரக்ஷணத்திற்காக அவைகளைக் கொடுத்தனன். மிகவும் மஹானுபாவனாகிய ராமனிடம் அனுஜ்ஞையைப் பெற்று மங்கலகரமான அப்பாதுகைகளை எடுத்துக்கொண்டு திரும்பி அயோத்தைக்கே போகிறேன்' என்றனன். மஹானுபாவனாகிய பரதன் சொன்ன இந்தச் சுபவாக்யத்தைக் கேட்டு பரத்வாஜ மஹர்ஷியும் அவனைப் பார்த்து மிகவும் சுபமான வாக்யத்தை மொழிந்தனர்:— 'புருஷஸிம்ஹனே! நல்ல ஸ்வபாவமும் நல்ல நடவடிக்கையு முடையவர்களில் நீ மேலானவன்; ஆகையால் பள்ளத்தில் ஜலம் தேங்குவதுபோல உன்னிடத்தில் மூத்தவனைப் பின் செல்லவேண்டுமென்னும் நன்மை நிலைநின்றிருக்கின்றது. ஆகையால் இது ஓராச்சர்யமன்று. மஹாபுஜனாகிய உன் தந்தை தசரதனுக்கு தர்மங்களை யுணர்ந்தவனும் தர்மங்களில் விருப்பமுடையவனுமாகிய இப்படிப்பட்ட ஸத்புத்ரன் நீ இருக்கிறாயாகையால் அவன் மரணமடையவில்லை, இன்னும் பிழைத்தேயிருக்கிறான்' என்றனர். மஹானுபாவராகிய அம்முனிவர் இங்ஙனம் மொழிகையில் பரதன் கைகூப்பிப் பாதங்களைப் பிடித்துக்கொண்டு விநயத்தினால் விடை பெற்றுக்கொள்ள முயன்றமை தோற்றநின்றனன். பிறகு ஸ்ரீமானாகிய பரதன் பரத்வாஜ மஹர்ஷியை அடிக்கடி வலஞ் செய்து மந்திரி

ளோடுகூட அயோத்யைக்குப் போயினன். மிகவும் பரப்புள்ள அந்தப் பரதஸைன்யம் பல்லக்குகளோடும் வண்டிகளோடும் குதிரைகளோடும் கூடி மீளவும் திரும்பி அப்பரதனைப் பின்சென்றது. பிறகு அவர்களெல்லோரும் அலைகளின் வரிசைகளால் அழகாகப் புலப்படுகின்ற திவ்யநதியாகிய யமுனையைத் தாண்டி அழகிய ஜலத்துடன் விளங்குகின்ற கங்காநதியை மீளவும் கண்டனர். அப்பரதன் பந்துக்களோடும் ஸேனைகளோடும் அழகிய ஜலப்ரவாஹம் நிறைந்த அக்கங்காநதியைத் தாண்டி ரமணீயமான் ச்ருங்கிபேரபுரத்திற்குப் போயினன். அவன் ச்ருங்கிபேரத்தினின்றும் புறப்பட்டு மீளவும் அயோத்யையைக் கண்டனன். பரதன் தந்தையாலும் ப்ராதாவாலும் துறக்கப்பட்ட அவ்வயோத்யையைக் கண்டவுடன் துக்கத்தினால் மிகவும் பரிதபித்துக்கொண்டு ஸாரதியைப் பார்த்து 'ஸாரதி! அப்படிப்பட்ட அயோத்யை ராமவியோக துக்கத்தால் பீடிக்கப்பட்டுக் கலங்கி நலங்குலைந்து உருவம் மாறி ஆநந்தமின்றித் தீனையாகி ஒலியற்று விளங்காதிருக்கின்றது, பார்' என்றனன். நூற்றுப்பதின்மூன்றாவது ஸர்க்கம் முற்றிற்று.

{ பரதன் அயோத்யை விராநந்தமாயிருப்பது கண்டு சோகித்தல். }

பெருங்கீர்த்தியுடையவனும் ஸமர்த்தனுமாகிய பரதன் செவிக்கினிய கம்பீரத்வனியுடைய ரதத்தின் மேலேறிச் சென்று சீக்ரமாக அயோத்யாபுரியுள் ப்ரவேசித்தனன். அப்பொழுது அந்தப்பட்டணம் முன்பு மனிதர்களும் யானைகளும் உலாவப்பெற்றிருப்பதுபோயப் பூனைகளும் கோட்டான்களும் திரியப்பெற்று, ஒளியின்றி இருள் மூடப்பெற்ற க்ருஷ்ணபக்ஷத்து ராத்ரிபோல

வும், முன்பு மிகுந்த ஒளிவெள்ளத்துடன் பரகாசித்துக் கொண்டிருந்து புதிதாகக் கிளம்பின அங்காரகனால் பீடிக்கப்பட்டுத் தனியாகிப் பரிதபிக்குஞ் சந்த்ரபத்னி யாகிய ரோஹிணி போலவும், தண்ணீரெல்லாம் வெயிலில் வற்றி வெந்நீராகிக் கலங்கிப்போகையில் பக்ஷிகள் அந்த வெப்பம்பொறுக்கமுடியாமல் மிகவும் பரிதபிக்கவும் சிறு மீன் பெருமீன் முதலை முதலிய ஜலஜந்துக்களெல்லாம் மறையவும் பெற்றுச் சிறுத்திருக்கிற ஒரு மலையாறுபோல வும், முதலில் புகையின்றிப் பொன்போல விளங்கிப் பின்பு தயிர் முதலிய ஹவிஸ்ஸுக்களை யிடுகையில் மழுங்கின யாகாக்னிஜ்வாலைபோலவும், மஹாயுத்தத்தில் மேலான வீரர்கள் முடிவாக கவசங்கள் முறிய யானைகளும் குதி ரைகளும் நோவுபட்ட தேர்களும் கொடிமரங்களும் ஒடிந்துவீழ ஆபத்தையடைந்த ஸேனைபோலவும், முத லில் காற்றின் வேகத்தினால் நுரைகளோடும் பெருங் கோஷத்தோடும் ஸமுத்ரத்தினின்றும் கிளம்பி உடனே அக்காற்றின் வேகம் அடங்கிப்போகையில் நுரைகளும் சப்தமுமின்றி ஓய்கின்ற நீரலைபோலவும், யாகம் முடியுந் தினம் நடக்க உத்தமர்களான ருத்விக்குகள் யாகத்திற்கு வேண்டிய ஸாமான்களையெல்லாம் எடுத்துக்கொண்டு போகையில் சந்தடியின்றிச் சூன்யமாகிய யாகவேதிகை போலவும், தமக்கு நாயகனாயிருந்த காளையெருது தம மை விட்டுப்போகையில் தொழுவத்தினிடையில் அகப் பட்டு அதையே நினைத்துக்கொண்டு முன்னிட்டுவைத்த பசும்புல்லையுந் தின்னாமல் வருந்திய ஆநிரைபோலவும், மிகுந்த நீரோட்டத்துடன் விளங்கி எரிவனபோன்ற பத்மராகம் முதலிய சிறந்த ஜாதிரத்னங்களின்றிய முத்துமாலைபோலவும், புண்யமெல்லாம் அழிகையில் திடீ லென்று ஸ்தானத்தினின்றும் சலித்து ஆகாயத்தி னின்று நழுவிக் கீழேவிழுந்து ஒளிபெருக்கை யிழந்த நக்ஷத்ரம்போலவும், வஸந்தகாலத்தின் முடிவில் புஷ்

பங்கள் நிறைந்து வண்டுகள் மதித்து ஜங்காரஞ்செய்யப் பெற்றிருந்து வேகத்துடன் படர்ந்தெரிகின்ற காட்டுத் தீயால் கொளுத்தப்பட்டு வாடி வதங்கின காட்டுக் கொடிபோலவும் புலப்பட்டது. மேலும், அந்தப்பட்டணம் மார்க்கத்தில் ஜனஸஞ்சாரமின்றிக் கடைகள் மூடப்பெற்று க்ரயவிக்ரயாதிகளற்று நிஸ்ஸப்தமாக ஓய்ந்திருக்கையால் மேகங்களால் மறைக்கப்பட்ட சந்த்ரனையும் நக்ஷத்ரங்களையுமுடைய ஆகாயம் போலவும், மேல் மறைவில்லாத இடத்தில் சிந்த மத்யங்களெல்லாம் பாழாகவும் மத்ய பாத்ரங்கள் உடையவும் கள்குடித்து மதித்த ஜனங்கள் அடிபட்டோடவும் பெற்று ஸம்ஸ்காரமொன்றுமில்லாத பானபூமியைப்போலவும், பூமியெல்லாம் பிளந்து பள்ளமாகிப் பாத்ரங்களும் உடைந்து ஜலமெல்லாம் செலவழிந்து முறிந்து தரையில் வீழ்ந்த தண்ணீர்ப்பந்தல்போலவும், தனுஸ்ஸில் ஏற்றப்பட்டதும் இரண்டு நுனிகளிலும் வில்லுடன் சேர்த்துக் கட்டும் பொருட்டு ஸித்தப்படுத்தின கயிறுகளுடையதும் அகன்றதும் யுத்தகாலத்தில் சத்ருக்களது பாணங்கள் பட்டறுந்து வில்லினின்றும் கீழே விழுந்ததுமாகிய நாண் போலவும், யுத்தத்தில் ஸமர்த்தனாகிய குதிரைப்பாகன் மேலேறி நடத்துகையில் மேல்வழிநடக்க முடியாமல் இளைப்புற்று அலங்காரங்களெல்லாம் எடுக்கப்பெற்று துர்ப்பலமான பெண்குதிரைக்குட்டிபோலவும், ஜலம் ஸமருத்தமாயிருக்கும்பொழுது பல மீன்களும் ஆமைகளும் நிறையப்பெற்றிருந்து ஜலம் உலர்ந்துபோகையில் அவையெல்லாமற்றுக் கருநெய்தல்களும் பறிக்கப்பெற்றுக் கரைகளும் உடைந்து விஸ்தாரமாகிய நடைவாவி போலவும், சந்தனம் முதலிய வாஸனைப் பூச்சுக்களொன்றுமின்றிச் சோகத்தினால் பரிதபித்துக் களிப்பற்று இளைத்திருக்கின்ற [1] துக்கிதனுடைய தேஹம்போலவும்,

1. துக்கிதன் - துக்கப்பட்டவன்.

வாஷாகாலம் முதிாநது வருகையில ஸூர்யன மேக மண்டலத்தில புகக கறுத்த மேகஙகளால மறைககப பட்ட அவனுடைய தேஜஸ்ஸுபோலவும புலபபடுகினற அயோதயையுள பரதன பரவேசிததனன. தசரதனது செலவககுமாரனுகிய அநதப பரதன ரததகிலிருநது கொணடே அமமேலான ரததகதை நடததுகினற ஸாரதி யைப பாாதது மொழிநதனன — ‘முனபு அயோதயை யில கீதவாதயஙகளினெலி கமபீரமாகி நாறபுறமும பர நது செவிபபடடுககொணடிருநதது இபபொழுது ஏனே அநத தவனி அயமனமே செவிபபடாதிருககினறது? மோகத மாதாததில மததகதை விளைககுமபடியான மதய கநதமும பூமாலைகளின வாஸனையும புகைககபபட்ட அகுருதூபஙகளின மணமும முனபோலப பட்டணம முழுவதும நிரமபி நாறபுறமும வீசாதிருககினறதே. ராமன அரணயம போகையில இபபொழுது இவவயோத யாபுரததில பலலககு முதலிய மேலான வாஹனங்களின தவனியும குதிரைகளின இனிய கனைபபுகளும மதிதத யானைகளின காஜனைகளும ரதஙகளின பேரொலிகளும செவிபபடாதிருககினறன. ராமன அரணயம போகை யில, யௌவனபபருவம நிறைநதவா அனைவரும துக கததினுல பரிதபிததுச சநதனம அகுரு முதலிய வாஸ னைப பூசசுககளையும மிகவும் மேலான பூமாலைகளையும அனுபவியாதிருககினறனா. பட்டணம முழுவதும ராம சோகததினுல பீடிககபபட்டிருபபதுபறறிப புருஷாகள பலவகைப பூமாலைகளை அணிநது விளையாடுவதறகு வெளிபபுறபபடாதிருககினறனா. உதஸவஙகள எவை யும நடககவிலலை. எலலாததையனுகிய ராமனேடு கூடவே அயோதயையின காநதியும போனறுபோலிருககினறது. இது வாஸதவம். விடாமழையுடன கூடிய சுகலபகூஷதது ராததிரிபோல இவவயோதயை எளளளவும விளஙகா

திருக்கின்றது. என்றெண்ணுகிய ராமன் மஹோத்ஸ வம்போல வந்து வெயிற்காலத்து மேகம்போல இவ் வயோத்யையிலுள்ள ஜனங்களுக்கு எப்போது ஸந்தோ ஷத்தை விளைக்கப்போகின்றானோ? நன்கு அலங்காரஞ் செய்துகொண்டு மிடுக்குடன் நடக்குந் தன்மையரான யௌவனப்பருவ முடையவர் முன்பு எப்பொழுதும் ஸஞ் சரித்துக் கொண்டிருப்பார்கள், இப்பொழுது அவர்கள் அங்ஙனம் ஸஞ்சரிக்காமையால் அயோத்யையிலுள்ள ராஜமார்க்கங்களெல்லாம் விளங்காதிருக்கின்றனவே' என்றுன்ன பரதன் இங்ஙனம் பலவாறு ஸாரதியைப் பார்த்துச் சொல்லிக்கொண்டே மஹாராஜரில்லாமை யால் ஸிம்ஹமில்லாத குஹைபோல புலப்படுகிற தந்தை யின் மாளிகையுள் ப்ரவேசித்தனன். அப்பொழுது மஹானுபாவனும் தீரனுமாகிய பரதன் தேவாஸுர யுத்தத்தில் தேவதைகள் தோல்வியடைந்து ஸூர்யனும் ராஹுவால் அடிபட்டிருக்கையில் ராத்ரி பகலென்னும் பிரிவினையின்றிய தினம்போல ஒளியற்று ஜனஸஞ்சார மில்லாத அவ்வந்தப்புரத்தை யெல்லாம் பார்த்து மிக வும் வருந்திக் கண்ணீர் பெருக்கினன். நூற்றுப்பதினொன் றாவது ஸர்க்கம் முற்றிற்று

{ பரதன் அயோத்யையை விட்டு நந்திக்ராமத்தில் ராமபாதுகைகளை முன்னிட்டு ராஜ்ய பரிபாலனஞ் செய்தல். }

பிறகு வ்ரதங்களில் நிலைநின்ற பரதன் அயோத்யை யில் தாய்மார்களைவிட்டு மனவருத்தத்துடன் வஸிஷ்டர் முதலான பெரியோர்களைப் பார்த்து 'நான் இப்பொழுது நந்திக்ராமம் போகிறேன். இப்பொழுதே உங்களெல்லோ ரிடத்திலும் விடைபெற்றுக்கொள்ளுகிறேன். அங்கு ராம வியோகத்தாலுண்டாகிற இம்மனவருத்தங்களை யெல் லாம் பொறுக்கவல்லேனேயன்றி இங்கு எள்ளளவும் பொறுக்கமாட்டேன். என்தந்தை ஸ்வர்க்கம் அடைந்த

னரல்லவா; என்தன்ணனும் அரண்யம் போயினன்; மஹா யசஸ்வியாகிய அந்த ராமனேயன்று ராஜாவாக வேண்டும், ஆகையால் ராஜ்யத்திற்கு ராமன் வருமவரை ம் அவனை எதிர்பார்த்துக் கொண்டிருக்க ன?' என்றனன். மஹானுபாவனாகிய பரதன் சொன்ன இந்தச் சுபவாக்யத்தைக் கேட்டு மந்திரிகளெல்லோரும் புரோஹிதராகிய வஸிஷ்டரும் அவனைப்பார்த்து 'பரதா! உடன் பிறந்தவனிடத்திலுள்ள ஸ்னேஹத்தினால் நீ இப்பொழுது சொன்ன வார்த்தை மிகவும் புகழத்தகுந்ததாகவே யிருக்கின்றது; இப்படிப்பட்ட வார்த்தை உனக்கே தகும். நீ எப்பொழுதும் பந்துக்களிடத்தில் மிகவும் ப்ரீதியுடையவன், மேலும் அண்ணன் தம்பிகளிடத்தில் ஸ்னேஹம் விளங்கப்பெற்றவன், இங்ஙனம் பூஜிக்கத் தகுந்த மார்க்கத்தில் முயன்றிருக்கிற நீ சொல்லும் வார்த்தையை எவன் ஸம்மதிக்கமாட்டான்?' என்றனர். அவனும் தான் விரும்பினபடி இனிதாக மந்திரிகள் மொழிந்த உரைகளைக் கேட்டு ஸாரதியைப் பார்த்து ரதம் ஸித்தப்படுத்துவாயென்று ஆஜ்ஞாபித்தனன். அச் செல்வக்குமாரன் முகத்தில் ஸந்தோஷம் பொங்கிவழியப் பெற்றுத் தாய்மார்களெல்லோர்க்கும் நமஸ்காரஞ்செய்து சத்ருக்னனும் தானுமாக ரதத்தின்மேலேறினன். இங்ஙனம் பரத சத்ருக்னர்களிருவரும் மிகுந்த மனக்களிப்புடன் ரதத்தின்மேலேறி மந்திரிகளும் புரோஹிதரும் சுற்றிச் சூழ்ந்துவரப்பெற்றுச் சீக்ரமாகப் போயினர். அவர்களில் குருக்களாகிய வஸிஷ்டர் முதலிய ப்ராஹ்மணர்களெல்லோரும் முன்னதாகக் கிழக்குமுகமாக நடந்து நந்திக்ராமமிருக்குமிடத்திற்குப் போயினர். பரதன் போனவுடனே அவன் வாருங்களென்ன அழைக்காமற் போயினும் ரத கஜ துரகங்கள் நிறைந்த

ஸைன்யமெல்லாம் அவனைப் பின்சென்று போயிற்று. அயோத்யையிலுள்ள ஜனங்களெல்லோரும் அங்ஙனமே அவனைப் பின்றொடர்ந்தனர். உடன் பிறந்தவரிடத்தில் ப்ரீதியுடையவனும் தர்மஸ்வபாவனுமாகிய பரதன் ரதத்திலிருந்தே ராமபாதுகைகளைச் சிரத்திலிட்டுக்கொண்டு சீக்ரமாக நந்திக்ராமத்திற்குப் போயினன். பிறகு பரதன் சீக்ரமாக நந்திக்ராமத்திற்குள் ப்ரவேசித்து ரதத்தினின்றும் வேகத்துடனிழிந்து வஸிஷ்டர் முதலிய குருக்களைப் பார்த்து 'என் தமையன் இந்த ராஜ்யத்தை என்னிடத்தில் தான் [1] நிக்ஷேபமாகவே வைத்திருக்கின்றனன். ஆகையால் இதை முழுவதும் அவனுக்குத் திருப்பிக் கொடுக்கவேண்டியதே. நிக்ஷேபமாக வைத்ததை ரக்ஷிக்கை முதலிய ஸ்வாதந்த்ரயம் எனக்கில்லை. ஸ்வர்ணமயமாகி விளங்குகின்ற இப்பாதுகைகளே இதன் யோகக்ஷேமங்களை நிறைவேற்றவல்லவை' என்றனன். பிறகு, ராமன் தனக்குப் பதிலாகக் கொடுத்த பாதுகைகளைப் பரதன் சிரஸினால் வஹித்து மனவருத்தத்துடன், கூட்டங்கூடி நிற்கிற ப்ரஜைகளெல்லோரையும் பார்த்து 'இந்தப் பாதுகைகளுக்கு வெண்கொற்றக்குடையும் சாமரங்களும் பிடிப்பீர்களாக. இவை பூஜிக்கத்தகுந்த ராமனது பாதங்களாகவே பாவிக்கத் தகுந்தவை. இந்த என் தமையனது பாதுகைகளாலேயே ராஜ்யத்தில் தர்மம் நிலை நின்றிருக்கும். என்னையன் ஸ்னேஹத்தினால் என்னிடத்தில் இவைகளை வைப்பாக வைத்தனன். ஆகையால் நான் அந்த ராகவன் வரும் வரையில் இவற்றைப் பாதுகாத்து வருவேன். ராமன் வந்தவுடன் சீக்ரமாக இந்தப் பாதுகைகளை அவனது பாதங்களுக்கு நானே இட்டு அப்பாதுகைகளுடன் கூடிய அவனது பாதங்களைக் காணப்போகிறேன். இந்த

1. நிக்ஷேபம்-பாது காத்து வைக்கும்படி ஒருவன் மற்றொருவனிடம் கொடுத்த வஸ்து. இதை ந்யாஸமென்றுஞ் சொல்லுவர்.

ராஜ்யபாரம் என்னிடம் வைப்பாக வைக்கப்பட்டிருக்கிற
தாகையால் ராமன் வந்தவுடனே இந்த ராஜ்ய பாரத்
தைப் பெரியோனாகிய அவனுக்குத் திருப்பிக்கொடுத்
துத் தந்தைக்குச் செய்வதுபோல் அவனுக்குச் சுச்
ருஷை செய்துகொண்டிருப்பேன். இங்ஙனம் ராமனுக்கு
ப்ரதிநிதிகளாகிய இம்மேலான பாதுகைகளையும் ராஜ்
யத்தையும் அயோத்யாபுரியையும் ராமனிடம் ஒப்பு
வித்து என் தாய் கைகேயியாலுண்டான அபகீர்த்தி
யைப் போக்கிக்கொள்ளுகின்றனன். ராமன் பட்டாபிஷே
கம் பெற்றிருக்கையில் அது கண்டு ஜனங்கள் மயிர்க்
கூச்சலுள்ள சரீரமுடையவர்களாகிக் களித்தபின்பு
எனக்கு ராஜ்யத்தைக் காட்டிலும் நான்குமடங்கு
மேலான ஸந்தோஷமும் கீர்த்தியும் விளையும்' என்ற
னன். பெரும்புகழுடைய அந்தப் பரதன் இங்ஙனம்
புலம்பிக்கொண்டு மனக்களிப்பின்றி வருந்தி மந்திரிக
ளுடன் நந்திக்ராமத்தில் ராஜ்யம் நடத்திக்கொண்டிருந்
தனன். வீரனும் ப்ரபுவுமாகிய அந்தப் பரதன் ஜடை
களையும் மரவுரியையும் தரித்து முனிவேஷத்தைக் கைப்
பற்றி அப்பொழுது ஸேனைகளுடன் நந்திக்ராமத்தில்
வஸித்திருந்தனன். உடன்பிறந்தவரிடத்தில் ப்ரீதியு
டையவனாகிய பரதன் ராமனது வரவை எதிர்பார்த்துக்
கொண்டு அவன் தாஜ்ஞையின்படி நடந்து தன் ப்ரதிஜ்
ஞையை ஈடேற்றமுயன்று ராமபாதுகைகளுக்கு அபிஷே
கஞ்செய்வித்து அப்பொழுது நந்திக்ராமத்தில் வஸித்து
ராஜசாஸனங்களை யெல்லாம் அந்தப் பாதுகைகளுக்கு
விண்ணப்பஞ் செய்துகொண்டிருந்தனன். அப்பொழுது
அங்ஙனம் அந்தச் செல்வக்குமாரன் நந்திக்ராமஞ்சேர்ந்த
பின்பு அண்ணனது பாதுகைகளுக்கு அபிஷேகஞ் செய்
வித்து எப்பொழுதும் அவைகளுக்குட்பட்டு ராஜ்யஞ்
செய்து வந்தனன். ராஜ்யபரிபாலனகாரியம் எதாயி



1198. நந்திகிராமத்தில் ஸ்ரீராம பாதுகாபட்டாபிஷேகம்.

னும நேருமபொழுதும எவராயினும பெரிய காணிககை
களைக கொண்டுவநத பொழுதும பரதன அவைகளை முத
லில பாதுகைகளுககு நிவேதனஞசெயது அதறகுப்
பினபு தான ஸவீகரிதது நடததவேண்டிய காரயங
களை உரியபடி நடததிககொணடு வநதனன. நூறறுப
பதினைநதாவது ஸாககம முறறிறறு.

---

{ ராமன சிதரகூடததை விடடு மறறோ ராஸ்ரமததிறகுப போதல }

பரதன புறபபடடுப போனபினபு ராமன அநதத
தபோவனததிலேயே வஸிததிருநது அஙகுளள ரிஷி
கள பயபபடடு மறறோராஸ்ரமததிறகுப போக விருபப
முறறிருபபதை அவாகளது இங்கிதாதிகளால கணடறிந
தனன. முனபு சிதரகூடததிலுளள ரிஷயாஸ்ரமததில
ராமனை மிகவும அடுததிருநத ரிஷிகள அனைவரும அவ
வாஸ்ரமததை விடடுப போக விருபபஙகொணடிருப
பதை ராமன நடைகளால ஊஹிததுத தெரிநதுகொண
டனன. அவாகள சஙகைபபடடுக கணகளாலும புருவ
நெறிபபுகளாலும ராமனை நிாதேசிதது[1] ஒருவாககொ
ருவா மெதுவாககொசகொசவெனறு சொலலி ராமனைக
குறிதது ரஹஸயமாக எனனெனனவோ கதைகளைப பே
சிககொணடிருநதனா. ராமன, அவாகள அஙஙனம ஆஸ
ரமததை விடடுப போக விருபபமுறறிருபபது கணடு
தனனால எதாயினும அபராதம நேரிடடதோவெனறு
சஙகிததுப பிறகு குலபதியாகிய ரிஷியைப பாாததுக
கைகூபபிககொணடு மொழிநதனன:—' மஹானுபா
வரே! ரிஷிகளுககு மனககலககததை விளைககுமபடியான
கெடட நடவடிககை இதறகு முனபு எனனிடததில
எதாயினும இருககக கணடாகளிலலையனறோ ! ஆனால

1. நிாதேசிதது-சுட்டிககாடடி.

இவர்களெல்லோரும் விகாரமுற்றிருக்கிறார்களே; இதுவென்? என் தம்பி லக்ஷ்மணன் தனக்குத் தகாத காரியமேதாயினும் மனவூக்கந்தவறிச் செய்யப் புலப்படவில்லையன்றோ? உங்களுக்கும் சுஶ்ரூஷை செய்துகொண்டு எனக்கும் சுஶ்ரூஷை தவறாதிருக்கின்ற என்பத்னியாகிய இந்த ஸீதை உங்களிடத்தில் நடத்தவேண்டிய விதிப்படி நன்கு நடக்கவில்லையா என்ன?' என்று வினவினன். பிறகு வயதாலும் தவத்தாலும் முதிர்ந்திருக்கிற அந்தக் குலபதி கிழத்தன்மையால் நடுக்கமுற்று ப்ராணிகளிடத்தில் தயை மிகுந்திருக்குந்தன்மையனாகிய ராமனைப் பார்த்து மொழிந்தனர்—'என்னப்பா! விதேஹராஜனது வயிற்றிற்பிறந்த ஸீதை மங்கலஸ்வபாவமுடையவள், மங்கலானுஷ்டானத்தில் மனவூக்கமுடையவள். அப்படிப்பட்ட அவள் தர்மந் தவறுவது எங்ஙனே? அதிலும் விசேஷித்து ரிஷிகள் விஷயத்தில் அங்ஙனம் தவறுவது எப்படி நேரிடும்? உன்னைப்பற்றி ராக்ஷஸர்களால் ரிஷிகளுக்கு இவ்வுபத்ரவங்கள் உண்டாகின்றன அவைகளுக்குப் பயப்பட்டு ரிஷிகள் ஒருவர்க்கொருவர் ஏகாந்தமாக ஏதோ கதைகளைப் பேசிக் கொண்டிருக்கின்றனர். அவ்வுபத்ரவங்களைக் கேட்பாயாக.—என்னப்பனே! இங்கு ராவணனுடைய தம்பி கரனென்னும் ஒரு ராக்ஷஸனுண்டு. அவன் மிகவும் தீரமுடையவன்; யுத்தத்தில் யாவரையும் வெல்லவல்லவன்; க்ரூரன், நரமாம்ஸங்களைப் பக்ஷிக்குந்தன்மையன், மிகுந்த கர்வங்கொண்டவன், பாபஸ்வபாவன். இத்தன்மையனாகிய அவன் ஜநஸ்தானத்தில்வாஸஞ் செய்யும் முனிவர்களனைவரையும் அடித்தோட்டுகின்றனன்; அப்பனே! இங்கு நீ வந்திருப்பதையும் பொறுக்க முடியாதிருக்கின்றனன். என்னப்பனே! நீ இந்த ஆஶ்ரமத்திற்கு வந்து எது முதல் வாஸஞ் செய்கிறாயோ, அது முதலாக ராக்ஷஸர்கள் முனிவரைப் பலவாறு பீடிக்கின்

றனர். அநத ராக்ஷஸாகள பாாதத மாதரததில ஜுகுபஸைபபடத தககவைகளும கொடியவைகளும பயததை விளைவிபபவைகளும பலவகைப படடவைகளும உலகததில புலபபடுகிற உருவஙகளைககாடடிலும வேறு வேறானவைகளும விகாரமான கணகளுடையவைகளுமான தமது உருவஙகளைக காடடிப பயபபடுததுகினறனா. அவவரககாகள முனிவாகளின முனனே வநது நினறு அவாகளில சிலாமேல அமஙகலஙகளும அசுததஙகளுமாகிய தரவயஙகளை எறிநது மறறுஞசிலரைப பிடிதது அடிககினறனா. அறப புததிகளாகிய சில ராக்ஷஸாகள அநதநத ஆசரமஙகளில தெரியாதபடி மறைநதிருநது அஙகுளள முனிவாகளை ஹிமஸிததுககொணடுவிளையாடுகினறனா. ஹோமஞசெயயுமபொழுது வநது ஸருகபாதரம முதலிய யாகத்திறகு வேணடிய வஸதுககளை அபபுறம எடுததெறிநது யாகாககனியை ஜலஙகொடடியணைதது ஜலகலசஙகளை உடைததுப பொடியாககுகினறனா. ஆகையால ரிஷிகளெலலோரும அநத துஷடாகள ஸஞசரிககுமபடியான இவவாசரமஙகளை விடடு வேறிடததிறகுப போகவேணடுமெனறு இபபொழுது எனனைத் தூணடுகினறனா. ராமா! துஷடாகளாகிய அநத ராக்ஷஸாகள முனிவாகளுககுச சரீரஹிமஸையையும செயவாாகள, ஆகையால இவவாசரமததை விடடுபபோகினறனம இவவிடததிறகு வெகுதூரததில காயகிழஙகுகள ஏராளமாயிருககபபெறற விசிதரமான ஒரு வனமிருககினறது; அஙகு நாஙகள முனனே வஸிததிருநத ஆசரமம இருககினறது. நானும மறறுமுளள ரிஷிககூடடமும மீளவும அவவிடததிறகே போகினறனம அபபனே! இங்கிருபபாயாயின, கரன உனககும எதாவது கெடுதியைச செயவான. உனககு அபிபராயம உணடாயின நீயும எஙகளோடுகூட இவவிடததினினறும புறபபடடுவருவாயாக. ரகுகுலகுமாரனே! நீ ஸாவகாலமும ஸநநாஹததுட னிருநதபோதிலும ஸமாததனாயினும இபபொழுது இஙகுப பாாயையுடன வாஸஞசெயகை

யால் உனக்கு நித்யம் என்னுண்டாகுமோ வென்று ஸந்தேஹமாயிருக்கின்றது, ஆகையால் நீ இங்கு வாஸஞ்செய்வது துக்கத்திற் கிடமாகவேயிருக்கின்றது' என்றனர். ராஜகுமாரனாகிய ராமன், ப்ரயாணமாய்ப்போக ஸித்தமாயிருக்கிற அந்தக் குலபதியைப் பார்த்து 'நானிருக்கும்பொழுது உங்களுக்குப் பயமென்? நானே சுற்றிலுங் காத்துக்கொண்டிருந்து உங்களை ரக்ஷிக்கிறேன்' என்று இது முதலிய பல உத்தரங்களைச் சொல்லி அவரைத் தடுக்கப் போரவனுடன் முயன்றும் வல்லனாகவில்லை. அக்குலபதி ராமனைப்பற்றி ஸந்தோஷித்து ஸமாதானங்களைச் சொல்லி ஒப்புவித்து அனுமதி பெற்றுக்கொண்டு தம்மைச்சேர்ந்த ரிஷிஸமூஹங்களுடன் அவ்வாச்ரமத்தை விட்டுப்போயினர். ராமன் அந்தரிஷிஸமூஹத்துடன் கொஞ்சதூரம் அங்கிருந்து பின்சென்று வழிவிட்டனுப்பிக் குலபதிக்கு நமஸ்காரஞ்செய்து அந்த ரிஷிகள் மிகுந்த ப்ரீதியுடன் உபதேசித்த விஷயங்களை அப்படியேயென்று அங்கீகரித்து விடைபெற்றுக்கொண்டு பரிசுத்தமாகிய தனது பர்ணசாலையில் வாஸஞ்செய்யப் போயினன். ஸமர்த்தனாகிய ராமன் ரிஷிகளில்லாமையால் அவ்வாச்ரமத்தை உடனே விட்டுத் துறக்கவேண்டியதாயிருந்தும் அம்முனிவரிடத்திலுள்ள ப்ரீதியைப் பற்றி அவர்கள் வஸித்திருந்த இடமென்று அதை ஒரு நொடிப் பொழுதும் விடாதிருந்தனன். ராமன் ரிஷிகளைப்போல் நடந்த நடவடிக்கையைப் பார்த்து ரிஷிகளும் அவ்வண்ணம் குணஸம்ருத்தி யுண்டாகப்பெற்ற அந்த ராகவனையே அனுஸரித்திருந்தார்களாகையால் அவர்களிடத்தில் அந்த ராமனும் மிகவும் ப்ரீதி உண்டாகப் பெற்று அவர்கள் வாஸஞ்செய்த இடமாகையால் அதை க்ஷணகாலமும் பிரியாதிருந்தனன். நூற்றுப்பதினொருவது ஸர்க்கம் முற்றிற்று.

### ராமன் அத்ரியினாஶ்ரமத்தில் ப்ரவேசித்தல்

அந்த ரிஷிகளெல்லோரும் போனபின்பு ராமன் ஆலோசனைசெய்து பலகாரணங்களைப்பற்றி அப்பொழு(து) அவ்வாஶ்ரமத்தில் வாஸஞ்செய்ய விருப்பமுற்றிருந்தனன். அந்த ராகவன், 'நான் இந்த ஆஶ்ரமத்தில் தானே பரதனையும் பட்டணத்து ஜனங்களையும் எனது தாய்மார்களையும் கண்டனன். அவர்களைக்குறித்து நித்யமும் துக்கித்துக்கொண்டேயிருக்கின்றனன். மேலும், அவர்கள் வந்திருந்த இந்தப்ரதேசமோ அவர்களை என் நினைவில் மேன்மேலும் மூட்டுவித்து என்னைப் பாதித்துக்கொண்டேயிருக்கின்றது. மஹானுபாவனாகிய அந்தப்பரதனது ஸைன்யம் இங்கிறங்கியிருந்ததாகையால் யானை குதிரைகளின்[1] கரீஷங்களால் ஆஶ்ரமமெல்லாம் பாழாயிருக்கின்றது. ஆகையால் இதைவிட்டு வேறு இடம் போவோம்' என்றாலோசித்து ஸீதாலக்ஷ்மணர்களுடன் ப்ரயாணமாய்ப் போயினன். பெரும்புகழுடைய அந்த ராகவன் அத்ரிமஹர்ஷியின் ஆஶ்ரமத்திற்குச் சென்று அவரை நமஸ்கரித்தனன். அம்முனிவரும் ராமனைத் தன் குமாரனைப்போல் பாராட்டினர். அம்மஹர்ஷி ராமனுக்குத் தாமே மிகுந்த கௌரவத்துடன் அதிதி ஸத்காரமெல்லாம் செய்து லக்ஷ்மணனையும் மஹாபாக்யசாலினியாகிய ஸீதையையும் இனிய வசனங்களால் ஆதரித்தனர். தர்மங்களை உணர்ந்தவரும் ஸமஸ்த ப்ராணிகளுக்கும் ஹிதஞ் செய்பவருமாகிய அம்முனிவர் ஸகல ஜனங்களாலும் பூஜிக்கப்பட்டவளும் வயது சென்றவளுமாகிய தன் பத்னி அருகிலிருக்க அவளையும் அழைத்து அவளுந் தாமுமாக அந்த ஸீதாராமலக்ஷ்மணர்களை இனிய உரைகளால் ஆதரித்தனர் அந்த ரிஷிஶ்ரேஷ்டர் ஸீதையைப் பார்த்து 'அனஸூயை மிகுந்த மாஹாத்ம்ய முடையவள், பெருந்தவமுடையவள், தர்மானுஷ்டானத்தில் நிலை நின்றவள், ஆகையால் அவளுக்கு நமஸ்காரஞ் செய்வாய்' என்றனர். மேலும் அம்முனிவர் தர்மங்களைக்

---

1. கரீஷம்—உலர்ந்த சாணி.

குறைவற அனுஷ்டிக்குந்தன்மையளாகிய அந்தத் தாப
ஸியைக் குறித்து ராமனைப் பார்த்து 'தோஷமற்றவனே!
இவ்வனஸூயை முன்பு பத்து [1] வத்ஸரங்கள் மழையில்
லாமல் மஹாக்ஷாமம் உண்டாகி உலகமெல்லாம் இடை
விடாமல் எரிந்துபோய்க் கொண்டிருக்கையில், ரிஷிகளுக்
குக் காய் கிழங்குகளை ஸ்ருஷ்டித்துக் கங்காநதியையும்
ப்ரவஹிக்கும்படி செய்தனள் இவள் கடுமையான தவத்
துடன் கூடி ஸகலநியமங்களாலும் அலங்காரமுற்றவள்.
இவள் பத்தாயிரம் ஸம்வத்ஸரங்கள் பெருந் தவஞ்செய்
தவள். க்ருச்சரம் சாந்த்ராயணம் முதலிய பல வ்ரதங்
களை ஆசரித்து ஸ்நானஞ்செய்தவள்; ரிஷிகளுக்கு நேரி
டுந் தபோவிக்னங்களையெல்லாம் போக்கினவள் முன்பு
ஒருகாலத்தில் தேவகார்யத்தின்பொருட்டு த்வரைப்
பட்டுப் பத்து ராத்ரிகளை ஒரு ராத்ரியாகச் செய்தனள்.
பாபமற்றவனே! அத்தகையளான இவள் உனக்குத்
தாயைப்போல் கௌரவிக்கத் தகுந்தவள். பிறர்க்கு
நன்மையை விளைப்பவைகளும் பிறரால் நிர்வஹிக்கமுடி
யாதவைகளுமான கார்யங்களைச் செய்யுந்தன்மையளாகி
அஸூயையற்றிருப்பதுபற்றியும் இதர ஸ்த்ரீகளுக்கு
அசக்யமான இவளது பாதிவ்ரத்யகர்மங்களைப் பார்த்து
இவளுக்கே தகுமென்று வியப்புற்றுப் பிறர் அஸூயைப்
படத்தகாதவளாயிருப்பது பற்றியும் இவள் உலகமெங்
கும் அனஸூயையென்று ப்ரஸித்தியடைந்தனள். ஸமஸ்
தப்ராணிகளுக்கும் நமஸ்கரிக்கத் தகுந்தவள், பெரும்
புகழுடையவள், வயது முதிர்ந்தவள், எப்பொழுதும்
கோபமற்றிருப்பவள். இப்படிப்பட்ட அனஸூயையை
அநுஸரித்து ஸீதை நமஸ்காரஞ்செய்வாளாக' என்றனர்,
அம்முனிவர் அங்ஙனஞ் சொல்லிக்கொண்டிருக்கையில்.
ராமன் கேட்டு அப்படியேயென்று மொழிந்து தர்மங்களை
யறிந்த ஸீதையைப் பார்த்து இச் சிறந்த வுரையை
மொழிந்தனன் — 'ராஜபுத்ரீ! இம்முனிவர் மொழிந்த
வார்த்தையைக் கேட்டனை யல்லவா. ஆகையால் உனது

1. வத்ஸரம்-வர்ஷம்.

நன்மையின் பொருட்டுச் சிகரமாகத் தவம் பொருந்திய மஹானுபாவையாகிய இந்த அனஸூயையை அடுத்து வணங்குவாயாக' என்றனன். ஸீதையும் தன் மேன்மையை விரும்புகின்ற ஸ்ரீராகவன் மொழிந்த அவ்வுரையைக் கேட்டு தர்மஜ்ஞையாகிய அவ்வத்ரி மஹர்ஷியின் பார்யைக்கு ப்ரதக்ஷிணஞ் செய்தனள். கட்டு குலைந்து மடிப்புற்ற சரீரமுடையவளும் வயது சென்றவளும் கிழத்தனம் மேலெழுகையால் தலை மயிர்களெல்லாம் நரைத்திருக்கப்பெற்றவளும் பெருங்காற்றிலகப்பட்ட வாழைமரம்போல் ஓயாமல் நடுக்கமுற்ற அங்கங்களுடையவளும் மஹானுபாவையும் பதிவ்ரதையுமாகிய அனுஸூயைக்கு ஸீதை தன் பேரைச் சொல்லிக்கொண்டே மனவூக்கத்துடன் நமஸ்காரஞ் செய்தனள். நிந்தைக்கிடமல்லாத அந்தத் தாபஸிக்கு ஸீதை நமஸ்காரஞ்செய்து மிகுந்த ஸந்தோஷத்துடன் கைகூப்பிக்கொண்டு 'உமக்கு ஆரோக்யமா' என்று வினவினள். அனந்தரம் அனுஸூயை மஹாபாக்யவதியும் பரமதார்மிஷ்டையுமாகிய ஸீதையைப் பார்த்து மிகுந்த ஸந்தோஷத்துடன் நல்வார்த்தைகளால் ஸமாதானப்படுத்திக்கொண்டு மொழிந்தனள்:— 'நீ பாக்யவசத்தினால் பாதிவ்ரத்ய தர்மத்தை மனவூக்கத்துடன் கைப்பற்றி நடத்துகின்றனை. ஸீதே! அழகிய விலாஸமுடையவளே! பந்து ஜனங்களையும் அஹங்காரத்தையும் ஐச்வர்யத்தையும் விட்டு, பதினான்கு ஸம்வத்ஸரங்கள் அரண்யத்தில் வஸிக்கும்படி தகப்பனால் நியமிக்கப்பட்ட ராமனைப் பின்றொடர்ந்து வந்திருக்கின்றனையே! இது உன் பாக்யமே' எந்த ஸதீகள் பர்த்தா நகரத்திலிருப்பினும் அரண்யத்திலிருப்பினும் பாபிஷ்டனாயினும் புண்யஸ்வபாவனாயினும் கைவிடாமல் அவனிடத்தில் ப்ரீதி உண்டாகப் பெற்றிருப்பரோ; அவர்க

குச் சிறந்த லோகங்களை நேரிடும். துஷ்ட ஸ்வபாவனுயினும் இஷ்டப்படி நடப்பவனாயினும் பணமற்றவனாயினும் சிறந்த ஸ்வபாவமுடைய மாதர்களுக்குப் பர்த்தாவே பரமதெய்வதம். விதேஹராஜன் புதல்வியே! நான் எவ்வளவு ஆலோசித்துப் பார்க்கினும் பர்த்தாவைக்காட்டிலும், பெருந்தவம்போல் அழிவின்றி யிருந்து ஸர்வாவஸ்தைகளிலும் காக்கும்படியான பந்து எவனும் எனக்குத் தோற்றவில்லை. மனம் தனக்குட்பட்ட மனமுடையவர்களும் பர்த்தாக்களைத் தங்கீழடக்கி இஷ்டப்படி நடப்பவர்களும் பரபுருஷனை விரும்பித் திரிவோர்களுமாகிய துஷ்டஸ்த்ரீகளுக்கு இந்தக் குணதோஷம் தெரிகிறதில்லை. அங்ஙனம் காமபராதீனைகளாகித் துஷ்ட காரியங்களுக்குட்பட்டு நடக்கும் ஸ்த்ரீகள் இவ்வுலகத்தில் அபகீர்த்தியைப் பெற்றுத் தர்மத்தினின்று நழுவினபடியால் பரலோகத்தை இழந்தவர்களாகி நரகத்தில் விழுவார்கள். உலகத்தில் நல்லவை கெட்டவைகளை யறிந்த உன்னைப் போன்ற குணம் பொருந்திய உத்தம ஸ்த்ரீகள் தர்மங்களை அனுஷ்டித்தவர்கள்போல் ஸ்வர்க்கஞ் சென்று விளையாடிக்கொண்டிருப்பார்கள். ஆகையால் நீ இப்பொழுது போலவே என்றும் பர்த்தாவை யனுஸரித்திருக்கும் நியமத்தை யுடையவளாகிப் பதிவ்ரதைகளின் ஏற்பாட்டை யனுஸரித்துப் பர்த்தாவுடன் கலந்து அவனுக்கந்த தர்மத்தை ஆசரித்து வருவாயாக. அதனால் கீர்த்தியையும் தர்மத்தையும் நீ பெறுவாய்' என்றனள்.

நூற்றுப்பதினேழாவது ஸர்க்கம் முற்றிற்று.

ஸீதை, அனஸூயையை உபதேசித்த பாதி
வ்ரத்ய தர்மத்தைக் கேட்டு ஆநந்தித்துத்
தன் ஸ்வயம்வரத்தை அவளுக்குக்
கூறுதல்.

அனஸூயை இங்ஙனம் சொன்னதைக் கேட்டு ஸீதை அஸூயையற்றவளாகையால் அவையெல்லாவற்றையும் குணமாக மனத்திற்கொண்டு அவளை மேன்மைப்படுத்தி மெதுவான உரையுடன் அவளை நோக்கி மொழியத் தொடங்கினள்—'பூஜிக்கத் தகுந்த நீர் எனக்கு இங்ஙனம் சொல்லுவது ஓராச்சர்யமன்று. ஸ்த்ரீக்குப் பதியே குருவென்பது எனக்கும் தெரிந்த விஷயமே. பூஜிக்கத் தகுந்தவரே! ஒருகால் என்பர்த்தா நன்னடத்தையற்றவனாயிருப்பினும், நான் நல்லவனென்றும் கெட்டவனென்றும் பேதம் பாராட்டாமல் அவனுக்கு உபசாரஞ்செய்ய வேண்டியவளே. அப்படியிருக்க, குணங்களில் புகழ்பெற்று தயாளுவும் ஜிதேந்த்ரியனுமாகி என்னிடத்தில் நிலைநின்ற ப்ரீதியுடையவனும் தர்மஸ்வபாவனும் தாயைப்போல் ப்ரியஞ்செய்பவனும் தந்தையைப் போல் மேன்மேலென் ஹிதங்களை நடத்துபவனும் ப்ரீதிக்கிடமுமாகிய பர்த்தாவைப் பணிவதற்குச் சொல்லவேண்டுமோ? மஹாபலனாகிய ராமன் கௌஸல்யையினிடத்தில் எப்படி இருப்பானோ, அப்படியே மஹாராஜருடைய பார்யைகளாகிய மற்றை ஸ்த்ரீகளிடத்திலும் இருப்பான். தந்தையினிடத்தில் மிகுந்த ப்ரீதியுடையவனும் தர்மங்களையுணர்ந்தவனுமாகிய அவ்வீரன், தன் தந்தையாகிய மஹாராஜர் ஒருகால் கண்ணுற்கண்ட ஸ்த்ரீகளுக்குங் கூடத் தன் மேன்மையைப் பாராமல் துறந்துவிட்டுத் தாய்க்குப்போல் சுஶ்ரூஷை செய்பவன். நான், இங்ஙனம் பயங்கரமாகி ஜனஸஞ்சாரமில்லாத வனத்திற்கு வரும்பொழுது எனக்கு என் மாமியாரான கௌஸல்யையும் பாதிவ்ரத்யத்தைக்குறித்து உபதேசித்தனள் பெரும்பொருளடங்கிய அதை விடாமல் மனத்திலேயே

நிறுத்திக்கொண்டிருக்கின்றனன். முன்பு என் விவாஹ காலத்தில் அக்னியின் முன்னிலையில் என் தாய் பாதிவ்ரத்யோபதேசத்தால் என்னைத் திருத்தி யிருக்கிறனள்; அதையும் மறக்காமல் மனத்தில் வைத்துக்கொண்டிருக்கின்றனன். தர்மங்களை யாசரிக்குந் தன்மையரே! நீர் சொன்ன வாக்யங்களால் அவை யெல்லாம் என்னினைவில் புதிது செய்யப்பட்டன. ஸ்த்ரீக்குப் பதிசுஶ்ருஷையைக் காட்டிலும் வேறொரு தவம் விதிக்கப்படவில்லை. ஸாவித்ரீ தேவி பதிசுஶ்ருஷை செய்து ஸ்வர்க்கத்திலும் மேன்மையுற்றிருக்கின்றனள். நீரும் அப்படியே பதிஶுஶ்ருஷை செய்கையால் ஸ்வர்க்கத்தை அடையப் போகிறீரென்பது நிச்சயம். ஸமஸ்த ஸ்த்ரீகளிலும் உத்தமையான ரோஹிணீதேவி ஆகாயத்தில் சிறிது பொழுதாயினும் சந்தரனைப் பிரிந்து புலப்படுகிறதில்லை. மேலும், பல புண்ய ஸ்த்ரீகள் இங்ஙனம் பாதிவ்ரத்யத்தை எப்படிப்பட்ட ஸங்கடத்திலும் தவறாமல் திடமாக அனுஷ்டித்துத் தமது புண்யகார்யத்தினால் ஸ்வர்க்கத்தில் பூஜிக்கப்படுகின்றார்கள்' என்றனள். பிறகு அனஸூயையும் ஸீதை மொழிந்த வார்த்தையைக் கேட்டுப் பரம ஸந்தோஷமடைந்து உச்சிமோந்து அவள் மனக்களிப்புறும்படி மேல்வருமாறு மொழிந்தனள் —'பரிசுத்தமான புன்னகையுடையவளே! பலவகை நியமங்களைச் செய்து நடத்தின பெருந்தவம் எனக்கு இருக்கின்றது. அந்தத் தபோபலத்தைப் பற்றி நீ விரும்பியவற்றைக் கொடுக்க வல்லளாயிருக்கின்றேன்; ஆகையால் உன்னை ஏதாவது வரங்கேட்கும்படி வேண்டுகின்றனன். மைதிலீ! உன் வார்த்தை, பொருந்தியதும் அழகியதுமாயிருக்கின்றது. அதைக் கேட்டு எனக்கு மிகவும் ஸந்தோஷமாயிருக்கின்றது. உனக்குத் தகுந்தது எது? நான் எது செய்யவேண்டும்?' என்று வின

வினள ஸீதையும அனஸூயையின வாாததைதயைக் கேடடு ஆசசாயபபடடுப புனனகை முகததில விளஙகப பெறறு அவளைபபாாதது 'இநத வாாததைதயே போது மானது நான விருமபியதையெலலாம செயதாற போல வே' எனறு தபோபலமுடைய அவவனஸூயையைக் குறிதது மொழிநதனள. தாமஙகளை யறிநத அநத அனஸூயை, ஸீதை அஙஙனஞ சொலலுகையில மேன மேலும ஸநதோஷமுறறு 'உன வாாததையைக கேடடு எனககு மிகவும ஸநதோஷமாயிருககின றது, உனனிடத் தில எனககுணடான இநத ஸநதோஷததைப பயன பெறச செயகிறேன. ஸீதே! இதோ திவயமான சிறநத பூமாலையும ஆடையாபரணஙகளும குஙகுமம சநதனம முதலிய அஙகராகஙகளும கஸதூரி முதலிய பரிமளங் கள சோநத அனுலேபனஙகளும இருககினறன ஸீதே! நான கொடுககிற இநதப பூமாலை முதலியவை உனது அவயவஙகளை விளஙகசசெயயும இவை உனககுத தகுநதவை. மேலும, இவை எனறும அழுகுமாறுமல விளஙகும ஜனகராஜன குமாரததியே! நீ திவயமான இவவஙகராகததைப பூசிககொணடு லக்ஷமீதேவி அழி விலலாத ஸ்ரீமஹாவிஷணுவை விளஙகச செயவதுபோல, உன பாததாவை விளஙகச செயவாய' எனறனள. அநத ஸீதை அஙஙனம அனஸூயையால பரீதியுடன கொடுககபபடட மேலான வஸதரததையும அஙகராகத் தையும ஆபரணஙகளையும பூமாலைகளையும வாஙகிக் கொணடனள. அனநதரம பெரும புகழுடையளாகிய ஸீதையும, அனஸூயை பரீதியுடன கொடுதத வஸத் ராதிகளை அஙகீகரிததுக கைகூபபிககொணடு தவததை யே தனமாகவுடைய அவளைப பணிநதிருநதனள. வரதங் களில திடமான மனஉுககமுடைய அனஸூயை அஙங னம தனனைப பணிகினற ஸீதையைப பாாதது ஓரினிய கதையைககேடக முயனறு இஙஙனம வினவதொடங்

கினள். 'ஸீதே! பெருமபுகழுளுகிய ராமன உன்னை ஸ்வயம்வரத்தில் பெறறுனலலவா; இநதக கதை எனககுக கேளவியுண்டு. மைதிலீ! அககதை யெலலாம் ஸவிஸதரமாகக கேடக விருமபுகினறனன். ஆகையால நீ அனுபவிததபடியே அதை யெலலாம எனககுச் சொலலவேணடும்' எனறனள். அனஸூயை இஙஙனம் வினவுகையில ஸீதை தாமசாரிணியாகிய அவளைப பார்தது 'கேளீா' எனறுரைதது அநதக கதையை மொழிநதனள —'வீரரும தாமஜ்ஞருமாகிய மிதிலாதிபதி ஜனகரெனபவா க்ஷததரியதாமததினபடி நயாயந தவறுமல பூமியைப பரிபாலிதது வநதனா. அமமனனவா கலபபையைக கொணடு யாகததின பொருடடான க்ஷேததரததைச சீரதிருததுவதறகாக உழுதுகொணடிருககையில பூமியைப பிளநது கொணடு நான பிறநது அமமனனவாககுப புதலவியாயினன. அபபொழுது யாகமநதரபபடி ஓஷதியின விதைகளைப பிடிபிடியாக எடுதது விதைததுக கொணடிருககிற அமமனனவா புழுதிபடிநத புனமேனியளாகி மேல தோனறியிருககிற என்னைப பாாதது மிகவும வியபபுறறனா. அனநதரம அவவரசா பிள்ளை யிலலாதவராகையாலும புதரஸனேஹததினுலும என்னை மடிமேலிட்டுத தன புதலவியென்று சொலலிககொணடு எனனிடததில மிகுநதஸனேஹததை வைததனா. அபபொழுது ஆகாயததிலும 'மனனவனே! இது இபபடியே. இசசிறியவள தாமததினபடி உனகுமாரததியே ஆகினறனள்' எனனுலும அமானுஷ வாககு செவிபபடடது அனநதரம தாமஸவபாவராகிய என தநதை மஹாராஜா ஆகாசவாணியைக கேடடுஸநதோஷிததுஎன்னைஎடுததுககொணடுபெரும க்ஷேமததைப பெறறனா. புண்ய காமாவாகிய அமமன

ன்வர் தன் முத்தபார்யை பிள்ளை வேண்டுமென்றாசைப் பட்டுக் கொண்டிருந்தாளாகையால் என்னைக் கொண்டு போய் அவளிடம் கொடுத்தனர். அவளும் தாயைப்போல வே ஸ்னேஹத்துடன் என்னைப் போஷித்து வந்தனள். என் தந்தை எனக்குப் பர்த்தாவை வரிக்கவேண்டும் வயது வந்ததைக் கண்டு மனத்தில் சிந்தையுற்றுப் பணத்தை யிழந்த தரித்ரன்போல வருத்தமுற்றனர். உலகத்தில் பெண்ணைப்பெற்ற தந்தை தேவேந்த்ரனைப் போன்றவனாயினும் தனக்குச் சரியானவரிடத்தினின்றும் தாழ்ந்தவரிடத்தினின்றும் திரஸ்காரம் பெறுவான். அம்மன்னவர் அந்தத் திரஸ்காரம் தனக்கு இனிச் சீக்ரத்திலேயே உண்டாகுமென்று தெரிந்துகொண்டு துக்க ஸமுத்ரத்தில் வீழ்ந்து தெப்பமில்லாதவன் ஸமுத்ரத்தின் கரை சேரவல்லவனாகாததுபோல அவ்வருத்தமெனும் ஸமுத்ரத்தின் கரையைச் சேராதிருந்தனர். அம்மன்னவர், நான் அயோனிஜையாயிருப்பதை நினைத்து எவ்வளவு ஆலோசித்தும் குலம் நடத்தை முதலியவற்றால் எனக்குத் தகுந்தவனும் ரூபலாவண்யாதிகளால் உரியவனுமாகிய பர்த்தாவைத் தேடவல்லராகவில்லை. இங்ஙனம் ஓயாமல் ஆலோசித்துக்கொண்டிருக்கையில், புத்தியில் மிகுந்தவராகிய அவர்க்கு 'என் குமாரத்திக்கு ஸ்வயம்வரம் நடத்தலாம்' என்னும் புத்தி உண்டாயிற்று. முன்பு மஹாயஜ்ஞத்தில் தேவதைகள் ஸந்தோஷித்து வேண்டிக்கொள்கையில் வருணன் ஜனகருக்கு உத்தமமான தனுஸ்ஸையும் அழியாத பாணங்களையுடைய அம்புறாத்தூணிகளையும் கொடுத்திருந்தனன். அவ்வில்லு மிகுந்த பளுவும் உறப்புமுடைய தாகையால் ஸாதாரண மனுஷ்யர்களுக்கு எவ்வளவு கஷ்டப்பட்ட போதிலும் அதை அசைக்கவுங்கூடச் சக்யமில்லாதிருந்

தது. ஆகையால அரசாகள ஸவபனததில அதை வளைதது நாணேறற வலலராகவிலலை. அனந்தரம ஸதயவாதியாகிய என தகதை அரசர்களெல்லோரையும வரவழைதது அவாகள கூடடததிடையில் அவவிலலைச காடடி 'எவன இவவிலலை மேலெடுத்து நாணேறறுவானே அவனுககு என புதலவி பாாயையாவாள இதறகு ஸநதேஹமிலலை' எனறனா. ராஜாகளெலலோரும உருவததில பாவதமபோனற அவவிலலைப பாாதது அதை மேலதூககவும முடியாமல நமஸ்காரஞ செயது போயினா அனநதரம வெகுகாலம கடநத பினபு ரகுகுலகுமாரனும மஹாகாநதியுடன விளஙகுகினறவனும உணமையான பராகரமமுடையவனுமாகிய இநத ராமன, தன தமபியாகிய லக்ஷமணனுடன விஶவாமிதரரை முனனிடடுககொணடு யாகம பாாகக வநதனன தாமஸவபாவரகிய விஶவாமிதரரும என தகதையால நனகு பூஜிககபபடடு அவரைப பாாதது 'அணணனுந தமபியுமாகிய இநத ராமலக்ஷமணாகளிருவரும் தசரதசககாவாததியின குமாராகள, உனனிடமிருககுந தனுஸஸைப பாாகக விருமபுகினறனா. உனககு தேவதைகள கொடுதத அநதவிலலை ராஜகுமாரனாகிய இநத ராமனுககுக காடடுவாயாக' எனறனா. அநத பராஹமணரால இஙஙனம சொலலபபடட ஜனகரும அவ்விலலை வரவழைததுக காடடினா ராமன மிகுநத வீரயமுடையவனாகையால ஒரு நிமிஷபபொழுதிலேயே சீக்ரமாக மஹாஸாரமபொருநதிய அவவிலலைவளைத்து நாணகயிறறை ஏறறிப பூரிததனனன ராமன அஙஙனம் பூரிக்கையில அநத தனுஸஸு வேகம பொறுககாமல் இடையில இரண்டாகப பிளநதது. அதினால இடி வீழ்ந்தாறபோல பயங்கரமான ஓரொலி உண்டாயிற்று. பிறகு

ஸதய பரதிஜஞராகிய என தநதை அவவிடததிலேயே எனனை ராமனுககுக கொடுபபதாக நிசசயிததது ஜலகல சததைஎடுததுக கொணடனா. அபபொழுது ஜனகா எனனை ராமனுககுத தாரைவாாததுக கொடுககப புகுகையில 'அயோதயாதிபதியும தனககு பரபுவும தநதையுமாகிய தசரதனுடைய அபிபராயந தெரி யாமல நான அங்கீகரிககமாடடேன' என்று ராக வன மொழிநதனன. அனநதரம என தநதை வருநதத ராகிய என மாமனுா தசரதமஹாராஜரை வரவழைதது அவருடைய அபிபராயததினமேல ஆதமஜஞனுகிய ராம னுககு எனனைக கொடுததனா இதுவேயனறி, என தநதை பதிவரதையும இனிய காடசியுடையவளும என தங்கையுமாகிய ஊாமிளையை லக்ஷமணனுககுப பாாயை யாககக கொடுததனா. அபபொழுது அநத ஸவயமவரத தில இவவிதமாக நான ராமனுககுக கொடுககபபடட னன. நான பராகரமசாலிகளில தலைவனுகிய என பாத தாவிடததில தாமததினபடி அனுராகமுணடாகப பெறறிருககினறேன' எனறனள. நாறறுபபதினெட டாவது ஸாககம முறறிறறு

[ ராமன அனறிரவு அமமுனிவரது ஆசிர மததிலிருநதுவிடியறகாலததில அபபொழு து செயயவேணடிய சடஙகுகளைததீாத்துக கொணடு தணடகாரணயததிறகு பரயாண மாயப போதல ]



தாமங்களையறிநத அனஸூயை அநதப பெருஙகதை முழுவதையும கேடடு ஸீதையை உசசிமோநது கைக ளால அணைததுக கடடிககொண்டு அவளை நோககி மொழிநதனள் — 'அக்ஷரஙகளும பதங்களும ஸபஷட மாகபபெறறு வியபபுறுவிககவலல இனிய உரைகளைக

கூறினே. ஸ்வயம்வரத்தை நடந்தபடி முழுவதும் கேட்டேன். மதுரமாகப் பேசுந் தன்மையளே! உன் கதையைக் கேட்டு நான் மிகவும் ஸந்தோஷிக்கின்றேன். பேரொளியுடைய ஸூர்யன் மங்களமான இரவு கிட்டப் பெற்று அஸ்தமித்தனன். ஆஹாரத்திற்காகப் பக்ஷிகள் பகலெல்லாம் திரிந்து ஸந்த்யாகாலத்தில் நித்ரிக்கும் பொருட்டு வ்ருக்ஷங்களில் அடங்கிக் கலகலவென்று செய்யும் த்வனி செவிப்படுகின்றது. இதோ இம்முனிவர்கள் ஸாயங்காலஸ்னானஞ்செய்து நனைந்து ஜலகலசங்களை எடுத்துக்கொண்டு நீரில் நனைந்த மரவுரிகளுடன் குவியற்குவியலாக வருகின்றனர். ரிஷிகள் அக்னியை வளர்த்து விதிப்படி ஹோமங்களைச் செய்கையில் புறாவின் கண்டம்போல் கொஞ்சம் சிவந்திருக்கின்ற [1] தூமமானது காற்றால் கலக்கப்பட்டுப் புலப்படுகின்றது. திசைகள் ஸ்பஷ்டமாகத் தெரியாதிருக்கின்றன, ஆகையால் இவ்விடத்திற்கு தூரத்திலிருக்கிற இலையுதிர்ந்த வ்ருக்ஷங்கள் நாற்புறங்களிலும் இலைகளடர்ந்தாற் போல் புலப்படுகின்றன. இரவில் திரியும் ஜந்துக்கள் நாற்புறமும் திரியத் தொடங்குகின்றன. இந்தத் தபோவனத்திலுள்ள ம்ருகங்களும் அக்னிவேதிகளின் ஓரங்களில் படுக்கின்றன, பார். ஸீதே! ராத்ரியும் நக்ஷத்ரங்கள் விளங்கப் பெற்று வளர்ந்து வந்தது. சந்த்ரனும் உதயமாவென்னும் போர்வையைப் போர்த்துக்கொண்டு யத்தில் புலப்படுகின்றனன். ஆகையால் நீ இனிப்போய் ராமனுடன் கூடி இருப்பாயாக. நான் அநுமதி கொடுக்கின்றேன். நீ இனிதாகக் கதைகள் சொல்லக்கேட்டு நான் மிகவும் ஸந்தோஷமுற்றேன். ஸீதே! நீ என் கண் முன்னமே அலங்காரஞ் செய்துகொள்வாயாக. திவ்யா

---

1 தூமம்-புகை

லங்காரஙகளால அழகு விளஙகபபெற்று எனககு மனக் களிபபை விளைபபாயாக' என்றனள். தேவகன்னிகை போன்ற ஸீதையும அபபடியே தனது அலஙகாரஞ் செய துகொண்டு அவவனஸூயைககுத தலைவணஙகி நமஸ காரஞ்செயது ராமனிடம போயினள பேசுபவாகளில் வலலனாகிய ராமனும அஙஙனம அலங்கரித்துககொண்டு வநத ஸீதையைப பாாதது அநதத தாபஸி செயத பரீ திதான தகிற்கு (பரீதியுடன கொடுதத அலங்காரத்திற் கு) மிகவும ஸநதோஷித்தனன பிறகு [1] மைதிலியான ஸீதை தபஸவினியாகிய அனஸூயை தனககு பரீதி யுடன ஆடையாபாரணஙகளையும புஷபமாலைகளையுங் கொடுததது முதலான வருததாநததநதை யெலலாம ராமனுககுத தெரிவித்தனள. மனிதாகளில எவாககும் பெறககூடாத ஸதகாரம ஸீதைககுணடானது கண்டு ராமனும மஹாரதனாகிய லக்ஷமணனும மிகவும ஸநதோ ஷிததனா. அனநதரம சநதரனைப போன்ற முகமுடைய ராகவன தபஸஸித்தியுடைய ரிஷிகளால பூஜிககபபட் டுப பெரும பரீதியுடன பரிசுததமாகிய அனறிரவெலலாம அஙகேயிருநதனன. அவவிரவு கடநதபினபு அவவனத திலுளளரிஷிகள விடியறகாலததில ஸநானஞ் செயது ஹோமாதிகளை நிறைவேறறிககொளகையில புருஷ ஶ்ரேஷடாகளாகிய ராமலக்ஷமணாகள அவாகளிடஞ் சென்று 'போய வருகிறோம' என்றனா. தாமானுஷ்டா னததில நிலைநின்றவாகளும வனசாரிகளுமாகிய அம முனிவாகள அநத ராமலக்ஷமணாகளைப பாாதது அவ வனததில தாங்கள காயகிழஙகு முதலியன கொண்டு வரபபோகுமபோது உணடாகும ராக்ஷஸபாதையைச் சொலலததொடஙகி 'ராமா! இம மஹாரண்யததில புரு ஷாகளைத தினனுந தனமையாகளும பலவகை உருவங்

கொளள வல்லாகளுமாகிய ராக்ஷஸாகள இருக்கினற னா. ரகதததையே ஆஹாரமாகவுடைய கரூரமருகங களும் பல இருககினறன. ராமா! இம மஹாரண்யத தில ராக்ஷஸாகள் சோநது காமானுஷடான சீலாகளா ன முனிவாகளை அசுசிகளாயிருககுமபொழுதும பராக காயிருககுமபொழுதும பிடிததுப பக்ஷிககினறனா; ராகவனே! அவாகளைத தொலைபபாயாக? ராமா! மஹா ஷிகள அரணயததிலுளள பழம முதலியவறறைக கொணடுவரப போயவரும மாாககம இது நீ இவவழி யாகவே புககககூடாத வனததில பரவேசிபபது யுகதம' எனறனா. சதருககளை வெலல வலலனுகிய அநத ராமன, இஙஙனம தவஞசெயயுந தனமையரான அவவநதண முனிவாகள வணககததுடன கைகூபபிககொணடு பரா ாத்திதது மஙகளாசரணஞ செயயபபெறறு ஸீதையோ டும லக்ஷமணனேடும கூட ஸூாயன மேகமணடலததில பரவேசிககுமாறு தணடகாரண்யததில பரவேசிதத னன. நூறறுபபதனெடானபதாவது ஸாககம முறறிறறு.

அயோததயாகாணடமும

முறறுபபெறறது

ஸ்ரீ ஸீதாஸமேத ஸ்ரீ ராமசநதராய பரபரஹ்மணே நம:.

